தீதுபதி யாருமுல கோதுபதி யாருஞ்
செல்வமுடி யாருநறு வில்வமுடி யாருங்
கோதுபுரி யாரும்வெளி மீதுபுரியாருங்
கோலமறி யாருமுயர் சீலமறி யாருங்
காதரவு ளாருமிய லாதரவு ளாருங்
கனவமலை யாருமார தனவமலை யாரே. (உச)

## மேகவிடுதூது.

### கட்டளைக்கலித்துறை.

மலையா னிலத்து வருவேள் சினக்குமுன் மாமுகில்கா
டலையா னிலத்து வணங்குவல் சென்னித் தழும்பாங்க
மலையா னிலத்து விதயோகர் முன்வரு வாரணிம
தலையா னிலத்து மகிழ்ந்திருந் தேறகத் தருதிரின்றே. (உரு)

## வண்டுவிடு தூது.

### தாழிசை.

இன்று பைங்கிளியை யேவி னம்மைகை
யிருக்கு மோர்கிளியொ டொைசெயு
மெகின நேடியறி யாத தேமுடிமு
னெங்ங னின்றுசெவி யருகுறு
மொன்று மங்குலரு குறின்வ லைத்திவையொ
டுறுதி யென்றுசடை சிறைசெயு
முறுக ருங்குயிலொர் செவிலி பட்டதை
யுணர்ந்த தேசெலவு ளஞ்சிடுங்
துன்று தென்றலெதிர் சென்றி டிற்கடிது
தோள்கொள் பூணியெ னக்கொளுந்
துச்சி லல்லவென வண்டு வாழ்செவி
துணைந்து சேரும்வலி யார்க்குள
தன்று தொட்டெனது கொண்டை வாழும்வரி
வண்டிர் காண்மய டைங்கவு
மரத னுசல ரிடத்து னைத்தவ
ரணிந்த மாலைகொணர் மின்களே. (உசு)

## காலம். மடக்கு.

### எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

மின்னுமறு லுறவருந்திக் குயினடிக்குங் காலம்
விடாதுமறு லுறவருந்திக் குயினடிக்குங் கால
மன்னுபசுந் தோகைபரி விற்குனிக்குங் கால
மதவேளைத் தோகைபரி விற்குனிக்குங் காலங்

துன்னுகொடித் தளவமரும் பப்படருங் காலந்
தோயார்பித் தளவமரும் பப்படருங் கால
முன்னுவெயில் வெம்மையுறப் புணராத கால
முடித்தழும்பர் வெம்மையுறப் புணராத காலம். (உஎ)

கட்டளைக்கலித்துறை.

காலங் கழியு மவமே நமன்றமர் கைக்கொளுங்கான்
மாலங் கழியும் வகையுள தோமல மாயவினைச்
சீலங் கழியும் பருந்தாழ்நி னன்பரிற் சேர்த்தலனு
கூலங் கழியுந்தி வைப்பேத் தரதன குன்றத்தனே. (உஅ)

## சிலேடை.

நேரிசை வெண்பா.

குன்றாத வேங்கையுமொண் கொம்புபடு வேங்கையுமெய்
பொன்றா தெனப்பொலிவாட் போக்கியே - நன்றாவோர்
மின்னைப் புரப்பான் மிளிர்தரவைத் தானருள்வைத்
தென்னைப் புரப்பா னிடம். (உகூ)

கட்டளைக்கலித்துறை.

இடம்படு மாணிக்க மாமலை மேவு மிறையவரே
திடம்படு கூற்றடு நீரேயெல் லாம்வல்ல சித்தரெனி
னடம்படு தாமரை யென்னுளப் பாறை நடுமலர்த்த
வுடம்படு வீர்மறுத் தாற்சில வல்லரென் றோதுவனே. (௩௦)

## குறம்.

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஓதுவனப் பன்றிமருப் பொசித்தமலைக் குறவற்
குவந்தொருபெண் கொடுத்தகுடி யுதித்தகுற மகள்யான்
போதுறையு மோரிருவர் முத்தலைநாற் றலையார்ப்
புணர்குறிசொற் றனன்முனநின் பொலிமலர்க்கைக் குறியம்
மாதர்கரக் குறிபலவுங் கடந்துபோ லாய
வாட்குறியாய் மருவுதலின் மறைமுத லாகமங்கூ
றுதரநற் குறிபலவுங் கடந்துவாட் குறிமே
லலங்கவொளி னைந்தலையாற் புணர்குவையின் றறியே. (௩க)

## தவம்.

நேரிசை வெண்பா.

அறியா தவமே யடைந்தடவி நோற்ற
னெறியா தவமே நினைமின் - முறியாத
நண்ணமா ணிக்கமலை நாத ரளித்தமரும்
வண்ணமா ணிக்க மலை. (௩உ)

## தழை.

### கட்டளைக்கலித்துறை.

மலையா வருட்சிவன் வாட்போக்கி யன்ன மயில்வனப்புக்
குலையா விளந்தளிர் கொண்டுதன் மேனி குளிரவொற்ற
நிலையாக வேற்றுத் தளிர்மேனி யாமொப்பு நீத்துவிற
லுலையா தவநடு வாலாய மேவ வுடன்பட்டதே. (௩௩)

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

படவா ளரவ மரைக்கசைத்த பரமர் வாழும் வாட்போக்கித்
தடவாள் வரையென் மனம்போன்ற தனித்தே மலையா ளியனம்ப
விடவாள் விழிவேள் கழைக்கோடு வில்லே புருவ மொனைத்துயரங்[டே.
கெடவாள் கொங்கை யிபக்கோடு கெட்டேன் மருங்குன் முயற்கோ

### வேற்றொலிவெண்டுறை.

கோடுபொலி வாட்போக்கிக் குளிர்வரைமே லஞ்சுரும்பார் குழற்கோ மாது
மேடுபொலி கடிக்கொன்றை முடிக்கொன்ற வெடுத்தணியு மெங்கோ மானு
மலிதளிர்ப் புன்னையும் வண்டளிர்ப் பிண்டியுங்
கலிகருங் கொண்டலுங் கவின்றசெங் கொண்டலு
மெலிவில்பைங் குவளையும் விரும்புசெங் கமலமு
மொலிகெழு மிவ்விரண் டொருமைக் கண்டெனப்
பொலிதருந் தன்மையைப் புவியுளீர் பாருமே. (௩௫)

### ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

க. பார்வளர்மா ணிக்கப் பாரரை வரைமுடிமே
லார்வளர்செவ் வேணி யமலர் பொலிதோற்றஞ்
சீர்வளர்பொன் மேருவின்மேற் செங்கதிரை யொக்குமே;

உ. விண்பொலிமா ணிக்க விசால வரைமுடிமேற்
பண்பொலிநால் வேதப் பரமர் பொலிதோற்ற
மெண்பொலியஞ் ஞாயிலைமே லேற்றுசுட ரொக்குமே;

௩. தூயமா ணிக்கச் சுடரார் வரைமுடிமே
லாய தழும்புமுடி யையர் பொலிதோற்றஞ்
சேயபவ ளக்கிரிமேற் செம்மணியை யொக்குமே. (௩௬)

### நான்கடிவெளிவிருத்தம்.

ஒக்க வணைத்து மாக்கிடு வாரு மொருநீரே
தக்க சிறப்பிற் காத்திடு வாரு மொருநீரே
புக்கவை முற்றப் போக்கிடு வாரு மொருநீரே
மிக்க முடிக்கட் கீற்றுடை யாரு மொருநீரே. (௩௭)

### கட்டளைக்கலித்துறை.

நீர்கொண்ட சென்னித் தழும்புடை யீரென்மு னீள்விடைமேல்
வார்கொண்ட கொங்கைச் சுரும்பார் குழலொடும் வந்தருள்வீர்

நார்கொண்ட சிந்தை யிலாதவ ளுயினு நாடிநுமைக்
கூர்கொண்ட வாள்கொண்டு வெட்டிடு வானுட் குறித்திலனே. ()

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

குறிபடுபன் மணிவிற்றீர் மாதுலனுய் வழக்குரைத்தீர் கூடன் மேவி
நெறிபடுமற் றவையோரா ராரியசீர்ச் சிறுகுறையு நிரப்பு கென்று[றீர்
பறிபடுவே ணிப்புனல்வாட் போக்கியீர் பெருங்கணக்குப் பார்த்துநின்
செறிபடுபல் கிளைவணிகர் நுங்கூட்டுக் கிசைந்தனரச் சிறப்பொன் றோர்ந்தே.

நேரிசைவெண்பா.

ஓராழி மேற்கிடக்கு மோராழிக் கேவிடுக்கும்
போராழி யேந்திப் பொலியுமே - நேராகா
வெம்மா னகத்திருக்கை வீத்தேந்து வாட்போக்கி
யெம்மா னகத்திருக்கை யே. (௪0)

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஏறெனவிப் புனத்திலடிக் கடிவருவார் நகர
மெங்கென்பார் நெடுங்கணக்கு மோர்ந்திலரோ நீரே
பேறெனநும் மிடையுணர்ந்துற் றனமென்பா ரிடையின்
பெற்றியிவ ருணர்வாரோ கைம்மானே டியதிவ்
வாறெனநே டுவர்கைம்மா னுடையவாட் போக்கி
யண்ணலோ முறிகொள்ளு மென்பார்கொள்வீரிக்
கூறெனவிப் புனவேங்கை கொடுக்கவிசைந் தனமோ
குறித்தவிவர் கருத்துவிரித் துரைக்கரிதா யினதே. (௪௧)

மடக்கு.

விருத்தம்.

ஆயு மிதழ்வாய் பானலமே யகலு மிதழ்வாய் பானலமோ
யணவ மருங்கா மணப்புள்ளே யடவ மருங்கா மணப்புள்ளே
பாயுங் கயலா யினவளையே பாவிக் கயலா யினவளையே
பவளம் படர வருந்திடமே பாராய் படர வருந்திடரே
மேயுங் குருகே யமர்கழியே விணையேற் குருகே யமர்கழியே
விரைந்தம் பரவாய்ப் படர்படவே விணையோ பரவாய்ப் படர்படவே
வாயு மலராக் கழுநீரே மாறு மலராக் கழுநீரே
வளமாமலையாரணையாரே மணிமாமலையாரணையாரே. (௪உ)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஆர்கொண்ட செஞ்சடையீர் வணிகருணீ ரொருவமொனற் கையமில்லை
கூர்கொண்ட சூலமழுக் கொண்டிருந்து மண்டுசினங் கொடுதுரத்திப்[டீர்
போர்கொண்டவாரியர்கோன்வாள்கொண்டுவெட்டிடவும்பொறுத்துக்கொண்
சீர்கொண்ட விதனுன்மற் றவர்கொடுக்கும் பொருட்பங்குஞ் சிதைத ராதே.

### நேரிசைவெண்பா.

சிதைக்கலமே யாநின் றிருவடியைப் பற்றிச்
சிதைக்கலமே யாநின்ற தீமை - புதைக்குமெழு
தோற்றப் பரவை முடியாய்சொல் வாட்போக்கி
யாற்றப் பரவைமுடி யாய். (சச)

### சம்பிரதம்.

எழுசீர்க்கழிநெடிலடி
இரட்டை ஆசிரியவிருத்தம்.

ஆயுமிவை மெய்ம்மையொவ் வொருவிரற் றலையொவ்வொ
ராழிகோத் துறவெ டுப்ப
னம்பொற் சிலம்புகால் வளைதரப் புனைகுவ
னண்டங்கள் பலத கர்ப்பன்
பாயுமலை சூழ்புடவி வாயலரி மலர்தரப்
பண்ணுவன் குவல யங்கைப்
பற்றுவன் றிக்கரம்ப லோடுவெள் ளாம்பலும்
பற்றிக் கசக்கி யெறிவ
னேயுமத யானையை யெறும்பிதான் மந்தியை
யிருந்தும்பி தானென்னவே
யிப்பொழு தியற்றிடுவ னின்னமும் பலசெய்வ
னித்தனையும் வித்தை யலவாற்
காயுமயின் மூவர்புரம் வேவநகை யாடுகங்
காதர னுமாத ரன்சங்
கரனாத ருசலக் கடவுளுக் கிணையாவொர்
கடவுளையு மறிவிப்பனே. (சரு)

### மடக்கு.

எழுசீர்க்கழிநெடிலடி
இரட்டை ஆசிரியவிருத்தம்.

அறிதரு மிருக்கை மாணிக்க மலையே
யமையில்சொன் மாணிக்க மலையே
யவிர்தரும் வேணி யுருவுமோ மாறே
யத்துவா வுருவுமோ மாறே
முறிதலின் முடியேற் றதுமொரு வெட்டே
மூர்த்தமுந் தோமொரு வெட்டே
மூடிய தெதிரி லாவுவா வுரித்தே
மூலமீ றிலாவுவா வுரித்தே
தறிபக வெழுந்த தம்மவன் கணையே
தாடரிப் பதுமவன் கணையே

தாளெடுத் தாடிக் களிப்பதம் பலமே
சாற்றுவார்க் களிப்பதம் பலமே
குறிகொடேர் விடுவா ரம்புயத் தாரே
கொன்றைவா ரம்புயத் தாரே
கோவதெவ் வளவா மனத்தனை யனையே
கொள்ளுவா மனத்தனை யனையே. (௪௬)

சந்தத்தாழிசை.

அரைவிராவ வணியுமாடை யதளதாக வன்றிவே
றறைவதாக வரவமாக வணியதாக வெண்புதார்
புரைவதாக விரையுநீறு புரியுமூணு நஞ்சமே
புணர்வதாக வுணர்தராது புணருமாசை கொண்டுளாள்
கரையுறுத துயரினூடு கழியுமாறு கன்றியோர்
கடியபாவி மதனனேவு கணைதுழாவு நன்றிதோ
வரையவாரும் விரையவாசம் வரையின்மாலை தந்துநீள்
வரையிராசன் மகளொடாடி மகிழிராச லிங்கரே. (௪௭)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

கருதுந் தருதும் விருதுமலி கதியென் றுரைப்பீர் கொதிசகடு
மருதும் பொருது மெருதுடையீர் மணிமா மலையீர் யானீன்ற
விருதுங் கவன முலையாளைச் சுரும்பார் குழலி யென்றறகுந்
தருதுங் கருது மிடமென்னீர் தருவீர் தகாவப் பெயராட்கே. (௪௮)

கட்டளைக்கலித்துறை.

பெயராத மாற்குழி வீழ்மனத்தேனைப் பிறங்கருளாந்
துயராத வேக்கொண் டெடுத்தேறி னீமுத் துகளுமறு
முயராத தோவெனும் வாட்போக்கி யாய்பில முற்றபொற்றே
ரயாராத வேக்கொண் டெடுத்தேறி முப்புர மட்டவனே. (௪௯)

நேரிசைவெண்பா.

அடரும்வன மேவுமிரண் டாயிரங்கோ டேந்திப்
படரும்வன மேவலரோன் பண்வாய்—தொடருமே
நாட்போக்கி யாரொருத்த னையா தருள்புரியும்
வாட்போக்கி யாரொருத்தன் மா. (௫0)

சித்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாமேவு வாட்போக்கி மாதேவர் தமக்கிருப்பு வரையை முன்னாட்
டீமேவு வெள்ளிவரை யாக்கியவண் சித்தர்யாஞ் சொல்லக் கேண்மோ
பாமேவு மற்றவர்கை நாகமும்பொன் னுக்கினந்தாள் பணிவா னோர்க்
பூமேவு நாகலோ கத்தையும்பொன் னுலகாகப் புரிந்தோ மன்றே.[குட்

இதுவுமது.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அன்றுமது ரையிலெல்லாம் வல்ல சித்த
ராயினு ரடிபரவி யருண்மா ணிக்கக்
குன்றுறையுஞ் சித்தர்யாம் புற்கை யேனுங்
கூழேனும் பசிதீரக் கொடுவா வப்பா
வின்றுவரு மிரும்புதனை யொன்றுஞ் செய்யா
திருந்துதயத் துதித்ததுபொன் னென்னச் செய்வோ
நன்றுமறு நாள்வெள்ளி யெனவுஞ் செய்வோ
நானிலத்து நம்மருமை யறிவார் யாரே. (௩௨)

இதுவுமது.

அடி விருத்தம்.

ஆரப்பா நம்மருமை யறிய வல்லா
ரகிலநிகி லப்புகழ்வாட் போக்கி கண்டக்
காரப்பார் சடையார்மே லாணை மெய்யே
கரிகொணர்க விரும்புமா தங்கஞ் செய்வோம்
பாரப்பா வப்பரம ரெருத்துக் கொட்டில்
பைம்பொன்னே யெனச்செய்தோ முனமிப் போது
மோரப்பா வெனக்கொடுவா தாகந் தீர
முகந்தடிசி லளித்திடினு முகந்துண் போமே. (௩௩)

கலிவிருத்தம்.

உண்ணு நஞ்சமு தாகு முனக்கமு
தெண்ணு நஞ்சம தாகு மெனக்கிதெ
னண்ணு மாணிக்க மாமலை யாய்நகப்
பண்ணும் விண்ணம் படர்மதி வெம்மையே. (௩௪)

கைக்கிளை.

மருட்பா.

வெம்மையொடு தண்மை விரவத் தருமுலக
மும்மை யுடையான் முகநோக்க - மம்மா
தகாரு மற்றவை தனித்தனி யெழுத்தரும்
புகாரு மொருவாட் போக்கிப்
பகாரு மடந்தை பனிமுக நோக்கே. (௩௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நோக்குறுமா ணிக்கமலை யெதிர்ப்படுமோர்
பொருளகத்து நுழைவ தன்றித்
தாக்குமது தன்னகத்து நுழையவிடங்
கொடாதமருந் தகைத்து மீது

தேக்குமொளிப் பரம்பொருளு மத்தகைத்திவ்
வொப்புமையின் றிறமு ணர்ந்து
தூக்குநவில் பவரனைய பொருளோமலைக்
கொழுந்தெனுமத் துதிமெய் தானே. (௫௬)

## ஊசல்.

### ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

துதிக்கும் பரமர் சுரும்பார் குழலோ
டுதிக்கும்வாட் போக்கி யுறையுஞ்சீர் பாடிக்
கதிர்க்கு முலைகுலுங்கக் கைவளைக ளார்ப்ப
வதிர்க்குந் துடியிடையீ ராடுக பொன்னூசல்
ஆயும் பிடிநடையீ ராடுக பொன்னூசல். (௫௭)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

ஊச லாடு நெஞ்சமே யோவி மாய வஞ்சமே
வீச லாதி யங்கமே மேவி ராச விங்கமே
வாசம் வீசு தென்றலோ வாது பாய நின்றலோ
மூச வேள தங்கையே மூட வாடு மங்கையே. (௫௮)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மங்கையொரு பங்குடையார் மாணிக்க மலையொளிமேன் மருவி மென்பூஞ்
செங்கையர மகளிருல கத்தமர்வெண் களிற்றுடலஞ் செம்மை செய்ய
வங்கையொரு சதகோடி யானெய்தமேதார் மூழ்கவெப்போ ராற்றிற் றென்று
சங்கையுறும் வானுறு சோணைமதி பரிதியெனத் தயங்கு மாலோ. (௫௯)

### கொச்சகக்கலிப்பா.

மாலாய பச்சை மயிலையிடம் வைத்தனையென்
பாலா யவளும் பசப்புற்ற காரணத்தான்
மாலாய பச்சை மயிலை வலத்துவைவிண்
பாலாய வாட்போக்கிப் பைம்பொற் சிலையானே. (௬௦)

### ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

ஆனவனு காதவனென் றன்புடையார் பாலாயா
னவனு காதவனே நானுக வுட்குறிக்குங்
கோனவன்மு னுகியல்லாக் கோமான்மா ணிக்கமலை
வானவன்சீர் பாடாதார் வாயென்ன வாயே
மலைக்கொழுந்தென் றுரையாதார் வாயென்ன வாயே. (௬௧)

## களி.

### எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வாயாது வருந்துமுயி ரும்பலவே பரமர்
வாட்போக்கி யமருமெழு மாதரடிப் பூசை

வீயாது செயிற்பிறிதும் வேண்டுவதோ விண்ணோர்
விரும்புசுரா பானத்தா லமரரே யானூர்
தேயாது தாலத்தின் கட்குடியர் நரர்மா
றெண்டிரைக்கட் குடியனைய வலரின்கட் குடிய
ஞாயாது வீணுகத் திரிவதெவ னந்தோ
வடைவரோ குருக்களொழித் தரியபர கதியே. (சுஉ)

## இதுவுமது.

### கட்டளைக்கலித்துறை.

கதிகாண் வழியொன்று கூறுதுங் கேண்மின் கடற்புவியீர்
விதிகா ணரியதென் றேகஞ்ச மேவுவன் விண்டுவென்பா
னிதிகா ணெனக்குல்லை கொள்வானிப் பூரண நீத்தலென்ன
மதிகா ணிதுகொளின் வாட்போக்கி யார்சத்தி வாய்ப்புறுமே. (சுங)

## இதுவுமது.

### எழுசீர்க்கழிநெடிலடிஇரட்டைஆசிரியவிருத்தம்.

உற்றவொளி மாணிக்க மலையிறைவர் பணையடி
யுவந்திருப் பதும்வேடர்கோ
னுதவெச்சி லூன்மிசைந் ததுமறை மகஞ்செய
வுணாத்தவிதி யுந்தெளிகலார்
கொற்றமுறு மமரரொரு தக்கன்வேள் விக்களங்
குறுகியஞு ருற்ற துணரார்
கொல்லா னெனுங்குறட் டொழுமெனலை விதியெனக்
கொள்வர்மறை வினையேயெனூர்
பொற்றகலை மான்விருப் பன்பிரமன் மாயவன்
போகுமான் பின்றொடர்பவன்
பொருகேழன் மீனுரு வவாவினன் குக்குடப்
புட்பற்று வோன்முருகவேள்
சொற்றவிவை யாவுநன் குறவுணர்ந் துட்கொடு
தொடங்குமின் சத்திபூசை
தூயதே றலுமினிய தசையுமொரு வீர்பெருஞ்
சுத்திமுத் தியுமடைவிரே. (சுச)

## மடக்கு.

### கட்டளைக்கலிப்பா.

அடையு மாலை யொருவண் டாங்கமே
யப்புக் கூடு மொருவண் டாங்கமே
யிடையி லாவுமை யேயிடப் பாகமே
யிபவ னத்தலை யேயிடப் பாகமே

யுடையெ னுவனை கூடுவ தாசையே
யுன்னு மன்பரங் கூடுவ தாசையே
சடைவி ராய விருப்புச் சிவாயமே
சங்கரற்க விருப்புச் சிவாயமே. (சுரு)

இதுவுமது.

மேவ லார்புரத் துந்தழன் மூட்டுவார்
மேவு வார்புரத் துந்தழன் மூட்டுவார்
காவன் மேவிய மாற்கும் வெளிப்படார்
காவ லோவிய மாற்கும் வெளிப்படார்
ஓவ லோவினர்க் கும்பசப் பூட்டுவா
ரோவன் மேவினர்க் கும்பசப் பூட்டுவார்
நாவ லார்புகழ் மாணிக்க மாமலை
நாய னுரு நடுநிலை யாளரே. (சுசு)

நேரிசைவெண்பா.

ஆளாக வந்த வடியேற் கடர்கரும்பு
வேளாக வந்த விரவிழித்த - காளாய்
சிவாய வனையாய் தெளியவனை யாய்திக்
கவாய வனையா யருள். (சுஎ)

மறம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருள்செறிமா ணிக்கமலை யிறைவன் செம்பொ
னணைத்தொருவா ரிதிநாப்பண் மிதக்குந் தோணிப்
பொருள்வணிகன் முளைபல்கா னடந்த தோர்ந்து
போராட்டத் தொருவளர்ப்புப் பெண்ணை யீந்தோந்
தெருள்கிலனு யவற்கதிக னென்று வேந்துந்
தேறியொரு பெண்கேட்டான் செப்பி வற்குங்
கருளகல்யா னதிகனென விளிப்பார்ப் பானுங்
கண்ணறக்கேட் பான்மறவர் குலச்சீர் நன்றே. (சுஅ)

இதுவுமது.

கலிவிருத்தம்.

நன்றக மகிழ்ந்துமற நங்கைவிழை வுள்ளத்
தொன்றரசு பொய்த்திரு முகங்கொடிவ னுற்றுய்
கொன்றனையன் மெய்த்திரு முகங்கொணர் தும் யாமே
யின்றறிக தூதமணி வெற்பரரு ளேற்றே. (சுகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏதமில்வாட் போக்கியிறை பல்வளைபார்ப் பனமடவா ரிடங்க வர்ந்து
மேதகுகூ டலில்விற்றுன் முனமிந்நாட் கவர்வதெங்கு விற்பான் கொல்லோ

வோதல்செயு முலகுள்ளங் கவர்கள்வ னுயிர்கடொறு மொளிக்குங் கள்வன்
மேதகைய விவனெனும்யான் வளைகவருங் கள்வனென விள்ளுவேனே.

கட்டளைக்கலித்துறை.

விள்ளும் படிவளை வாட்போக்கி னீர்நும் விரைமலர்த்தார்
நள்ளும் படிகொடுப் பீர்மறுப் பீரெனி னுடுநுதற்
கொள்ளுங் கணுங்கட் செவிப்பூணுந் தாளுங் கொடுத்தருள்வீர்
உள்ளுங் கணைமதன் றென்றல்வெண் டிங்க ளுரனறவே. (எக)

மறம்.

நேரிசைவெண்பா.

அறவர்புகழ் வாட்போக்கி யண்ணல்வரைப் பால்வாழ்
மறவர்குலப் பெண்வேட்ட மன்னர் - திறலி
னுறுவார்பின் றேமென் றுடன்றமர்த்து மாய்ந்து
பெறுவார்பின் றேவர்குலப் பெண். (எஉ)

கட்டளைக்கலித்துறை.

பெண்பா லுகந்தருள் வாட்போக்கி மேய பெருந்தகைக்கு
வண்பால் கவிழ்த்தபுள் ளோர்குயில் வாரிமந் தாகினியோ
விண்பா லுயர்தென்றல் வெற்பெழு மாதர் விழைந்தவெற்போ
கண்பா லிருளன்ப ருள்ளிரு ளோபுறங் காண்பதற்கே. (எ௩)

பாண்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காணரிய மாணிக்க மலைவளரோங் கொளியிற்
கலப்புறுமின் பிறுவெனக்கொண் டெப்பறுசீர்த் தலைவர்
நாணரிய பரத்தையவா வினரினிமற் றெனையு
நச்சுவர்பாண் மகனேயன் பினர்கின்பா லெனநீ
பூணரிய பொய்பூண்டு வீணையிசைத் திடுதல்
போதுமிவ ணின்றகறி நின்றனையே லெறியுங்
கோணரிய கற்களினின் கருந்தலையுஞ் சுவற்பாற்
கொண்டிடுபத் தருந்தகரு மண்டிடுமான் முடிவே. (எ௪)

வஞ்சித்துறை.

முடித்தமுழம்பர்சீர்
படித்தவன்பர்பூ
வடித்தொழும்பரே
தடித்தவின்பமே. (எ௫)

வஞ்சிவிருத்தம்.

இன்ப ராயொன் றிரண்டெனும்
வன்ப ராய்வழி மாற்றுவார்
முன்ப ராய்முடிக் கீற்றுளா
ரன்ப ராயமர் வார்களே. (எ௬)

கட்டளைக்கலிப்பா.

ஆரவாவு படைநெடுங் கண்ணுமை
யாள வாவொரு பாலளித் தாரந்தச்
சீரவாவு மெனக்கொரு பாலருள்
செய்த வாவிக் கொடாதமர் வாரமென்
பாரவாவு குளிர்புனல் வெங்கொடும்
பால வாவழ லேந்திப் பொதுநின்று
நாரவாவு முடித்தழும் பாளர்தா
நடுவி லாதவ ரென்னினென் னுவரே. (எஎ)

நேரிசைவெண்பா.

ஆவா வடியே னலந்தே னருள்வேத
மாவா வடியேன் மழுப்படைக்கைத் - தேவா
வரும்பாச மைந்துமற மாற்றார்வாட் போக்கி
யரும்பாச மைந்து மற. (எஅ)

## இடைச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அறவிடையார் வாட்போக்கி யண்ணலார் நகரிடைச்சி யாரேயுங்க
ளுறவிடையார் வெறுப்புறுவா ராடைநீக் குபுபணப்பா லுறவெற்கீயுந்
தெறவிடையா ரொருழவாதிரண்டுபொற் குடங்களுமென் செங்கைக்கொள்வேன்
பெறவிடையா ரருள்புரியு நயமோரோ மோரெனுஞ்சொற் பேசி டீரே.

இதுவுமது.

நேரிசை வெண்பா.

பேசுமா ணிக்கமலைப் பெம்மா னணிநகரத்
தேசுமாண் வீதியுலாஞ் சிற்றிடைச்சி - மூசுபூ
வண்டரே யாவார் வனமுலைசேர் வார்யாரு
மண்டரே யாவார்மெய் யாம். (அ0)

## வலைச்சியார்.

கட்டளைக்கலித்துறை.

ஆவேறு மையர்செம் மாணிக்க மாமலை யாளர்மலர்
மேவேறு கூந்தல் வலைச்சியர் போகம் விரும்பியன்றோ
நாவேறு நால்வர்தம் பாவேறு மாலை நலமணக்குந்
தூவேறு தோளிற் புலவார் வலைமுன் சுமந்ததுவே. (அக)

கலிவிருத்தம்.

வேலைவாய் விடமுண்ணும் விருப்ப ரென்கனி
மாலைவா யமுதுணும் வாஞ்சை வைத்திலார்
கோலவாய் மணிவரைக் குழகர் மற்றவர்க்
காலவாய் விருப்பமே யளிக்கு மாலையே. (அஉ)

## வலைச்சியார்.

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

மாலைமுடித் தழும்பரருள் போலெனக்கு வெளிப்பட்ட வலைச்சி யீர்நுஞ்
சேலையணைத் திடச்சிலர்வா யூறுவரால் கெளிறுசெறி திருக்கை கோப்ப
வாலையடு கரும்பினுடைந் துளமலங்கு வார்சிலர்சொல் லயிரை யேற்க
வேலையொழி வார்சிலர்யா னான்மன் னச்சுறவு மேவி னேனே.(அ௩)

### எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

மேவார் புரஞ்செற்ற வாட்போக்கி யார்தில்லை
மேவிநாங் கண்ட தில்லை
மேவால வாயால வாய்மனண் ணுமலை
விராவியக னண்ணுமலை
மாவார் கழுக்குன்றம் வன்கழுக் குன்றமேர்
மலிபொற்றி யூரொற்றியூர்
வாஞ்சியம் வாஞ்சிய மிபக்கா டிபக்காடு
மறைவனம் மறைவனலத்
தாவார் விரும்பிமரு வாரூர் திருக்காழி
யம்மமரு வாரூர்திருக்
காழியா வடுதுறை யடிக்குமா வடுதுறைந
லவிநாசி யவிநாசிவண்
காவார் பெருந்திருக் காளத்தி யுறைதிருக்
காளத்தி யென்றுகருதிக்
கழித்தென வொழித்திடி னழித்தல்செய் பழித்தலை
கழன்றுய்வ தென்றுமனமே. (அச)

## கூத்தராற்றுப்படை.

### நேரிசைஆசிரியப்பா.

மணமார் பவுரி மலைப்புப் பித்தங்
கடகமுள் வாளவங் காணங் குனிப்பு
வீரட் டானம் விரும்பும் பிரமரி
பாத நிலையம் புரிய முப்பித
௫ மாமுதற் பலவு மிறப நடிக்குங்
கூத்தன் மகனை கூத்தன் மகனை
கடற்புவி யாளுங் காவலன் மகனல
னின்போல் யானு நிகழொரு கூத்தன்
மகனை யென்வாய் மாற்றங் கேண்மதி
க0 வலம்பா டொழிக்கு மிலம்பா டெய்தி
மெய்நவின் றறியா வீணர்வாய் பொருவக்
கொடிதுறுவீங் காது குதட்டலு மொழிந்த
வாயிடை நீர்நசை வந்த காலை

யுறுமறு சுவையுமொன் றுள்ள வூறலா
னறுதி செய்தாங் கரும்பசி மேவின்
மற்றதை யொழிக்கு மவகையறி யாது
முற்ற வருந்தி மூர்ச்சித் துடைந்து
சாந்திரா யணங்கிரிச் சரமுதற் கொடிய
விரதங் கொண்டோர் மேனிபோ லொருவ
வென்பு நரம்பு மெண்ண வெளிப்பட்
டேதிற் பறக்க வுடம்படு மேனியிற்
போர்த்த போர்வை புன்மயி ருருவிப்
படிந்ததன் காரண மறப்பிக் காட்டச்
சிலம்பி நூலி னிழைஞ் சிதன்மண் டோலும்
பொதியவுட் பட்ட புற்செற் குரம்பை
யுள்வாய்ப் பஃறுளை யொருபட் டைத்தாங்
கீந்திலை வெளிப்பட் டெங்கு முறுகதுப
படுமொரு பழம்பாய் விடுதலை யணையொடு
நாணிலாத் தனுவென நசுந்தனு முடக்கி
வாடைவந் துடற்ற மயிர்குளிர்க் குடைந்து
சானு விரண்டுந் தாடி தகாக்க
வோட்டமு மதரமு மொழிவின்றி நடுங்கத்
தருமிரு நிரைப்பலு நாவிந் தாக்க
வுலங்கு மசகமு மிலங்கா துகிர்க்கப்
பசித்தழல் வெதுப்பப் பழவினை நினைந்து
முடக்கொழி யாது கிடக்குங் காலைப்
பல்வியு மரணையு மாங்குறு முடையிட்
டெல்வியும் பகலு மிரியா து கிடக்கும்
பவுத்த ரமணர் பாழ்நர கொருவ
வடலைகண் டறியா வபாக மருவிப்
பெரிது நோக்கிப் பெருமூச் செறிந்து
மாலைத் தாபமா மலர்புனா புகழ்க் காடு
பதுவந் துளிக்கு மபுலை மாய்ச் சிறுவு
பொதிசித றுடைக்குங் கதியி லாது
கைமேய கொண்டு பையினை யுப்ப
வேயடு மென்றுட டாய்முக நோக்க
மற்றவள் வருந்தி வறுங்கை நீட்டி
மார்பினை யணைப்பச் சோர்தரு கண்ணீர்
சிறிதிடை யின்றியச் சிறாருட னணைப்ப
மற்றவ் வீர பொறுநிடக் கருதி
யொருகை நீட்டி யொருவருக் கொருவர்
கோவணம் பறிக்கக் கூகூ வென்றங்
கழுகுர லென்செவி யுழுகுர லாக
வென்செய் வாமென் றிறப்பதற் கெண்ணி

யொருப்படு காலைநல் லூழ்பிடித் துந்த
மடிசற் றின்றிக் கடிதவ ணின்று
வெளிவந் தம்ம விரைந்து நடந்து
மாணு டென்னுஞ் சோணு டடைந்து
பூவிரி பொழிற்குலைக் காவிரி மூழ்கித்
திருத்தகு மந்நதித் தென்பா லுற்றேன்
பாயிருள் பருகும் பகற்கதி ரநேக
மோருழித் திரண்டாங் குதித்துநின் றென்னச்
சேயொளி விரிக்குஞ் செம்மலை யொன்று
கண்டனெ னாங்குக் கைகுவித் தேத்திப்
பெயரு மிம்மலைப் பெயர்யா தென்று
வினவினன் கேட்ட மேதகு பெரியோ
ரரதநா சலமீ தலங்குற விதன்மேற்
றழைதர வமர்சிந் தாமணி யொன்றுண்
டன்னது காண்போ ரரும்பெறல் வளங்க
ளெல்லா முடையா ரென்றினி திசைப்ப
வொருங்கெழு மகிழ்வி னூக்கமிக் கடைந்து
படித்தல நின்றுவிண் படர்வதற் கிட்ட
வேணியிற் பொலிசோ பானவழி யேறிப்
பிறங்குறும் வயிரப் பெருமாள் காவலி
னறங்குல வம்மலை யணிமுடி யடைந்து
செயிரறு பொன்செய் சினகரம் புக்காங்
கெய்ப்பிடை வைப்பொன் றெதிருறக் கண்டெனச்
செந்தா மரைக்கட் டிருமறு மார்பனு
மந்தா மரைவா ழண்ணலு மின்னுங்
காணுப் பொருளைக் கண்டனன் மாதோ
தனிப்பெருந் திருமுன் றண்டனிட் டெழுந்தே
னடங்கா வுவகை மடங்காது பொங்கக்
கூடினன் றழைந்துசற் றூடின னப்பொழு
தெண்டோ ளப்பொரு ளின்னருள் சுரப்ப
வடதிசை நிதிக்கோன் மனமழுக் கறுப்பப்
பெறலரு வளங்கள் பெரிதும் பெற்றன
னன்றே யுவகை யார்கலி மூழ்கின
னின்னே விரைந்தவ ணேகுதி
யென்னே பெறலரி தெல்லா முறுமே. (௮௫)

## நேரிசைவெண்பா.

உறவே தவித்தா யொளியிழைவாட் போக்கித்
திறவே தவித்தாய்ச் சிறந்தார் - நறவே
தருங்கொன்றை யம்பார் சடையதளித் தார்நம்
மருங்கொன்றை யம்பார் வரார். (௮௬)

### கட்டளைக்கலித்துறை.

வரந்தரு மாணிக்க மாமலை யீசர்தம் வாம்பரியோ
திரந்தரு பாதுகை யோசிலம் போதிருக் கோவணமோ
வுரந்தரு மாதன மோகோயி லோநன் கொளிருருவோ
பரந்தரு வந்திய ரோமொழி யோமெய் பகர்மறையே. (௮௭)

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

மறைபுகலும் வாட்போக்கி வள்ளலுக்கு
விடையுருவாய் மாலே செங்கை
யுறையொருகோ டொழித்திருகோ டுற்றேசை
யிலாமணிநீத் தோசை மேய
வறைமணிபூண் டடர்விடமாற் றிடுவானீத்
தலைந்தணுகா தமர்வா லுற்றாய்
நிறையயனோர்ந் தனையமா வாம்பொழுது
மவற்சுமக்க நினைத னன்றே. (௮௮)

### குறளடிவஞ்சிப்பா.

நன்றென்பதுந் தீதென்பது
மொன்றும்பவ மென்றுங்கொடு
கொதியாமஞர் பதியாவொரு
சிறுநாயினேன் மறுகாவகை
யருள்புரிமதி கருமுகிலுகைத்
தெழுபுனிதனுங் குழுவமாரு
நறையிதழ்மல ருறைமுனிவனும்
வனமாலிகை புனைதோளனும்
பொறிவலியொருங் கெறியுறுவருஞ்
சூழ்பாரகம் வாழ்வாரொடு
முடிவறவடைந் தடிதொழுதெழு
நெடுமறைகனி வொடுதுதிசெயச்
சுரும்பார்குழ லரும்பார்முலை
தொடைமார்பகத் திடைமூழ்குற நாளும்
புண்ணியம் பொலிவாட் போக்கி
விண்ணியன் முடிமேல் வீற்றிருப் போயே. (௮௯)

## கொற்றியார்.

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

இருப்பொலிநீர் வைப்பாறு சேங்கிடச்சக்
காஞ்சுழற்றா லென்னை மால்சேர்
தருப்பொலியும் வடமலைதென் மலைகாட்டி
யுடனனந்த சயனங் காட்டிற்

திருப்பொலிமா லடிமைமெயனு நமக்கடிமை
யாவறுழாய் செறிம ணித்தார்
குருப்பொலியப் பூண்டுமுடித் தழும்பர்விழாக்
கண்டுவக்குங் கொற்றி யாரே. (௬0)

## பிச்சியார்.

### எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஆர்கொண்ட முடித்தழும்ப ரருட்பவனி நோக்கி
யணிமறுகிற் சுழன்றுடி யடைபிச்சி யாரே
கூர்கொண்ட விழிநெடுவே லிருக்கவொரு சூலங்
கோடன்மிகை வெண்ணீறுங் கண்மணிமா லிகையும்
வார்கொண்ட செஞ்சடையும் பூங்காவி யுடையு
மயக்கமறுப் பதுமறந்து மயக்கிடுமா னுமைச்சார்ந்
தேர்கொண்ட விக்கோலங் கொண்டதுமா முனிவ
ரியல்பனைத்துங் கவர்வதற்கோ வியம்புவிர்மற் றெனக்கே. (௬௧)

## விறலி.

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

என்னை மேவுறு மிறையவன் றலையளி யென்னிடம் புகழாயேன்
முன்னை யாலவா யிடத்துவாட் போக்கியார் முதிரரு ளால்வென்ற
பொன்னை நேரென வுள்ளுவல் விறலிநீ புகழ்வையே லிசைதோற்றுப்
பின்னை மற்றவட் சுமந்தவ னெனவெனப் பெரிதுமெள் ளுவலோரே. ()

## நாரைவிடுதூது.

### கொச்சகக்கலிப்பா.

ஓராய் கடுமொழியு மோரா யநங்கர்முனிந்
தாரா யெழவுறுமோ யாராயாய் திங்கள்சுடல்
பாராயா னந்தமுவப் பாராய் முடித்தழும்பர்
தாராய் மடநாராய் நாராயுண் ணூராயே. (௬௩)

### நேரிசைவெண்பா.

ஆயும்வாட் போக்கி யான்முடிமே லாரியன்கூர்
தோயும்வாட் போக்கியநாட் டோன்றும்வடு - வாயிடைவாழ்
மங்கையடை யாணீர் வடிவமொழித் தாலடையுஞ்
சங்கையடை யாவாறு தான். (௬௪)

### கட்டளைக்கலித்துறை.

தானே தனக்கொத்த வாட்போக்கி நாத சடாமுடிமேன்
மீனேய வெள்ளல ரோடுவைத் தாய்மன வெண்கலையை
யூனேய பல்லுயிர் சூழுடிக் காரல ரோடுநறுங்
கானே யுறவைத்தி யென்றீ யமனக் கருங்கலையே. (௬௫)

கலிநிலைத்துறை.

கலந்த காதலென் பாக்கிவாட் போக்கியைக் கரும்பு
கலந்த காமர்சொல் லோடுகண் டினிதுப கரும்பு
கலந்த காரமே வாதுதீ வினைகட கரும்பு
கலந்த காவென லாமன மாமயற் கரும்பு. (கூகூ)

கட்டளைக்கலித்துறை.

புரிதரு மாணிக்க வெற்பார் வதனம் பொலிவிழியுட்
பரிதரு மொன்று மறைந்து சுடும்வெளிப் பட்டுச்சுடும்
விரிதரு மொன்றிவை தீர்சுடு கண்ணொடு வேற்றுமையென்
னெரிதரு செந்தழ லேமேனி யார்கண் ணியல்புமதே. (கூஎ)

நேரிசைவெண்பா.

அதரஞ் சிவந்தா ளயலான்பின் சென்று
ளதரஞ் சிவந்தா ளலளா - லுதர
மடித்தழும்பா விக்கா மனன்மீட் டருள்வாய்
முடித்தழும்பா விக்கா முனம். (கூஅ)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

முன்னியயா வுந்தருவாட் போக்கிநா
யகவடியேன் மொழிந்த பாடன்
மன்னியகுற் றமுங்குணமாக் கொண்டுமகிழ்ந்
தருள்புரிதி மறுப்பா யென்னிற்
றுன்னியவூ ரினும்விளைசார்ந் தறியாத
புல்லெருக்குஞ் சூடிக் கொண்டாய்
மன்னியமற் றதன்குணமென் னெனின்விடைநீ
கொடுக்குமா வருங்கண் டாயே. (கூகூ)

நேரிசைவெண்பா.

ஏற்றர்வாட் போக்கி யிராசலிங்கர் கூற்றினுக்கோர்
கூற்றர் சுரும்பார் குழல்பாகர் - நீற்றரெமை
நன்றுடல் கண்டோ நயவாமை வேண்டியவர்
மன்றுடல் கண்டோமம் மா. (க00)

வாட்போக்கிக்கலம்பக முற்றிற்று.

திருவாவடுதுறையாதீனத்துக்

# குருபரம்பரையகவல்.



திருவளர் கைலைச் சிலம்பில்வீற் றிருக்கு
மருவளர் கடுக்கை மாலிகைப் பெருமா
னருள்பெறு நந்தி யடிகடம் பான்மெய்ப்
பொருள்பெறு கருணைப் புகழ்ச்சனற் குமாரர்
மற்றவ ரருளுறீஇ வையகத் தியங்கிய
நற்றவர் சத்திய ஞானதரி சனிக
ளவந்தெறு மன்னவ ரருளொருங் குற்றுப்
பவந்தெறு வாய்மைப் பரஞ்சோதி யடிக
ளத்தகு குரவ ரருளடைந் துயர்ந்த
வித்தகர் வெண்ணெய் மெய்கண்ட தேவ
ரிவர்முதற் குரவ ரியைந்ததிரு நாமந்
தவர்புகழ் சமாதித் தலமடை மதிநா
ளிவைமுறை யுரைப்பா மிசைத்தமெய் கண்டார்
சுவையமை வெண்ணெய் துலாமதி சோதி
தவலருங் கருணை தழையரு ணந்தியார்
கவலருந் துறையூர் கன்னிமதி பூரம்
படர்மறை ஞானசம் பந்தர்வண் டில்லை
வடகளாச் சேரி மடங்கன்மதி யுத்தரந்
திக்கொத் திறைஞ்சத் திகழுமா பதியார்
மெய்க்கொற் றவன்குடி மடமதி யத்தம்
வாய்ந்தவரு ணமச்சி வாயதே சிகர்மேல்
வேய்ந்தகொற் றவன்குடி யின்மதி யாதிரை
திண்ணிய சித்தர் சிவப்பிர காசர்
நண்ணிய தலமதி நாளவர்க் கில்லை
யளவா வருளுற் றவிர்நமச் சிவாயர்
வளவா வடுதுறை மகரமதி முதனா
ணலமலி தருமறை ஞானர்மே லுரைத்த
வலமலி துறைசை மகரமதி சோதி

வளம்பயி லம்பல வாணர் மேலெடுத்து
விளம்பிய துறைசை மேடமதி யவிட்ட
மொருவா வருண்மலி யுருத்திர கோடிக
டிருவால வாய்விருச் சிகமதி யனுட
மணவிய வருள்வே லப்பர் திருப்பூ
வணைநகர் விருச்சிக மதியுத்த ராடந்
தரமலி குமார சாமிகள் சுசீந்திரம்
வரமலி விருச்சிக மதியுத்த ராடந்
தனைசொல்பிற் குமார சாமிகள் சுசீந்திர
முறைமடங் கன்மதி யுத்தரட் டாதி
மருவுமெய்ஞ் ஞான மாசிலா மணியார்
வெருவில்வெண் காடு மேடமதி யுரோகிணி
யிராம லிங்கர்மு னிசைத்தகோ முத்தி
பராவு விருச்சிகம் படர்மதி யனுடந்
தாவில்வே லப்பர் சங்கர நயினார்
கோவில்வான் கன்னி குலாமதி மூலம்
பின்வே லப்பர் பெருந்துறை கோட்டிற்
பொன்வேய் சேமதி பூரட் டாதி
யாய்புகழ்த் திருச்சிற் றம்பல தேசிகர்
வேய்புகழ்த் துறைசை மிதுனமதி பரணி
யம்பல வாண ராவடு துறையே
நம்பலர் கொடுஞ்சிலை நகுபதி கேட்டை
வளமலி சுப்பிர மணிய தேசிக
ரளவரும் புகழ்த்திரு வாவடு துறையே
தெளிதர வொளிர்விருச் சிகமதி கார்த்திகை
வெளிதர வுரைத்தேன் மேணவா வானே.

உ

கணபதிதுணை.

திருவாவடுதுறை

# ஸ்ரீ அம்பலவாணதேசிகர்கலம்பகம்.

## காப்பு.

### நேரிசை ஆசிரியப்பா.

திருவளர் தெய்வச் சிறப்பொருங் கமைந்த
குருவளர் பண்பணிக் கோதில்கோ புரத்தோ
டெண்ணீர் மாட மிணைதபுத் தோங்குந
தெண்ணீர் வளங்கூர் திருவா வடுதுறை
நப்பல மாக நண்ணிவீற் றிருக்கு
மம்பல வாண வருட்பெருங் குரவன்
புண்ணியம் பொலியுர் புகழ்க்கமழ் கட்சுவை
கண்ணிய கலம்பகக் கண்ணிபுனைந் தணியத்
திருக்கோட் டன்பர் சிந்தையுண் மலரு
மொருகோட் டாம்ப விருதாட் டாமரை
போதொடு பொலிபொழு திரண்டு
நாரொடு கொள்ளுது நலம்பெறற் பொருட்டே.

## நூல்.

(ஒருபோகு மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.)

க. பார்பூத்த பெருந்தேயம பற்பலவு மெடுத்தேத்தச்
சீர்பூத்த வெண்மகளுஞ் செயமகளுங் கலந்துறையத்
தானமொடு தவமுமொரு தடையின்றித் தழைந்தோங்க
மானமொடு புகழ்வயங்க வயங்குபெருஞ் சோணாட்டின்
முத்தரெலாங் கொண்டாட மூவாமெ னான் பதுகோடி
சித்தரொலா மகிழ்ந்துறையத் திகழ்திருவா வடுதுறையிற்
புண்ணியமே தழைந்தெனப் பொலிதருசத் துவந்தழைய
வெண்ணரியவன் பருக்கருள்வா னினிதுவீற் றிருந்தருள்வோய்!

உ. சொல்லரியின் பூற்றரும்பத் துநிநால்வர்க் கருள்செய்வான்
கல்லாலி னமர்ந்ததுமுன் கற்றுவிட்ட படிசெய்து
திருநோக்காற் பரிசத்தாற் றிகழுமறைப் பொருள்வாக்கா
லுருநோக்காப் பாவனைநூல் யோகத்தா லவுத்திரியால்

வெம்பாச முழுதுமற மேவினருக் கறுத்தருளி
நம்பாச முகத்தரும்ப நகுதோள்வெண் ணீறிலங்கப்
பெருங்கருணை யுவட்டெடுப்பப் பெரிதுவக்கு மடிகேளென்
றிருங்கருணை யடியமொலா மேத்தெடுக்கப் பொலிவோய்கேள்!

(இவையிரண்டும் எட்டடித்தரவுகள்.)

க. மலைமாலை வயங்குறுகண் மணிமாலை கொண்டணைவெண்
டலைமாலை கொளினஞ்சுந் தாணியெனக் குறித்தன்றோ!

உ. நிறைமதிய மொளிர்சிரமே னிகழ்குடையாய் நிழற்றுதலாற்
குறைமதிய மிகையென்று குறித்துவைரந் ததுநன்றே!

ஙு. அங்கைநீ ரொற்றுடை யாட்டியிடத் தகுதேத்துக்
கங்கைநீர் தகாதென்று காந்ததுவுங் காரியமே!

ச. அங்கதமொன் றேனுடை யாதவருட் டிருவுருவத்
தங்கதமொன் றேனுடை யாதொழித்தா யஃதழகே!

ரு. ஆங்கணனென் றுரைத்திடுபே ரன்றுமின்று நிகழ்தலினால்
வெங்கணனென் றுரையாமை விழிநுதலிற் காந்தனையோ!

சு. அண்டமுடை தாமுழங்கு மம்பானை யமைந்தபணித்
துண்டமுடை நெடுங்காட்டுத் தூரத்தனையோ சொலவேண்டும்!

(இவையாறும் ஈரடித்தாழிசைகள்.)

க. புனைபரி கலமுயிர் பொலிதர நுகருபு
வினைதப வுணருபு விடவுண வொருவினை;

உ. அடியவர் சிவிகையி னடையற முணருபு
நெடியவல் விடைவெரி னிலவிவர் வொருவினை;

ஙு. மலைபவர் படையருள் வடிவுடை யவர்கொளன்
மலைவென வுணருபு மழுமுத லொருவினை;

ச. கொலைபுரி விதமுறு கொடுமையு ணுணருபு
புலைமுடை நிணநுகர் புலியுடை யொருவினை;

(இவைநான்கும் அராகங்கள்.)

க. போதங்கைக் கொண்டுலகம் போற்றியெனச் சிவஞான
போதங்கைக் கொளலெங்கள் பொருட்டன்றோ பூரணனே!

உ. ஒழியாது நின்னேடியா மொள்ளிதிற்கூ டுறுநிலையை
மொழியாது மொழியுநின்சின் முத்திரைக்கை முழுதுணர்ந்தோய்!

ஙு. பற்றமறுத் தெடுத்துவனைப் பாற்றுமுகில் போலெங்கள்
குற்றமறுத் தெடுத்தினிதாட் கொளவேண்டுங் குருமூர்த்தி!

ச. பிழைத்தியா முறினருளே பெயவேண்டு மிராவணனை
யழைத்தியா மருளினரென் பாமறுக்கி னருளாளா!

ரு. ஊரொடுபே ருருவில்லா யூரொடுபே ருருவடைந்தா
யூரொடுபே ருருவெங்கட் கொழிப்பதற்கோ வுத்தமனே !

௬. ஆண்டவனீ யடியவர்பா லருளாது விடிற்கருணை
பூண்டவன்யா ரெனினென்றே புகலுவாய் புண்ணியனே.

(இவையாறும் பேயர்த்தும்வந்ததாழிசைகள்.)

க. பெருமையுஞ் சிறுமையும் பின்னு முன்னுமற்
றொருமையும் பன்மையு மொருவ நின்றனை ;

உ. நன்மையுந் தீமையு நவிலொ ணாத்திறல்
வன்மையு மென்மையு மாற நின்றனை.

(இவைஇரண்டும் நாற்சீரடி அம்போதரங்கங்கள்.)

க. காமமும் வெகுளியுங் கைத்த மாட்சியை ;
உ. யோமமு முவகையு மியைந்த காட்சியை ;
ங. உற்றவர் பிழைமறந் தொழிக்கு நன்மையை ;
ச. மற்றவர் குணத்தையு மறக்குந் தன்மையை.

(இவைநான்கும் நாற்சீரோரடி அம்போதரங்கங்கள்.)

க. அளவறு கலைகளை வின்றனை ;
உ. யடைபவர் மலவலி கொன்றனை ;
ங. களனமர் கருமை கரந்தனை ;
ச. கருணையி னெடிது பரந்தனை ;
ரு. உளநெகிழ் தாவவண் முந்தினை ;
௬. யுணர்பவ ரிருவினை சிந்தினை ;
எ. பளகறு பெருநிலை கொண்டனை ;
அ. பசுவின துணர்வற விண்டனை ;

(இவைஎட்டும் முச்சீரோரடி அம்போதரங்கங்கள்.)

க. முத்தி யாயினை ;
உ. சித்தி மேயினை ;
ங. மூல மேவினை ;
ச. கால மோவினை ;
ரு. பத்தி நாட்டினை ;
௬. புத்தி சூட்டினை ;
எ. பந்த மற்றனை ;
அ. சந்த முற்றனை ;
௯. கொற்றம் வாய்ந்தனை ;
க0. செற்ற மோய்ந்தனை ;
கக. கோலங் காட்டினை ;
கஉ. சீலங் கூட்டினை :
கங. பற்று மொன்றினை ;
கச. முற்று நன்றினை ;
கரு. பரவு சோத்தினை ;
க௬. விரவு கூத்தினை.

(இவைபதினாறும் இருசீரோரடி அம்போதரங்கங்கள்.)

எனவாங்குப்,

(இது தனிச்சோல்.)

பல்லார் துதிக்கும் பரமா சாரிய
கல்லா ரடையாக் காரண குரவ
மன்னிய வம்பல வாண தேசிக

நின்னரிய லமைந்து நிகழ்திரு வடிக்கு
டு நாயினுங் கடையே னவிலும்வின் னைப்பந்
தாயினுஞ் சிறந்த தயைசா னின்றே
டொன்றியொன் றூறு மொன்றே
யன்றி வேண்டல னருளுதி யுவந்தே.

(இஃது எட்டடியான்வந்த நேரிசையாசிரியச்சுரிதகம்.) (க)

நேரிசைவெண்பா.

உவப்பானென் புன்சொ லுவவாதென் பாசஞ்
சிவப்பானின் றின்பந் திளைப்பேன் - றவப்பா
னலவாணர் சூழ நகுதுறைசை வாழம்
பலவாண தேசிகனென் பான். (உ)

கட்டளைக்கலித்துறை.

பானலங் கண்ணியர் மாலழுந் தாதெனைப் பார்கழுநீர்த்
தேனலங் கண்ணிய வம்பல வாண சிவக்கொழுந்தே
மானலங் கண்ணிய சோலையி னூடு மதிநுழைந்து
கூனலங் கண்ணிய கோமுத்தி மேய குருமணியே. (ங)

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

குருவளர்தண் பிறைச்சடையாய் வெண்ணெய் நல்லூர்க்
குடிகொளும்வை திகமறையோ னுகி நாவ
லுருவளர்நா வலன்பித்த போவென் றெள்ள
வுவந்தடிமை கொண்டனையா லந்நா ளிந்நாட்
டருவளர்வண் பொழிற்றிருவா வடுது றைக்கட்
டழைபுகழம் பலவாண குரவ னுய்
திருவளர்பே ரருளினெனை யடிமை கொள்ளாய்
தெளியமுன்பெற் றதுபெறவோ தெரித ரேனே. (ச)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

தளைகமழ்வண் பொழிற்றிருவா வடுதுறைக்கட் குரவன்பிரான்
றனைய்த் தெய்வ
விளைகமழும் பலவாண பேலோனுண் மையையுணர்ந்தேன்
விளம்பக் கேளீ
ருளைகமழ்தண் கயிலாயத் தொருவன்கா னலவனத்
துறைந்தான் முன்னம்
புளைகமழிவ் வரசவனத் துறைவானிப் போதவன்சீர்
புகல்வார் யாரே. (ரு)

நேரிசைவெண்பா.

புகவே தவித்தேனின் பொன்னடிக்கீ ழுண்மை
தகவே தவித்தேயான் சன்ம - முகவேபார்
வம்பல வாணு வருகென் றருட்டுறைசை
யம்பல வாணு வருள். (சு)

கட்டளைக்கலித்துறை.

அரியாய் நிராசை யெனுமனை யாளை யவாய்ப்புணர்ந்து
பிரியாய் பரிபக் குவமக் களைப்பெறு வாய்துறைசைக்
குரியாய் புகழும் பலவாண தேவமிக் கோங்குசெல்வத்
திரியாய்சந்யாச நினக்கே யுரித்தென்ப தென்னுனையே. (எ)

## புயவகுப்பு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியச்சந்தவிருத்தம்.

உரிய தென்றெருளிர் நீறென்ற வொன்றின
வுறுநர் தம்படர் பாசங் களைந்தன
கரிபு ணைந்தப டாம்வின் டொளிர்ந்தன
கருது கண்டிகை யாரம் புனைந்தன
விரித ருங்கழு நீர்நன் றலைந்தன
விரவு சுந்தர வேடந் தவழ்ந்தன
துரிச றுந்துதி யாவுஞ் சுமந்தன
துறைசை யம்பல வாணன் புயங்களே. (அ)

நேரிசைவெண்பா.

புயங்கொண்ட செங்கழுநீர்ப் பூவொன்றே வேட்ட
நயங்கொண்ட பேதைபல நண்ண - வயங்கொண்டு
வேளுமம ரம்பலவாண் மெய்யெனவெய் வான்றுறைசை
நாளுமம ரம்பலவா ணு. (கூ)

கட்டளைக்கலித்துறை.

நாமா தரிக்கு மழும்விழுஞ் சோரு நலியுமெங்கள்
பூமா தரிக்கு மதவேளென் றேங்கும் பொருமுமருள்
காமா தரிக்கு நலஞ்சார் துறைசைக் கமழ்கழுநீர்த்
தாமா தரிக்குமெய் யம்பல வாண தயாநிதியே. (க0)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

நிதியமெனத் துறைசைவள ரம்பலவா ணவன்று நீமெய் யாள்வா
ருதியமிற வாமெனவுள் ளுணர்ந்துவக்க வுயிர்கடொறு மொளித்த கள்வன்
மதியமுத வியகரந்து மானிடன்போ லடைந்திதங்கண் மனங்க வர்ந்தே
பதியவமர் தலினின்று பெருங்கள்வ னென்றுனையாம் பாடு வோமே. ()

## அம்மானை.

இடைமடக்காயீற்றடிமிக்குவந்த
நான்கடிக்கலித்தாழிசை.

பாடுந் துறைசைப் பதியம் பலவாண
ணாடுங் கயிலாய நாதன்கா ணம்மானை
நாடுங் கயிலாய நாதனே யாமாயி
னீடொன்று மென்பணியை யெங்கொளித்தா னம்மானை
யெப்போது மென்பணிகொ ளேந்தல்கா ணம்மானை. (கஉ)

### எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

மாநலம் பொலிய வளர்பொழிற் றுறைசை மருவிய வம்பல வாணு
பாநலம் பொலியப் பாடுவோ நின்னைப் பரிசிலெங் களுக்கெவன் கொடுப்பா
யூநலம் பொலிய வூட்டுபு வளர்த்த வுடன்முதன் மூன்றையுங்கொள்வா
யாநலம் பொலிய வடியவர் பலர்க்கு மருளுநின் வள்ளன்மை யழகே.

## மதங்கு.

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அழலமைகண் கரந்துகுரு வம்பலவா ணன்பொலிவா
னவன்று ளுட்கொண்
டுழலமையிந் திரியமவித் தொருதிருவா வடுதுறைக்க
ணுறைவோம் யாங்கள்
கழலமைதாண் மதன்பணிபூண் டடைமதங்கி யீர்கடகக்
கைவா ளோடு
சுழலமையு முகவாளு மெவன்செயும்புல் லும்படையாந்
துணிவல் லோர்க்கே. (௧௪)

## தவம்.

வலியபெரும் போகியெனக் காலருந்தி யனைதளர்ந்து வன்கோல்பற்றி
மெலிவறமுக் காலடைந்து மொன்றடையீ ரிதுதவமோ மிளிர்கோ முத்தி
யொலிமலியம் பலவாண குரவன்முனம் யோகியென வுற்றுப் பெற்ற
பொலிகலமுண் டுடுந்தளரா நடையொடுமோர் தவமொன்றும் புணரு வீரே

## காலம். மடக்கு.

### எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வீரமதன் கறுத்தலரம் பெய்யுங் கால
மேகமெலாங் கறுத்தலரம் பெய்யுங் காலம்
ஊரவயல் சூழுங்கா விரிக்குங் கால
முறைதுறைசை சூழுங்கா விரிக்குங் காலம்
ஈரமிகு தளவம்பூ விரிக்குங் கால
மேழையர்நோந் தளவம்பூ விரிக்குங் காலம்
ஆரமெனத் திருக்கழுநீ ரடையாக் கால
மம்பலவா ணன்கழுநீ ரடையாக் காலம். (௧௫)

## மடக்கு.

### கட்டளைக்கலிப்பா.

காலை யம்புய மஞ்சர ணங்களே
காய்ந்த தும்முன மஞ்சர ணங்களே
மாலை யாதன் மணத்த வரத்தமே
வந்து கூம்பு மணத்த வரத்தமே

வேலை கொண்டெங்கட் கீவதங் கொன்றையே
விட்டி ருக்கின்ற தாவதங் கொன்றையே
சோலை யம்பல வாண வடிகளேய்
துறைசை யம்பல வாண வடிகளே. (கஎ)

### நேரிசைவெண்பா.

அடியார்சிந் தாமணியே யம்பலவா ணுவன்
கொடியார் மதிற்றுறைசைக் கோவே - முடியாநீ
யன்றணிவாய் பாதத் தலருங் கருங்குவளை
யின்றணிவாய் செங்குவளை யே. (கஅ)

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஏகமுறு மறைமதியன் றவிர்கடுக்கை யடைந்தசிறப் பெல்லாந் தன்பான்
மோகமுறு நறுமலரின் றடையவெய்த்துக் கவிகைமுழு மதியாய் நாளும்
யோகமுறு மாவடுதண் டுறைவளரம் பலவாணு வுன்பா லன்பாய்ப்
பாகமுறு பவரந்நா ளினுமிந்நாள் விளங்குவரிப் படியிற் றனே. (கக)

### வேறு.

படிக்கு மறையோ விடுந்துறைசைப் பதிவாழ் குருவம் பலவாணு
பிடிக்கும் வயிராக் கியருளத்தே பிரியா தமரு நின்றிருத்தா
டிடிக்கு மடியேன் புன்றலைமேற் சூட்ட வேண்டுஞ் சூட்டினத்தாண்
முடிக்குங் கழுநீர் மலச்சேற்றுண் முழுகு மெனக்குக் கழுநீரே. (உ0)

## கார்விடுதூது.

### கட்டளைக்கலித்துறை.

நீர்கொண்ட மேக நிரைகாண் மலர்பல நேர்பறித்துப்
போர்கொண்ட வேள்செயல் பொங்கிற் றங்கிய போதுணர்ந்தீர்
சீர்கொண்ட கோமுத்தி யம்பல வாணனைச் சேர்ந்தவன்றோட்
டார்கொண்ட செங்கழு நீர்கொண்டு வாருந் தகவுனைத்தே. (உக)

## தழை.

### நேரிசைவெண்பா.

உரையம் பலவாண வுத்தமன்கோ முத்தி
யரையன் றிருமுகமே யம்மா - கரைய
மலைவாநீ தந்தவறு மாதராட் கெங்க
டலைவாநீ தந்த தழை. (உஉ)

## நாரைவிடுதூது.

### கலித்துறை.

தழையுஞ் சிறைமட நாராய் வாராய் சாராயாய்
விழையுந் துறைசையு ளம்பல வாணனை மேவாமே
யுழையும் பிறகிடு கண்ணுள் புண்ணு ளுண்ணுளாய்க்
குழையுந் திறமது தேறாய் மாறாய் கூறாயே. (உங)

## வண்டுவிடுதூது.

### கலிவிருத்தம்.

கூறுஞ்சிறை வண்டீர்குழல் கொண்டீர்மது வுண்டீ
ராறும்பசி யுடையீரறு கடையீரளி படையீ
ரேறும்புகழ்த் துறைசைப்பதி யெழிலம்பல வாணன்
றேறும்படி சொல்லீர்மயல் செல்லீர்பொழில் புகுமே. (உ௪)

### எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

புகழ்மிகு கயிலைப் புண்ணியா வன்று
புயறவழ் பொருப்புவிற் குழைத்திட்
டிகழ்தொழி லினர்முப் புரம்பொடி படுத்தின்
றெழிற்றிரு வாவடு துறையிற்
றிகழ்தரு கருணை யம்பல வாண
தேவனு மிணையடி யேனன்
றகழ்மனப் பொருப்பைக் குழைத்துமும் மலச்சோ
வரும்பொடி படுத்திடா தென்னே. (உ௫)

### நேரிசைவெண்பா.

என்னு மினக்குறுவ தென்னுண்டு மன்னுமரு
ளுன்னு லெனக்குறுவ தொன்றுண்டே—பொன்னுரன்
மஞ்சார் துறைசை வளரம் பலவாணு
வஞ்சா றலைவே யருள். (உ௬)

### கட்டளைக்கலித்துறை.

அருவிய ருவனை போன்முத்த மாலை யவிரிலஞ்சூழ்
பொருவிய லோவு திருவா வடுதுறைப் புண்ணியமா
சொருவிய வம்பல வாணு வடிய னுடன்முதலா
மருவிய மூன்றுங்கொண் டொன்றீ வதற்கும் வருத்தமென்னே.

## சம்பிரதம்.

### எழுசீர்க்கழிநெடிலடி இரட்டை ஆசிரியவிருத்தம்.

வருந்தாது கமலவட் டப்பூ வெடுத்துமுடி
வைப்பனோ டியமனைத்தும்
வானம் பறந்திட வெடுத்தெறிவ னறியபூ
மணமாலை யாத்துவிடுவன்
கருந்தாது கைக்கொடு பிசைந்தூது வன்பெருங்
கரியையும வாறுசெய்வன்
காட்டிலுறை புற்கொண்டு புலிசெய்வ னின்னுமறு
கைக்கொண்டு யாளிசெய்வன்
பொருந்தாது வாய்திறந் தவணின்று புவனம்வெளி
போதப் புரிந்துவிடுவன்

பொங்கியெழு மாலமும் பருகுவன் பெருகுமிவை
புல்லியன வேறுமுண்டா
லருந்தாது நீர்கொள்கட லாடையுல கத்துயி
ரடங்கவா னந்தவெள்ளத்
தாவடு துறைக்கணம் பலவாண தேவனரு
ளன்றியு மழுத்திடுவனே. (உ௮)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அழுவா ரயர்ந்து விழுவார்நின் றாடிப் பாடி யரவென்று
தொழுவார் துதிப்பார் பெருங்கருணை சுரக்குமாறு நினதடியா
ருழுவார் செறியுங் கோமுத்தி யொருவா வருளம் பலவாணா
வழுவார் கடையே னின்னெதிரெவ் வழிகொண் டடையக் கடவேனே.

வேறு.

கடிமலர் கைக்கொண் டன்பு கனியவம் பலவா ணன்பொன்
னடியருச் சனைகோமுத்தி யம்பல வாணா செய்வாய்
தடிதலில் வினையான் முன்னந் தன்னைத்தா னருச்சித் தேத்தும்
படிநினை தனைகொல் யார்க்கும் பழக்கவா தனைவி டாதே. (௩௦)

எழுசீர்க்கழிநெடிலடி

இரட்டை ஆசிரியவிருத்தம்.

விடாவடை வரிய வாவடு துறையுண்
மேவிய வம்பல வாணா
விமலநீ யென்றே யானுமன் றன்பான்
மேவிலே னருளெனை வந்தா
ளிடர்தபு குழவி யறுத்தருத் தியுங்கற்
பெழின்மனை யாட்டியைக் கொடுத்து
மீன்றவற் செகுத்துங் கடும்பினைத் தடிந்து
மிடாதுகண் ணப்பியும் விடாது
படமொரு சூளா லிளமையைத் துறந்தும்
பயந்தபெண் கருங்குழ லரிந்தும்
பசையறு முன்கை தேய்த்துமற் றின்னும்
பலசெயற் கரியசெய் தார்க்கே
தொடர்புற வருள்செய் தாண்டனை யிந்நாள்
சொற்றவக் கொடுமைவே ண்டாது
துதிசெய வாளுந் திறமுணர்ந் தடைந்தேன்
றுணிபிலே னுதவி னருளே. (௩௧)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அருந்தவருக் கரசுகலை யறுபத்து நான்கினுக்கு மரசு ஞானம்
பொருந்தவருக் கரசுகுரா வருக்கெல்லா மரசுநெடும் பொன்மா மேருப்
பெருந்தவருக் கரசுதுறை சைப்பதியம் பலவாண பிரானீ யென்றே
வருந்தவருக் கரசுபெறு நினைநிழற்றுந் திருவாசு மகிழ்ந்து தானே. ()

### ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

தானமொடு தவமோங்குந் தமிழ்த்திருவா வடுதுறைமெய்ஞ்
ஞானமுதல் வனைக்கருணை நமச்சிவா யனைப்பவஞ்ச
வூனமறுத் தொளிர்பரம யோகியைமிக் கோங்கொளியே
யானவனை வழுத்தாதா ரறிவென்ன வறிவே
யம்பலவா ணனைவழுத்தா ரறிவென்ன வறிவே. (௫௫)

### எழுசீர்க்கழிநெடிலடி
### இரட்டைஆசிரியவிருத்தம்.

அறிவரும் பெருமை யாவடு துறைவா ழம்பல வாணமெய்க் குரவ
 னனைத்தினுங் கலந்துங் கலப்புறு மையினு லடலுடைத் துறவியே தானே
செறிபல புவன நடத்தலி னரசே சிவானந்த னுதலிற் சுகியே
 திகழ்சிவ யோகந் தனையனுக் கிரகஞ் செய்தலின் யோகியே நாளுங்
குறிபடு பசுபோ தங்களை விழுங்கிக் கோடலிற் போகியே கருணை
 கூர்சிவ தருமவடிவமா யிருக்குங் கொள்கையி னறவனே யடைந்தோர்
முறிவரு மலங்கண் முழுமையு முருக்கு முறைமையின் மறவனே யிவனை
 முழுதுணர்ந் தவரு மின்னனே யென்றோர் முடிபுற மொழிந்திட லரிதே.

## சிலேடை.

அரியவன் றுறைசை யம்பல வாண வாலதே சிகனுத ளேக்கம்
புரியவிழ் கழுநீர் மாலைநா ளொண்டோள் பொறியரி தொடர்மலர்ப் பாதம்
பிரியந லங்கை யுழைநலம் பரசு பெற்றிமுத் திணையிவை யுடையா
னுரியயா னுணர்ந்தே னவன்பர சிவனே யுண்மையா சங்கையொன் றின்றே.

### நேரிசைவெண்பா.

இன்றி யமையாத வின்பப் பெறச்சிறிது
நன்றி யமையாத நான்முயன் றேன் - றுன்றி
யலரளிசார் வான்றுறைசை யம்பலவா ணநின்
னலரளிசார் வானன் கருள். (௫௬)

### கட்டளைக்கலித்துறை.

அருண்மலி கோமுத்தி யம்பல வாண வாநினைக்
கிருண்மலி கண்ட னெனவும் யானுமி ல்லையென் றேன்
பொருண்மலி யன்னதுண் டேனுண்டு போனும் புகறியென்றுன்
வெருண்மலி யானுண் டெனயா ரெனநீயெ யென்றனனே. (௫௭)

### வேற்றொலிவெண்டுறை.

என்றுமொரு தன்மையனு யாவடுதண் டுறையிலமர்ந் திருக்கு மூர்த்தி
நன்றுமகிழ்ந் தடியவருக் கருள்புரியம் பலவாண நமச்சி வாயன்
சிற்பரம் பொருளெனச் சின்மயத் திரளெனச்
சொற்பதத் தளவிடத் தொலைவில்செஞ் சுடரெனக்

கற்பகத் தருவெனக் கருணையங் கடலெனத்
தற்பெறக் கருதுவார் தங்குணக் குன்றெனப்
பொற்புறப் பொலிவதெம் புண்ணியப் பெருமையே. (௩அ)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

புண்ணியவா வடுதுறையம் பலவாணன் பரசிவனே பொருந்து வேடங்
கண்ணியமற் றவன்மறைத்து முகத்தருட்கண் மறைக்குமவை காண்டோ றன்
தண்ணியகைத் தாமரைகூம் புந்திருநீ றேற்கமலர் தரும்வா யாம்ப[ர்
லண்ணியதோத் திரஞ்செயவிண் டிடுங்கூம்பு மமைத்தபணி யடைத வாவே.

ஒருபோருண்மேன் மூன்றடுக்கிவந்த
ஆசிரியத்தாழிசை.

க. ஆன்ற துறைசை யருளம் பலவாணன்
றோன்ற மொழியுந் துகடீர் திருவாய்ச்சொ
லேன்ற பவநோய்க் கிடுமருந்தே யென்பரால்

உ. அன்பார் துறைசை யருளம் பலவாண
னின்பார் தருமா றிசைக்குந் திருவாய்ச்சொ
றுன்பார் பவக்கடற்கோர் சூழ்வடவை யென்பரால்

௩. அண்ணுந் துறைசை யருளம் பலவாண
னெண்ணும் பலர்க்கு மிசைக்குந் திருவாய்ச்சொல்
கண்ணும் பவமலைக்கோர் காய்குலிச மென்பரால். (௪0)

நேரிசைவெண்பா.

ஆலன்றி ஞான வரசமர்ந்து மேவுபரி
பாலன் றிருவம் பலவாணன் - மாலன்றிக்
கோலரியா னென்றுமயல் கொண்டாய் பெரும்பேதாய்
மாலரியாற் கேது மயல். (௪க)

கட்டளைக்கலித்துறை.

மயல்கொண்ட பேதைக் குறைதோழி யம்பல வாணனுகள்
கயல்கொண்ட வாவித் திருவா வடுதுறைக் கண்ணுயரி
லயல்கொண்ட வீதி யுலாப்போத நேர்தொழு தாசைப்பட்டே
னியல்கொண்ட யானென நீயலை யானென்ற தெப்பொருட்டே. (௪உ)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

பொருவிறுறை சையிற்குருவம் பலவாணன் றிருவுலாப் புறம்போந் தானங்
கொருவிலிவன் மானிடன்ரு னேயென்றேன் றோழியன்னை யோடி வந்து
மருவிலக லாவிவன்முன் மானிடன்ரு னெனத்தார்தா வாங்கி யென்றேன்
கருவிலெச்ச தத்தனுக்குப் பிறவென்றுள் பயனுணரேன் கனவாய் நீயே.

நேரிசைவெண்பா.

நீயாக மத்தடைவு நீதி யுணர்த்தியருட்
டாயாக மத்தடைவு தாமொழிவேன் - மாயா
வலத்துறைசை யம்பலவா மாளிகையா வென்னு
நலத்துறைசை யம்பலவா ணூ. (௪௩)

கட்டளைக்கலித்துறை.

நாடுந் துறைசைந மம்பல வாண நகுருரவன்
பாடுந் தொழிலர் பவமாய்த் திடவிற் பவமிலியே
யாடும் பிறரடைந் தார்பசு போத மறுவகைசொற்
றாடும் பவம்விளைக் குந்திறத் தாலவ ருள்ளவரே. (சரு)

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

வரையகம் பொலியுங் காழகிற் றுணியும் வரைக்கருஞ் சந்தனக் குறடு
மாமணித் திரளு மதகரிக் கோடும் வளமயிற் பீலியும் வரன்றித்
திரையெடுத் தெறிந்து கடலகங் கலக்குந் திருப்பெருங் காவிரித் தென்
றிகழ்தரு திருவா வடுதுறை யமருந் தேசிக னம்பல வாணன் [பாற்
புரைதபு சரணத் தடியவர் குழுமிப் பொங்குபே ரன்புபூண் டேத்திப்
பொலிமலர்க் கமல முதன்மல ரிடவப் பூப்பொதிந் தவிர்பெருங் காட்சி
விரைமலர்க் கணைவேள் பழம்பகை குறித்து விட்டபல் வாளியு மடிமேல்
வீழ்ந்துறப் பற்றித் தஞ்செய லின்மை விளக்குபு கிடந்தவொத் தனவே.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வேளிற் பொலிவார் செறிதுறைசை விமலா குருவம் பலவாணு
தோளிற் கழுநீர் திருவரையிற் சூழுங் காவி யுடையாய்முன்
றோளிற் புனைந்தாய் கருங்குவளை தணந்தா யெனதுட் டாமரையான்
மீளிற் படாம லங்கணிந்தாற் பிழையுண் டாமோ பேசாயே. (சஎ)

கலிவிருத்தம்.

ஆயமர் கருணைமிக் கமைந்த கோமுத்தி
வாயம ரம்பல வாண தேவமுன்
சாயம ரமைமதி தலைக்கொண் டாயின்றென்
காயமர் முழுமதி காற்கொண் டாலென்னே. (சஅ)

வேறு.

நேயன் ஞானத் துறைசை நிமலன்செவ்
வாய னம்பல வாண குருபரன்
றாயன் யானல னென்னவுந் தொட்டிழுத்
தாயன் பாளரி லாண்ட தருண்மையே. (சகூ)

கலிநிலைத்துறை.

மைய ளாம்பொழிற் றுறைசையி னம்பல வாணன்
பொய்ய ளாமெனை யுந்தடுத் தாண்டனன் புகலி
லைய ளாங்கொடி யோன்பகா பாதக னண்ணச்
செய்ய ளாமது ரையின்முன் னுண்டதுபொருளுந் தெளிவே. (ரு0)

நேரிசைஆசிரியப்பா.

தெளிவளர் கருணைச் சின்மய குரவ
னளிவளர் துறைசை யம்பல வாணன்
வெண்மதிக் கவிகை மீமிசை நிழற்ற
வுண்மதித் திடுவிரு துலப்பில வோங்கப்
ரு பல்லிய முழுதும் பரவையின் முழங்கச்

சொல்லிய செந்தமிழ்ச் சுருதிமிக் கார்ப்பத்
தண்ணிய வடியார் சயசய வென்னப்
புண்ணிய முனிவர் புகழ்ந்தனர் வாழ்த்தத்
திகழ்மணி மறுகிற் சிவிகை யூர்ந்து
புகழ்தரு திருவுலாப் போந்தன னாகக்
குலவுநீ ராசனங் கொண்டெதி ரணையு
நிலவுநல் லாரொடு நேரிழை யாயுஞ்
சென்றனை யியானுஞ் சென்றெதிர் தாழ்ந்து
நின்றுகை குவித்து நேருற நோக்கி
யாவன் பால னிவன்புக லென்றேன்
மேவன் பாநகை மேவுறப் புரிந்து
முன்னிவன் பெருமறை மொழிக்கப் பாலன்
மன்னிவன் பராரையின் வளர்கப் பாலன்
மூர்த்தி முதலா மொழிமுப் பாலன்
சீர்த்திகொ ணீற்றொடு திகழ்கட் பால
னறுவகைச் சமயத் தறுவகைப் பாலன்
மறுவகை சுருதி மணத்தக பால
ஞுரு ருப வனைக்கப் பாலன்
மாறு தியற்றி வயக்குகா பாலன்
வளர்தரு தெய்வ மனுச்சா பாலன்
றளர்வரு கௌரி தனக்கழும் பாலன்
தழைதரு மிந்நாட் சைவபரி பாலன்
பிழைதரு தன்மையில் பெருந்தவ பாலன்
பிறவா னிறவான் பிறப்பிறப் பொழிப்பான்
மறவா னினையான் வரவிலன் போக்கிலன்
பேதாய் நீயோ பேசிறு முணர்வாய்
கோதா யாதமெய்க் கூற்றிது கண்டா
யடங்குதி யென்றனை யென்னை
தொடங்குதி தோழியிச் சொற்பொருள் சொலற்கே. (௫௧)

### தாழிசை.

சொல்லரும்பகழி தூவுவான்விழி
சுரந்தவங்கியுண வாயவேள்
சுடுசினத்துழுவை போன்றுபாயுமணி
துத்திநாகவுண வாயகால்
கொல்லும்வெந்தழலை வீசுமிட்டியடி
கொண்டுதேய்த்தவொரு திங்கடான்
குணையெறிந்துசெவி சுடுமடங்குகொடி
தாயநஞ்சமு னெழுங்கட
லல்லுநண்பகலு மம்பறாற்றுவ
ரநங்கனுக்குதவி யாயுவ

ரளவிடற்கருநி னுண்மைமுற்றுமு
ளறிந்துபோனுமக ளென்செய்வாள்
வல்லுமஞ்சுமூலை யணையுமாறருள்செய்
மாலைவான்றுறைசை யம்பல
வாணதேசிக தயாகராவிமல
வான்பெருங்கருணை வள்ளலே. (௫௨)

சித்து.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வள்ளலருட் குருராயன் றுறைசையினம்
பலவாணன் மலர்ப்பொற்பாதங்
கள்ளலரிட் டருச்சிக்குஞ் சித்தரியாஞ்
செந்தாது கஞ்சங் காட்ட
வுள்ளலமப் பாவிரும்பு நாவாய்கொண்
டூழின்னே யுறச்செய்வோமற்
றெள்ளலர்நேர்ந் தமுதுதவிற் செம்புதனை
மறுநாட்பொன் னெனச்செய்வாமே. (௫௩)

இதுவுமது.

மேதகைய நவகோடி சித்தர்கள்வீற் றிருக்குநகர் விளங்கா நின்ற
மாதகையம் பலவாண மாசிலா மணிமலர்த்தாள் வணங்கி யேத்திக்
கோதகையுஞ் சித்தருக்குங் குறையுளதோ புளித்தகூழ் கொடுவா வப்பா
நீதகைய வடுவழற்றீண் டுறபொழுதே வேங்கையெனச் செய்வோம் பாரே.

இதுவுமது.

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

பார்பரவு மாவடுதண் டுறைக்கண் மேய
பரமகுரு வம்பலவா ணப்பேர் வள்ளல்
சீர்பரவு திருமடத்தி லியார்க்கு நல்குந்
திருவமுது கறியமுது நெய்பால் போல
வேர்பரவு மாறுபடை யின்றே றுன்று
வியன்றனசெய் முடியாதே விடுகூ றேழும்
வேர்பரவுன் வறுமைதரித் திரமே யென்ன
மேவுசெம்மைச் சுவணமா விளக்கு வோமே. (௫௫)

இதுவுமது.

பதினான்குசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

விள்ளரும் புகழ்சா லாவடு துறையுண்
மேவிய வம்பல வாண
வித்தகன் றிருமு னொருதினஞ் சென்று
மெய்யுறப் பணிந்தன மனையான்

றள்ளருங் கருணை கூர்ந்துவேண் டுவதென்
சாற்றுக வென்றுநீ றளித்தான்
றளர்விலாப் புடைவீங் கிடவுணல் வேண்டுந்
தயைபுரி யென்றலுந் தேற்றே
மெள்ளருஞ் சுவைய வடிசின்முன் னளித்தா
னிலைதவிர்த் தியாவையு முண்டோ
மிவன்செய்பே ருதவிக் கினிச்செய லியாதென்
றெண்ணினேஞ் சாமியாய் விளங்க
வுள்ளரு மணையான் றிருமட முழுது
முஞற்றினே நமதுசித் தருமை
யுணர்பவ ரியாரே யாவயிற் சென்று
ணுணரலா மோதுவார் பலரே. (ருசு)

கொச்சகக்கலிப்பா.

ஓதுவார் சூழ்துறைசை யோங்கம் பலவாணு
காதுவார் வாளிபல காமன் றொடுத்தடலாற்
போதுவார் கூந்தல் புழுங்கு மழும்விழுநின்
றூதுவார் செங்கழுநீர் தாராமை தண்ணளியே. (ருஎ)

நேரிசைவெண்பா.

தண்ணந் துறைசைத் தமிழம் பலவாணன்
வெண்ணந் துறைகையான் விண்டுவலோ—னெண்ணரிய
வன்னக் கொடியா னலரோ னலன்சிவனே
யென்னக் கொடியான மே. (ருஅ)

கட்டளைக்கலித்துறை.

யானென தென்னுஞ் செருக்கொழி யானின் னெதிர்ப்படினவ்
வானென தென்னுமொண் கோமுத்தி யம்பல வாணபொதி
யூனென தென்னும் படியா னெமதொழித் துன்னடிப்பூந்
தேனென தென்னும்படி பே ருளென்று செய்குவையே. (ருகூ)

கைக்கிளை : மருட்பா.

வைய மடிசூடும் வாட்க ணிடைமகூடு
மைய மினியென் னணங்கல்லள்—வெய்ய
கலர்புக ழாத காமரு துறைசை
மலர்புக ழம்பல வாணன்
பலர்புகழ் காவிலை பயில்குலக் கொடியே. (கூ0)

மடக்கு.

பன்னிருசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

குலவு கழிநீர் மருங்கரும்பே குழைக்கு மதன மருங்கரும்பே
குளிர்செவ் வழியே பொழிவண்டே கொடிய வவனன் பொழிவண்டே
நிலவு மணல்வெண் ணந்தினமே நிகழின் புறவெண் ணந்தினமே
நெஞ்ச முவந்து வருமலவா நிலவே யுயிர்க வருமலவா

புலவு படுநீர்ச் சிறைக்குருகே பொல்லேன் படுநீர்ச் சிறைக்குருகே
போகு மியலார் நாவாயே புழுக்கு மியலார் நாவாயே
சுலவு சீரம் பலவாணன் றுறைசைச் சீரம் பலவாணன்
றுணைத்தோ டாங்கு கழுநீரே தோயி னறுமிக் கழுநீரே. (சுக)

களி.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

நீருறையும் வயற்றிருவா வடுதுறையம் பலவாண நிமலன் கண்டங்
காருறையும் படிகலவான் கழல்புகழ்ந்து பாடி வரு களிய ரேம்யாம்
பாருறையு மானிடர்காண் மாரியின்றி யுலகிலென்ன பயனுண்டாகு
நாருறையு மாதவமில் லாமலெவர் பரகதியை நண்ணு வாரே. (சுஉ)

இதுவுமது.

நண்ணரிய புகழ்த்துறைசை நாயகனம் பலவாண
நமச்சி வாய
னெண்ணரிய புகழ்பாடு களியர்யாம் வேம்புவப்பா
ரிக்கு நீப்பார்
மண்ணரிய வாம்பன்முழு மதியுவக்குஞ் சாலிதவ
வசிட்ட னேம்புங்
கண்ணரிய மேதைகொளா ரெடுத்தபிறப் பாற்பயனென்
கைக்கொள் வாரே. (சுங)

இதுவுமது.

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வாரிபுடை சூழுலகின் முளைத்து நாளும்
வயங்குபெரும் பாதலங்க ளணைத்துந் தாழச்
சீரியவான் பனைதெங்கே யுயர்ச்சி வாய்ந்து
திகழுநறுங் கள்ளருள்கா ரணத்தா லன்றோ
பூரியர்சா ராததிருத் துறைசை மேவும்
புண்ணியனம் பலவாண புனித ஞான
வாரியன்சே வடியடைந்தா ரன்றி மற்றோ
ருருஞ்சாதிப் பற்றிலரென் றறைதல் வம்பே. (சுச)

வஞ்சித்துறை.

வம்பலர் துறைசை
யம்பல வாண
னம்பல ரடிசூ
ழும்பலர் பொருளே. (சுரு)

வஞ்சிவிருத்தம்.

பொருளி லாரைப் புகழ்ந்திடா
ரருளி லம்பல வாணனே
யருளி னுண்டுமக் கானந்தப்
பெருளில் கோமுத்தி மேவுமே. (சுசு)

துறளடிவஞ்சிப்பா.

மேவும்பவம் யாவுந்தப
மலமூன்றற நலமூன்றுற
நாவருமறை யோவருமுறை
தெருண்மலிதர வருள்புரிமதி, நாளுந்
துன்னிய மிருபுகழ்த் துறைசை
மன்னிய வம்பல வாணதே சிகனே. (கூஎ)

குறம்.

எழுசீர்க்கழிநெடிலடி
இரட்டைஆசிரியவிருத்தம்.

சிகைபடு செந்தீ வளர்த்தவி நாளுந் தேவருக் கருத்துவே தியர்வாய்த்
திருமறை முழக்கஞ் சேணுல களக்குந் தென்றிரு வாவடு துறையிற்
பகைபடு தகைமி லம்பல வாணப் பண்ணவ னடியடைந் தார்க்குப்
பழங்கலை யருளப் புதுக்கலை மறைத்த படியெனப் பசுநற வூற்று
முகைபடு குழலாய் நீயுமவ் வாறே முன்னிய புதுக்கலை மறைத்து
முதுபழங் கலையே யெனக்களித் தனைநின் முகக்குறி கைக்குறி நன்
தகைபடு மனையான் றடம்புயக் கழுநீர் தரப்பெறு வாயிது பொய்க்கிற்
சாற்றியான் குறப்பெ ணலவோ காதநிற் றருகுறக் கூடையு மெடேனே.

கலிவிருத்தம்.

எடுப்பான்கழை மடுப்பானளி தொடுப்பானல ரிகல்வே
ளடுப்பானிம காண்கோமுத்தி யருளம்பல வாண
விடுப்பா னுளங் குறியேயெலாளி மிகுசெங்கழு நீரே
கொடுப்பானமை யின்றேமகள் குன்றுவகை நன்றே. (கூகூ)

ஊசல்.

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

நல்லார் துறைசை நகுமம் பலவாணன்
பல்லார் வணங்கப் பரிந்தருளுஞ் சீர்பாடி
வல்லார் முலைகுலுங்க வண்மை வளையார்ப்ப
வல்லார் குழன்மடவீ ராடுகபொன் னூச
லணிமே கலையிடையீ ராடுகபொன் னூசல். (எ0)

வெளிவிருத்தம்.

ஊருஞ் சகடென யானுழல் வதுதப வருளாயோ
பாரும் பிறவு மறுத்தெழு பண்புற வருளாயோ
தேருந் திறமிது வென்று தெளிந்திட வருளாயோ
வாருந் துறைசையு ளம்பல வாணமெய் யருளாயோ. (எக)

மறம்.

எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

அருள்விர வுருவ னம்பல வாண னுவடு தண்டுறை யரசே
பொருள்விர வொருவா னரசுமற் றரசு பூவா சனத்தெளி தூத

வெருள்விர வாத மறமுனு மரசின் மெய்த்திரு முகமுறு மதன்கண்
மருள்விரவாத குழைபலவுண் டே மறிக்குள காமெனின் வையே.(எ௨)

இதுவுமது.

எழுசீர்க்கழிநெடிலடி

இரட்டைஆசிரியவிருத்தம்.

வையகம் புகழு மாவடு துறைக்கண் மன்னிய வம்பல வாணன்
மலரடிக் கோதை மற்றவ னடியார் மார்பொடு தோளுறத் தழுவுஞ்
செய்யமற் றவன்முன் புனைந்தருள் கோதைசேய்ஞுளர்ப்பிள்ளைதோடழுவுஞ்
சேரல நாட்டுச் சிறந்தவோர் கோதை செறியுமே காவியுந் தழுவும்
வெய்யவெங் கோதை வீரர்கை யனைத்தும் வெளிவரு கோதைகஞ் சாறர்
மென்மகள் கோதை யாவையு நகுமா விரதியர் மார்பையுந் தழுவுங்
குய்யமொன் றின்றி யுரைத்தன மறவர் கோதைசீ ரற்றன்று தாத
குலவுநங்குலத்துக் கோதைவேட்டவர்கள் கோதையே யடைவதுமெய்யே.

இதுவுமது.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

மெய்யணு வடுதுறையம் பலவாணன் விடுவதுபோல் விடுக்கினென்னும்
வையமா ளரசர் திரு முகமெனிற்பெண் கொடுக்குங்கொன் மறவர் சாதி
வெய்யவா ளவரெங்கள் பெண்ணுசைப் பட்டெதிர்ந்தால் விண்பூப் பில்லாத்
தையலார் முலைதழுவத் தடிந்துதூரந் திடுமிது சாதந் தானே. (எச)

விறலிவிடுதூது.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

தான மால்களிற் றண்ணனின் பாண்மிகு தண்ணளி யினனென்றே
யீன மார்தரப் புகழுவை விறலிநீ யிஃதொரீஇ யின்னேபோய்
மான வாவடு தண்டுறை யம்பல வாணனைப் புகழ்வாயேற்
போன நாண்மது ரையிலவ னருள்பெறு பூவைநே ராவாயே. (எரு)

பாண்.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வாய்ந்தவிசை நீலகண்டப் பெருப்பாணர் நாமென்று வருவாய் பாணு
வேய்ந்ததலை வன்பரத்தை யவாவினனின் பாலென்ப னென்பா யோர்வல்
வேய்ந்தபுக ழாவடுதண் டுறைவளரம் பலவாண விமலன் பாற்போய்த்
தோய்ந்தவிசை பாடுகழல் சூடுபெரு வீடுபெறு துணிபீ தோரே. ()

எழுசீர்க்கழிநெடிலடி

இரட்டைஆசிரியவிருத்தம்.

துணிபிறை வெண்மை யெலும்பணி வெண்மை
சூடுகங் காளமும் வெண்மை
துரோணமும் வெண்மை கபாலமும் வெண்மை
துவலைசால் கங்கையும் வெண்மை
பணிதரு கொக்கின் றூவலும் வெண்மை
பயில்குழை யருக்கமும் வெண்மை

பரவுறு கயிலை வாகனந் துவசம்
பரிக்குமக் கிவைகளும் வெண்மை
மணியொளி நீறு வாளிதுஞ் சாவம்
வயங்குதேர்ப் பாகிலா னில்லம்
மதம்பொழி யயிரா வணமிவை வெண்மை
மற்றியன் மேனியும் வெண்மை
யணிகிளர் முந்நா ளினக்கெனி னிந்நா
ளவிர்புகழ் நீற்றெருடு துறைசை
யம்பல வாண வாரிய வடிவோ
னறிவுவெண் மையுங்கொளல் வழக்கே. (௱எ)

நேரிசைவெண்பா.

வழியென்று தம்பல வாணுகோ முத்தி
யுழியென்நா ளுஞ்சார்ந் துறைவாய் - மொழியுங்
குறைமதியு மன்றுவந்து கொண்டா யடியேன்
குறைமதியு மின்றுவந்து கொள். (௱அ)

கட்டளைக்கலித்துறை.

கொள்ளுந் தமரிலை தாயிலை தந்தையுங் கூடவில்லை
விள்ளும் புதல்வர் மனையா தியுமிலை மேலுலகை
யெள்ளுந்துறைசைய யம்பல வாணனை யெய்தினர்க்குந்
துள்ளுஞ் சிறுமகள் சார்வானுட் கொண்ட துணிவெனே. (௱௯)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

எவர்பரவு பெருவெளியை வாள்கொண்டு வெட்டிவடு வியற்ற வல்லா
ரவர்நினது கருணையன்றி மலமாயை கன்மமறுத் தடைவார் முத்தி [கற்
பவர்படுசெஞ் சடைமுனிவர் பணிந்தேத்தப் பெருந்துறைசைப் பதிவாழ் வாய்
றவர்வரைகைத் தாமரையம் பலவாண குரவவரு டாவல் லோயே. ()

வலைச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

வலைகொடுமுன் மீன்படுத்தோன் றுறைசையினம் பலவாணன் வயங்கா னந்த
வலைகடலா னருள்வலையா லெங்கண்மன மீன்படுக்கு மதான்று நாளு
முலைமையவரா லச்சுறமேவ திருக்கையடித் தின்பயிரை யூட்டு மிந்நாட்
கொலையமையு முங்கண்மீன் பரவா திங் ககலும்வலைக் குலக்கொம் பீரே.

இடைச்சியார்.

எழுசீர்க்கழிநெடிலடி
இரட்டை ஆசிரியவிருத்தம்.

குலவுபல புவனத்து மிருவகை யுறும்பசுக்
குலம்விரா வுறவிரித்துக்
கோதில்பரி பாலனஞ் செய்தமும் பிள்ளைகள்
குடிக்கவின் பாலுமுதவி
நிலவுமெழு விடையொடும் பொருதமுழு விடையுடைய
நின்மலப் பேரண்டனே

நிகழுமா வடுதுறையின் மேயவம் பலவாண
நெடியபேர்த் தோன்றலாகிக்
கலவுவழி யாறுணர்பு மற்றுமொரு வகையிற்ச
கலபசுக் களையுமோம்பிக்
கருதுஞா னப்பால் பெருக்கியமர் வெண்ணெய்மெய்
கண்டானிந் நாளினுணர்வீ
ருலவுபுகழ் சாலுமிவ் வூரினும் மோர்தயி
ருவந்துகொள் வாருமியாரே
யொத்தபாற் கலையமோ ரிரண்டும்வேண் டாரகலு
மொள்ளிழை யிடைச்சி யீரே. (அஉ)

இன்னிசை வெண்பா.

இடையான் கடையானு மென்று முழல்வா
னடையா னொருதற் கடுத்ததனை யுய்க்கு
முடையான் றுறைசை யொருவனியன் ஞான
நடையாள னம்பலவா ணன். (அங)

குறள் வெண்பா.

நமக்காயு மம்பலவா ணன்றுறைசை யுற்றூர்
தமக்காயுந் தாள்சூட்டித் தான். (அச)

பஃறொடை வெண்பா.

தானந் தவந்தழைக்குந் தண்டுறைசை யம்பதிவா
னானந்த போத னருளம் பலவாணன்
றேனந்த வுண்டு தெவிட்டிக் குமட்டெடுத்து
மோனந் தலைசிறந்த முத்த ரொடுகூட்டி
யீனந் தபுத்தான்மற் றென்முதன்மை யுந்தபுத்தா
னானந்தத் தானே நகுமுதன்மை யாயினு
னானந்த ராதினியொன் றும். (அரு)

## பிச்சியார்.

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஒன்றியமெய்ப் பொருளன்பர்க் குபதேசஞ் செய்யவந்த வொருவன் போல
வென்றியவெம் படைகரந்த கள்ளவிழி யோடுசிவ வேடந் தாங்கி
நன்றியலம் பலவாணன் புகழ்பாடி னெவன்சுவண நகுவா னொடும்
பின்றியவண் டுறைசைநகர் மணிமறுகில் வந்துலவு பிச்சி யீரே. (அசு)

## கொற்றியார்.

### இதுவுமது.

ஈரஞ்சார் வனமணியா விகைமுதலா கியபலவு மெடுத்துப் பூண்டு
கூரஞ்சார் படைநெடுமாற் கடிமையென வெளிவந்துங் கொற்றி யீரே
யாரஞ்சார் கழுநீர்த்தோட் டுறைசையுளம் பலவாண னருள வாவி
வாரஞ்சார் தரப்பாடு வீரொருசாக் கியர்போன்றீர் மகிழ்ந்தாம் யாமே.

## வெறிவிலக்கல்.

### நேரிசைவெண்பா.

மேலாய வான்றுறைசை மேவம் பலவாணன்
பாலாய வாசை பகர்வார்யார் - சாலாய்கே
டாளா வியங்கவெழு தாலத்தான் மையறிஞே
வேளா வியங்கே விடும். (௮௮)

### கட்டளைக்கலித்துறை.

விடலருங் கோமுத்தி யம்பல வாணமெய் யாசிரிய
கெடலரு நின்றடந் தோளலர் வேட்டவென் கேழ்கிளர்மான்
படலரும் வீர மதவேடன் கையலர் பற்பலரா
யடலரு மூருறை வார்வா யலம்பிக் கடைந்தனளே. (௮௯)

### நேரிசைவெண்பா.

அடையார் புரஞ்சுட்டா யன்றடையு மாசை
யுடையார் புரஞ்சுடு வானுற்றாய் - தடையாரே
செய்வார் துறைசைத் திருவம் பலவாணை
வெய்வாரே நீத்தின்றி தென். (௯0)

### கட்டளைக்கலித்துறை.

எனக்கானந் தத்தை யருள்செயுங் காலமெக் காலமிகு
கனக்கானந் தத்தை யரைய்க்கேட்கப் பாடறு காலுவர்சந்
தனக்கானந் தத்தை யரோடு மாவடு தண்டுறையாய்
முனக்கானந் தத்தைய யம்பல வாண முதலவனே. (௯௧)

### காப்பியக்கலித்துறை.

முத்த ஞாயினு மினியவன் கோமுத்தி முதல்வ
னத்த ஞாயினு மாசிலா னம்பல வாணன்
பித்த ஞாயினு முழல்பவன் றீவினை பெருக்க
சத்த ஞாயினுங் கடைபனை யாண்டதுந் தகவே. (௯௨)

### நேரிசைவெண்பா.

தகரம் படுங்குழனெஞ் சந்தளர வேள்வித்
தகரம் படுங்கழு நீர்த்தத்தான் - மகர
மடையாத் தவத்துறைசை யம்பலவா ணைகை
யடையாத் தவத்துறைமெய் யாம். (௯௩)

### அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஆமலியும் வயற்பொதுவி னின்றருளி நடிக்குமினைப் பாறுமாறு
தேமலியும் பொழிற்றுறைசை யிருந்தருளி யொருநடிப்புச் செய்யா நிற்கு
நாமலியு மித்தகுகா ரணங்குறிந்தே துறைசைவா ணனையெஞ் ஞான்று
மேமலியும் பெரும்புலமை யினர்தாமம் பலவாண னென்பார் மெய்யே.

### வேறு.

மெய்யே பெருமை யுடையார்பால் விரவிப் புகுநம் பெருங்கருணை
பொய்யே புரிந்து மிகச்சிறுமை பூண்டாய் பாலும் புகுங்கொலெனிற்

செய்யே மலியும் புகழ்த்துறைசைச் செல்வா திருவம் பலவாண
வையே கடலன் றியுமுறவி யளையும் புகுங்காண் பிரளயமே. (கூரு)

மேகம் பொலியுங் குழன்மடவாள் விடாது தன்மேற் பழம்பகைபூண்
டேகம் பொலியு நின்கூட்ட மிச்சித் தனளென் றுடன்றடும்வே
ணாகம் பொலியும் பொழிற்றுறைசை நம்பா நகுமம் பலவாணா
மோகம் பொலியுஞ் செங்குவளை முருக்குங் கருங்குவளைக்கெதிரே.()

**கட்டளைக்கலித்துறை.**

எதிருற்ற யானுநின் பொற்றா மரையடி யெய்தப்பெற்று
மதிருற்ற சிந்தையி னோடுழல் வேன்கொலவ் வாறுழன்றாற்
கதிருற்ற கோமுத்தி யம்பல வாணமுற் காலத்திலென்
புதிருற்ற நெஞ்சத்தொ டூதுற்ற கூற்றத்தை யொப்பவனே. (கூஎ)

**இன்னிசைச்சிந்தியல்வெண்பா.**

ஒப்பிலான் கோமுத்தி யுள்ளா னொளிர்சடையோ
டப்பிலா னெங்க ளருளம் பலவாணன்
றப்பிலான் மாக்களுக்கோர் தாய். (கூஅ)

**அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.**

தாயனையாய் முன்னநினைச் சார்ந்தானைச் சார்ந்தார்க்குந் தந்தாய்முத்தி
பேயனையாய் வருதியென்று நினைச்சார்ந்த வெனக்கருளாப் பெற்றியென்னே
நாயனையா யகலென்றாற் கதியேதா வடுதுறையாய் நமக்கான் சாடுந்
தீயனையாய் திகழ்திருவம் பலவாண மெய்ஞ்ஞானச் செல்வக் கோவே.

**நேரிசைவெண்பா.**

வேதனைசெய் மும்மலமும் வேரோ டறுத்தருளா
யேதனையென் றொன்றியொன்றா வின்பமுறக் - கோதில்
குல்வாணா மெய்ஞ்ஞானக் கோமுத்தி வாழம்
பலவாணா நீகடைக்கண் பார். (க00)

**அம்பலவாணதேசிகர்கலம்பகம்முற்றிற்று.**

---

## சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர்மாணாக்கராகிய

திரிசிரபுரம். சி. தியாகராசசெட்டியாரவர்களியற்றியது.

---

**அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.**

நலமன்னு கைலாய பரம்பரையி னருட்டுறைசை நமச்சி வாயன்
குலமன்னு சூரியனம் பலவாண தேசிகன்மேற் குணத்தான் மிக்க
நிலமன்னு பெரும்புலவர் விரும்புகலம் பகம்புனைந்தா னிகழுங் கீர்த்தி
வலமன்னு சிராமலைவாழ் மீனாட்சி சுந்தரநா வலவ ரேறே.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவிடைமருதூர் உலா.



## ஆண்டபிள்ளையார்துதி.

சீருலா வான்றோர் செவிக்க ணிடைமரு
தூருலா வேற வொளிதரும்பை - யேருலைப்
பூண்டமா தங்கமதுப் பூங்கொன்றை யாரளித்த
வாண்டமா தங்க மது.

## நூல்.

### கலிவெண்பா.

க பூமேவு நான்முகத்துப் புங்கவனுஞ் செங்கமல
மாமேவு மார்பமணி மாயவனுங் - கோமேவு
உ மிந்திரனும் வானோரு மேனோரு மின்பமுற
வைந்துதொழி லாற்று மருட்கொண்மூ - வைந்துதொழில்
௩ சந்ததமுஞ் செய்துந் தனக்கோர் தொழிலில்லா
னந்த மலையாய னன்கின்ற - சுந்தரப்பொற்
ச கன்னி யொருபாற் கலந்தும் விகாரமிலான்
றுன்னியெலாற் றுந்தோய்ந்துந் தோய்விலான் - முன்னியமண்
ரு ஞாதியுரு வெட்டுமெத்து வாவுருவோ ராறுமிருண்
மோதிய வைந்தொழிற்கு மூலமாய்ச் - சோதி
சு யுறுமுருவொன் பானுமுற்று மோருருவு மில்லான்
மறுவின்மறை யாதி வகுத்தோன் - பெறுநெறியே
எ யாமுயிர்க்கே யின்ப மருத்தி நெறிதப்பிப்
போமுயிர்க்கே துன்பம் புணர்த்துவோ - னாம
அ விருள்சே வலத்தி னிணர்த்தருவிற் றீயாய்த்
தெருள்சே ரிடையிற்கற் றீயா - யருள்சேருஞ்
கூ சுத்தத்திற் காரிரும்பிற் றோய்தீயே யாய்நிற்போ
னெத்தத் துவங்கட்கு மெட்டாதான் - முத்தன்றன்
க0 வாமத்தைப் பூமேவு மாதர்க்கொடொட் டுப்புணைய
நாமத்தைச் செய்விடமுன் னுளயின்றோ - னேமத்தண்

கக சொல்லமுறைப் பாகுவந்து நோயவைத்தோன் கைப்பகழி
வில்லமர்பூ நாரிதனை மேவவைத்தோ - னல்லற்

கஉ சிறுவிதியா கத்திற் றினகரற்கு முன்னங்
குறுகியிருள் கூடவைத்த கோமான் - றெறுபசியால்

கங வந்தழுத சேயின் வருத்தந் தெரிந்தமுது
தந்தமடைப் பள்ளி தனைக்கொடுத்தோன் - கந்த

கச மலர்மலரோன் றன்னு மதன்மெய் குளத்து
ளலர்கட் கமலத் தழித்தோன் - பலர்வெருவத்

கரு தோற்றுந் தொழினஞ் சுதந்திரமன் றென்றெண்ணக்
கூற்றுயி ருண்ட குரைகழலான் - சாற்றும்

கசு பிரணவத்துண் மேயோர் பிரமன்மா லென்பார்
முரணவிக்குங் கொன்றையந்தார் முன்னோ - னாரணவனை

கஎ மண்வைத்த குக்கி வளைவைத்த செங்கைமால்
கண்வைத்துங் காணக் கழலினா - னெண்வைத்துக்

கஅ கண்கை யிடந்துகொலை கண்ணுறுபு கொள்ளாமல்
வண்கையிடங் கொண்டவசி வாய்ப்படையா - னெண்கவினார்

ககூ தன்னிரதம் பாதலத்துத் தான்புக் கழுந்தாமன்
மன்னிரத நீர்வேணி வைத்தபிரான் - றன்னுகனை

உ0 வாளியெளி தீர்தரப்பின் வாளிலங்கை மன்னனைமுன்
றாளின் விரனுதியாற் றனடர்த்தோ - னாளும்

உக புணரு மடியார் புரிபிழைபு மேனோர்
குணமு மிகந்தகுணக் கோமான் - மணமலிபூங்

உஉ காவின்மயி லேத்தவரு கண்ணமைமா லென்றுநினைத்
தோவினடஞ் செய்கயிலை யோங்கலிடை - மேவிநல

உங மாவித் தகத்து வயங்கா கமமுழுதுந்
தேவிக் குபதேசஞ் செய்தருள - மாவிற்கண்

உச ணன்னமயின் மண்ணுலகை யான்றெரியு மாகாட்டி
யின்னலற நீவீற் றினிதிருக்க - நன்னயவி

உரு சேட தலமுந் தெரித்தருள வேண்டுமெனச்
சூடகச் செங்கைத் துணைகூப்ப - வாடமைத்தோ

உசு ணங்காய்நன் றென்று நகைமேயற்றின் மீமிசைமற்
றங்கா தலிமோ டமர்ந்தருளிப் - பங்காளுங்

உஎ கோதாய்காண் கென்று குவலயமுற் றுந்தெரித்து
மேதா வியர்புகழு மேன்மைபுனை - போதாருங்

உஅ காவிரியுங் கோட்டுவளக் காவிரித்தென் பாற்பொலியும்
வாவி யிடைமருதூர் வாய்மேவ - மேவியநோர்

## தலவிசேடம்.

௨௯ மின்னையு மாதவனும் வேதனுங் காணாத
தன்னையு நாடிவந்த தன்மைபோற் - பன்னுபுகழ்

௩0 வாகீசர் போல வருந்தித் தமிழ்நாட்டீ
ரேகி ரெனவந் திருந்ததுபோல் - வாகார்

௩௧ திருப்புவன முற்றுஞ் செழுமறைகள் யாவும்
விருப்புமிக நின்றேத்தும் வெள்ளிப் - பொருப்புப்

௩௨ பெருவளவர் நாட்டின் பெரும்புண்ணியத்தா
லொருமருத மாகியவ னுற்ற - தருமையத

௩௩ னன்னிழற்கண் வானி னரையேற் றினைநிறுவித்
தன்னிட நீங்காத் தலைவியைப்பார்த் - தின்னகையுய்

௩௪ மேவுறு நன்பூ மிகவுகுத்து விண்ணுலகைப்
பூவுல காக்கும் பொழில்பாராய் - தாவிமிசைப்

௩௫ பொங்கவரி நிப்பொற் பொடிவீழ்த் துபுமண்ணைப்
பங்கமில்பொன் னுக்கும்விட பம்பாரா - யெங்குநின்மெய்க்

௩௬ காமமொளி பாய்தலிற்கார் கால மெனக்கருதி
மாமையினன் காடு மயில்பாராய் - பூமருநுஞ்

௩௭ சேயொளியாற் பைந்தழைகள் சேப்புற வேனிலென்று
கூயமருந் தேமாங் குயில்பாராய் - மேயவிரு

௩௮ நம்மேனி யொன்றியென நன்கொருபாற் சேந்தொருபாற்
பைம்மேனி யாமாம் பழம்பாரா - யம்புவிக்

௩௯ கான்முனிதன் மைந்தன்முதற் காணு முழுமுனிவர்
மான்முதனீக் காற்றிடுத வம்பாராய் - பான்மொழியே

௪0 யென்றுகாட் டந்தனிகா ணெவ்வுலகு மீன்றுளுக்
கொன்றுபகிழ் வாற்க னுறைதுளிப்ப - வன்றதுமுற்

௪௧ காணுந் திசைபோடிக் காருணி யாமிர்தமென்
பூணும் பெயரிலகப் பூண்டதன்மேற் - கோணிலவு

௪௨ சூடியதன் கண்கள் சொரிநீ ரிருகூறு
போடி வடமேற் குதக்கெதிருங் - கூடுதடத்

௪௩ துட்போய் விழமு னுலர்ந்த சலசாங்கா
ணட்பாம் விதிக்கு நறுந்தடத்துப் - பெட்பா

௪௪ முருத்திர ராகியெழுந் தொண்மலர்த்தாள் போற்றிப்
பெருத்தசிவ லோகமுற்ற பின்னர்த் - திருத்தவண்வாழ்

௪௫ தண்முனிவர் முன்பு தமிழ்மணக்குஞ் செங்கனிவாய்
வண்முனிவன் வந்துதவ மாமுனிவீர் - கண்ணொருமூன்

௪௬ றுற்றபுகழ்ச் செய்யகரும் புங்கையுறும் பைந்தோகை
பற்றி முயலுமென்றுப் பாற்போக - வெற்றி

சஎ முனிவரரவ் வாறெம் முதல்வியை நோக்கிப்
புனித தவம்புரியும் போது - நனிமகிழ்ந்து

சஅ தன்னே ரிலாத தலைவியை முன்புகுத்த
வன்னேர் குழலு மவணடைந்து - பொன்னேர்

சகூ வளவர்பெரு மானுடு மாதவத்த தென்ன
வளவிலா மாதவமங் காற்ற - வுளமகிழ்வுற்

ருO றெம்மா லயன்முன்போ லின்றுஞ் செருக்கடைந்தா
ரம்மாவென் றியாரு மதிசயிப்ப - விம்மாநன்

ருக மேதினி நின்று வெளிமுகடு மூடுருவச்
சோதியுருக் கொண்டெழுந்து தோன்றினோன் - நீதிலரு

ருஉ ளானேயென் றேத்து மவர்தெளியு மாறுதன்னைத்
தானே யருச்சித்த தம்பிரான் - வானுட

ருங ராதியர் காமிகமுன் னுமா கமத்தின்வழி
யோதியருச் சிக்க வுவந்தருள்வோன் - போதியனீர்

ருச காகம் படியக் கனகவுரு நல்கிப்பி
னேக வுருத்திரமெய் யெய்தவைத்தோன் - கோகநக

ருரு மாண்டமல ராதிகொடு மன்னு கமத்தின்வழி
யாண்டமத வேழ மருச்சித்தோன் - பூண்டதவத்

ருகூ தோதை கெழுசீ ருரோமசற்கு வெற்பீன்ற
கோதையொடு காட்சி கொடுத்தபிரான் - மேதை

ருஎ யொருவீர சோழ னொளிரா லயமும்
வெருவா நகரமுஞ்செய் வித்துத் - திருவார்தைத்

ருஅ திங்கட் டிருநாளுஞ் செய்வித்துப் போற்றிசெய
வங்கட் கருணை யருளியகோ - னங்கண்மிரு

ருகூ கண்டு மகன்பணியக் கண்டொரு பாற்பசுமை
கொண்டுமிளிர் காட்சி கொடுத்தகோன் - றண்டாப்

கூO புரவுக் குறுமுனியெப் போதுறுமென் றன்னோன்
வரவுக் கெதிர்பார்க்கும் வள்ளல் - பரவுற்ற

கூக பூசைவினை முற்றுவந்து புண்ணியச்சு கீர்த்திதனக்
காசில்வினை யெச்ச மளித்தபரன் - காசிபன்றன்

கூஉ கண்ணனிள மைக்கோலங் காணத் தவம்புரிய
வண்ணலது காட்டுவித்த வைம்முகத்தோன் - வண்ணக்

கூங குமரன் முனிவரொடுங் கூடியான் றிங்கி
லமர நதியை யமைத்துத் - தமரமிகப்

கூச பூசிக்கப் பெற்றோன் புகழிட்ட ரோமன்சு
கேசிக் கினிய கிளர்மதலை - வீசி

௬௫ யனையமகன் கங்கைபுகுந் தாடுறுபோ தந்த
நினையுநதி யோரா நெறிக்கொண் - டினையலென

௬௬ வென்னைப் புரப்பாள்க ணீர்ம்புனல்வா விக்குள்வரக்
கொன்னைக் குழமகனுங் கூடவந்து - முன்னையொரு

௬௭ வாவிபடிந் தையாற்று வாவியிடைச் சொல்லரசர்
மேவியெழுந் தென்ன வெளிவந்து - கூவிவரு

௬௮ மத்தனொடு கூடி யடிபோற்றி யேத்தெடுப்பச்
சித்த மகிழ்ந்தருளிச் செய்தபிரா - னுத்தமச்சீர்

௬௯ வாய்த்த தசரதற்கும் வண்பூவைப் பூவைநிறஞ்
சாய்த்தவுடற் கண்ணனுக்குந் தானுவந்து - பூத்த

௭0 மதலைபல நல்கி வழிபட்டா ரென்று
மதலைபல நல்கிய வள்ளல் - சுதமில்

௭௧ புகழிரா மன்கணையாற் பூந்தடமொன் றாக்கித்
திகழ வழிபாடு செய்ய - மகிழ்சிறந்தோன்

௭௨ மச்சகந்தி யைப்புணர வந்த வருவருப்பை
மெச்சும் பராசரற்கு வீட்டினோ - னச்சமிலா

௭௩ தாசா னிலாட்புணர்ந்த வாசுங் கலைக்குறைவுந்
தேசார் மதிவணங்கத் தீர்த்தருளு - மீச

௭௪ னினைத்தொருதீர்த் தத்தி னிமிமகன்க ணட்டப்பு
ணனைத்தவுடன் காயவைத்த நாதன் - வினைத்திறனோ

௭௫ னாவரு நீர்தோய்ந் தடிபணிய மண்ணளித்த
தெய்வப் பெருமான் சிவபெருமான் - குய்யம்வைத்து

௭௬ வேந்தன் வலற்செகுத்த வெம்பழிக்கும் பாகனைக்கொன்
றேந்துபழிக் கும்பழிச்ச வீறுசெய்தோன் - போந்துதழல்

௭௭ காண்ட வனத்தைக் கலந்தவுயி ரோடுண்ண
வீண்டரின்முற் றும்பரவ வீடழித்தோன் - மாண்ட

௭௮ குறுமுனி கண்களிக்கக் கூற்றுவி மேவி
மருவி லகோரவுரு வாய்ந்தோ - னுறுசீர்

௭௯ நிருதிதடந் தோயு நியதியனைப் பேய்முற்
கருதியடை யாவண்ணங் காப்போன் - சுருதி

௮0 நடையார் வருண னறுநீர் படியக்
கடையார்சோத் தீப்படியக் கண்டோ - னடையுங்

௮௧ கிருகலன்கா னீர்மூழ்கிக் கேடிலா முத்திப்
பெருமுழுநீர் மூழ்கவைத்த பெம்மான் - வருமொருதன்

௮௨ றேழன் றடம்படியுந் தூயோனை மற்றவனுந்
தாழ வுயர்த்துந் தனிமுதல்வன் - வாழ்வடைவா

அ௩ னோகாமார்க் கண்டமுனி யீசான நீர்மூழ்கச்
சாகா வரங்கொடுத்த தண்ணளியோன் - வாகான

அச கண்ணன்கூ வத்துக் கருதிமழைக் கோன்மூழ்கக்
கண்ணன் களித்தருளுங் காபாலி - கண்ணுவணம்

அ௫ பண்ணிய தீர்த்தமுதற் பத்துந்தோய் வார்பிறப்பை
மண்ணி யருளு மகாலிங்கம் - புண்ணியமே

அசு மேவவளர் கச்சபனு மெய்ம்முனிவன் முன்வாம
தேவவுருக் கொண்டெதிர்ந்த தேவர்பிரா - னேவறமுன்

அஎ கோதமதீர்த் தந்தோய் குணத்தா லகலிகைக்கு
வாதனைப்பா டாணவுரு மாற்றுவித்தோன் - போதலர்கல்

அஅ யாணதீர்த் தங்கார்க்கோ டன்படிய முன்பரிச்சித்
தேனைறத்தீண் டிக்கொள்பழிக் கீறுசெய்தோ-னீணிலஞ்சே

அகூ ரந்த நறுந்துறைபுக் காடுநள னுக்குச்சி
வந்த கலியைக்கறுத்து மண்கொடுத்தோ - னந்துமதில்

கூ0 வெள்ளை புழுகவொரு வேதியனைக் கொன்றபழிக்
கள்ளக் கறுப்பகலக் கண்சிவந்தோன் - றள்ளரிய

கூக சீர்த்திப் பகீரதனைத் தீர்த்தம் படியநலங்
கூர்த்தவான் கங்கை குவலயத்தி - லார்த்துவரச்

கூஉ செய்தோ ரறுப திறுயிரரு முத்தியுல
கெய்தா விருக்க வினிதளித்தோன் - வையகத்துப்

கூ௩ பொல்லா னொருவன்வந்தப் பூசத் துறைபடிய
வல்லார்மெய்க் கூற்றவனுக் கஞ்சவைத்தோன்-சொல்லுமந்நீர்

கூச வல்லா னெனச்சேடன் வந்தாட மண்சுமக்கும்
வல்லா னெனச்சொல் வலியளித்தோ - னல்லார்

கூ௫ திகழுக் துறைகந்த தீர்த்தமெனக் கந்தர்
புகழுற்று டக்கருணை பூத்தோ - னிகழ்வற்ற

கூசு வத்துறையில் வேந்த னயிரா வதமுனிவன்
வைத்தசா பங்கழுவ வைத்தவருண் - முத்த

கூஎ னொரும்கோட் டியானை யுவந்தாடித் தன்பே
ரிருகோட் டதற்கிடவுள் ளேய்ந்தோ - னொருவீர

கூஅ சேனன் படியச் செறிபிர மக்கொலைதீர்த்
தீனமிலா வான்கைலை யேற்றினோன் - மானமிகு

கூகூ சித்திர கீர்த்தி செறிந்துபடிந் தர்ச்சிக்கப்
புத்திரனை நல்கும் புகழாளன் - சுத்த

௧00 மறையோன் கனகதடம் வந்து படியக்
குறையார் குருடொழித்த கோமா - னிறையோனுய்

க0க விண்ணுலகை யாளமரர் வேந்தன் முடிதகர்த்து
மண்ணுலகை யாளும் மயவேந்தன் - றண்ணளிசேர்

## வரகுணபாண்டியதேவர் வழிபாடு.

க0உ மன்னன் மதுரை வயங்கு வரகுணத்
தென்னன் பெருங்கானஞ் சென்றொருநாண் - முன்னுகடு
க0ங மாவேட்டஞ் செய்துவப்ப வாம்பரிமேன் மீள்பொழுதோர்
தீவேட்ட வேதியனைச் செல்வழியின் - மேவி
க0ச மயங்கிக் கிடந்துகனை யட்டத் தடியா
லுயங்கிக் கழிய வுணரா - னயங்கெழுசீர்
க0ரு பெற்றதன்னூர் மேவப் பிரமக் கொலைதொடர
வுற்றதனை யாது மொழியாம - னற்றவர்சூ
க0சு ழாலவா யண்ண லடிபோற்ற வக்கடவு
ளேல விடைமருதூர்க் கேகென்னச் - சாலமகிழ்
க0எ பூந்தனையான் வந்து புகும்போதே யப்பழியைத்
தீர்த்தருளிச் செய்திடவுந் தென்னவனு - மாத்தலமா
க0அ மித்தலத்தை நீங்கே னெனவங் குறைந்திடுநா
ளத்த கொடுமுடி யாவரணம் - வித்தகமாய்ச்
க0கூ செய்துசூ ழென்று திருவாய் மலர்ந்தபடி
செய்துசூழ்ந் துங்கரவு தேரொருவன் - செய்யநுதல்
கக0 வெண்ணீறு கண்டு விசித்தகடுங் கட்டவிழ்த்து
நண்ணீ றிலாதபொரு ளான்களித்து - மெண்ணிநரி
ககக யுள்ளன வெல்லா முடையானைக் கூவியவென்
றெள்ளரிய வாடை பரிதளித்தும் - விள்ளாத்
ககஉ தவனை யாமுழுக்கந் தான்செய்த தென்று
திவண்மணிபொன் வாரிச் சிதறி - யுவகையுற்று
ககங மெள்ளுண் டவன்வா ரிசைத்தமொழி கேட்டனையான்
றள்ளுண்ட வெச்சி றனைநுகர்ந்துங் - கொள்ளா
ககச விழிகுலத்தோன் சென்னியவ்வூ ரெல்லைகிடக் கக்கண்
டிழிகணீ ரோடுகரத் தேந்திக் - கழிவுற்
ககரு றடியேன் றலையுமிவ்வா றாகியிவ்வூ ரெல்லைக்
குடியாமோ வென்றிரக்கங் கொண்டும் - படர்தளிமுற்
ககசு புன்குல நாய்மலந்தன் பொற்பூங்கை யாலெடுத்து
நன்குறமேவம் பிற்குவிதா னஞ்சமைத்து - மன்புமுதிர்
ககஎ பொன்னு நிகராப் புணர்முலைத் தேவிதனை
மன்னு மியற்பகைக்கு மாறாக - முன்னு

௧௧௮ முயர்மருத வாணு வுவந்தடி யேனுய்ந்
தயர்வறநீ கொள்கென் றளித்தும் - பெயர்வரிதா

௧௧௯ வின்னும் பலபணிசெய் தின்புறுமக் கோமாற்கு
மன்னுபுகழ் முத்தி வழங்கினே - னன்னிலைமைத்

௧௨0 தொல்லை யுவனுச் சுவன்வயிற்று மாறுப்புண்
வல்லை வலஞ்சூழ மாற்றினேன் - வெல்லுமவன்

௧௨௧ மைந்தன் புறங்கொடுத்த மாற்றானைக் கொன்றபழி
முந்தவலஞ் சூழ்முன் முடிக்கினே - னந்துவசு

௧௨௨ மான்வந்து சூழ்போது மற்றவன்ற னுடைவனைத்
தான்வந்து சூழத் தலையளித்தோ - னீனந்தி

௧௨௩ ரஞ்சத் துவச னடைந்துசூழ் முன்பவற்சூழ்
வஞ்சப் பிரமகத்தி மாய்த்தபிரான் - விஞ்சுபுகழ்ப்

௧௨௪ பூசத் துறைபடிந்த புண்ணியர்கால் கைப்புனறோய்ந்
தாசற் றிரண்டுயிர்வா னண்ணவைத்தோன் - மாசற்ற

௧௨௫ நாரத மாமுனிவ னண்ணிவிழாச் சேவிக்க
வாரம் படகருணை வைத்தபிரான் - வார்மீ

௧௨௬ னுணங்க லுயிர்பெற் றுருத்திரர்க ளாகி
யிணங்குலகத் தெய்தவரு ளீந்த - வுணங்கன்மீன்

௧௨௭ கொண்டபொதி யிட்டிகைகள் கொண்ட வொருவனுக்குத்
தண்டலில்பொன் னாகச் சமைத்தபிரா - னண்டர்தொழப்

௧௨௮ பொன்னுருவத் துட்டான் பொலியுமுரு வொன்றியைத்துத்
தன்னுருவி லாவுருவந் தான்றெரித்தோன் - பன்னுபொரு

௧௨௯ ளோர்வளவற் கீந்தனையா னெண்பொருள்வீ சிப்பணிக
ளார்தரச் செய்ய வருள்வைத்தோ - னேரு

௧௩0 மணங்கனுக்கு மின்று யவதரிக்கச் செய்தோர்
சுணங்கனுக்கு முத்திதந்த தூயோ - னிணங்குபொடி

௧௩௧ மெய்ப்பூ சவர்கேட்ப வேவுதிரி யம்பகன்றான்
றைப்பூச மாடத் தகுமென்றோ - னெப்போது

௧௩௨ மில்லா வலஞ்சுழியே யேரம்பன் வைப்பாக
மல்லே ரகமுருகன் வைப்பாக - நல்லார்சேர்

௧௩௩ தண்மாட வாப்பாடி தண்டீசன் வைப்பாக
வண்மாந் துறையிரவி வைப்பாக - வெண்மாறு

௧௩௪ நன்காமர் தில்லை நடராசன் வைப்பாக
மன்காழி யேவடுகன் வைப்பாக - முன்காணுந்

௧௩௫ தென்னு வடுதுறையூர் சேவமர்வைப் பாவாரூர்
மன்னுசோ மாக்கந்தர் வைப்பாக - வுன்னிற்

கங்கூ றடைதவிரா லங்குடியா சாரியன்வைப் பாக
விடைமருதில் வீற்றிருக்கு மீச - னடைதருசீ

கஙஎ ரேற்ற வுருத்திரர்க ளேகா தசரும்வந்து
போற்றவருள் செய்த புகழ்ப்பெருமான் - மாற்ற

கஙஅ மிணங்குமணி பொன்னுதி யிட்டமர ரென்றும்
வணங்கு மருதவன வாண - னணங்கயர்புற்

கஙகூ றேறுடையான் காதில்வளைத் தோடுடையா னீடமர்கல்
லாலுடையான் யாவரையு மாளுடையா - னூலுடையார்

கசO நாடுவோன் பற்றுத நாயே னிதயத்துங்
கூடுவோன் பொன்செய் குளிர்மன்றத் - தாடுவோ

கசக னேராழித் தேரோ னுதிசைத் திசையென்னுஞ்
சீராழி யங்கைமகட் சேருவா - னோராகச்

கசஉ சென்மதியுண் முன்மதியிற் றெய்மதியில் பக்கத்து
நன்மதிகொ டன்வத னத்தொகைகொ - டுன்னுதிதிப்

கசங புட்கொடியைக்கொண்டு பொறிக்கொடிமார்பிற்கொண்மரைக்
கட்கொடி யேற்றிக் களிசிறப்ப - விட்குலவு

கசச குன்றுபுரை தோளாருங் கோற்றொடியா ரும்புவனத்
தொன்று பலரு முடனெருங்க - வன்றுமுதற்

கசரு காலையினு மாலையினுங் காமர்பல தூரியமும்
வேலையினு மார்ப்ப வியன்மறுகின் - மாலைபெற

கசகூ வெற்பு நிகர விளங்குபல வூர்தியினும்
பொற்பு மலிபவனி போந்தருளி - யற்புமுதி

கசஎ ரின்பதா மென்ன வெவருந் தொழச்சேரு
மொன்பதா நாளொன்று மொண்டிருநாண் - மின்பயில்பூண்

கசஅ வாய்ந்த பெருநல மாமுலை யோடியற்று
மேய்ந்த துயினீத் தினிதெழா - வாய்ந்தசெழும்

கசகூ மைப்பொற் றகட்டிற் பலமணியுங் கால்யாத்த
வம்பொற் றிருமண் டபமணுகி - நம்புற்ற

கருO வீறுதரு மாகமஞ்சொன் மிக்க விதிப்படியே
கூறு மபிடேகங் கொண்டருளி - நாறுகுழற்

கருக பெய்வளைத்தோ ளெங்கள் பெருநல மாமுலைதன்
மைவளையு நீல மலர்நோக்கான் - மெய்வளைத்த

கருஉ போழகு நோக்குதலாற் பேதை யவணயனக்
காழகு மேனி கலந்ததென - வீரமலி

கருங காத்திர கும்பக் கருமலையிற் கொள்போர்வை
போர்த்தி யிருந்த பொலிவென்னச் - சீர்த்திமிகு

கருச பன்முகத்து முள்ள பலவண் ணமுமறையத்
தென்முகத்து வண்ணமெங்குஞ்சேர்ந்ததெனத் - துன்னுபிறர்
கருரு தப்பார் தருக்கொழிதல் சான்றிதென மால்கொடுத்த
குப்பாய மெய்ப்புனைந்து கொண்டதென - வொப்பேது
கருசு மில்லாத் திருமேனி யேந்தழகைச் சாந்தமுலைப்
பல்லாருங் கண்டு பசப்பெய்திப் - புல்லாளப்
கருஎ பெட்டாவி மாழ்காமற் பெய்வளைக்கை யம்மைகரும்
பட்டான் மறைத்த படியென்னக் - கட்டார்கொ
கருஅ ளோதிமுடி யாள்சமழ்ப்ப வோங்கற் புதல்விமற்றோர்
பாதியுரு வுங்கவர்ந்த பான்மையெனத் - தீதின்மணம்
கருகூ பொங்குநீ லோற்பலப் பூமலர்த் தாளன்றி
யெங்குநெருக் குற்றே றியவென்னத் - தங்கு
கசுo மணமாரும் பஞ்ச வடிபொலியப் தென்னத்
தணவாத் திருச்சாந்து சாத்தி - நிணபலிவாய்
கசுக வேங்கை கொடுத்தகலை வீக்கு மிடத்தொளிரும்
வேங்கை கொடுத்தகலை வீக்கியே - யோங்குபய
கசுஉ னுய்ந்தவொரு பெண்ணுமற் றோரா ணுமமகிழச்
சாய்ந்து திரிந்த தனியிடத்து - வாய்ந்தபுனற்
கசுங பெய்வளை மாதைப் பெருநலமா முலைதன்
மைவிழிகா ணுமன் மறைத்ததெனக் - கைவல்லா
கசுச ராற்று மணிமருட்ட மப்பவள மோங்கன்மிசைத்
தோற்றுகதி ரென்று சொலக்கவிந்துப் - போற்றுபுக
கசுரு பூற்றன்மிகு கண்ணப்ப னன்பிற் சொனுமுகம
னேற்றுமகிழ் பூத்த வியலிடத்துச் - சாற்றுபுனன்
கசுசு மங்கை யுனைக்குமொழி வந்து புகாதுமையாள்
செங்கை புதவஞ் செறித்ததெனப் - பங்கமிலா
கசுஎ மாமணிசெய் கோடீர வயிரஞ் செயுமப்பொற்
றாமகர குண்டலமுந் தொட்டணியா - வேமவரை
கசுஅ யொன்றுபடவிருகி யோங்கன்மகண் மார்பில்வளர்
குன்றுபட வெல்கிக் குழைமிடத்து - நன்றுகரு
கசுகூ போகுசுடர்ப் பன்மணியும் பொங்கியெழுக் கால்யாத்த
வாகு வலயம் வயக்கியே - பாகனின்செய்
கஎo கஞ்சக்கண் மாயனயன் கற்பகக்கோ னாதியர்கூற்
றஞ்சச் சிறைவைத்த வவ்விடத்தே - விஞ்சுபுகழ்
கஎக மின்னுமுலை கங்கைவெள்ளாய் விற்றுறு மீடாகா
மன்னுமணிக் கட்டு வடமணிந்து - பன்னுமுமை

கஎஉ வட்ட முலைக்குமணி வாரா மிடத்தண்ட
மட்டினிலா விற்றாள மாலையிட்டு - முட்டரிய

கஎங தாவின் மணிவீர சங்கிலிய தாணிபல
மேவிய வாயிடைமேன் மேற்புனைந்து - தாவா

கஎச மடங்கிண்ட தொண்டருத்த மாங்கந்தாங் கக்கல்
விடங்கிண் டெழுந்த விடத்தே - மடங்காக்

கஎரு கருவி தனக்குக் கருதுபிற வேண்டா
விருமை மணிக்கடக மிட்டுக் - கருது

கஎசு மலரோன் முடிதுணித்த வைவாட் குறையா
யிலகுமிடத் தாழிபல விட்டு - நலமருவு

கஎஎ பொன்னுக்குப் பின்னிருந்து பொங்குவெள்ளி தங்கிடத்து
மன்னுதர பந்தம் வயக்கியே - துன்னியொரு

கஎஅ பன்றி தொடாமற்றோர் பன்றி தனைத்தொடர்ந்து
சென்ற விடத்துச் சிலைப்பணிந்து - நன்றவற்றுட்

கஎகூ கொண்டசின மாதி குறையாதே தென்றிசைக்கோன்
கண்ட விடத்துக் கழல்கட்டித் - தண்டாத

கஅ0 மாதங்க வுத்தரிய மன்னு மிடத்தொளிசெய்
மாதங்க வுத்தரிய மன்னுவித்துத் - தாதுவிரா

கஅக தாவாத கொன்றையந்தார் சர்ப்பப் பிராந்தியிட
மோவாதான் மேவ வுவந்தணிந்து - பூவார்கைக்

கஅஉ கொண்டகருப் புச்சிலையான் கோலத் திருமேனி
யுண்ட கடுங்கூற் றுறையிடத்தே - தண்டலில்லா

கஅங மேலறு கடலைமா லேய்நீற்றுத் தூளன்மே
னூறுதிரி புண்டரநா னத்திலகம் - வீறுகொள

கஅச விட்டெறிப் பாதி யெடுத்துமுடி மேற்கவிய
நட்டினிது வைத்த நயமென்ன - வெட்டுணையு

கஅரு பாசுசா ராத வயிரமுழுக் கச்செறித்த
தேசு மிகுவா சிகைசேர்த்துப் - பேசுபுக

கஅசு ழிட்டநயக் கோரிளை வின்றுவரு மென்றுமலர்
மட்டுறுதா ரான்றான் மன்னுவகை - யுட்டுளைய

கஅஎ நின்வலப்பா கத்தொருத்தி நீங்கா திருப்பதென்னென்
றென்மலர்வா மத்தா ளிசைத்தாட - நன்மைதிக

கஅஅ மும்மதிலை யிவ்வாயு மவ்வாளை யிம்மதியுஞ்
செம்மை புரவுகொண்டு சேர்படைப்ப - மும்மைப்

கஅகூ புவனத்துந் தான்றோய் பொலிவுணர்த்த லேய்ப்பப்
பவளக்காற் கண்ணாடி பார்த்துத் - திவள்பருப்புப்

ககூ0 பொங்கல்பான் மூரல் புளியோ தனங்குளஞ்சேர்
துங்கமடை நெய்மிதக்குஞ் சொன்றியளை - தங்கயினி

ககூக பாகு கருணை பகரும் வறையறுவை
யாகு மிலட்டுகமெல் லாவியப்பம் - போகுசுவை

ககூஉ நொலை யடைநன் னுவணை முதற்பலவுஞ்
சோலை யுதவு சுவைக்கனியுங் - காலை

ககூங யிளநீர் குளநீ ரியன்மோ ரளாய
வளநீர் கனிபிழிந்த மாநீ - ரளவா

ககூச வெவையுஞ் சுவைதேர்ந் தியலவாய் பூசிக்
குவைகொள்விணைப் பாகடையுங் கொண்டு - நவையரிய

ககூரு மேதகுதூ பந்தீப மிக்க விவைமுதற்செய்
யோதுபசா ரங்க ளுவந்தருளிக் - கோதறுசீர்

ககூசு வாய்ந்தவொரு தானும் வயங்கு தனதருளிற்
றோய்ந்தவடி யாருஞ் சொலவந்த - வாய்ந்த

ககூஎ வெழுதா மறையு மெழுது மறையும்
வழுவாது கேட்டு மகிழ்ந்து - தொழுவார்

ககூஅ நயங்குல வின்ப நறும்பலம்பெற் றுய்ய
வயங்கு மொருகோட்டு மாவுஞ் - சயங்கொள்சத

ககூகூ கோடி யரசின் குலந்தழைய வெம்பகையைத்
தேடியவோர் வேல்கொள் செழுங்குருந்தும் - பாடியலா

உ00 வோட்டை மனத்தக்க னோம்பரணிச் சோதிமகங்
கேட்டை யுறச்சிவந்த கேடிலியு - நீட்டுமொரு

உ0க கைத்தலைநால் வேதங் கமழ்வாய்த் தலையொன்று
வைத்தலைநெய்த் தோரேற்ற வானவனு - நித்தமுந்தன்

உ0உ னுய்மனைசெந் தாமரையே யாக வுறைவாளைத்
தாய்மனை யென்றழைக்கத் தக்கோனுந் - தூயவையை

உ0ங நீரு நெருப்பு நிரப்பு தமிழ்ப்பெருமை
யோரும் படியருள்கொ ளொண்மழுவுந் - தீராத்துன்

உ0ச பாய கடலமணை ராழ வளையொடலை
மேய கடன்மிதந்த வித்தகனு - மாயவன்கண்

உ0ரு காணாக் கமலநடுக் கங்குலினு ஊர்த்தெருவின்
பாணாகப் பூத்துழல வைத்தோனுங் - கோணாது

உ0சு மூகைவாய் பேச முழுப்பேச்சு வாய்மூகை
யாக வியற்றிய வாண்டகையும் - பாகமிலாத்

உ0எ தாதையிரு தாடடிந்து தாயையொரு பாகங்கொ
டாதையிரு தாளடைந்த சான்றவனு - மோதைகெழு

உ0அ கைச்சிலம்பின் றோளுடைத்தன் காற்சிலம்பி னோசைசெவி
வைச்சிலம்பி னுண்டுய்ந்த வானவனும் - பச்சுமைகை

உ0கூ யாய்நீர் கரந்த வரியமுடி மேல்வழிய
வாய்நீர் பொழியன்பு மாமுகிலும் - பாய்மை

உக0 தகவரிந்தூட் டாது தலையிழந்தா ளுண
மகவரிந் தூட்டியசீ மானு - நகமறைக

உகக வீன்றதன்வா யென்று மிசைத்தறியா வம்மையெனு
மான்றசொல்லி சைக்க வமைந்தாளுஞ் - சான்றதிரு

உகஉ மங்கலப்பொன் கொண்டுமனை வாய்மொழிசொற் கொள்ளாது
குங்கிலியங் கொண்டுவந்த கொள்கையனும் - வெங்கொடி [யோன்

உகங கோச மறைத்தவாள் கொண்டுதகா தாற்றவுந்த
னேச மறைத்தறியா நீதியனும் - வாசமுறத்

உகச தோய்ந்தபுக ழாரூரன் றொண்டத் தொகையுணிலைத்
தாய்ந்தபுகழ் மற்றை யடியாரும் - வாய்ந்த

உகரு வலர்துழாய் நாறு மகன்றளியைக் கொன்றை
மலர்துழாய் நாறவைத்த மானு - நிலவு

உகசு முலகுண் டுமிழ்ந்த வொருவனைப்பா லுண்போ
துலகறிய வுண்டுமிழ்ந் தோனு - மிலகுநடங்

உகஎ கண்டே பசிதணிக்குங் காமர் விரதமொன்று
கொண்டே விளங்கு குணத்தவருந் - தண்டேறல்

உகஅ பெய்தவர் பெய்யலர் பேசல ரேயாகச்
செய்தவ ரென்னுமற்றைச் செய்தவருங் - கையிற்

உககூ குடவளை கொண்டுங் குடவளைக்காய்ப் பாடி
வடவளை க்கட்டுண்ட மாலு - மிடவளையப்

உஉ0 பூமேலெஞ் ஞான்றும் பொலிந்தும்புத் தேளாய்ச்செந்
நாமேல்வெண் மாதுவைத்த நான்முகனு - மாமே

உஉக லொருசுவர்க்கங் கைக்கொண் டுவந்தயி ராணி
யிருசுவர்க்கம் வைகு மிறையும் - பொருவரிய

உஉஉ வெற்பகநா ணப்பொலிந்து வீங்குதோண் மேற்புனைந்த
கற்பக மாலைக் கடவுளரும் - பொற்பகலாத்

உஉங தேந்தா மரைமலர்த்துஞ் செங்கதிரும் பூவினுக்கு
வேந்தா மதுகுவிக்கும் வெண்கதிருங் - காந்தாப்

உஉச பொலிபடைகொண் டாசை புரப்போருஞ் சீர்த்தி
யொலிபடைத்த பூதகணத் தோரு - மலியுமிசை

உஉரு பத்தர்பதி யாழ்கொண்டு பாடுந் தொழில்வருஞ்
சித்த ருரகர்முதற் செம்மையரு - முத்தமமீ

௨௨௬ தெண்போ தெனவொருவ னெள்ளெச்சி லுண்டவிமற்
றுண்போர் பலரு ளுயர்ந்தோனும் - பண்போ

௨௨௭ ரணிக்கோவை தீட்டி யகமகிழ்தற் கோர்மும்
மணிக்கோவை சூட்டியகோ மானும் - பிணிக்கோதி

௨௨௮ லாதிசைவ ராதி யணியா லயத்தொண்டிற்
கேதிலரா காதியற்று மெல்லோரு - நீதிநெறித்

௨௨௯ தக்கபெருஞ் சீர்ச்சுத்த சைவசித்தாந் தத்திருவின்
மிக்க திருக்கூட்ட மேன்மையரு - மொக்கவரப்

௨௩0 பண்பார்கை லாய பரம்பரை மெய்கண்டா
னண்பார்சந் தான நனிதழைக்க - விண்பார்

௨௩௧ புகழ வருங்குரவர் போரேறு ஞானந்
திகழவரு மானந்தச் செல்வ - னிகழ்வி

௨௩௨ றுறவுபூண் டோர்பலர்க்குஞ் சூளா மணிமிக்
குறவுபூண் டெவ்வுயிரு முண்மை - பெறவுவக்கு

௨௩௩ ஞான விநோதனுயர் நாவலர்தம் போரேறு
சான முடையார் தனித்துணைவன் - மானத்

௨௩௪ திருவா வடுதுறைவாழ் செல்வன் கருணை
மருவா வருநமச்சி வாயன் - பொருவா

௨௩௫ வரமணியென் றெல்லோரும் வாழ்த்தப் பொலிசுப்
பிரமணிய தேசிகனெம் பெம்மான் - பரவுமுண்மை

௨௩௬ தாங்குபெருஞ் சித்தாந்த சைவக் குழாங்களென
வோங்குதிருக் கூட்டத் துடன்மேவ - வீங்குசெம்பொற்

௨௩௭ றேரும் பரியுஞ் சிவிகையும் யானையுமற்
றாரும் பிறவுமுவந் தூர்தருபல் - லோருள்ளு

௨௩௮ முன்னூர்வோர் பக்கத்து மொய்த்தூர்வோ ரோர்தனக்குப்
பின்னூர்வோ ரம்முறையே பெற்றூரப் - பொன்னூரு

௨௩௯ மின்பணியும் வேத்திர மென்மலர்க்கை கொண்டசைத்துத்
தன்பணியி னந்தி தலைநிற்பக் - கொன்பரவு

௨௪0 வாரி யுடுத்தபெரு மண்ணொருதாட் குள்ளடக்கு
மூரி விடைக்கொடி முன்போத - வேரிவரு

௨௪௧ மாலவட்டஞ் சாமரைசாந் தாற்றி யொலியன்முதன்
ஞாலவட்டஞ் சொல்பலவு நண்ணிமொய்ப்பக் - கோல

௨௪௨ முழுவெண் மதியு முடிமேற்கொண் டென்ன
வெழுவெண் குடைமே விலகப் - பழுதில்

௨௪௩ பதலை முழவம் படகந் திமிலை
முதல முகிலின் முழங்க - நுதலினொளிர்

உ௪௪ கண்ணுடையான் வந்தான் கருது மொருபாகம்
பெண்ணுடையான் வந்தான் பிரான்வந்தா - னெண்ணினருக்
உ௪௫ காய்தந்த வன்பருளி யாட்கொள் பவன்வந்தான்
றாய்தந்தை யில்லா தவன்வந்தான் - பாய்தந்த
உ௪௬ நல்லா ரணியேக நாயகன்வந் தான்புலமை
வல்லா ரணிமருத வாணன்வந்தான் - புல்லார்
உ௪௭ நயந்தபுரம் வேவ நகைத்தபிரான் வந்தான்
வயந்தழைவெங் கூற்றுதைத்தான் வந்தா - னயர்ந்தயன்மால்
உ௪௮ சாவாம னஞ்சுண்ட தம்பிரான் வந்தானெம்
மூவா முழுமுதன் மூர்த்திவந்தான் - றுவாத
உ௪௯ பொன்னம் பலத்தாடும் புண்ணியன்வந் தானென்று
சின்னம் பலவுமெதிர் சேவிப்ப - வன்னமணி
உ௫0 யாத்த வொளிமண் டபநின்று தேவியொடு
மேத்திமறை வாழ்த்த வினிதெழுந்து - தாத்திரிநின்
உ௫௧ றம்பொன்முடி யண்ட மளாவவெழு கோபுரநற்
பைம்பொன்மணி வாய்தல் பலகடந்து - செம்பொன்மலர்
உ௫௨ தூற்றியெல் லோருந் தொழநடைக் காவணத்தி
னேற்ற வழியே யெழுந்தருளித் - தோற்றத்
உ௫௩ தலங்குதிரு வீதி யணுகியம்பொன் வெற்பி
னிலங்கு திருத்தேர்மே லேறி - நலங்கொளரி

குழாங்கள்.

உ௫௪ யாதனத்து மேவமுடி யாரும் புனற்றுறைகண்
டாதரத்து மேவவந்த வன்னமெனச் - சீதநிழல்
உ௫௫ வாழ்மருத வாழ்க்கை மதித்துறவு கொள்ளவந்த
கேழ்கிளர்செந் தாரப்பசுங் கிள்ளையெனத் - தாழ்சடைமேன்
உ௫௬ மின்னு முகிலின் விளக்க முணர்ந்துவந்த
மன்னு கலாப மயிலென்னப் - பொன்னிறங்கைத்
உ௫௭ தாய்க்கு முனமளித்த தண்ணருள் கண்டுவந்த
கூய்க்குலவு தேமாங் குயிலென்னச் - சேய்க்குமுன
உ௫௮ மேவுமொரு பெண்கொண்ட மெய்யுறவு கண்டுவந்த
வாவு மிளமட மானென்னத் - தாவாத
உ௫௯ வொண்டரு வென்றுதனை யுள்கிப் படரவாக்
கொண்டருகு வந்த கொடியென்ன - மண்டு
உ௬0 சடையையின மென்று தவக்கருத்திற் கொண்டா
யிடையடைய வந்தமின லென்ன - வுடையதனைக்
உ௬௧ கோணில் பிரணவ குஞ்சர மென்பதுளம்
பேணி யடைந்த பிடியென்ன - வாணிலவு

௨௬௨ விண்ணுலக மேயபல மின்னாரும் வாரிதிசூழ்
மண்ணுலக மேய மடவாரு - நண்ணுபெரும்

௨௬௩ பாதலத்து மேய பலமா தருமாட
மீதலத்துஞ் செய்குன்ற மேனிலத்தும் - பூதலத்துஞ்

௨௬௪ சோதிமணிச் சாளரத்துஞ் சூழ்பசும்பொன் மன்றிடத்தும்
வீதியிடத் துஞ்சதுக்க மேவிடத்து - மோதிமநேர்

௨௬௫ மாடமணி சோபான வைப்போ டாமியத்து
மாடகஞ்செய் வேதி யதனிடத்தும் - பாடமையு

௨௬௬ மின்னென்று சொல்சடையீர் வின்மா ரணியெரித்த
தென்னென்று கேட்க வெழுந்துநிற்ப - தென்னக்

௨௬௭ குருமுடிக்கா ரோடுறவு கொள்ளவிழைந் தென்னப்
பெருமுடிக்கா ரோதி பிறங்கத் - திருமுடியில்

௨௬௮ வாழும் பிறைவடிவும் வண்ணமுமொத் தேமென்று
வீழும் பொடிநுதன்மேன் மேல்விளங்கப் - போழுங்

௨௬௯ கருவிழிச்சேல் கங்கை கலப்பமுயன் றென்னப்
பொருவிலிரு பாலும் புரள - வொருவின்முடி

௨௭0 யவ்வாய் மதிநட் பமைந்தவாக் காம்பலெனச்
செவ்வாய் மலர்ந்துசுவைத் தேனூற - வொவ்வா

௨௭௧ வலக்கணுற வுற்று வயங்குகம லம்போ
னலக்க முகம்பொலிவு நண்ண - நிலக்கண்

௨௭௨ டணைவேய்கொண் டாங்குறவு தாங்கொளவுற் றென்னப்
புணைவேய் வளைத்தோள் பொலிய - வணையும்

௨௭௩ வரையைக் குழைத்த வரைகுழைக்கு மாபோல்
விரையக் குவிமுலைகள் விம்மப் - புரையறுதன்

௨௭௪ கண்ணெதி ராகாக் கணைமதவே ளன்றென்னு
மெண்ணெதி ராகா விடைதுவள - வண்ணவரைத்

௨௭௫ தன்பணியை வெல்லத் தருக்கியெதி ருற்றெனச்செம்
பொன்பணி யல்குல் புடைவீங்க - நன்புவியோ

௨௭௬ ரெண்ணியறோர் யாத்த வெழிலரம்பை முற்றும்வெலக்
கண்ணியடைந் தாங்குக் கவான்பொலியப் - புண்ணியத்தன்

௨௭௭ பாடியறோர் மேவப் பழகுதல்போற் றன்பழைய
நீடியறோர் மேவுபத நேர்சிறப்பக் - கூடி

௨௭௮ யெழுகடலு நாண வெழுந்தபெரு வெள்ள
முழுகு நெடியசடை மோலி - யொழுகழகும்

௨௭௯ வையமிகழ் தக்கன் மகக்கூற் றவதரித்த
செய்யவிழி நெற்றித் திருவழகு - முய்யப்

உ௮0 பகலிரவு செய்யம் பகத்தழகும் வேத
மகலரிய செவ்வா யழகும் - பகாடியார்

உ௮க மெய்த்தசுவைச் சொல்லமுதே வேட்ட செவியழகு
மொய்த்த கருணை முகத்தழகு - மொத்துலகங்

உ௮உ காத்தமணி கண்டக் கறுப்பழகு மேருவலி
தேய்த்த தடந்தோட் சிவப்பழகும் - வாய்த்தசிவ

உ௮ங ஞானங் குடிகொ ணகுபூண் முலையுழக்குந்
தானமெனு மார்பத் தனியழகு - மானகுடீ

உ௮ச ரோடை யெனுந் தன்முகத்தி னெண்கணெனும் பூவமைக்குங்
கூடையெனுஞ் செந்தாட் குலவழகும் - வாடையுத

உ௮௫ வெண்ணூற்ற வில்லோ வெனும்வா சிகையழகு
நண்ணூற்ற புன்மூர னல்லழகுங் - கண்ணுற்றார்

உ௮௬ மாலானார் கண்ணிமைப்பு மாறினா ரோவியமே
போலானார் நெஞ்சம் புழுங்குவார் - சேலான

உ௮எ கண்முத்தஞ் சூடிக் கதிர்த்தமுலை மேற்பழைய
வெண்முத்தம் போக்கி வெதும்புவா - ரொண்மைச்

உ௮அ சரிகுழ ருழ்ந்திடையைச் சூழ வுடுத்த
விரிகலை போக்கி மெலிவார் - பிரிவரிய

உ௮௯ நன்னா னொடுகதிரு நாணுமணி கோத்தபல
மென்னாணும் போக்கியுளம் விம்முவார் - பொன்னனை

உ௯0 கன்று கழன்றகறல் காணா ரிளந்தென்றற்
கன்றுகழ லாதடைதல் கண்டயர்வார் - நன்றுநன்று

உ௯க பொன்செய்த செஞ்சடையார் போற்றியா நோக்கியதற்
கென்செய்தா ராலென் றிரங்குவார் - மின்செயொரு

உ௯உ பங்காட்டி செய்தவமே பாடுற் றதுவீணே
யங்காட்டி நாம்பயில்வ தம்மவென்பார் - செங்காட்டுப்

உ௯ங பிள்ளைப் பழிகொண்டார் பெண்பழிக்கு நாணுவரோ
கொள்ளைப் பழிகொள் கொடியரென்பார் - வள்ளைப்

உ௯ச பயம்பணையார் கூடற் பழியஞ்சி யாரென்
றியம்பு வதுமுகம னென்பார் - நயம்படரப்

உ௯௫ பொங்கரவப் பூணுவந்தீர் புன்க ணுதவுமக்குச்
சங்கரனென் னும்பேர் தகாதென்பார் - துங்கமிகு

உ௯௬ வேய்வன மேவல் விருப்பீரெம் பொற்றொடித்தோள்
வேய்வன மேவல் விரும்பீரோ - காயரவின்

உ௯எ வாயமுது கொண்டு மகிழ்வீரெஞ் செம்பவள
வாயமுது கொண்டு மகிழீரோ - மேயமலர்க்

உ௯௮ கொங்கைச் சிலம்பு குழைத்தீரெம் மார்பிடங்கொள்
கொங்கைச் சிலம்பு குழையீரோ - பங்கமிலிப்

உ௯௯ பொற்றோ் விரும்பிப் புணர்ந்தீரெம் மல்குலெனும்
பொற்றோ் விரும்பிப் புணரீரோ - கற்றலஞ்சேர்

௩00 வாழை யடவி மருவினீ ரெங்குறங்காம்
வாழை யடவி மருவீரோ - தாழ்விழியாச்

௩0௧ சீத மதியைமுகஞ் சேர்த்தீரெம் பொன்வதனச்
சீத மதியைமுகஞ் சேரீரோ - நாதவரு

௩0௨ டாவென்ற வோரன்பர் தம்பாற்சென் றுன்மனையைத்
தாவென்ற தூர்த்தருநீர் தாமலவோ - மாவென்றிப்

௩0௩ பூதஞ் செயும்படையீர் பொன்னனையாள் பாவிரத
வாதஞ்செய் தன்புற்றார் மற்றெவரோ - சீதமலர்

௩0௪ மட்டார் புனன்மதுரை வாழ்வணிக மின்னார்கை
தொட்டாரும் வேறுமொரு சுந்தரரோ - கட்டார்கொ

௩0௫ ளோதியெமைப் பாராநீ ரோராசன் முன்கொடுத்த
மாதினையெவ் வேதுவினுள் வைத்திருப்பீர் - மோது

௩0௬ புரத்தை யெரித்ததுமெய் போர்புரித லால்வேள்
புரத்தை யெரித்ததுநீர் பொய்யே - சிரத்தையின்மாற்

௩0௭ காழி கொடுத்தநுமை யாதரித்த நாங்கள்கைப்பல்
லாழி யிழப்ப தழகாமோ - வாழ்தேவூர்க்

௩0௮ கன்றுக் கிரங்குங் கருணையீர் தீருமெங்கைக்
கன்றுக் கிரங்காவன் கண்மையெவ - னன்றோர்

௩0௯ நகரி லமண்சுருக்கி நங்கூறை தீர்த்திந்
நகரி லமண்பெருக்க னன்றோ - புகரில்

௩௧0 கருங்குயிலும் பாலடக்கக் கற்றீர் வருத்துங்
கருங்குயிலெம் பாலடக்கக் கல்லீர் - நெருங்குழலை

௩௧௧ யுள்ளிடத்தும் வைத்தீ ரொருத்தி கவர்ந்துகொண்டு
தள்ளிடத்து மெம்மைவைத்த றுஞ்சகியீர் - வெள்ள

௩௧௨ மடக்குந் திறலீரெம் மம்பகம்பெய் வெள்ள
மடக்குந் திறல்சற்று மாளீர் - கடுப்பின்

௩௧௩ மதிமயங்கா வண்ணமுடி வைத்தீர் பரவெம்
மதிமயங்கா வண்ணம்வைக்க மாட்டீர் - புதியகரு

௩௧௪ மஞ்சனையு மெங்கண் மணிக்கூந்தற் கட்டவிழ்ப்பீர்
பஞ்சவடிக் காங்கொலெனப் பார்த்தீரோ - வஞ்சம்

௩௧௫ பயில்கொக் கிறகு படர்சடைத்தீர் வெங்
குயில்பற் றிறகெவணீர் கொள்ளீர் - வெயிலின்

௩௧௬ மணியுடைநும் பூணுணவு மாற்றும் விரத
நணியனகொ றென்ற னடிக்கும் - பிணிதவிர்மெய்

௩௧௭ யந்திவா னென்றே யமைத்தோ மமைப்பதற்கு
முந்திக் குவிந்த முககமல - நந்திப்

௩௧௮ பரவு சடைமுகிலைப் பார்த்தவுடன் சொல்லாய்
விரவு குயிலொடுங்கி விட்ட - வுரவிற்

௩௧௯ றிகம்பரரா நும்மைத் தெரிந்தடைந்த யாமுந்
திகம்பரரே யாகிச் சிறந்தோஞ் - சகம்பரவு

௩௨௦ மத்திக் கருளி யறங்கொண்ட செங்கண்முலை
யத்திக் கருளி யறங்கொள்வீர் - பத்தியருக்

௩௨௧ கேற்று வருவீ ரிடர்க்கடலுண் மூழ்குமெமக்
கேற்று வாராமை யியம்புவீர் - போற்றியனும்

௩௨௨ மேனிதழ லென்றுரைப்பார் மெய்யே யருகடைந்தே
மேனிதழ லாய விதத்தென்பார் - மேனு

௩௨௩ ணுணங்கண்மீன் றுள்ள வுவந்தீர்நீர் கண்மீ
னுணங்கண்மீ ளுக வுவப்பீ - ரிணங்கு

௩௨௪ மிடைமருதா னந்தத்தே னென்பா ரருளா
வடைவினிம்ப நெய்யென் றறைவோ - முடையவரே

௩௨௫ கோதை தரினுவப்புக் கூடு மறுக்கின்மிகு
வாதையுறு மென்னுமட வாருளொரு - பேதை

பேதை.

௩௨௬ விடாய வாடவாம் வெவ்வரவம் பற்றத்
தொடாத மதிப்பிஞ்சு தோலா - நடமுடையார்

௩௨௭ தேறுந் திறத்தமருந் தெய்வமரு திற்பறந்
தேறுஞ் செயலி விளங்கிள்ளை - மாறுபடு

௩௨௮ சூர்மாவென் றுள்ளந் துணிந்ததோ காமறியோ
மூர்மா விவர்ச்சி யுருதகுயி - ரூர்மார்

௩௨௯ படவுடைய மார னவாவியினி தேறத்
திடமருவு முதவிளந் தென்றல - படமிலக்கி

௩௩௦ யென்மார்பி னில்லா விரண்டு முடைப்பன்னுய்
நின்மார்பி னுற்றமைசொ னீயென்பாள் - பொன்மார்பத்

௩௩௧ தேறுகைத்தா ரன்ப ரிதயம்போல் வஞ்சமுதன்
மாறு விளையா மனத்தினு - டேற

௩௩௨ நடந்ததனென் யானீ நடந்திலைபொற் பாவாய்
கிடந்தகுறை யென்னென்று கேட்பா - ளுடைந்திடுமுன்

௩௩௩ வல்லையே பாவிம் மரப்பாவைக் கூட்டமுலை
யில்லையே யார்கொடுப்பா ரென்றழுவாள் - வல்லா

௩௩௪ ரெழுதுமொரு பூசையைக்கண் டின்றே கிளிக்குப்
பழுதுவரு மென்றேட்டப் பார்ப்பா - டொழுகுலத்தின்

௩௩௫ முற்று தமிழ்விரகர் முன்னமணர் வாதம்போ
லுற்றுமுடிக் கப்படா வோதியாள் - பற்று

௩௩௬ குடியிற் பொலிமாதர் கொண்டநாண் போலக்
கடியப் படாக்குதம்பைக் காதாள் - படியி

௩௩௭ லடுக்கும்விடங் கொள்ளா வராக்குருளைப் பல்லே
கடுக்கு மெனப்புகலுங் கண்ணாண் - மடுக்குமுயி

௩௩௮ ரொன்று கழிதரமற் றொன்றுபுகு மூலருடம்
பென்று கரையு மெயிற்றடியா - டென்று

௩௩௯ வினைபெற்ற மேருவல்லா வெற்பினங்கள் போனுண்
டனையுற் றறியாத் தகையாள் - வனையுங்

௩௪0 குழலும்யா ழுங்கைப்புக் கொண்டோமென் றெண்ணி
யுழலுமா றோர்செ லுரைப்பா - ளழகு

௩௪௧ பருவ மிரண்டிட் பருவமே யொப்பப்
பெருக வளர்ந்த பிணைக்க - டெருவி

௩௪௨ னெருங்கப் புகுந்து நிறைகல்வி யான்றோர்
சுருங்கச் சொலன்முதலாத் தோற்றி - யொருங்கு

௩௪௩ பொருள்புணர்த்திப் பாடப் பொலிசெய்யுண் முன்னந்
தெருளுணர்ச்சி சாலாச் சிறியர் - மருள்வகையிற்

௩௪௪ பாடுகின்ற செய்யுளெனப் பற்பலவாஞ் சிற்பமெலாங்
கூடுகின்ற மாடக் குலமுன்னர் - நீடுபெரு

௩௪௫ வீடுசிறு வீடென்று மென்மே லுறவியற்றிக்
கூடி மவர்புனையுங் கோலமென - நாடுவிரற்

௩௪௬ கோலம் புனைந்து குலாவி யவருவக்குஞ்
சீல மெனவுவக்குஞ் செவ்வியிடைச் - சாலு

௩௪௭ மருவு முருவு மனனும் புனலு
மிருவுங் கொடையு மிரப்பு - மொருவா

௩௪௮ விரவும் பகலு மினனு மதியும்
புரவு மழிப்பும் பொருந்திப் - பரவுசிறப்

௩௪௯ பானுருவும் பெண்ணுருவு மாலா லமுமமுதுங்
கானு மரவுங் கலைமதியும் - பேணுதிறல்

௩௫0 யோகமும் போகமு முள்ளா ருரைபலவு
மேகமு மாய விடைமருதர் - மோகப்

௩௫௧ பெருந்தேர் நடத்திவரப் பெட்டனைமா ரோடவ்
வருந்தேர் தொழுதற் கடைந்து - திருந்துமனை

௩௫௨ மார்வணங்கும் போது வணங்கினான் மான்முதலோர்
நேர்வணங்குந் தெய்வவுரு நேர்கண்டாள் - காரும்

௩௫௩ வணங்கோதி யன்னை வதனமலர் நேர்பார்த்
திணங்கோ திவர்யாவ ரென்றா - ளணங்கே

௩௫௪ யிடைமருது வாழீச ரெல்லா வுலகு
முடையார் நமையா ளுடைய - ரிடையறநன்

௩௫௫ றாரும் விடைகருட னூர விடைகொடுத்தார்
சாருந் தமையப் புணர்ந்து சாத்தனையீன் - றாருங்

௩௫௬ கொடிபுணரச் செம்பொற் கொடிகொடுத்தார் மூன்று
கடிமதிலும் வேவக் கறுத்த - வடியுடைப்பே

௩௫௭ ரம்புசுமந் தெய்வ வகத்தியனார் தம்மைக்கொண்
டம்பு கொடுத்த வழகரென - நம்புமிவ

௩௫௮ ரித்தெருவிற் றேரேறி யேன்வந்தார் சொற்றியென
முத்தமொளிர்ந் தென்ன முகிழ்நகைசெய் - தத்தரிவர்

௩௫௯ நம்மையெலா மாட்கொண்டு நாமவேட் டவையளிக்க
வம்மையொடும் வந்தா ரறியென்னச் - செம்மையி

௩௬0 பைபடியா னன்றே யையர்முடி யப்புலியென்
கைபடியு மாறு கனாயென்னச் - செப்புமஃ

௩௬௧ தந்த விடம்பெயர்ந்தா லந்தோ வுருக்காண
லெந்த விடத்து மிலைகண்டாய் - முந்த

௩௬௨ முனிதக்கன் சாப முராரிமுத லோருந்
தனிதக்க தென்னத் தருமோ - வனிதா

௩௬௩ யெனவதனைக் கூவமன மில்லையெனிற் *கைம்மான்
றனையெனக்கு வாங்கித் தருதி - யனையேயென்

௩௬௪ றோத விஃதென்னென் றுண்ணகைத்தம் மான்முழக்கஞ்
சாத மெவர்செவிக டாமேற்கும் - போத

௩௬௫ வொருமுழக்கஞ் செய்யி னுதிருமே யண்ட
முருமுழக்க மியாவுமிதற் கொப்போ - திருவே

௩௬௬ யடங்குமென மற்றதுவு மப்படியே லாட
ரொடுங்குமாப் பாவைக்குச் சூட்டத் - தடங்கொளிவர்

௩௬௭ றோண்மே லணிந்த தொடையா வதுவாங்கென்
றுண்மேற் கலைதொட் டலைத்திடலும் - வாணெடுங்க

௩௬௮ ணன்னை முனிவாள்போ லாங்கு முனிந்தொருநீ
பின்னையெச்ச தத்தர்தரு பெண்ணல்லை - முன்னைத்

௩௬௯ தவம்பெரிது வேண்டும்வாய் தன்னை யடக்கென்
றவஞ்சிறிது மில்லாதா ளாற்ற - நிவந்த

௩௭0 திருத்தேனை யப்பாற் செலுத்துதரங் கண்டு
திருத்தே ரணையொடுமிற் சென்றாள் - பொருத்துசிலை

௩௭௧ கோட்டாது வண்டுநாண் கூட்டாது வாளியொன்றும்
பூட்டாது வேட்டோர்பின் போயினான் - மீட்டுந்

பெதும்பை.

௩௭௨ ததும்பு மணிக்குழைதோ டாம்வருடி யாடத்
ததும்புகொடி போலுமொரு தையற் - பெதும்பை

௩௭௩ யலரும் பருவ மடுத்ததென் றுமைந்தர்
பலருமெதிர் பார்க்கவொளிர் பைம்போ - திலகுமெழின்

௩௭௪ மாட மிசைத்தவழு மாமுகிலின் றேற்றங்கண்
டாடமனங் கொள்ளு மழகுமயி - லீடுகடல்

௩௭௫ கூடிக் கடைநாள் குடநின்றுந் தேவர்கலந்
தேடிப புகுதாத தெள்ளமுத - நீடுசெண்பை

௩௭௬ நாட்டிறைவ னொண் ணகத்தமணா ளச்செயல்போற்
கூட்டிமுடித்த குழலினாள் - வேட்டுவஞ்ச

௩௭௭ முந்து களவு முனிவுங் குடிபுகுத
வந்துவந்து பார்க்கும் வரிவிழியா - ணைந்து

௩௭௮ கறியமைத்தார் தள்ளுங் கருவேப் பிலைபோ
லெறிகுதம்பைக் காதி னியலா - ளறிகயத்தின்

௩௭௯ கொம்பு வெளிப்படன்முற் கூர்முனை தோற்றுதல்போல்
வம்பு முலைதோற்று மார்பினா - ளைம்புல

௩௮0 பூமாலை சூடுதற்கும பூணாரம் பூணுதற்கு
மாமாலை தாக வமைந்துள்ளாள் - காமரசப்

௩௮௧ பேறுங் குலமாதர் பேணும்பூ ணென்னுநாண்
வீறுஞ் சிறிதரும்பு மெய்யினா - டேறுசிலை

௩௮௨ வேளா கமத்தின் விதம்புகல்வார் வார்த்தைசற்றுங்
கேளா தவள்போலக் கேட்டமர்வா - டாளாம்

௩௮௩ பெரும்பகையெண் ணாதவரை போர்த்தான்போற் கொங்கை
யிரும்பகையெண் ணாத விடையா - ளரும்புபெருங்

௩௮௪ காதலுடைத் தோழியர்கள் கைகலந்து சூழ்தரமிக
காதலுடை வாவி யணைந்தாடிச் - சீதப்

௩௮௫ பலமலருங் கொய்து பனிமாலை கட்டி
நிலமலரு மாதவிநன் னீழல் - குலவுபளிங்

௩௮௬ காரப் படுத்தெழின்மிக் காக்கியதா னத்தமர்ந்து
சேரப் படைக்குந் திறல்படைத்தா - னோர்தான்

௩௮௭ படையா தமைந்த பரிகலநல் கூரு
முடையா தெதிர்ந்தமத வோங்கல் - புடையாருங்

௩௮௮ கொம்புபட்ட போர்வை கொடுத்த தனியூரு
மம்புவிட்ட தின்மை யதுதெரிந்துஞ் - சம்பு

௩௮௯ விடாதுவா ழூரும்வித் வீரா ளரசு
படாதுவா ழூருமருட் பற்றுக் - கெடாது

௩௯௦ பதியே பசுவாய்ப் பயங்கொடுத்த வூரும்
விதியேமே னோக்குற்றம் வெய்ய - கொதிதழலுக்

௩௯௧ கன்றிப் புனற்கென் றதிசயிப்பச் செய்யூரு
மன்றிமதன் றீக்குளிருந் தாழூரு - நன்றிதரு

௩௯௨ தண்டீசர்ப் போற்றியடி தாழ்ந்தபின்னும் வேறொருவர்க்
கண்டாய்விற் போற்றவருள் காலூரு - மண்டிப்

௩௯௩ பிறந்தார் பிறவாத பேரூரு நானு
மிறந்தா ரிறவாத வூருஞ் - சிறந்தநலத்

௩௯௪ தாட்டை விரும்பி யடிபுலியு மாடரவு
மோட்டை படாம லுறையூரு - மேட்டைதவிர்

௩௯௫ கன்னியொரு பாற்கலந்து காவில்கட கம்புனைந்து
மன்னியிட பத்து வரைத்தனுக்கொண் - டுன்னியொரு

௩௯௬ தம்பத் துதித்தசிங்கந் தான்றருமுட் சாத்தணிவார்
கும்பத் துதித்த குலவூரு - நம்புபொறை

௩௯௭ யாதியடை யானு மரிக்கரிய செங்கமலப்
போதியைய மார்பேறக் பூட்டூருஞ் - சோதிமணி

௩௯௮ வாய்திறந்து பாடி மரியம் மனைகொண்டு
தாதியரோ டாடுஞ் சமயத்தி - லோதி

௩௯௯ மழையனைய வோரணங்கு வந்து பணிந்து
கழையனைய செஞ்சொற் கனியே - விழையு

௪௦௦ மொருபாற் பசப்பா யொருபாற் சிவப்பா
யிருபாலு மொன்றி னியையும் - பெருமான்

௪௦௧ கொடுங்கோளூர் மேய குழகன் கொடுமை
விடுங்கோ ளிலியுமா மேலோ - னெடுங்கா

௪௦௨ விடைச்சுரத்து வாழ்வா னிடைமருத மேயா
னடத்துதிருத் தேரணித்தே நண்ணிற் - றடக்கியெழு

௪௦௩ சேவிக்க வம்மனைச்சூழ் சேடியர்க ளோடெழுந்தா
ளாவிக் கினியான்மு னண்மிற் - றேவியொடு

௪௦௪ வீற்றிருக்குங் கோலம் விழிகுளிரக் கண்டுவனை
யேற்றிருக்கு மங்கை யிணைகுவித்தா - ளேற்றிருக்கு

௪௦௫ முள்ளங் குழைய வொருத்தியிவர் பாலமர்ந்தாண்
மெள்ள வவளார் விளம்பென்றாள் - கள்ளமிலா

சOசு மாதே யனைத்தும் வருந்தாது பெற்றவனு
மாதேய மற்றவளே யாதாரங் - கோதேயா

சOஎ வன்னையவ ளேயுலகுக் காக்க மெனக்கோடி
பின்னையது நாம்பெற்ற பேறுகா - ணென்ன

சOஅ வென்னையு மருகே யிருக்கவைப்பீ ரென்னப்
புன்னையு மலர்க்குழலார் பூவாய் - நினையுந்

சOகூ தரமோவத் தாயர் தமக்கேயல் லாதப்
புரமேவ யார்க்குப் பொருந்து - முரமேவ

சகO நீயருகு மேவுவையே னீடுலகி னுகமெலாம்
போயவர்பூ ணுகிப் பொலியுமே - தூயமன

சகக மானக்கங் காறா மகள்கோதை யன்றிமற்றோர்
தேனக்க கோதைகளுஞ் சென்றேறி - மேனக்க

சகஉ பஞ்சவடி யாமே பரவொருத்தர் கல்லன்றி
விஞ்சவெவர் கற்களுமெய் மேவுமே - துஞ்சு

சகங மிருவ ரெலும்பன்றி யெல்லா ரெலும்பும்
பொருவரிய மேனி புகுமே - மருவுசிலை

சகச வேடனெச்சி லல்லாது வெங்கா னுழலுமற்றை
வேடரெச்சி லும்முணவாய் மேவுமே - நாடுமறை

சகரு நாறும் பரிகலம்போன் ஞாலத்தார் மண்டையெலா
நாறும் பரிகலமா நண்ணுமே - தேறுமொரு

சகசு மான்மோ கினியாய் மணந்ததுபோன் மற்றையரு
மான்மோ கினியாய் மணப்பரே - நான்மறைசொல்

சகஎ வல்லா னவனையன்றி மாலா தியபசுக்க
ளெல்லாம் பிரம மெனப்படுமே - வல்லார்

சகஅ திருவருட்பா வோடுலகிற் சேர்பசுக்கள் பாவுந்
திருவருட்பா வென்னச் செலுமே - பொருவா

சககூ வரமணிமா டத்தா வடுதுறைவா ழுஞ்சுப்
பிரமணிய தேசிகன்போற் பேண - வுரனமையா

சஉO வெல்லாரு மெய்க்குரவ ரென்று வருவாரே
நல்லாயென் சொன்னாய் நகையன்றோ - சொல்லாதே

சஉக யோலையிட்ட வள்ளை யொருத்திபோன் மாதவத்தான்
மாலையிட்டா யோநீ மறவென்ன - மாலை

சஉஉ யிடுவேனிப் போதென் றெழுது முருகர்
தொடுமாலை யன்றே சுமக்க - வடுமாறில்

சஉங வேழஞ் சிதைத்ததுகொன் மேதகுமூக் கோர்மயிற்குத்
தாழுவரி வித்துச் சமைந்ததுகொல் - வாழி

சஉச திருமான் முகத்திற் றிருக்கா யதுகொல்
பொருமானின் கைத்தொடையிற் பூண்பூ - வெருவாத

சஉரு கண்ணப்பர் பாதங் கமழ்செருப்புத் தோயுமென
வெண்ணப் படுவ திதற்குண்டோ - கண்ணன்முழுந்

சஉசு தாளில் விசயன்முன்னுட் சாத்தியபூ வோவிந்த
நாளினின்கை மாலை நறியபூ - வாளா

சஉஎ விருத்தியென்று ளெண்ணியது மிப்படியோ வென்று
விருத்தியுறச் சென்றமன மீட்டாள் - பொருத்தி

சஉஅ மடக்கினுன் வின்னுண் மதவேள் சினத்தை
யடக்கினுன் றேர்ப்பி னடைந்தான் - விடற்கரிய

சஉகூ செங்கைநடத் தாரப்பாற் றேர்செலுத்தல் கண்டந்த
நங்கைமனை நோக்கி நடந்தாளோர் - மங்கை

மங்கை.

சநo திரையிற் பிறவாத தெள்ளமுத மோங்கல்
வரையிற் பிறவா வயிரந் - தரையிற்

சநக பிறந்த மதியமைந்தர் பேராசை கொள்ளச்
சிறந்த பசுங்காம தேனு - வுறந்த

சநஉ புரிகுழல் கட்டவிழ்க்கும் போதா டவர்த
மரிய மனமுங்கட் டவிழ்ப்பா - டெரியமுடி

சநந செய்துமலர் சேர்த்துச் செருகும்போ தேபனித்தல்
செய்யுயிருஞ் சேர்த்துச் செருகுவாள் - வெய்யவிட

சநச முண்டா னுமிழ்ந்தான்கொல் லோவென்று மால்பிரமன்
கண்டா னடுங்குமிரு கண்ணினு - டுண்டாமை

சநரு கொண்டமைந்தர் நெஞ்சங் குடிபுகுந்தா டப்பொன்னுற்
கண்டதிரு வூசலெனுங் காதினு - ளண்டம்

சநசு வளைத்தாள் கதிர்மதிய மாக்களங்க மாற்றி
முளைத்தா லனைய முகத்தா - டிளைத்தபெருங்

சநஎ காமரச மெல்லாங் கமழ வடைத்தசிறு
• தாமச்செப் பென்னுந் தனத்தினு - ணுமமறத்

சநஅ தன்னை யறிந்துபரந் தானேயென் பான்பொருவத்
தன்னை யறிந்து தருக்குவாள் - கொன்னே

சநகூ பெருத்து முலைகணமைப் பின்பு வருத்தத்
திருத்துமெனத் தேர்ந்த விடையாண் - மருத்துப்

சசo பொதியமலை நின்றுவரப் போயேற்பாள் பின்ன
ருதியமைதீப் போல்வ துணராண் - மதிய

சசக மெழுந்துவரக் கண்டுவெப்பா ளீதே வடவைக்
கொழுந்துபொரு மென்றுட் குறியாள் - செழுந்தாளக்

௪௪௨ கோவை புனைந்து குவட்டருளி யொத்ததென்று
பூவை யொருத்திசொலப் புந்திசெய்வா - டாவிக்

௪௪௩ கனைகட வாத கடல்போல வன்னை
யுனைகட வாமே யுறைவாள் - வனையின்

௪௪௪ பகையிந்தி ராணி பணைமுலைநேராய் காலந்
தகையினுளங் கொள்ளுந் தகையா - ணகைசெய்

௪௪௫ மனைமுகப்பி லெண்ணின் மடவாரோ டெய்தி
நினையு நிலாமுற்ற நின்று - புனையு

௪௪௬ முலைப்பகை யாகி முளைத்த துணர்ந்து
தலைப்பகை கொண்டுசெங்கை தாக்கு - நிலைப்பெண்ணைப்

௪௪௭ பந்தடித்து முத்தம் பலமுகத்து நின்றுதிரச்
சந்தத் தனத்துமுத்தந் தாம்பிறழு - நந்த

௪௪௮ விளையாடு போதில் விரும்புநாய் வந்து
வளையாடு செங்கைமட மாதே - யிளைய

௪௪௯ ரியங்கு தலைமாற்று மொண்ணமோ மேலாய்
வயங்கு துறவுமடி யாதோ - பயங்கொள்

௪௫0 கருப்புவில்லி காணிற் கனகமய மான
பொருப்புவில்லி யோடு பொரவோ - விருப்பார்

௪௫௧ திருமங்கை கண்டறிஞர் செய்நா வகத்த
மருமங்கை யாதன் மதித்தோ - வருமந்த

௪௫௨ பொன்னே மணியே புறவே பசுமயிலே
மின்னேயிவ் வாடல் விடுகென்ன - வந்நேர

௪௫௩ மண்டம் புவன மனைத்தும் விராமற்
கண்டங் கறுத்த கருணையான் - பண்டு

௪௫௪ வெருவருமா லாதிவிண்ணோர் மெய்வலியெ லாஞ்சிற்
றொருதுரும்பு கொண்டளந்த வப்பன் - பெருவரையைப்

௪௫௫ பண்டு குழைத்த படிகருதா தம்மைசெங்கை
கொண்டு தழுவக் குழைந்தபிரான் - மண்டுபுலா

௪௫௬ லேங்கொடுக்க மாட்டாதென் றெங்கட் குளைத்தொருவர்
தாங்கொடுக்கும் போதெல்லாந் தானுண்டா - னீங்கிடுமின்

௪௫௭ பொன்மேனி மாதர் புணர்திறத்தை யென்றுளைத்துத்
தன்மேனி யோர்பாலோர் தையல்வைத்தான் - பன்மாடக்

௪௫௮ கூடல் வழுதியடி கொண்டு பலவுயிர்க்குஞ்
சாட லமையாத் தழும்பளித்தா - னாடு

௪௫௯ மொருவன் றலையை யுகிராற் றடிந்து
பொருவில்கழு வாயெவர்க்கும் பூட்டுந் - திருவ

சகூ0 னறிந்தடிமை செய்வார்பொன் னுடையுடுக்கச்
செறிந்தசிறு தோலுடுக்குஞ் செல்வ - னறந்தழைய
சகூக வெல்லா முடையா னிறத்தல் பிறத்தலிவை
யில்லானென் றெல்லாரு மேத்தெடுப்பான் - வல்ல
சகூஉ விடைமருத வாண னிமைக்குந் திருத்தே
ரடையவணித் தேகண் டணைந்தாள் - புடைவிரவு
சகூங தையலா ரோடு தடங்கைகுவித் தாண்மாலு
மையலார் மேனி வனப்புணர்ந்தா - ளையோ
சகூச முளையாத காம முளைத்தததுசெங் கைவில்
வளையா மலர்சொரிந்தான் மார - னிளையா
சகூரு ளுடுக்கை நெகிழ வுறுவளைகை சோர
விடுக்கை யடைந்து மெலிந்தாள் - கடுக்கை
சகூசு புனைவான் கடைக்கண் பொருத்தினன் போல
நினைமூர ரேற்றி நெடுந்தேர் - தனையப்பா
சகூஎ லூர்ந்தினன் வேளுமுடன் றொன்றுபத்து நூறுமேற்
சிந்தினை னாகிச் செருச்செய்தான் - முந்தித்
சகூஅ தலையமைந்த தோழியர்கைத் தாங்கத் தளரு
தலையடைந்தாண் மாளிகையுட் சார்ந்தா - ணிலைநின்று
சகூகூ காதள வோடுங் கருங்கண்ணு ரெல்லாருஞ்
சீதள மெல்லாஞ் செயப்புகுந்தார் - போத
சஎ0 வவைக்குப் பொறுளா யயர்தல்கண்டு காமச்
சுவைக்குத் தகுதோழி சொல்வா - ளவைக்குந்
சஎக தகச்செய்தா னீங்குந் தகாமைசெய்தாற் பெண்கா
ணகச்செய்வ தாகு நலமோ - மிகப்படுத்த
சஎஉ மாந்தளிரை நீக்கி மகாலிங்க மேயமரு
தாந்தளிரைச் சேர்த்தா லறமுண்டே - காந்த
சஎங வணிதாளம் போக்கி யமரர்பெரு மான்கண்
மணிபுனையிற் சாந்தம் வருமே - பிணிசெய்
சஎச பனிநீரைப் போக்கிப் பரமர்சடை மேய
பனிநீரைப் பெய்தல் பயனே - கனிசந்
சஎரு தனம்போக்கி யையர் தவளப் பொடியின்
மனம்போக்கு மின்மறுக்க மாட்டாள் - சினந்த
சஎசு பலமொழியா லென்ன பயன்மருத சென்னு
நலமொழியே யென்று நவில்வீர் - குலவுசெய்ய
சஎஎ வாம்பன் மலரை யகற்றி யமையமரு
தாம்பன் மலரை யணிந்திடீர் - மேம்படிவை

௪௭௮ யல்லாற் பிறிதுசெய லத்தனையுந் தக்கன்மக
மொல்லாதே யாயதிற மொக்குமே - யெல்லா

௪௭௯ மறிவீரென் றோதுக வறைந்தமொழி யெல்லாஞ்
செறிநோய் மருந்தாய்த் திருந்த - வெறியார்

௪௮0 தடந்தார்க் குழலியுயிர் தாங்கி யமர்ந்தாள்
விடந்தா னெனப்பொலியும் வேற்கண் - மடந்தைவலி

## மடந்தை.

௪௮௧ முற்றிச் சிலைவேண் முதுசமரா டற்குயர்த்த
வெற்றிக் கொடியின் விளங்குவாள் - பற்றுமல

௪௮௨ ரைங்கோ லுடையா னரசு நடாத்திக்கொள்
செங்கோ லனையபெருஞ் செவ்வியா - டிங்கட்

௪௮௩ குடையான் மகுடமெனுங் கொங்கையளன் றேனை
யுடையா னெனப்புகறற் கொத்தா - ளிடையா

௪௮௪ வனைய னினிதமரு மத்தாணி யென்னுந்
தனைநிகரி லல்குற் றடத்தாள் - புனையுங்

௪௮௫ கிழக்குமுத லெத்திசையிற் கிட்டினுஞ்சோர் வித்தாள்
வழக்கறுக்கும் பார்வை வலியாண் - முழக்கறிவி

௪௮௬ னேய்ப்பெய் துருமுனிவ ரெல்லார் தவங்களையும்
வாய்ப்பெய் திடுங்கவவு வாணகையாள் - பார்ப்பினிய

௪௮௭ வோதியாஞ் சைவலத்தா லொண்முகமாந் தாமரையாற்
கோதியலா மைக்கட் குவளையா - லாதரச்செவ்

௪௮௮ வாயாங் கழுநீரால் வண்காதாம் வள்ளையா
னேயார் கபோலமெனு நீர்நிலையா - லேயு

௪௮௯ மதரமாஞ் செங்கிடையா லங்கழுத்தாஞ் சங்கால்
பொதியுமுலை யாம்புற் புதத்தா - லிதமாய

௪௯0 வுந்தி யெனுஞ்சுழியா லொத்தமடிப் பாமலையாற்
சந்தி பெறுமுழந் தாண்ஞெண்டா - லுந்துகணைக்

௪௯௧ காலாம் வராலாற் கருதப் பொலிந்தபுறங்
காலா மொளிர்பொற் கமடத்தா - லேலாவெங்

௪௯௨ காமவிடாய் பூண்டு கலங்கா டவர்மூழ்கி
யேமமுறும் வாவி யெனப்பொலிவா - டாம

௪௯௩ மணிநிலா முற்றத் தளவிலார் சூழ
மணிநிலா வெண்ணகையாள் வைகிக் - கணிதமறத்

௪௯௪ துன்றுபன்மே லண்டத் தொகையுங் கடந்தப்பாற்
சென்று பொலியுந் திருமுடியு - மொன்றுதிற

௪௯௫ லென்று மதியுமிவை யென்னப் பகலிர
வென்றும் விளக்கு மிருவிழியு - நன்றமைய

௪௯௬ மும்மை யுலகு முகப்பவே தாகமங்கள்
செம்மை யுறவிரித்த செவ்வாயு - மம்ம

௪௯௭ வடுக்கு மிரவு மவிரும் பகலு
முடுக்கும்வளி வீசுமென் மூக்குந - தடுப்பரிதா

௪௯௮ யெந்தப் புவனத் தேவர்கூறி னுலுமஃ
தந்தப் பொழுதேயோ ரஞ்செவியு - முந்தவரு

௪௯௯ காவருநங் கூற்றடங்கு காரா கிருகமென்று
தேவர் பரவுந் திருக்கழுத்து - மேவு

௫௦௦ பெருந்திசைப்போக் கன்றிப் பிறிதில்லை யென்னப்
பொருந்தி வயங்கும் புயமுந் - திருந்திய

௫௦௧ விண்ணுலகுங் கீழுலகு மேல்கீழு மாகவைத்து
மண்ணுலக மேயாய் வயங்களையு - நண்ணு

௫௦௨ மெழுபா தலமு மிகந்துமால் கண்டு
தொழுமா றிலாத்தாட் டுணையு - முழுதாள்வோன்

௫௦௩ மன்னு மிடைமருத வாண னருட்பெருமை
யுன்னுந் திறத்தா னொருத்தியைப்பார்த் - தென்னே

௫௦௪ யிடைமருதென் றோது மிதன்பெருமை யாரே
யடைய வகுப்பா ரணங்கே - யுடையவரே

௫௦௫ பேணு மருதின் பெருமை யெவருரைப்பார்
காணுந் தரமில் கயிலைகாண் - பூணுமன்ப

௫௦௬ ரெல்லாரு நாவரச ரென்ன வடநாட்டிற்
செல்லா திருக்கத் திருந்தியதா - னல்லா

௫௦௭ யிதுகண்ட நாமற் றெதுகாண்டல் வேண்டு
மதுகண் டவரா யமைந்தேஞ் - சதுர

௫௦௮ ருருத்திரர்க ளோர்பன் னொருகோடி யாரும்
பொருத்த முறவந்து போற்றுந் - திருத்தகுசீ

௫௦௯ ரிந்தத் தலமேய தித்தல மான்மியமற்
றெந்தத் தலத்திற் கியைந்துளது - நந்த

௫௧௦ விழிதலை யொன்றனைக்கை யேந்தியொரு வேந்த
னழிதுயர் பூண்டதெங்கென் றையா - யிழிதருநாய்க்

௫௧௧ கட்டந் திருமுற் கலப்பதோ வென்றிறைகை
யிட்ட முடனெடுத்த தெத்தலத்தில் - வட்டமதில்

௫௧௨ சூழுமது ராபுரியிற் றுட்ட பழிநீக்கி
வாழும் படிபுரிந்த மாத்தலம்யா - தேழுலகும்

௫௧௩ போற்றுமொரு தன்னுருவைப் பொன்னுருவி னிற்புகுத்தி
யேற்றும் பெருமையுற்ற தெத்தலங்காண் - கூற்றமஞ்சு

௫௧௪ மிந்தத் தலத்துதிக்க வெத்தவருஞ்செய் தோமென்று
சந்தக் குயின்மொழியா டானுரைத்து - நந்தக்

௫௧௫ களிக்கும் பொழுது கசிந்தார்க்கே யின்ப
மளிக்கும் பிரான்றே ரணுக - வெளிக்கணந்த

௫௧௬ மாதரொடும் வந்து வணங்கினாள் காண்பார்க்கு
மோத மளிக்கு முகங்கண்டாள் - காதற்

௫௧௭ றிருத்தோளுங் கண்டா டிருமார்புங் கண்டாள்
பெருத்தாண் மயக்கம் பெருவே - ளுருத்தான்

௫௧௮ பலகணைதொட் டெய்தானப் பைங்கொடிதான் சோர்ந்து
சிலதியர்மேல் வீழ்ந்து திகைத்தா - ளலமருவா

௫௧௯ ளென்னை யுடையா னிவள்செய்கை நோக்கானாய்
நன்னயத்தே ரப்பா னடத்தினான் - பின்னைத்

௫௨0 தொடர்ந்து செலுமதனன் றேரைமேற் பல்லே
வடர்ந்து செலப்பெய் தகன்றான் - கிடந்தவளாய்ச்

௫௨௧ சோருங் கருங்குயிலைத் தோழியர்கள் கைத்தாங்கிச்
சாரு மனையிற் றகப்புகுத்தி - நேரு

௫௨௨ மலரணையின் மேற்கிடத்தி யான்ற பனிநீ
ருலர்தர மேன்மேலு மூற்றிக் - குலவுநறுஞ்

௫௨௩ சாந்தமுங் கோட்டித் தகுசிவிறிக் காற்றெழுப்பக்
காந்துவது கண்டு கலங்கினாள் - மாந்தளிர்மு

௫௨௪ னையவுப சார மனைத்துஞ் செயலொழிமி
னையமுள தேலென்பா னீவிரென்று - தூய

௫௨௫ மணிவாய் திறந்தாண் மருதரே யும்மைப்
பணிவாருக் கீதோ பயன்கா - ணணியல்

௫௨௬ சடைமே லதுகொடுத்தாற் றத்துதிரைக் கங்கை
விடைமேலீர் நும்மை வெறுப்பா - ளடையு

௫௨௭ மிடத்தோ ளதுகொடுத்தா லெவ்வுலகு மீன்ற
மடப்பாவை கோபநுமை வாட்டு - மடுத்த

௫௨௮ வலத்தோ ளணியன் மருவ வளித்தாற்
சொலத்தா னொருவருண்டோ சொல்லீ - ருலத்துயர்தோள்

௫௨௯ வெய்ய சிலையாளுன் மென்றுமிழ்வ தாயிருந்தாற்
செய்ய மணிவாய் திறந்தருள்வீ - ரையரே

௫௩0 யார்த்தார் கழைவண் டமைத்தொரு பூத்தொடுக்கப்
பார்த்தா லலவோகண் பார்த்தருள்வீர் - சீர்த்தகதிர்

௫௩௧ பன்மோதி னீருயிரைப் பாற்றிடுவ லென்றுதலை
கன்மோதி னுலன்றோ கைதருவீர் - நன்மையெனுங்

௩௩௨ கோளெறிந்த தந்தை கொடுவினையை நோக்கியவன்
றாளெறிந்த போதன்றே தாரருள்வீ - ராளும்

௩௩௩ பிரியமுடை யீரென்று போருள்செய் வீரென்
றிரியுமுயிர் தாங்கி யிருந்தா - ளரிவை

அரிவை.

௩௩௪ யிளையான் குடிமாற ரெய்ப்பொழிப்பான் சென்று
முளைவாரும் போதுங்கர் போகம் - விளைகுழலா

௩௩௫ டேவர்க்கூ றாக்கினரைத் தேர்வலெனுங் கண்ணப்பர்
கோவச் சிலைநேர் கொளுநுதலாள் - காவற்செய்

௩௩௬ நெல்லுண்டாள் பாலுண்சேய் நீக்கலற மென்றேற்றார்
கொல்லுண்ட வாள்போற் கொடுங்கண்ணாள் - சொல்லரசர்

௩௩௭ போரலப் பூதிப் பெயரா ரமைத்ததடத்
தோராரும் வள்ளை பெனுஞ்செவியாள் - சீரார்

௩௩௮ கணநாதர் நந்தவனக் கட்சண் பகம்போன்
மணநாறு நாசி வடிவாள் - புணருமருள்

௩௩௯ வாயிலார் தொன்மயிலை வாரித் துறைப்பவளச்
சேயிலார்ந் தோங்குகுணச் செவ்வாயா - ணையமுற

௩௪௦ முன்னங்கண் ணப்பர் முறித்தமைத்த கோற்றேனி
லின்னஞ் சுவைகூறு மின்மொழியா - ளன்னம்

௩௪௧ பயில்கட ஞைகயதி பத்தர் துறையிற்
பயில்வெண் டாளமெனும் பல்லா - ளியலருளப்

௩௪௨ பூதியார் முன்னம் புரிந்த தடக்கமலச்
சோதியா மென்னச் சுடர்முகத்தா - ளாதியருட்

௩௪௩ சம்பந்த மேவவொரு தண்டீச ஞர்நிறைத்த
கும்பந்தா மென்றேத்து கொங்கையாள் - வம்பவிழ்தா

௩௪௪ ராறுயர் முன்ன மரிந்தெடுத்துக் கொண்டவே
யெநாமென் றோது மிணைத்தோளா - ளாறுத

௩௪௫ மூல ருறையநிழன் முற்றக் கொடுத்துவப்பி
னுலரசின் பத்திரம்போ லல்குலாண் - மேலா

௩௪௬ யிலகியசம் பந்தரோ டேற்ற வமணர்
குலமெனத் தேயுமருங் குல்லா - ணலவரசாஞ்

௩௪௭ சிட்ட ரமுதுசெயத் திங்களூர் நாவரசு
தொட்ட கதலித் துடையினு - ளிட்ட

௩௪௮ மடுத்த வதிபத்த ரங்கை யெடுத்து
விடுத்தவரால் போற்கணைக்கால் வீறாண் - மடுத்தவருட்

௩௪௯ கண்ணப்பர் கையிற் கலந்தவ நாயனாவின்
வண்ணப் பொலிவின் வருபதத்தாள் - வண்ணஞ்

பாவலந்தீர்த்தமுழுகிலங்கோமுத்திப்பண்ணவசிற்
பாவலந்தீர்த்தநமனஞ்சுசேயுயிர்ப்பாலபரா
பாவலந்தீர்த்தவயனைவைத்தாயென்றும்பாடிலமன்.
பாவலந்தீர்த்தநின்பாதாம்புயமெங்ஙன்பாலிப்பதே. (எஎ)

பாலக்கரத்தர் துறைசைத்தியாகர்பழமறைக்க
பாலக்கரத்தர்நெடுமறையந்தப்பயனெனுமைம்
பாலக்கரத்ததர்சிலைவேளெரியப்படர்ந்தநுதற்
பாலக்கரத்தர்பதம்பணியார்சிலபாதகரே. (எஅ)

தகாங்கலந்தகுழல்பாகாாவடுதண்டுறைவித்
தகாங்கலந்தவழ்வெம்முலையாரத்தழுவுறின்யாந்
தகாங்கலந்தவஞ்சென்றிடாதுதபும்பலவன்
தகாங்கலந்தபொழுதுமென்னுமிந்தத்தையனுக்கே. (எகூ)

தையலையாதரியாதெழும்வீழ்ந்தசம்படவத்
தையலையாதரியாதேகுமோவெனுஞ்சார்மதியத்
தையலையாதரியாரொனும்வேளைத்தவிரெனுமுத்
தையலையாதரியாக்கோமுத்தீசசெய்தண்ணருளே (அ0)

தண்ணாந்தமருகமேற்றூர்க்கிடந்துறைசையுவமை
தண்ணாந்தமருகவாய்வைக்குமால்விடை.சாற்றுடைதோல்
தண்ணாந்தமருகமெண்ணில்கண்டார்குழைசங்கொடுபாந்
தண்ணாந்தமருகவென்பான்மலைபிறைதார்கொன்றையே. (அக)

தாரங்கடுக்கைசிலைமலைபூதஞ்சமர்பொருது
தாரங்கடுக்கையடியாருளமுற்றுந்தந்தநற்றாய்
தாரங்கடுக்கைமலம்போக்கல்வேலைதனியிடங்கே
தாரங்கடுக்கையமைத்துண்பது துறைசைப்பரற்கே. (அஉ)

கேதனமாவடுகோட்டேறுமேவிக்கிளர்தருந
கேதனமாவடுதண்டுறையாவென்றுங்கேடிறனக்
கேதனமாவடுநேர்விழியாவென்றுங்கேட்பளிவட்
கேதனமாவடுமாற்றிடுவாரெனுகேண்மையனே. (அங)

அனேகந்தரத்தகைமாபாதகம்புரிந்தாங்கொடுமை
அனேகந்தரத்தகையேனளற்றுழவருட்டுறைசை
அனேகந்தரத்தகையேற்றுலந்துஞ்சவயின்றொளிரா
அனேகந்தரத்தகைவிட்டாலெனக்கினியார்துணையே. (அச)

ஆராவமுதையனையநின்சீரறையேநினக்கியாம்
ஆராவமுதையடைந்தான்கவரவடையும்பச்சை
ஆராவமுதையலாக்கான்வெள்ளேற்றவவிர்சடைமேல்
ஆராவமுதையனேயாசூரவருள்புரியே. (அரு)

புரப்பானலங்கண்டவாவளமோங்கும்புகழ்த்துறைசை
புரப்பானலங்கண்டவாணர்கொண்டாடப்பொலிபவநூ
புரப்பானலங்கண்டவாமொழிமாதுபொருந்தியொளிர்
புரப்பானலங்கண்டவாதமியேன்பவம்போக்குறவே. (அசு)

வேதண்டவில்லியையவாய்வான்வெரீஇத்தொழமேலெழுவெள்
வேதண்டவில்லியைவார்தெருவார்மிளிர்கோமுத்திக்கோ
வேதண்டவில்லியையவாய்போலடைதல்விலக்கெனவவ்
வேதண்டவில்லியைவாழ்த்தார்பிறப்பென்னவீண்பிறப்பே. (அஎ)

பிறவித்துருமங்கவடுவிட்டோங்கிப்பிறங்குமதன்
பிறவித்துருமங்கவுய்வதென்றியான்வெண்பெருமுத்தங்கள்
பிறவித்துருமங்கள்சூழ்கோமுத்தீசநின்பெய்கழற்கன்
பிறவித்துருமங்கமுந்தண்ணென்றுநிணைப்பேசுநர்க்கே. (அஅ)

நரந்தந்தகரங்கமழ்குழல்வான்செயுநற்றவத்தி
நரந்தந்தகரங்கடிகட்டொழில்சொனகாவிடைகிந்
நரந்தந்தகரங்கடுப்பார்துறைசைநல்லாளியல்வா
நரந்தந்தகரங்கனிவான்கொண்மாம்பொழிறுடிடமே. (அகூ)

நாடரும்பாதகமாயாநவிலொருமாத்திரையில்
நாடரும்பாதகவுரிபங்காகற்பநண்ணியவான்
நாடரும்பாதகவார்சூழ்துறைசைநம்பாநெடுமால்
நாடரும்பாதகமலமென்றேருவொருநான்பெறலே. (கூ0)

நானந்தவாதகுழலார்புணர்ச்சிநசைஇயுழனு
நானந்தவாதமறுதுசெய்வேனுய்யநாடுமறை
நானந்தவாதமயில்பணியாய்நவின்றுய்செவிவாய்
நானந்தவாதவன்சூழ்பெருங்கோமுத்திநாயகனே. (கூக)

அகங்காதரசங்கமந்தவிர்ப்பானுன்னையாதரித்தை
அகங்காதரசங்கரவோரிருவாறையிசைகூர்
அகங்காதரசங்கவார்குழையாவென்றறைகுவனென்
அகங்காதரசங்கவின்வனஞ்சூழச்செயற்புதனே. (கூஉ)

அற்பரவைக்கட்புகுதாமன்மாமயிலன்னவர்மை
அற்பரவைக்கட்குடியாமற்கோமுத்தியையகண்டத்து
அற்பரவைக்கட்கநேர்விழிபாகவன்பாற்றுநர்பால்
அற்பரவைக்கட்டடியேன்விணைநின்னருளழலே. (கூ௩)

அரும்புங்கவருமணிமுலைபாகனருமறையை
அரும்புங்கவருமணிதருகோமுத்தியண்ணலம்பொன்
அரும்புகவருமணிமைநின்றேத்துமரசிறைமால்
அரும்புங்கவருமணியேயென்னுள்ளத்தவிரொளியே. (கூ௪)

ஏதம்படரும்பலதொழிலாற்றியிளைத்திடுதற்கு
ஏதம்படரும்விழியார்மயன்முன்னியமரிறை
ஏதம்படரும்வரவிடுவாரினியானியற்றல்
ஏதம்படரும்பயிர்நான்றுறைசையிறையவனே. (௯௫)

இறைக்கும்வளைக்கும்பொருத்தமின்மாமதியென்பதழல்
இறைக்கும்வளைக்கும்பொருகழைவேள்விடுமேவெனுமய்
இறைக்கும்வளைக்கும்பொருவாக்கடலிணாக்குந்துறைசை
இறைக்கும்வளைக்கும்பொருட்கீர்சொல்வாரினிலையருளே. (௯௬)

இலையமலைக்கவளந்தீரிருவணையெண்ணலம்பொன்
இலையமலைக்கவளவாந்துறைசையிறைக்கன்புசெய்து
இலையமலைக்கவளருந்திருமடத்திற்கலப்புற்று
இலையமலைக்கவளமார்ந்தின்பெய்தவெழுமனமே. (௯௭)

மணம்புதைக்கும்பலமாயவெங்காமமதிசுடுங்கா
மணம்புதைக்கும்பலமின்றென்றுயிரைவருத்திவிடா
மணம்புதைக்கும்பலவின்றேமொழிக்குவளங்கொள்பொன்னி
மணம்புதைத்கும்பலகால்பாய்தென்கோமுத்திவானவனே. (௯௮)

வானம்பரவுமையாள்கணவாவெனின்வாழவருள்
வானம்பரவுமையாறன்றென்கோமுத்திவாணனணி
வானம்பரவுமையான்வருமென்னுமயின்மதனெவ்
வானம்பரவுமையாலோசிறந்துயிர்வாழ்வதுவே. (௯௯)

வதனமைந்தான்குஞ்சியாகாயன்சேய்முனம்வந்தநம
வதனமைந்தான்குஞ்சிதையாவியமன்றன்வாழ்வுமைந
வதனமைந்தான்குஞ்சிசூழ்வயற்கோமுத்திமன்னினிய
வதனமைந்தான்குஞ்சிதபாதமேபல்வளத்திருவே. (௧00)

துறைசையமகவந்தாதி முற்றிற்று.

சிவமயம்.

# திருச்சிராமலையமகவந்தாதி.



## கடவுள் வாழ்த்து.



### விநாயகக்கடவுள்.

கராமலையாநின்றபோதிபங்கூவக்கடிதக்கரா
விராமலையாழிவிட்டாற்குமயற்குமெட்டாதுநிற்குஞ்
சிராமலையாதிபனெம்மானந்தாதியைச்செப்பவிடா
வராமலையாவங்குசபாசவென்முன்புவந்தருளே. (௧)

### ஸ்ரீ தாயுமானவர்.

துப்பனைத்துந்தொழுஞ்செஞ்சடையான்கவிதொண்டருரைக்
கப்பனையேட்டிற்பொறித்தான்கடுப்பொலிகண்டன்றனை
யொப்பனையம்பனைசசெற்றான்சிராமலையுத்தமனென்
னப்பனையன்றிப்புகழாதென்வாய்புறத்தாரையுமே. (௨)

### ஸ்ரீ மட்டுவார்குழலம்மை.

அகந்தக்குழலுமனத்துயர்தீரவயிலங்கைவைத்
தகந்தக்குழகனையீன்றாய்குயிலைத்தடிந்தமுதை
யிகந்தக்குழலைக்கடிந்தசொல்லாய்முத்திளநகையாய்
சுகந்தக்குழலம்மையேயடியேற்குமுன்றோன்றுவையே (௩)

### செவ்வந்திவிநாயகர்.

ஆனக்குழையுடையம்மான்புயத்துமழன்மெழுகு
மானக்குழையுமனத்தினராய்ப்பத்திமார்க்கநின்று
கானக்குழையையணிவார்சிரத்துங்கழனிறுத்துந்
தானக்குழைசெவிச்செவ்வந்தியானைதருமின்பமே. (௪)

### முருகக்கடவுள்.

கரம்பன்னிரண்டுமுடியாறினனெவன்கைக்கவண்கன்
னிரம்பன்னிலத்திற்றினைத்தாளடர்நெறியேகிக்கண்ணா
விரம்பன்னியமொழிவேடிச்சிபாற்சென்றுவேண்டிமிக்கா
தரம்பன்னினனெவனவ்வனேயெனைத்தாங்குவனே. (௫)

## கலைமகள்.

எண்டோட்டுமுக்கட்டுநீரார்சடைத்திடுமாதர்பலி
கொண்டோட்டுவைத்தபொருட்டெதுவோவவதைக்கூறவிருள்
விண்டோட்டுசெம்மணிமான்மகளுவின்விளங்குநறு
வெண்டோட்டுமுண்டகத்தாண்மலர்த்தாண்முடிமேல்வைப்பனே. ()

## திருநந்திதேவர்.

இன்னடியார்களுடனிருப்பாநல்லினமணிக
டுன்னடிவாயிலினின்றேறபிரம்புகைதொட்டுமையாண்
மன்னடிகொள்ளவருமாலயன்முதல்வானவர்க்குத்
தன்னடிமுந்திக்கொடுப்பானடியெந்தலைக்கணிந்தே. (எ)

## சமயாசாரியர் நால்வர்.

கருமப்பாந்தவிர்த்தாள்வாருததியிற்கன்மிதக்கத்
தருமப்பதியிற்காரச்சேய்தரவென்புதாழ்குழலா
மருமப்பணிந்தபெருமானரியுருமாற்றிவர
வருமப்பர்சுந்தரர்சம்பந்தர்மாணிக்கவாசகரே. (அ)

## சண்டேசுரநாயனார்.

முரண்டடிகொண்டுவெம்போத்தைநடாத்திமுனிந்துநிற்பா
னரண்டடியப்பவமப்புறத்தோடவருந்துதிக
டிரண்டடியார்சொலத்தன்னையன்றூளைச்சிதைத்தேனைய
னிரண்டடிசேர்ந்தவிறையடிப்போதென்னிதயத்ததே. (௯)

## மற்றைத்திருத்தொண்டர்கள்.

பருத்தொண்டாநிற்குங்கொங்கையர்மான்முதற்பற்பலவாங்
கருத்தொண்டாதலவிச்சைவெப்போடிக்கழியவந்திக்
குருத்தொண்டாசின்மலரடிநீழற்குறுகிநின்ற
திருத்தொண்டானவர்தாடொழுவாமுட்டிருக்கறவே. (௧௦)

## சேக்கிழார்முதலியோர்.

மாக்கிளையார்மொழிபங்கனுக்கேயன்புவைத்தளவி
லாக்கிளையாரன்பறுத்துய்ந்ததொண்டாரும்புகழை
வாக்கிளையாரெனநாவலரோதவழுத்தியுய்ந்த
சேக்கிளையார்முதற்பல்லோரும்வாழ்கவென்சிந்தையினே. (௧௧)

---

## அவையடக்கம்.

கடியார்கடுக்கையணிந்தார்நெடியவன்கண்ணிருக்கு
மடியாரணத்துமுடிமீதுவைத்தவராப்பணியார்
துடியார்கரத்தெஞ்சிராமலைநாதனைச்சொல்லுவதாற்
படியார்களிகழ்வாரோநல்லோர்களென்பாடலையே. (௧௨)

---

## நூல்.

திருமாதிருக்குமணிமார்பனுன்முகன்றேவர்செங்க
திருமாதிருக்குந்தொழநின்றநாயகன்றீவினைமு
திருமாதிருக்குமடியார்க்கறுக்குஞ்சிராமலையான்
திருமாதிருக்குநுதலான்பொற்றாளென்சிரம்வைப்பனே. (௧)

சிரமரவம்புதரித்தசிராமலைத்தேவனைவச்
சிரமரவம்புனைநீர்பாய்ந்தபோல்வினைதேய்க்கநொந்தேதஞ்
சிரமரவம்புயத்தாடாவென்றோதிச்சிறப்பினிறைஞ்
சிரமரவம்புரிவெங்காலன்செய்யபினென்செய்குவிரே. (௨)

குவையாவலவினையப்பவெப்பேமிகக்கொண்டுநொந்தேதன்
குவையாவலவித்துநின்றிருத்தொண்டரிற்கூடிடச்செய்
குவையாவலவிழுங்கண்டாநறுங்கொன்றையொண்டொளிர்வா
குவையாவலவிர்தனத்திபங்காசிரகுத்திரனே. (௩)

திரங்காவலமரவிவ்வுடற்கெய்துமுன்செவ்வியபுத்
திரங்காவலர்கொண்டருச்சித்திடேனிருள்சீக்குஞ்செங்க
திரங்காவலரும்பநின்றதொப்பாஞ்சிகரச்சிரகுத்
திரங்காவலவுமைபங்காவென்றீவினைதீர்த்தருளே. (௪)

அரவப்பணிலனயன்மகவான்முதலோர்கியபொய்
அரவப்பணிவிடைசெய்துழலேனுமையார்த்திடுங்கை
அரவப்பணிந்தசடையாய்சிராமலையாதிபனே
அரவப்பணியுடையாயடியேனுன்னடைக்கலமே. (௫)

கலக்கந்தரமடவார்மயல்வாரிகலந்தவென்முன்
கலக்கந்தரவெஞ்சமன்வருங்காலங்கடுக்கைதப்ப
கலக்கந்தரநதிசூடுஞ்சிராமலையாய்கன்னிபா
கலக்கந்தரநினைவேண்டிக்கொண்டேனெனைக்கண்டுகொள்ளே. (௬)

கண்ணாடிமானப்பொலியுங்கபோலத்தர்காதலெனுங்
கண்ணாடிமானமற்றுண்டிருந்தேன்கடையேன்பொன்மன்றின்
கண்ணாடிமானத்தனேயினிமேனின்கழல்வைப்பனென்
கண்ணாடிமானச்சிராமலையாய்சடைக்கங்கையனே. (௭)

கங்காதரவிண்டொடுஞ்சிரபூதரக்காவலமு
கங்காதரவிந்தம்வள்ளையொப்பாமலைக்கன்னிபங்கா
கங்காதரவிதழிச்சடையாய்நின்கழற்கிலெனு
கங்காதரவினுடையாய்புரத்தைக்கடந்தவனே. (௮)

கடனாகவதரிக்குந்தாளப்பற்கவுரிபங்கா
கடனாகவதட்சிராமலையாய்வினைகட்கிடனாங்
கடனாகவதனென்றுனையாதெனைக்காத்தனிற்கே
கடனாகவதண்டங்கொண்டெமன்றான்றிடுங்காலத்திலே. (௯)

காலக்கடியமடவாரலறவிண்கன்னியர்செங்
காலக்கடியவிர்பஞ்சார்சிராமலைக்கத்தசெந்நீர்
காலக்கடியாவாபாணுகண்சிவந்துவருங்
காலக்கடியனையஞ்சேலெனவந்துகாத்தருளே. (௧௦)

காதாசங்கத்தமியேனுகியவென்கருமக்குவி
காதாசங்கத்தண்குழைசேர்ந்திலகிக்கவின்பெருகுங்
காதாசங்கத்தழனைத்திரத்தாய்சிகரச்சிரநா
காதாசங்கத்தர்மயற்குள்விழாமனின்காண்மலரே. (௧௧)

கானகத்தானவனைகரியோற்களித்தாய்சிரநா
கானகத்தானகரியுரித்தாய்பொற்கடுக்கைமலர்க்
கானகத்தானயம்போலேபிறந்துகழிந்துசுடுங்
கானகத்தானமெலாமென்னென்பேகுப்பல்கண்டதுவே. (௧௨)

கண்டமட்டுங்கடுங்காலற்கஞ்சேன்கடைநாளினில
கண்டமட்டுந்தருவானைமொய்கோடொளிர்காழகில்சி
கண்டமட்டுந்துபொழில்சேர்சிராமலைக்காவலனைக்
கண்டமட்டுங்கறுத்தானையென்னுச்சொலக்கற்றபின்னே. (௧௩)

கற்பகச்சோலையின்மீப்பாய்முடிக்கதிராற்கதிர்வி
கற்பகச்சோதமெனவாஞ்சிராமலைக்காவலனே
கற்பகச்சோரியயிலேவியகுழகற்கத்தனே
கற்பகச்சோரவின்னினையெந்நாளிற்கலப்பதுவே. (௧௪)

கலக்குஞ்சரமைந்துடையானைச்செற்றகண்ணுபிழைய
கலக்குஞ்சரமுமணிந்தாய்சிராமலைக்காரணவி
கலக்குஞ்சரமுரித்தாய்துயராங்கடையேன்றலையிற்
கலக்குஞ்சரணத்தனைகத்தனைவெங்கறைக்கண்டனே. (௧௫)

கண்டாவியங்குமிழ்மேற்பாய்ந்துமீண்டுசெங்கத்திரிகைக்
கண்டாவியங்குலிக்கையோட்டிநிற்கமைதீட்டுவளா
கண்டாவியங்குத்தடுமாறுவேற்கருளக்கடுவார்
கண்டாவியங்குஞ்சிராமலையாயென்கருத்தினையே. (௧௬)

தினைப்போதகத்தன்பிலார்க்குநெஞ்சேசெந்திருத்தவனந்
தினைப்போதகத்தனைத்தையறுமுகன்செய்யகுந்தக்
தினைப்போதகத்தன்மினைக்களஞ்சாரங்கண்சீரெனவோ
தினைப்போதகத்தன்சிராமலையானெனச்செப்பலையே. (௧௭)

ஏற்றுனைச்சாரார்க்கருள்கூர்சிராமலையீசனைமுன்
ஏற்றுனைச்சாரதள்போர்த்தானையெம்பெருமானையையம்
ஏற்றுனைச்சாரவிக்கானைச்செற்றுனையெண்ணார்களையீடு
ஏற்றுனைச்சாரநிற்பேற்கில்லையோநல்லவின்பங்களே. (௧௮)

இன்பந்தரும்பிறப்பேகுநெஞ்சேயிளமாதர்முலை
இன்பந்தரும்பலின்முத்தென்றிரங்கியிடாமலும்பர்
இன்பந்தருமலர்போலாஞ்சிரவெற்பிறையவனீர்
இன்பந்தரும்பர்புகழவைத்தான்கழலேத்துவையே. (௧௯)

வையம்பரிவிற்புகழுஞ்சிராமலையாய்வயங்கும்
வையம்பரிவின்மலைநாணிவாசுகியாய்தலைக்கு
வையம்பரிவில்வட்பூண்டாயுமைமணவாளதயை
வையம்பரிவிடையாயென்னையாளவருமப்பனே. (௨0)

அப்பாசிராமலையாயென்னையாளென்பவர்க்கன்பவால்
அப்பாசிராமலையாநிற்குமோதியவள்பங்கனே
அப்பாசிராமலையாநின்னையேசொல்லலன்றியுடல்
அப்பாசிராமலையார்மலரீரென்றறைகிலனே. (௨௧)

அறக்காதகன்கொடியேன்வினையேனெள்ளளவுமனத்து
அறக்காதலென்பதில்லேனைச்சிராமலையாய்கரியல்
அறக்காதவள்ளுகிராலுரித்தாயடியாரெனுமைய்
அறக்காதநெஞ்சருடன்சேர்த்தருள்செய்யகளங்கனே. (௨௨)

களங்கறுப்பானஞ்சடைசிவப்பான்மறைகாண்பரியான்
களங்கறுப்பானன்மொழிபூண்முலையிதழ்க்கன்னிபங்கன்
களங்கறுப்பானபுராணைச்செற்றனெனைக்காயும்வினை
களங்கறுப்பானஞ்சிராமலைவாழுமுக்கட்பரனே. (௨௩)

கட்பாவச்சுரும்பேறுங்கடுக்கையங்கண்ணியது
கட்பாவச்சுவைத்தேயுயிரோடுமக்காலத்துநின்
கட்பாவச்சுத்தமாவறியாவெனைக்காத்தருண்முக்
கட்பாவச்சுதன்போற்றுஞ்சிரவெற்புகந்தவனே. (௨௪)

கந்தரத்தாவண்சிராமலையாய்வெங்கறையுறையுங்
கந்தரத்தாவலினென்பணிந்தாயந்திக்காலம்வந்தாற்
கந்தரத்தாவலர்ப்பூங்குழல்சோருமென்கன்னிக்குச்சு
கந்தரத்தாவறுநின்மாலைவேண்டுங்கருத்தினனே. (௨௫)

கருமந்திரண்டதினோடாறும்வாடிக்கறையுற்றுநு
கருமந்திரங்குநெற்போலாதறீர்ந்துகதியடைவீர்
கருமந்திரதமதுவுணுங்கொன்றைக்கணியனைப்ப
கருமந்திரவஞ்செழுத்தாற்சிராமலைகைகுவித்தே. (௨௬)

குவிக்குந்தாமறியேன்சிரமேற்காங்கொண்டுயர்பா
குவிக்குந்தருமொழிபாங்காசிரகுத்திரகொலையாக்
குவிக்குந்தறுகட்சமன்வருநாண்மெய்குலைவுற்றண்ணைக்
குவிக்குந்தருணத்தஞ்சேலென்றெனையுய்யக்கொண்டருளே. (௨௭)

அருந்தவருமந்தருமடுகுலிசங்கொளங்கை
அருந்தவருமம்பும்வெற்பரியாயென்றடிதொழத்தீய்
அருந்தவருமழுவேந்துஞ்சிராமலையாய்விடத்தை
அருந்தவருமம்வைத்தாயென்னையாள்பணியத்தியனே. (உஅ)

தியங்காமனந்தந்தைதாயானவாசிரவெற்பவிர
தியங்காமனந்தமுனிந்தாயெனவுனைச்சிந்தைவைத்தோ
தியங்காமனந்தனையில்லேற்கெவ்வாறினித்தீர்வதுசத்
தியங்காமனந்தணன்மாலுழ்பதநமன்சேரச்சமே. (உகூ)

அச்சங்காமலையக்கொண்டயானைமுன்பாகியவெள்
அச்சங்காரவனையானம்பமாதுக்கருமயறீர்
அச்சங்காசிரவெற்பாநீயிங்கணைவதனுக்கு
அச்சங்காகவிதழியந்தார்கொடன்பாகவின்றே. (௩0)

கவனத்தனேகமிஞர்பாற்றிரிகடையேன்கயமு
கவனத்தனேசிரவெற்பானேகஞ்சக்கண்ணன்றா
கவனத்தனேடிடநின்றவனேயுன்கழற்கன்பறு
கவனத்தனேரிட்டுழல்விலறுகக்கருணைசெய்யே. (௩௧)

கருத்திருக்கையவர்தாளிலென்றேதிக்கசிவுறுவார்
கருத்திருக்கையறுப்பார்நரர்காள்சங்கரிபிடப்பா
கருத்திருக்கையமற்றேறத்துஞ்சிரவெற்பர்கானுமழற்
கருத்திருக்கையர்சரணேசரணென்றுகாத்திருமே. (௩௨)

இருந்தாலமேழினர்கையறுத்தாரெதிரேற்றடுசெய்
இருந்தாலமுண்சிரவெற்பரென்றுதயினியமுதய்
இருந்தாலம்வைத்துண்டரிவையர்பாலிறுமாந்திருப்பார்
இருந்தாலதிலென்னிராதொழிந்தாலுமென்னிப்புவிக்கே. (௩௩)

விக்காதமலைசெலுந்தெறுநோய்கண்மிகுந்துபா
விக்காதமலைக்கும்வெஞ்சமனஞ்சுமெய்யனபர்க்குச்செவ்
விக்காதமலைபங்கார்சிரவெற்பனைமேவிக்கைகு
விக்காதமலையுடையார்க்கன்றேவிம்மிகுந்தத்தமே. (௩௪)

குந்தனஞ்சந்தனம்புற்றமைதீட்டுகட்கோதைநெருங்
குந்தனஞ்சந்தனம்பூசாததுங்குயில்காண்மயன்மி
குந்தனஞ்சந்தனந்தாமலர்நீத்ததுங்கூறுமின்வை
குந்தனஞ்சந்தனங்குந்தன்றொழுஞ்சிரகுத்திரற்கே. (௩௫)

குத்தம்புவிற்கணுதலாள்பங்காவெங்கொடியனைச்செ
குத்தம்புவிக்கிடர்தீர்ப்பாய்நிலவுமிழ்கோதின்முத்து
குத்தம்புவிண்செல்சிராமலையாயெனக்கோக்களின்மி
குத்தம்புவிட்டுருகிப்பாடுவார்க்குக்குறைவிலையே. (௩௬)

இலங்கா தவருறவா காதென்பீர் தன்னையேத்துந்தொண்டாய்
இலங்கா தவருக்கிலான்சிரவெற்பணியாகசசை
இலங்கா தவருக்குப்பற்புடைத்தானென்றியம்பிடவாய்
இலங்கா தவருசமனுக்கென்செய்வமென்ணுதாமே. (௩௭)

தாரங்கந்தாரங்கச்சிளமுலைபொன்மலைதண்முருக்க
தாரங்கந்தாரங்கச்சபங்கூந்தல்சார்புறங்கால்வடமு
தாரங்கந்தாரங்கச்சுரர்தொழச்சூடுசத்திகண்ணுந்
தாரங்கந்தாரங்கச்சடையார்சிராமலைத்தையலுக்கே. (௩௮)

தைக்குஞ்சரமெனமுன்னின்றெய்வேளைச்செற்றான்சமன்வ
தைக்குஞ்சரணத்தம்மான்சாயுகிர்பெறுந்தாணுடைத்தத்
தைக்குஞ்சரவொலிசெய்யுஞ்சிராசலத்தானுருமோ
தைக்குஞ்சரமுரித்தானெனக்கின்பந்தருமப்பனே. (௩௯)

பனையஞ்சருகிற்கவிபொறிப்பார்மடப்பாவியர்க்கொப்
பனையஞ்சருமகவான்மானுமென்றலைவார்பகர்ந்தப்
பனையஞ்சருவணர்போற்றுஞ்சிராமலைப்பார்த்திபன்பண்
பனையஞ்சருக்கனெயிறுகுத்தானெனப்பாடிலரே. (௪௦)

இலங்காரமாடைகலன்பூமிமக்களிளமுலைமேல்
இலங்காரமாதர்தமர்நெஞ்சமேயிவையாவுஞ்சென்மத்து
இலங்காரகனட்டமச்சனியாமெனவெண்ணியிகழ்ந்து
இலங்காரணுசிரவெற்பாவென்னேம்பலனென்கடத்தே. (௪௧)

கடத்தும்பியானனத்தானைப்பெற்றானைமுக்கண்ணனைத்திங்
கடத்தும்பிணையனறுங்கொன்றையானைக்கவர்வினைச்சங்
கடத்தும்பிணியினும்யானுழலாமலென்கண்மயக்கைக்
கடத்தும்பிரானைச்சிராமலைமீதினிற்கண்டனனே. (௪௨)

கண்டங்குநெற்றியுமான்மழுக்கையும்வெங்கார்விடஞ்சேர்
கண்டங்குலவரவப்பணியுங்கதிர்கான்றிடக்கற்
கண்டங்குதலைச்சொல்பங்கன்சிராமலைக்கத்தனிற்கக்
கண்டங்குநின்றுதொழுதேனென்றீவினைகைவிட்டதே. (௪௩)

கையிலாயனம்பன்முக்கண்ணன்சிராமலைக்காரணன்செங்
கையிலாயனம்பனடிபணியாமல்வெங்காதனுவ
கையிலாயனம்பன்னரும்வினைக்கன்னெஞ்சமளவுசங்
கையிலாயனம்பன்மின்மண்முதலாசைகதியலவே. (௪௪)

அலரிக்கதிருக்குடுவொக்கினுமைந்தருவுக்கெட்டி
அலரிக்கடுமரமொக்கினுமாதிரவங்கனைமை
அலரிக்களைச்செற்றவையர்சிராமலையன்பருக்கொப்பு
அலரிக்கரியவன்வேதாபுனிதனமாருமே. (௪௫)

அமலைத்தவளைச்சிராமலையா திபனையமுகி
அமலைத்தவளையுடையானைநாளுமருமறையோது
அமலைத்தவளையனைப்பணியீர்முன்னடுத்துமுடல்
அமலைத்தவளையெவ்வாறுவெல்வீரிவ்வருஞ்சன்மத்தே. (௪௬)

சனனம்பலவடிவம்பலவூர்பலதாய்பலவ
சனனம்பலமும்பலவிதில்வெள்ளித்தடவரையா
சனனம்பலவன்சிராமலையானெனத்தான்சொலும்வ
சனனம்பலனிச்சனனத்துண்டேயென்றனிநெஞ்சமே. (௪௭)

தனங்கட்டிமாங்கனிசெந்தாமரைசத்திமொத்திடும்வ
தனங்கட்டிருமொப்பர்மின்னாரென்றறைவர்தளம்பினர்மைந்
தனங்கட்டிடென்றசிராமலையாய்தமிழ்க்கூடலிலிந்
தனங்கட்டிவிற்றவனேயென்னையாட்கொள்சலதரனே. (௪௮)

தருக்கும்படருஞ்சிராமலையாய்தனந்தாங்கியமா
தருக்கும்படர்வினைக்குஞ்சுழலாதெனைத்தாங்கிக்கொள்வே
தருக்கும்படலைத்துளவார்க்குங்காண்பரியாய்சலமுந்
தருக்கும்படவெரித்தாய்புரமுத்தலைச்சத்தியனே. (௪௯)

சத்தியங்கார்கவிவற்றவிட்டாற்கத்தனேமிகுவஞ்
சத்தியங்கார்புரஞ்செற்றாய்சிரசயிலாவினைப்பா
சத்தியங்கார்களிற்சேர்த்தெனையாதரித்தாளிதுவே
சத்தியங்கார்விடக்கண்டாசரணஞ்சரணுனக்கே. (௫0)

சரமலங்காரமதனெய்யநீத்துவெண்டண்டரளச்
சரமலங்காரநறுங்குழலாளைத்தழுவுசல
சரமலங்காரச்சுனைசேர்சிராமலைச்சங்கரகுஞ்
சரமலங்காரவுரித்தாயுன்செஞ்சந்தனப்புயத்தே. (௫௧)

தனத்துக்கவாதையடியேன்சிரசயிலச்சிவவ
தனத்துக்கவான்மதியொத்தாள்பங்காகலன்சார்களஞ்சந்
தனத்துக்கவான்செங்கதலியொப்பாமொருதாயிடம்பால்
தனத்துக்கவாவுற்றழாதாண்டருண்முக்கட்சங்கரனே. (௫௨)

சங்கமையானனங்கைகாறமைத்தடவித்தமரின்
சங்கமையானந்தலென்றலறுமுனென்றன்னைவெம்பா
சங்கமையானதற்றான்கொண்டடாமுன்றளர்ந்துடல்க
சங்கமையானமுறுமுன்சிராசலத்தாயருளே. (௫௩)

அரும்பாலனம்பகமீராறினனென்றளித்திடுங்கற்பு
அரும்பாலனம்பல்வயினடைத்தேதவிபங்கற்புதவுய்
அரும்பாலனம்பசிரவெற்பநீயணையாமையினய்
அரும்பாலனம்பல்கலனீத்துவாய்விட்டலறுமின்னே. (௫௪)

அலரம்பையோதிகவான்றுப்பதரத்தரிவையர்காள்
அலரம்பையோதிமன்றந்தைகுமாரனடுத்தெய்யவே
அலரம்பையோதிருக்காலுதிர்த்தேங்குவனத்தையறி
அலரம்பையோதியென்னேதீர்சிராமலையையனையே. (௫௫)

ஐயரைக்காணிக்கணபாவதுநினைத்தன்புடன்மெய்க்கு
ஐயணைக்காணிபத்தோல்புலித்தோலணையன்றெடுத்த
ஐயணைக்காணிசிரபூதரமென்றமர்ந்திருக்கும்
ஐயணைக்காணிலையோநெஞ்சமேநமனஞ்சுதற்கே. (௫௬)

அஞ்சார்கருமலாப்பாணைச்செற்றவென்னப்பன்வெப்பால்
அஞ்சார்கருமிடற்றான்சிரபூதரத்தையன்சரண்
அஞ்சார்கருதுமடியார்வெங்கோபத்தடுமியமற்கு
அஞ்சார்கருமந்தொலைப்பார்சுவர்க்கமவாதுவே. (௫௭)

அவாரகமருப்படலாமைபோடறுகக்குநெடி
அவாரகமருப்பனமுலையாமினணிந்தவதூய்
அவாரகமருப்பதமலரீந்தஞ்சிராமலையை
அவாரகமருப்பமுள்ளேளையாண்டருளஞ்சலென்றே. (௫௮)

அஞ்சலிக்குஞ்சடையானைச்சிராமலையையனையம்பு
அஞ்சலிக்குந்திபவில்லானைச்செற்றவெனப்பனையால்
அஞ்சலிக்கும்படியுண்டானைவாழ்த்தியனுதினமும்
அஞ்சலிக்குந்தொழும்பேற்கில்லையோமுத்தியாயதுவே. (௫௯)

ஆயாவப்பாலரியம்பாய்சிராமலையையநின்னை
ஆயாவப்பாணிற்கும்வெவ்வினைப்பட்டலைந்தேமனம்புண்
ஆயாவப்பார்சடையாவுழல்வேற்குவையச்சி[illegible]ணை
ஆயாவப்பாவென்றினிப்பிறந்தோதலதைத்தவிரே. (௬0)

அதரம்பவளமழகார்கபோலங்களத்தமனை
அதரம்பணைகொண்முலைமிகுவாசவனிச்சமலர்
அதரம்பதநிகரன்றெனமாதர்க்கறைவெற்குநல்
அதரம்பரசிரவெற்பாவருளங்கைநாகத்தனே. (௬௧)

நாகங்கண்மொய்த்தலர்ந்தோங்கிடநிற்குஞ்சிரநகமன்
நாகங்கணக்கையுமைமணவாளநம்பாவடியேன்
நாகங்கணங்கைசொலருழல்பார்த்தனனிகுவித்தல்
நாகங்கணற்பணியாயுனக்கேசெயுநாடொறுமே. (௬௨)

நாடியிலங்குவருள்ளுறைவாய்சிரநாகதமிழ்
நாடியிலங்குலவும்மணவாளநம்பாவருவாய்
நாடியிலங்குலிசேர்த்தாயுள்வேதியர்நண்ணியென்கை
நாடியிலங்குக்கருத்தேதென்றேறுதுமந்நாள்விரைந்தே. (௬௩)

விளைத்தடங்கற்பகச்சோலைகள்சூழ்தரவெய்யவன
விளைத்தடங்கற்செய்தொளிர்சிகரச்சிரவெற்பரத
விளைத்தடங்கற்பின்முல்லைநகையாளைவிரும்பிமெய்யை
விளைத்தடங்கற்கும்புறம்பாய்நின்றேன்வினைவெப்பரிந்தே. (௬௪)

அரிக்குங்கடியபிணிக்குமஞ்சேனொன்னலர்க்குமஞ்சேன்
அரிக்குங்கடியரவுக்குமஞ்சேனென்னையாளுடையான்
அரிக்குங்கடியம்புயற்குமெட்டானமருங்குவடல்
அரிக்குங்கடியஞ்சிரவெற்பெனாதவர்க்கஞ்சுவனே. (௬௫)

அஞ்சங்கருடன்பரியார்க்கரியசிராசலத்தாய்
அஞ்சங்கருப்பமனத்தேனைக்காலனணுகுறுங்கால்
அஞ்சங்கருக்குப்பசுத்தானமீயுமுனாச்செனுமுன்
அஞ்சங்கருகுகளரலருமுன்வந்தாதரியே. (௬௬)

ஆதரிக்கப்பட்டவெஞ்சூலர்கூடலையன்றினிதா
ஆதரிக்கப்பட்டஞ்சூடினரஞ்சிரவெற்பர்கயில்
ஆதரிக்கப்பட்டருமொழிபாகரென்னார்வினைப்பொல்
ஆதரிக்கப்பட்டந்தோகுனுங்காயலைவார்களைந்தே. (௬௭)

கரியவனந்தணன்காண்பரியான்கடுஞ்சாபத்தின்வெண்
கரியவனந்தலிலாதளித்தான்கதித்தோங்கிடஞ்சி
கரியவனந்தமுறுமீச்சிராமலைகாயும்வினை
கரியவனந்தறவிர்ந்துலகீர்சென்றுகைதொழுமே. (௬௮)

கைக்கும்பினாகந்தரித்தான்புரத்திற்கனலுறந
கைக்கும்பினாகக்கரத்தான்சிராமலைகண்டிடினங்
கைக்கும்பினாகம்புளைமனஞ்சென்றுகவலையுறல்
கைக்கும்பினாகமவற்காயிச்சன்மங்கடிதறுமே. (௬௯)

கடிக்கமலங்குவளைமுகங்கண்ணென்றுகாட்டியிதழ்
கடிக்கமலங்குவிர்மாதர்கள்பானுங்கனவினைபோக்
கடிக்கமலங்குன்றமேவத்துஞ்சிராமலைக்காவலனைக்
கடிக்கமலங்குலவுஞ்சடையானைக்கதிதக்கவே. (௭௦)

தக்கனியாகஞ்சிதைத்தாய்விண்கர்க்கடகந்தனைச்சூ
தக்கனியாலிகன்மந்திகடாவுஞ்சிரசயிலா
தக்கனியாயபுரத்தைவென்றாய்நின்றனக்கன்பின்மே
தக்கனியானலனாயினுந்தாளுதவியருளே. (௭௧)

தவியாச்சிறுமைதனிலுழல்வேற்குநின்றாளிணைப
தவியாச்சிறந்தளியாவிடிற்றான்சிரவெற்பமண்ணு
தவியாச்சியப்பிட்டுகந்தாய்தமியன்வழக்குப்பொல்லா
தவியாச்சியம்விடமாட்டேன்செவ்வந்திதகும்வண்ணனே (௭௨)

வணமாடக்கூமனைமக்களெஞ்சேயிந்தவாழ்க்கைகள்பொய்
வணமாடக்கூரகிபூண்டான்சிராமலையான்வளவா
வணமாடக்கூடவிற்சென்னியின்மேற்றட்டுவைத்துப்பின்கோ
வணமாடக்கூலிக்குமண்சுமந்தான்கழல்வந்திக்கவே. (எ௩)

வந்துடைத்தாயவிவனையேற்கருள்செய்வணங்குவர்ப
வந்துடைத்தாயற்றுடைப்பானகைமையகத்திற்கண்கி
வந்துடைத்தாயன்மகற்கோர்சிரமறுத்தாயதரு
வந்துடைத்தாயமதென்றாய்சிராமலைவாழ்சம்புவே. (எச)

சம்பையக்கூடலின்மாவாக்கினைச்சிராதரம்வாழ்
சம்பையக்கூரகிபூண்டானையன்னைதராததின்வ
சம்பையக்கூழிவிட்டாலெனப்பாலனந்தள்ளினனி
சம்பையக்கூடுவமென்றாற்சகிப்பின்றுமால்சகியே. (எரு)

மாலையிராவதன்வேதாவொப்பார்கொல்கண்வாய்திறந்தால்
மாலையிராவதுபோல்வானிலங்குமவுலியெலா
மாலையிராவணனைநெரித்தானைவழுத்தியுன்னி
மாலையிராவருத்திச்சிரபூதரம்வாழ்பத்தர்க்கே. (எசு)

பத்தானனத்தனமூந்தப்பணிமதிதேம்பவெள்ளி
பத்தானனத்தன்பணியச்சமனுயிர்பாறநற்ற
பத்தானனத்தன்விழிசூடத்தேடப்பண்பாயினசு
பத்தானனத்தன்சிராமலைநாதன்பொற்பாதங்களே. (எஎ)

தங்கக்கலைவளைத்துச்சூரியன்பற்றகர்த்தடுமா
தங்கக்கலையுரித்தந்தணன்சென்னிதடிந்தறுப
தங்கக்கலைக்கண்டுழன்றோடரியைத்தடுத்தனசீர்
தங்கக்கலைச்செஞ்சடைச்சிரவெற்பன்றடக்கைகளே. (எஅ)

தடவரைவில்லிசிராமலையப்பன்சரணத்தைநீ
தடவரைவீசங்கணமாயினுமென்றுசாற்றிற்றுப்பு
தடவரைநாடினைநெஞ்சேநல்லோரினித்தானெனைச்சி
தடவரைபட்டுழலென்பார்நிற்கீதுதருமமன்றே. (எகூ)

தருமங்குலவவளர்த்தபிராட்டிபொற்றாளுக்கும்வே
தருமங்குலனமெய்யாரும்பணியுநின்றாளுக்குநாத்
தருமங்குலச்சொன்மலர்தூய்த்தொண்டாயினன்றங்கியமா
தருமங்குலவுமின்னுஞ்சேர்சிராதரத்தாவருளே. (அ0)

தாவிப்படிவழிமீதேறிமந்திகடண்டருவில்
தாவிப்படிகொள்கடகத்தைச்சீறுஞ்சிராதரவத்
தாவிப்படியடியேன்வாடவோநிற்குச்சம்மதியுள்
தாவிப்படியுளரேசாமணின்பதத்தாமரையே. (அக)

மருமந்தநாசையொழியாதுமிக்கமயக்கமுற
மருமந்தநாரியரின்பமெய்யாக்கிவந்தேனையல
மருமந்தநானெனச்சொற்றேயமன்வருங்காலத்தைய
மருமந்தநாளிற்சிரவெற்பநீயும்வரலந்தமே. (௮௨)

அந்தணையாரிடையார்சிறியாரையலைக்கழிக்கும்
அந்தணையாரையகன்றுநெஞ்சேதொண்டனுவெணையால்
அந்தணையாவலினுண்சிரவெற்பனடிகட்குநல்
அந்தணையார்சுகந்தக்குழருள்கட்குமாக்குவையே. (௮௩)

ஆகம்பரியன்சிகியம்பரியனத்தாகரிய
ஆகம்பரியனயற்கரியாயஞ்சிராமலையை
ஆகம்பரியமறைகந்தரவிடையாள்பங்கவென்
ஆகம்பரியடலேற்றாய்நின்றாள்கட்கன்பாவதென்றே. (௮௪)

ஆவிக்குமண்சுமந்தாயையவானத்துக்கப்புறமன்
ஆவிக்குமரியதாஞ்சிரபூதரத்தற்புதவென்
ஆவிக்குமறலிதோன்றிடுநாட்டொண்டையாவென்றுமெய்
ஆவிக்குமப்பொழுதெற்கேதுன்றாளன்றியாதரமே. (௮௫)

ஆதரத்தந்தமிலன்பர்க்கன்பாயுய்கிலார்மனங்கை
ஆதரத்தந்தருவாயார்க்கன்பாகியவரிதழ்த்தேன்
ஆதரத்தந்தமிலுண்டோய்ந்துநல்வழியற்றுழலும்
ஆதரத்தந்தசத்தெங்கள்சிராமலையத்தனுக்கே. (௮௬)

அத்தந்தருணமறிந்தார்க்குமீகையிலுலையநின்
அத்தந்தருவொக்குமென்றேகவியசடர்க்குரையேன்
அத்தந்தருஞ்சடையான்சிரபூதரத்தானொருவீர்
அத்தந்தருக்கத்தனெம்மானையான்சொல்லலானபின்னே. (௮௭)

ஆனனம்பாணியைந்தீரைந்துளாயஞ்சிராமலையாய்
ஆனனம்பாவென்றுரைக்கினெஞ்சேகொடிதாய்மிகுபொய்
ஆனனம்பாற்சமணுணைசெல்லாதழலார்க்குமம்மய்
ஆனனம்பாரவுடல்சேருமன்றுண்மையாமிதுவே. (௮௮)

ஆவணங்காட்டமதிக்கச்சுமக்கவப்போதுதெரி
ஆவணங்காட்டநரியையெலாம்பரியாக்கமுதிர்
ஆவணங்காட்டநம்மையன்சிராமலையானைவைத்தது
ஆவணங்காட்டன்மையாரன்பன்றேயிதறிமனமே. (௮௯)

மனந்தனவாசையொழியாதுமாதர்மயலொருந
மனந்தனடுக்கமகலாதென்செய்குவன்வந்தெதிர்கா
மனந்தனயனந்திறந்தாய்சிராமலைவாணவெழில்
மனந்தனகந்தரிபங்காநின்பாதமலரருளே. (௯௦)

மலையனையன்செழியன்றிருப்பாவையெனவளர
மலையனைமெய்யுறவைத்தானைவாணிவலவனைக்க
மலையனையாளுஞ்சிராமலையானைவருதுயர்விம்
மலையனையென்றுவைத்தேனடியேன்கன்மனத்திடத்தே. (௬௧)

மனையாட்டிபங்குறவைத்தார்க்குமாதங்கவத்திரத்து
மனையாட்டினேறுங்குகனைப்பெற்றார்க்குவராகனைப்பூ
மனையாட்டிரங்கொள்சிராமலைவாணர்க்குமாத்திரஞ்ச
மனையாட்டிவைக்கவழிபடுவீர்வையமாணிடரே. (௬௨)

மாணுட்டமங்கைமணமாலைசூட்டமதுரைவள
மாணுட்டமர்ந்துசெங்கோலோச்சியசிராமாதிரவெம்
மாணுட்டமன்றிற்புரிந்தோனென்றேதிமனத்திலன்பாய்
மாணுட்டமன்பர்க்கிணையோபுரந்தரன்மாலயனே. (௬௩)

அயனத்தமாறகலிந்திரன்செல்வத்தருத்தியில்லைற்கு
அயனத்தமானகளத்தார்படையினிதாகுங்கிளை
அயனத்தமாம்பழுவுடையானைச்செற்றசிராசலத்தாய்
அயனத்தமாசையறுத்தருள்வாய்நின்னடித்திருவே. (௬௪)

திருமாரனந்தணன்காண்பரியானெஞ்சிராமலையான்
திருமாரனந்தமுனிந்தான்சடையிற்செறியிருட்க
திருமாரனந்ததிமாதுமுள்ளவன்றேன்மிகவ
திருமாரனந்தண்முளரியந்தாளென்சிரம்வைப்பனே. (௬௫)

பன்னகமாலையுறக்கடிந்தான்முதற்பண்ணவர்வைப்
பன்னகமாலயன்வேதங்கள்வாழ்த்தும்பனுவலுடன்
பன்னகமாலையாஞ்சிராபூதரப்பண்பரன்பிற்
பன்னகமாலையர்தஞ்செவிகேகுறுமென்பாடலுமே. (௬௬)

பாடலமானப்பொலிகுழல்பாகன்சிராமலையான்
பாடலமானதென்றூர்ந்தானையன்றிப்பரந்தலர்ந்த
பாடலமானபுன்மைத்தேவரைச்சொப்பனத்திலும்யாம்
பாடலமானமற்றெண்ணரெண்ணலம்பார்க்கலமே. (௬௭)

*பாரம்பரியமென்னைம்பொறியுண்
பாரம்பரியவகந்தோறுஞ்சென்று
பாரம்பரியசிராமலையாவிட
பாரம்பரியம்விடையாய்வினையற (௬௮)

---

* இந்நூல் எழுதப்பெற்றிருந்தபிரதியில் இப்பாட்டும், ௯௦ - வது பாட்டும் உள்ள ஏடு முறிந்துபோய்விட்டபடியால், முற்றும் அறிந்து இவற்றைப் பதிப்பிக்கக்கூடவில்லை.

பகவகங்காளசிரபூதரவயில்பாரவனை
பகவகங்காயம்புகழவிட்டாற்கப்பசீர்த்திரியம்
பகவகங்காதலொடுகாத்தற்கியார்பணிவாரொனுஞா
பகவகங்காரமறவெற்கருளுன்பதத்திருவே. (௯௯)

திருக்கையிலாதறுத்திந்தி
திருக்கையிலாயத்தடைந்
திருக்கையிலாங்கடனஞ்சு
திருக்கையிலாயுதனீந்தா (௧௦௦)

திருச்சிராமலையமகவந்தாதிமுற்றிற்று.

---

உ

# சிறப்புப்பாயிரம்.

கட்டளைக்கலித்துறை.

பூவார் பொழிற்சிர பூதரம் வாழ்முக்கட் புண்ணியனுந்
தேவாதி தேவனுக் கந்தாதி மாலையைச் செய்தணிந்தான்
பாவார் தமிழின் றவப்பய னுவரு பண்புடையான்
நாவார் பெரும்புகழ் மீனாட்சி சுந்தர நாவலனே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேன்பிறந்த கடுக்கையணி சடைப்பெருமான் றுயான
செல்வ மாய்ச்சேர்
வான்பிறந்த தலப்பனுவல் பிறதலநூல் களினுமென்னே
வயங்க லென்னிற்
கான்பிறந்த குவளையந்தார் மீனாட்சி சுந்தரமா
கவிஞர் கோமான்
தான்பிறந்த தலநூன்மற் றையதலநூ லினுஞ்சிறத்தல்
சகசந் தானே.

---

௳

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குடந்தைத்திரிபந்தாதி.

## காப்பு.

ஆதிவிநாயகர்துதி.

சோதிக்களிற்றையலோடுறுமாறுதுதிசெயற்கா
நீதிக்களிற்றைவணாயருந்தாப்பிழைநீங்கவரால்
சாதிக்களிற்றையளாநீர்க்குடந்தையந்தாதிசொல்வா
னாதிக்களிற்றையடுத்தாமடுத்தவனைத்தும்வந்தே.

அவையடக்கம்.

குடந்தையந்தாதிதிரிபாவொருசதங்கூறிடுவ
னடந்தையந்தாதிகழூமாவலியென்றநாதனிற
மடந்தையந்தாதிவினைசெயவாழ்மங்களைமகிழ்ந
ணிடந்தையந்தாதிவருந்தாடருமெனுமெண்ணங்கொண்டே.

## நூல்.

பூந்தாமரையில்வதிவானுமாயனும்போற்றிடப்பொன்
னாந்தாமரையில்வளக்குடமூக்கமரண்ணற்கடி
யேந்தாமரையில்வனத்துழலாந்தவமெய்தவனூர்
மாந்தாமரையில்வன்னாருமுடாமுள்ளிவாழ்குதுமே. (க)

வாழும்பரவைபுகழ்குடமூக்கமர்வள்ளலுல
கேழும்பரவையமுதகும்பேசனிருந்தளியைச்
சூழும்பரவைவிடமயின்றாயென்றுசொல்லுமெதிர்
தாழும்பரவைமணக்கேகவன்செயுந்தண்ணளியே. (உ)

தண்ணஞ்சுமந்ததிருக்காத்தானைச்சலதிசுற்று
மண்ணஞ்சுமந்தகனையுதைத்தானைவிண்மாய்க்குமென்று
கண்ணஞ்சுமந்தமுறுத்தவொண்ணாநங்கடேசற்றொழா
ரெண்ணஞ்சுமந்தவறிவினராயளற்றெய்துவரே. (௩)

வாசங்கமங்கையுதித்தார்கல்லேற்றவாதகலைப்
பிரசங்கமங்கையுறுநாவரோத்தும்பெருங்குடந்தை
யாசங்கமங்கையுடைக்கணையாய்நின்னடிக்கமலம்
பாசங்கமங்கையுறுமாறுண்டோவெம்படரொழிந்தே. (௪)

படவரவத்தையணிவார்கும்பேசர்படியளந்த
விடவரவத்தையறுப்பார்நகர்விலையேந்திழையார்
நடவரவத்தையுகப்பாரொனினுநமக்கருளக்
கடவரவத்தையடையவிடார்பொற்கனங்குழையே. (௫)

கனகச்சிலம்புவளைத்தார்கும்பேசர்கனமறையா
மனகச்சிலம்புபுனைவார்மறுகிலணிவிடைமீ
துனகச்சிலம்புமுராசோடணையத்தொழுதவர்பான்
முனகச்சிலம்புதொடுப்பான்கொலோமதன்முற்றிழையே. (௬)

முற்றத்துவந்தனைசெய்தேனுனக்குமுழுமதியே
சொற்றத்துவந்தனையாய்குடமூக்கமர்சுந்தரர்வெண்
பெற்றத்துவந்தனையார்மார்புறயான்பெறுந்துணைதீர்
செற்றத்துவந்தனையாய்ப்பயில்வாயச்செழுவிசும்பே. (௭)

செழுங்கடலத்துவெடிவாளைபாய்தரத்தேனெனக்கீழ்
விழுங்கமலத்துவழிசார்குடநதைவிமலர்பொற்று
ளழுங்கமலத்துநிலங்களையக்களைந்தன்பினுள்வாம்
புழுங்கமலத்துவிழுந்துயர்தீர்ந்தின்பம்புல்லுதற்கே. (௮)

புல்லாவளையுடைநல்குங்குடந்தைப்புகழ்பதியா
வல்லாவளையுடைசார்கயிலாயவளாவிடையேழ்
வெல்லாவளையுடையானெக்கூறும்விதமென்னெனு
மொல்லாவளையுடைகொங்கையிம்மங்கையுணர்ச்சிநன்றே. (௯)

நன்றுதரித்தகுடந்தைப்பிரானைநயந்துவெள்ளிக்
குன்றுதரித்தமழுவாவெனத்துதிகூறக்கற்றோம்
பொன்றுதரித்தவினைகாளெமைவிட்டுப்போய்விளைவி
னன்றுதரித்தகையோராரவளையடைமின்களே. (௧௰)

அடைந்தவராகமளவாபபசப்பினமையச்சுற்றந்
தடைந்தவராகமளித்தருளவார்கொறவாதவலி
மிடைந்தவராகமருப்பணிந்தார்விண்ணார்மேவிமல
முடைந்தவராகமருஉங்குடமூக்கமருத்தமரே. (௧௧)

உத்தமனத்தனவிர்மழுவோடுழையுற்றமரு
மத்தமனத்தனடிதேடநீண்டவனுய்மலர்தூய்
நித்தமனத்தனவாங்குடமூக்கமர்நின்மலனிப
பித்தமனத்தனமன்றோனென்றென்னையும்பேணுவனே. (௧௨)

பேணுதவென்னைதமைப்பேணுவாரைபபிறைமதிய
மாணுதவென்னைவருத்துதற்கேயெழும்வானளவு
கோணுதவென்னையடர்குடமூக்கிற்குலாங்குழகர்
நாணுதவென்னையுறுபுகழார்கணணட்டத்தமரே. (௧௩)

நாட்டஞ்சிவந்தனையென்செயலாநானேகுடந்தைக்
கோட்டஞ்சிவந்தனைநேர்ந்தேயுறாங்குக்கூடிமலைப்
பூட்டஞ்சிவந்தனைசெய்தோங்கருணைபுரிந்ததில்லை
வாட்டஞ்சிவந்தனைப்பொன்சொரிந்தாலுமதிக்கலமே. (கச)

மதிக்கலமாலயனுதியர்வாழ்க்கையைமற்றுமொன்றைத்
துதிக்கலமாலயமாமறையாமெனன்புகொண்டார்நெஞ்சு
நிதிக்கலமாலயமாகக்கொண்டானபதநெஞ்சுள்வைத்தா
முதிக்கலமாலயனீத்தாங்குடந்தையுவந்தனமே. (கரு)

உவமையிலாடுபலவரிந்தாலுமொழிவதுண்டோ
வவமையிலாடுகொததனத்தாகுப்பத்தற்புதனே
தவமையிலாடுதுறையாயலருந்தவாதுநெருங்
குவமையிலாடுதையுந்துயர்நீங்கக்குறித்தருளே. (கசு)

அரும்பாவலருமுல்லையென்பதென்பலவுமத்தன்மைநத்தே
விரும்பாவலருமகள்சுரம்போதல்விழைந்ததென்னே
வரும்பாவலருப்புகழ்க்குடமூக்கமர்வள்ளல்வெறுபிற்
றிரும்பாவலருமுலகெங்குமாகுநதிறந்துணிந்தே. (கஎ)

திறம்பாவமென்றுகுறிப்பாராமனைதொறுஞ்சென்றுழன்று
மறம்பாவமென்றுமறிதருமேதிமனைமலர்வாய்
நிறம்பாவமென்றுதிரிகுடமூக்கமர்நித்தசிலை
பறம்பாவமென்றுகடலுருளாக்கொண்டபண்ணவனே. (கஅ)

பண்ணப்பணைத்ததிருவுமுருவும்பலமகவுங்
கண்ணப்பணைத்தமொழியார்கலப்புங்கலப்புறுமோ
மண்ணப்பணைத்தவளவளையூருமவளக்குடந்தை
விண்ணப்பணைத்தசடையானைமேவினமேவினமே. (ககூ)

மேவியகல்லும்படியென்னைத்தென்றலும்வெண்மதியு
மோவியகல்லும்புனைதலைமையென்றுலிவளைமோற்
றாவியகல்லும்பொறுத்தார்கும்பேசர்துணைந்தருளா
ராவியகல்லும்படியுற்றதாலினியாரணங்கே. (உ0)

ஆரம்பரந்தமுலையாய்பங்கேருகத்தண்ணலும்பொற்
பேரம்பரந்தகையிற்புனைவாலுமுட்பேணிவளங்
கூரம்பரந்தமிலாநல்லமேவிகுடந்தைவெற்பிற்
காரம்பரந்தவழுஞ்சென்றுளார்வரக்கண்டிலமே. (உக)

கண்டத்திருப்புவயவிடமாவுட்கலங்குபுமா
றண்டத்திருப்புவதுமழுவா,தண்டமிழ்க்குடந்தை
யண்டத்திருப்புவனைஞாலமேத்தவமர்பதியா,
மண்டத்திருப்புவனச்சடையார்க்கெனுமாமயிலே. (உஉ)

மாமையிலங்கையரிவிழிபால்வண்குடந்தையனை
நாமையிலங்கைநகத்தரிப்பாற்றருநம்பனைவெந்
தீமையிலங்கையறச்செற்றவாளிச்சிவனையெண்ணார்
தாமையிலங்கையையோவென்செய்வார்வெஞ்சமன்வலிக்கே. (உ௩)

வல்லியம்பாயும்வனங்குடமூக்குள்வையாரினுயிர்
கொல்லியம்பாயும்வன்மீனூற்றின்வாய்க்குலவேதந்துழாய்
புல்லியம்பாயும்பராரிறையோவென்புராணர்வெற்பி
லல்லியம்பாயும்பலேநேர்பவரிங்கடைதனன்றே. (உ௪)

அடைக்கலமாலைவளக்குடமூக்கமர்வாய்தலைப்பன்
முடைக்கலமாலையணிவாய்மறையின்முழுமுதலே
யுடைக்கலமாலைவகைப்பொறியாற்றலுன்றாளுக்கன்பு
படைக்கலமாலையன்றேமெங்ஙன்வாழும்பரிசுளதே. (உ௫)

உளத்துக்கலந்தகடுந்துயர்யாவுமொழிவதென்றோ
களத்துக்கலந்தகவில்லாநஞ்சாக்கிக்கனவில்விழுந்
தளத்துக்கலந்தகமலைமுன்னோனைத்தழைவித்தவா
வளத்துக்கலந்தகாக்குடமூக்கமர்மாமுதலே. (உ௬)

மாமனுக்காட்டுமுகங்கொடுத்தாற்குமதுப்பெய்கொன்றைத்
தாமனுக்காட்டுவளப்பதத்தாற்குத்தவாதநல்லோர்
நாமனுக்காட்டுகுடந்தைப்பிராற்குநகுதழனீர்
காமனுக்காட்டுகண்ணாற்கடியோமுட்கலங்கலமே. (உ௭)

கலங்கலந்தாரையறியாரினின்றுகைகூடப்பினல்கு
நலங்கலந்தாரைவளக்குடமூக்கமர்நம்பரைக்கண்
டலங்கலந்தாரையருண்மினென்றேயிவ்வணங்குவிழிக்
குலங்கலந்தாரைகவிழ்ப்பநின்றாளென்னகோலமிதே. (உ௮)

கோலமருப்புமுறித்தார்குடந்தைக்குழகரிந்தக்
காலமருப்புமுலையார்க்கருளக்கடவால
ரேலமருப்புகுதும்போதிழிக்குமிருங்குழன்மிக்
கோலமருப்புவனஞ்செவிதீத்திடுமொண்டொடியே. (உ௯)

தொடிக்கமலங்குவித்தேன்குடமூக்கிற்சுடர்மறுகி
னடிக்கமலங்குபயில்பண்ணைத்தில்லைநயந்தவர்க்கு
முடிக்கமலங்குலவப்புனைந்தார்க்கிம்முதுபிழைக்காத்
துடிக்கமலங்குமனமமர்ப்பாணொருதுட்டனன்னே. (௩0)

என்னையப்பாவலர்தூற்றுநர்தூற்றவெண்ணதெறிந்து
நன்னையப்பாவலர்சூழுங்குடந்தைநகுமுதலே
யுன்னையப்பாவலர்செஞ்சடைமேலென்றுணைத்தடைந்தேன்
பின்னையப்பாவலர்கூட்டத்துச்சேர்த்துப்பிறக்குகவே. (௩௧)

பிறப்பாலனந்தமனூராமவற்றினும்பேணுதலி
லிறப்பாலனந்தமடுப்பதுநேருமென்செய்துமுற்றூர்க்
குறப்பாலனந்தமகிழ்விற்றருமொண்குடந்தை~~யுள்ளச~~
யறப்பாலனந்தமரசேயின்பெய்தவருள்புரியே. (௩௨)

புரிந்தவரங்கம்வெதுப்புதலால்வரல்புண்ணியமோ
பரிந்தவரங்கம்வணக்கிடுமுன்னம்பரிந்துவந்து
விரிந்தவரங்கம்பலையருள்கும்பவிமலவொன்று
தெரிந்தவரங்கம்புகலவுள்ளார்க்கிதுசீர்த்தியன்றே. (௩௩)

அன்றலைவாரிமெய்யனைகமகாடுபோகவழுங்குபுயான்
பொன்றலைவாரியெடுத்தொழித்தார்க்கன்றிப்புன்மைபுகல்
வன்றலைவாரிசனுக்கொழித்தான்கும்பவள்ளல்வெற்பி
லின்றலைவாரிவரியாருறுவர்கொலென்மணமே. (௩௪)

என்னப்பனுகம்பவளமொப்பான்மின்னிருஞ்சடைமேன்
மின்னப்பனுகம்பகர்குடமூக்கமர்வித்தகன்பேர்
பன்னப்பனுகம்படுவிடந்தீர்ந்தோர்பனவன்மகன்
மன்னப்பனுகம்பலைக்கவுய்ந்தானோர்வணிகனுமே. (௩௫)

வண்ணக்குவளைவிழியாளிவளென்றுமாழ்கிமண்ணே
ருண்ணக்குவளைமுதுகாயினீரொன்றுனையளவு
மெண்ணக்குவளையிலக்காக்குவீர்பயனென்குடந்தை
யண்ணக்குவளையணிபெருமானையடுத்துய்ம்மினே. (௩௬)

உய்யாதபாதகனுமெனையாருணர்வார்குடந்தை
மெய்யாதபாதபுகழாய்துறைசைவெளிப்பட்டுநீ
யெய்யாதபாதரசம்போறலையற்றிருவென்றுநோய்
செய்யாதபாதமலர்தலைச்சூட்டல்செய்யாவிடினே. (௩௭)

விடக்கந்தரத்தருமாபாகர்கும்பவிமலர்பைம்புற்
றடக்கந்தரத்தருவாவுரித்தார்பொற்றடவரைவா
யடக்கந்தரத்தருமம்புரிவார்நமதன்பர்வினை
மடக்கந்தரத்தருமஞ்சுமிவ்வாற்றுவரல்கொடிதே. (௩௮)

வரந்தந்தவனைபெறநாவன்மேயவர்வாழ்த்துநனைப்
புரந்தந்தவனையுயர்த்துங்கும்பேசர்பொருப்பிலருள்
சுரந்தந்தவனைசெயவந்தயானைதொலைத்தென்னுயிர்
திரந்தந்தவளைவிடுத்தெவர்க்கார்க்குமித்திண்முரசே. (௩௯)

முரசம்பலவணிதஞ்சிலைக்குன்குடமூக்கமர்வா
னரசம்பலவணிகமஞ்சொற்றுனெனியானரியான்
பாசம்பலவணியுள்ளார்க்கரன்வெற்பிற்பங்கயத்து
விரசம்பலவணிதாய்கொடுங்கூற்றுநின்மெய்ம்முற்றுமே. (௪0)

மெய்யாதரித்தமழுவாசெந்தாமரைவெள்ளையன்னஞ்
செய்யாதரித்தகுடமூக்குளாயென்றுதேர்ந்துரைப்போ
மெய்யாதரித்தவினைகாள்விரைந்தினியெம்மைவிட்டுப்
பொய்யாதரித்தகவில்லார்கட்சென்றுபுகுந்துய்ம்மினே. (௬௧)

புக்கவரிக்குமயனுக்குமுய்தல்பொருந்தநஞ்சுண்
டக்கவரிக்குவயற்குடமூக்கமர்சங்கரர்நீர்
மிக்கவரிக்குவியன்றோர்சீரன்றிவெவ்வியகா
னக்கவரிக்குநிகர்வாரைப்பாடுதனன்றலவே. (௬௨)

அலவானினக்குமொழிகுவதொன்றுண்டதுகுடந்தை
வலவானினக்குமிளிரவருமொருவள்ளல்வெற்பிற்
குலவானினக்குநலனுந்தவனெற்குறித்துறுங்கா
னலவானினக்குவெளிப்படலோவுநலமுணரே. (௬௩)

நலப்பரியாயமறையான்குடந்தைநகர்புரப்பான்
கலப்பரியாயவளியாதொளிக்குங்கடவுள்பெயர்
சொலப்பரியாயமனந்தமுண்டேத்தித்தொழுதுருகி
யுலப்பரியாயமுதேயெனிலாடலொருதலையே. (௬௪)

ஒருதலையாகவமோவிப்பொழிலினுதையத்தொன்றார்
விருதலையாகவவேடர்செறிவர்வெய்யோன்மறையுங்
கருதலையாகவலாமலின்றேருகழியயன்மா
றருதலையாகவமான்கும்பநாதன்றமிழ்வனைக்கே. (௬௫)

வரைதலையாற்றுவருவானிரவென்றுமாழ்குமங்கை
கரைதலையாற்றுவிடாவின்பந்துய்த்தியெங்காவலவெண்
டிரைதலையாற்றுவரைநேர்சடைக்கணிசெய்துமிலான்
புரைதலையாற்றுமகிழ்வான்கும்பேசன்பொருப்பகத்தே. (௬௬)

அகத்திருப்பாரைமுகத்தாயெனினவரைப்பவத்து
நகத்திருப்பாரையரிக்கண்ணிபாகர்நடுங்குபுர
முகத்திருப்பாரைமுன்னூர்ந்தார்கும்பேசரையுற்றுத்தொழாச்
சகத்திருப்பாரையிரந்தும்பெறீர்மிடிதாக்கப்பட்டே. (௬௭)

பட்டாதிசைவாகங்கணமாபணிபாயும்விடை
முட்டாதிசைவரவேயூதியாகுடமூக்கிடமா
தொட்டாதிசைவாவாய்ப்போற்றமேவுநந்தோன்றற்கெனுந்
தட்டாதிசையவரனுமேலின்பாமெனுந்தாழ்குழலே. (௬௮)

குழக்கன்றியங்கமுலைபசுவாய்க்கொடுத்தாயெழுமா
முழக்கன்றியங்கநகைபுடைத்தாய்குடமூக்கமர்வாய்
சழக்கன்றியங்கம்மலிகடலானம்புதைப்பத்தென்ற
லுழக்கன்றியங்கமெலிதலுற்றாளென்னொருமகளே. (௬௯)

ஒருத்தலரிக்குக்கரும்பொன்செம்பொன்னிற்குடுவொளியே
திருத்தலரிக்குக்கடுப்பாய்வரினும்வெந்தீயவிடம்
வருத்தலரிக்குக்கழித்தாய்சுதைக்கும்பவாணமயக்
கிருத்தலரிக்குக்கரணைச்செற்றுப்நினக்கில்லையொப்பே. (௫0)

ஒத்தவராகவருவாரிலாய்மலரொண்டொடிவாய்
முத்தவராகவலனழித்தாய்குடமூக்கமருஞ்
சித்தவராகவனமுலைமாதுசினந்தகரும்
புத்தவராகவந்தீர்வதெஞ்ஞான்றுபுகலுதியே. (௫௧)

புகவெளிதாயமனுமஞ்சதரிருள்போந்ததிங்கல்
குகவெளிதாயபதமூனருந்திக்குறியிடம்வா
னகவெளிதாயதுணர்ந்தேகலாமன்பரப்பொருளான்
மிகவெளிதாயமையென்றீகும்பேச்சுரர்வெற்பகத்தே. (௫௨)

வெற்புக்குமரியவாங்கும்பநாதர்விலங்கலிலென்
பொற்புக்குமரியதோர்மகள்காதற்புணர்ப்பென்றிபோ
ரிற்புக்குமரியவாள்விதிர்ப்போய்நின்னிசைப்பருந்தோள்
வற்புக்குமரியகற்புக்குமீதுவனப்பல்லவே. (௫௩)

வனத்தையவாயமலப்பாண்டம்வீழ்முனமால்விடைவா
கனத்தையவாயவினிப்பாய்குடந்தைக்கண்ணுய்மறைவ
சனத்தையவாயவுனையேயுணருந்தவாதவன்ப
ரினத்தையவாயவியான்சேரச்சேர்ப்பித்தினிதருளே. (௫௪)

அருளாகரனைமலமாயைகன்மமகழ்ந்தவர்க்கே
பொருளாகரனைவிடுத்தயலேயென்புலன்கள்சென்று
மருளாகரனையடரேவக்கும்பவரதனையே
தெருளாகரனைவரும்வாழ்கவாழ்கவிச்சேணிலத்தே. (௫௫)

நிலங்கமலங்கனல்கால்வெளியென்றுநிலாவுயிரொன்
றிலங்கமலங்கனல்குங்குடமூக்கிறையவனை
யலங்கமலங்கனல்காருளென்னினவ்வாணவநோய்
கலங்கமலங்கனல்கூர்தரவாளுங்கருணையென்னே. (௫௬)

கருங்கலசத்தையுவந்தார்குடந்தைக்கண்ணார்சிலம்பி
லருங்கலசத்தையுடையாரின்வேலரடைந்ததொன்று
மருங்கலசத்தையலையிழந்தாயுயர்மாற்றுதற்கோ
பெருங்கலசத்தைவதைப்பதற்கோவன்னைபேசுகவே. (௫௭)

பேசவந்தானலமார்க்கமுள்ளாரினோர்பேதையுள்ளா
ரேசவந்தானலமோநிற்கெனவெய்திரன்விடம்பூ
வாசவந்தானலமார்குடமூக்கர்வயக்கிடினை
யோசவந்தானலவோவவன்றும்புருடோத்தமனே. (௫௮)

மனவருத்தத்தையடைந்தோம்புவியைமடந்தையரைக்
கனவருத்தத்தைவிழைந்தேயொழிவதெக்காலமறை
யினவருத்தத்தைமுனிவருக்கோதுகும்பேசரின்பா
கனவருத்தத்தையொருபாகர்தாண்மலர்க்காணம்வைத்தே. (௫௯

ஆணவமாயமலம்பலநாளுமலைக்கப்பட்டேன்
பூணவமாயவிரங்கலெஞ்ஞான்றுபுவனமெல்லாங்
காணவமாயவனையேச்செய்தாய்கும்பக்கண்ணுதலே
யேணவமாயவிவனுவுறுமெனவெண்ணலற்றே. (௬௦

எண்ணம்பலவன்குடமூக்கிறைவனிசைப்பரிய
வண்ணம்பலவன்மனுப்பீடமங்களமாதுபங்கன்
விண்ணம்பலவன்முடியானன்வெற்பினின்மேனியலாற்
கண்ணம்பலவன்மலர்க்குழலாயுயிர்காற்றுவதே. (௬௧

காற்றருந்தும்பையராப்பூண்கும்பேசர்கடல்கிடக்கு
மேற்றருந்தும்பைதிரப்புவியார்கொன்றையீயுமெனப்
பாற்றருந்தும்பைமதற்கீந்தனர்பயினுணமெனு
மாற்றருந்தும்பையறுத்தெழுமாலென்மனப்பசுவே. (௬௨

மனவிடையாமைமவனையுங்கும்பேசர்வனம்பயிலுஞ்
சினவிடையாமைதவிரொனவாண்டருள்செல்வர்வெற்பி
னனவிடையாமைவரக்கண்டிலஞ்சுற்றிநளிருள்கூர்
கனவிடையாமையணைக்கண்டுங்கண்டிலங்கண்விழித்தே. (௬௩

கண்ணப்பனைவனையாதாண்டவர்கும்பக்கண்ணுதலார்
வண்ணப்பனைவனைமாதொருபாகர்வனச்சடைமேல்
விண்ணப்பனைவனைவெல்லாமெனினும்விழைந்தருளே
பண்ணப்பனைவனைநீழலில்வாழெங்கள்பண்ணவமோ. (௬௪

பண்ணஞ்சுமாறுபடச்செயுமாற்றம்பதுமமுகங்
கண்ணஞ்சுமாறுவராகுங்குழலிதழ்கன்னியிய
லெண்ணஞ்சுமாறுமொருநான்கிரண்டொன்றுமெய்தெழுத்தார்
மண்ணஞ்சுமாறுபுனைந்தார்கும்பேசர்வரையிடமே. (௬௫

வரையாரணியமகிழ்வார்கும்பேசர்மதலையொடு
விரையாரணியமலர்கலர்காணரும்வித்தகரா
திரையாரணியவர்க்கேயினிப்பார்தந்திருவருட்டேன்
றரையாரணியமருவுவரவர்தாங்கொள்வரோ. (௬௬

கொள்ளப்படாதுசிறுகாமமுமதுகொள்ளின்மத
னள்ளப்படாதுவிடுமோகும்பேசரணிமலர்த்தார்
கள்ளப்படாதுகதிரொனுமிந்துகைக்கும்மெனுங்கண்
டுள்ளப்படாதுமலர்க்குழல்சோரத்தனைவிழுமே. (௬௭

தாங்கப்பாவையெழுவிடநோக்கிச்சதுமுகன்மால்
குரங்கப்பாவையருளாலஃதுண்குழகர்புவி
யரங்கப்பாவைமுடித்தார்குடந்தையமலரன்பர்க்
கிரங்கப்பாவைபுகுத்தியுயர்த்தியெமைவைப்பரே. (௬௮)

வையம்படைத்தவரன்றாழ்கும்பேசன்மடங்கருமோ
தையம்படைத்ததிருமால்வடவரைத்தாதுமலர்க்
கையம்படைத்தகைவாகைவில்லான்பொற்கழறொழுவே
நையம்படைத்தகாச்சினக்கூற்றுவனண்ணினுமே. (௬௯)

நண்ணுதவனைநணுகாய்குடந்தைநகர்த்தளிவா
ழண்ணுதவனையகலாய்மெய்ப்பாதியணங்குடையாய்
விண்ணுதவனைவிழிபறித்தாயுனைவிட்டுமற்றொன்
றெண்ணுதவனைநிழற்பாற்பயிலினுமென்மனமே. (௭0)

மனமடங்காதுபொறிவழிபோம்பத்திமார்க்கமியங்
கினமடங்காதுநெறிகாட்டவுங்கண்டிலமென்செய்வோ
மனமடங்காதுகுடைமுரசார்ப்பவரம்பையெலாங்
கனமடங்காதுகிழிக்குங்குடந்தையிற்கண்ணுதலே. (௭௧)

கண்ணுதலத்தனைவண்குடமூக்கிற்கடவுளைநீர்
மண்ணுதலத்தனையீவானையாழின்வளம்புகழ்வீர்
பண்ணுதலத்தனையும்பழுதென்னுஞ்சொற்பாகனைப்ப
லெண்ணுதலத்தனையேத்தார்பிறப்புமற்றெப்பிறப்பே. (௭௨)

பிறவியலைக்கவருந்துகின்றேனிற்பெறுவதற்கா
மறவியலைக்கவலாதுணரோணிலையன்றியெவ
னுறவியலைக்கவரிசெய்குடந்தையொருவண்டு
நறவியலைக்கவருங்கொன்றையாயிந்தஞான்றருளே. (௭௩)

அரும்பாதகன்மத்தன்மாறுவெங்கோபத்தனாகமநூல்
விரும்பாதகன்மத்தன்யான்கும்பமேயவவிற்கழல
திரும்பாதகன்மத்தன்மாளத்தருவிடஞ்சேர்களத்தே
வரும்பாதகன்மத்தன்பித்தனென்பேர்க்கொப்பவந்தருளே. (௭௪)

வந்தித்தலையுந்துதித்தலையும்முளம்வைத்தலையு
நிந்தித்தலையுந்துகில்லேலனுறப்பொடுநீண்மகத்து
முந்தித்தலையுந்துமித்தார்தென்காற்றின்முறுக்கவிழ்பூக்
கந்தித்தலையுந்துநீர்க்குடமூக்கரென்கற்பிப்பரோ. (௭௫)

கற்பனையத்தனையாதிகும்பேசனைக்காய்மலமா
மற்பனையத்தனையீயும்பிரானையடியவர்க்கே
பற்பனையத்தனைமாமயிலானைப்பண்பார்முகத்தோர்
பொற்பனையத்தனையீன்றுனையன்றிப்புகழ்கிலமே. (௭௬)

புகழுமலத்தையெடுத்தொன்னலார்நிறம்போழ்தருமா
லகழுமலத்தையுடையவனாகவடிதொழுநா
தகழுமலத்தையனைத்துங்குடந்தைத்தலத்தவின்றே
திகழுமலத்தையுடையானெனவெற்சிறப்பிப்பையே. (எஎ)

சிறந்தவருக்கன்மதியழனாட்டச்சிவன்றெளிய
வறந்தவருக்கன்றமையச்சொற்றானறமாயதனை
மறந்தவருக்கன்பிலார்சேர்குடந்தைவாதன்முடி
யுறந்தவருக்கன்பரிந்தெனையாண்டனனுண்மைசொற்றே. (எஅ)

உண்மையறுக்கமிகச்செயுமன்னையரோர்கிலராய்
வண்மையறுக்கமுயல்வார்கும்பேசமகிழ்ந்தெனைவந்
தண்மையறுக்கவுகாநள்ளுற்றதங்கனறுந்
திண்மையறுக்கவலாதின்பெருமைநின்சீரருட்கே. (எகூ)

அருகாதவன்பகத்தைத்தெறுமென்றறிந்தாருக்கென்றுந்
திருகாதவன்பகத்தைத்தடிந்தானென்சிறுசொற்குந்தேந்
றருகாதவன்பகத்தைக்கும்வெஞ்சூலன்றண்கும்பத்தைச்சார்ந்
துருகாதவன்பகத்தைப்பெற்றுளாரிடருற்றவரே. (அ0)

உற்றவளையளைவண்கும்பநாதனையாண்புலித்தோல்
சுற்றவளையளையெண்ணரினங்கைத்துணரொடலை
வற்றவளையளைசூழிப்புனத்திலலைத்தனன்றோ
கற்றவளையளையிந்துவொப்பர்நுதற்காரிகையே. (அக)

காரியங்காதுசுடலஞ்சியத்தகுகானினறு
வேரியங்காதுவலைசெயமேற்றவழ்விண்ணைமக
தூரியங்காதுகுடந்தைப்பிரானைத்தொழாரினிள
நாரியங்காதுமென்றோரேதிலன்பினடந்தனளே. (அஉ)

நடலையகற்றிநமைப்புகழ்கல்விநயப்பலென்று
சடலையகற்றியெனையாண்டுகும்பத்தருளினமர்
விடலையகற்றியருன்புனிற்றாவெனமேவவுந்த
முடலையகற்றியுழல்வார்பரமதத்தூமர்களே. (அங)

ஊமரும்பாவலராவார்வறியருமுத்தாநற்
றேமரும்பாவலராவாவினிச்செப்பவேண்டுவதென்
னாமரும்பாவலராவாசவன்றொழுநற்குடந்தைக்
காமரும்பாவலராவாரடிநினைக்கைதொழினே. (அச)

தொழுதனையேற்றமருங்கும்பநாதனைச்சொன்மயல்பூண்
டழுதனையேற்றமருகத்தவனருள்வான்கொலெங்குங்
கெழுதனையேற்றமருவினரேகெழுமக்கொடுப்பான்
பழுதனையேற்றமருவந்தவேள்செயல்பண்ணலென்னே. (அரு)

என்னாயகனைமகராலயநஞ்சிறுத்தகண்ட
பொன்னாயகனையமுன்னங்குழைத்தபுராணமலர்
மின்னாயகனைவிடைசெய்தகும்பவிமலவென்று
பன்னாயகனைப்பாறுத்தின்பவீடுபெடாநெஞ்சே. (௮௬)

படப்பாயலையம்பரம்விரித்தோன்றொழும்பண்ணவர்தோம்
விடப்பாயலைய்ம்பரவேறறுக்கும்பவிமலாவெற்பி
னடப்பாயலையம்பரமபுவிபோர்த்தனநண்ணருங்கான்
கடப்பாயலையம்பரக்கண்ணொடும்வைகிக்காலையிலே. (௮௭)

காலையம்போருகமேமகமுகங்குழல்கண்கடுவா
ழாலையம்போருகமேவாரைநோக்கபயன்மைதிரள்
சோலையம்போருகமேயதென்பாய்துயர்நீர்நொயுயும்
வேலையம்போருகமேகும்பநாதனைமேவிலர்க்கே. (௮௮)

மேவாதவரைவிழையார்கும்பேசவிமலர்வலி
தாவாதவரைவளைத்தாருருக்கண்டுதண்மதிகண்
டோவாதவரைவிடுத்தாரெவரெனுமோர்மதன
னாவாதவரைவளைப்பதென்னோவெனுமாயிழையே. (௮௯)

ஆயத்தவரைமறந்தாளெனையுமறமறந்தாள்
சேயத்தவரையறையில்வெப்புநதெளியாள்புரந்த
மாயத்தவரைவளைத்தகும்பேசர்வரையிலுய
னேயத்தவரைமதித்தேகினுளென்னினிவ்வளையே. (௯0)

வளையவளையவரம்பார்செய்வேழம்வளைத்தனன்வே
ளிளையவளையவமேகொல்லுவானெவன்செய்வளின்பம்
விளையவளையவருளுங்கும்பேசவிரும்புமன்ப
ருளையவளையவயவிடையாயெங்களுத்தமனே. (௯௧)

மன்னவராகமதாணிவலாரிமலரயன்மான்
முன்னவராகமதித்துழலாங்குடமூக்கின்மணி
யன்னவராகமநூல்கொண்டறிவதறிநதடங்கி
நன்னவராகமலரடிக்காட்செய்நசையினமே. (௯௨)

இன்னமபரமபரவாயவாஙநயவிருஙகுடநதை
நன்னம்பரம்பரவாயவணியைநடாத்தினவ
ருன்னம்பரம்பரவாயமன்சேர்முனென்றேதுறின்வை
மன்னம்பரம்பரவாயகண்ணொடும்வந்தாளுவரே. (௯௩)

ஆளாயமைதலையெண்ணுவிருவரடிமுடிதேர்
கோளாயமைதலவென்றுழல்வேங்கும்பகோணமமர்
காளாயமைதலசாயப்பொலிகவின்றேட்கருங்கண்
வாளாயமைதலையாகாதிடங்கொண்டவானவனே. (௯௪)

வானவரம்பனையாண்டாருலாக்கொண்டுமொண்டபத்தி
யானவரம்பனைதாங்குடமூக்கரடிமையுறின்
மோனவரம்பனையோடும்வந்தீபவர்மூன்றுதலைத்
தானவரம்பனையேத்தாரிருத்தலிற்சாதனன்றே. (௯௫)

சாத்திரமோதியளவுணர்ந்தேதமிருதன்மைபடப்
பாத்திரமோதியமென்பதனாலெவன்பன்னிரண்டு
சூத்திரமோதியமைந்துகும்பேசற்றொழுதுருகி
யேத்திரமோதியமண்ணீரிடரிரியீருண்மையே. (௯௬)

உண்மையவாவியநாயேனுறும்வகையுற்றமலத்
திண்மையவாவியவென்றொளுநாளென்றுதேர்வரிய
நுண்மையவாவியசெவ்வியன்மேனிநுவலொருபாற்
பெண்மையவாவியதென்குடமூக்கிற்பெருந்தகையே. (௯௭)

தகைத்தலையாற்றுதிநேர்மலநாளுந்தகச்செயுந்தோ
முகைத்தலையாற்றுதியார்தொழவாழ்குடமூக்கிறைவா
நகைத்தலையாற்றுதிதாராக்கினையென்னலிபிறவி
யகைத்தலையாற்றுதிநின்வசத்தாக்கென்னறிவினையே. (௯௮)

வினையகலாமதியாப்பரமார்க்கவிழைவகற்று
மனையகலாமதியாதாங்குடந்தையனையிடத்தங்
கனையகலாமதியார்முடியாளமுக்கண்ணவென்றேத்
தினையகலாமதியார்க்குஞ்சமார்க்கஞ்செறிப்பதற்கே. (௯௯)

பத்திக்கணங்கணம்மனுமவிடாதுபடாகுடமூக
குத்திக்கணங்கணந்தாமறநோக்கியுங்கும்பிட்டுய்வாங்
கத்திக்கணங்கணவென்னவொர்பானல்குகாரணனெம்
புத்திக்கணங்கணவப்பதித்தான்றன்பொற்பூவடியே. (௧௦௦)

திருக்குடந்தைத்திரிபந்தாதிமுற்றிற்று.

திருக்குடந்தைத்திரிபந்தாதியின்

# சிறப்புப்பாயிரங்கள்.



இந்நூலாசிரியர்மாணாக்கராகிய

சி. தியாகராசசெட்டியாரவர்களியற்றியது.

**கட்டளைக்கலித்துறை.**

*தண்ணிய வெண்மதி சூடுகும் பேசன் றமிழ்க்குடந்தை*
*பண்ணிய புண்ணியம் போலமர் வானடிப் பத்திமையே*
*நண்ணிய தீஞ்சுவை யந்தாதி யொன்று நவின்றணிந்தா*
*னண்ணிய வான்புகழ் மீனாட்சி சுந்தர வாரியனே.*



இந்நூலாசிரியர்மாணாக்கரும்
திருவனந்தபுரம், மகாராசா காலேஜில்
தமிழ்ப்பண்டிதராக இருந்தவருமாகிய
கொட்டையூர்,

சி. சாமிநாததேசிகரவர்களியற்றியது.

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

*சீர்கொண்ட சிதம்பரமால் செய்தவத்தின் மலைவிளக்கிற்*
*சிறக்கத் தோன்றிப்*
*பார்கொண்ட புகழ்முழுது மொருபோர்வை யெனப்போர்த்த*
*பண்பின் மிக்க*
*ஏர்கொண்ட மீனாட்சி சுந்தரவேள் குடந்தைநக*
*ரிறைவர்க் கீந்தான்*
*பேர்கொண்ட கவிஞரெலா மதித்தேத்தந் தாதிப்ர*
*பந்த மாதோ.* (க)

*அப்பவந்தங் கருத்துறையோ டம்புவியோர் மகிழ்ந்திடவச்*
*சமைத்திட் டானல்*
*ஒப்புயர்வி லாப்புலமை யப்புலவ ரோறுணர்த்த*
*வுணர்ந்தவ் வாறே*

---

* இவை பழையபதிப்பைச் சார்ந்தவை; பதிப்பித்தகாலம் சென்ற விஷு௵ ஆடிமீ.

திப்பியநன் னடைதெளிந்தோன் றிரிசிரா மலையுடையோன்
செப்ப மிக்கோன்
இப்புவியிற் புகழ்ப்பெரிய பெரியண்ணப் புலவனெனு
மியைபு ளோனே. (௨)

---

இந்நூலாசிரியர்மாணாக்கரும், கும்பகோணத்திலிருந்தவருமாகிய
திரிசிரபுரம்

## தி. க. பெரியண்ணபிள்ளையியற்றியது.

### கட்டளைக்கலித்துறை.

பூவிற் சிறந்த வளக்குட மூக்கமர் புங்கவனற்
றேவிற் சிறந்த வமுதகும் பேசன் றிருவடிக்கீழ்ப்
பாவிற் சிறந்த வந்தாதிச்சொன் மாலை பரிந்த ணிந்தான்
நாவிற் சிறந்தவன் மீனாட்சி சுந்தர நங்குருவே.

---

இந்நூலாசிரியர்மாணாக்கராகிய
காரைக்கால்

## அ. சவேரிநாதபிள்ளையியற்றியது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கோமேவு பொன்னகனை யின்னகராக் கிடுவளஞ்சால் குடந்தை யீசற்
கேமேவு மந்தாதி நந்தாத வணியெனநன் கிசைத்திட் டானால்
காமேவு கலைச்சலதி நிலையுணர்ந்தான் புகழ்க்கலைமேற் கலையாக் கொண்டான்
றேமேவு சிரகிரிவாழ் மீனாட்சி சுந்தரதே சிகனா மன்னோ. (௧)

அத்தகைய வாரியன்பால் வித்தைபயின் றிடுதீர னளவில்சீரன்
உத்தமவண் புகழுடையான் றிரிசிரா மலையுடையா னுவக்கு ஞான
தத்துவஞ்சால் பெரியண்ணச் சற்குணவா னப்பவந்தத் தமிழ்க்கு மோலி
பத்தியுறச் சூட்டலெனக் கருத்தொடுநின் றொளிரவச்சிற் பதிப்பித் தானால்.()

**சிறப்புப்பாயிரங்கள்முற்றுப்பெற்றன.**

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவிடைமருதூர்த் திரிபந்தாதி.



## காப்பு.



### ஆண்டவிநாயகர்துதி.

சிதவாரணங்குழுறுந்துறைமூழ்கித்திருமறையோ
ரிதவாரணங்குலவச்செய்யிடைமருதீசனென்றோ
மதவாரணங்குழலைபாகற்பாடுதற்காண்டபெரு
மதவாரணங்குவலயங்கொண்டாடும் வரந்தருமே.

### குருவணக்கம்.

பெரும்புங்கவர்புகழ்கோமுத்திவாழ்சுப்பிரமணிய
வரும்புங்கவன்பதம்யான்றொழவெண்கையருட்குறியோன்
றிரும்புங்களையவெடுத்தளித்தானைதயேத்தல்செய்வேன்
கரும்புங்கனியுமெனவன்புசாருங்கதியுமுண்டே.

## நூல்.

திருவருந்தாமரைமேலாருமாயசிறப்பினர்க
ளிருவருந்தாமரைநாட்டேடிக்காண்பிலிடைமருத
வொருவருந்தாமரைபோலுழலாமலுவந்தெனையா
டருவருந்தாமரைவேண்டேனிதரசமையத்தரே. (௧)

சமையத்தவரையிகழாந்தற்போதந்தடிந்துசெம்பொ
னிமையத்தவரையெடுத்தவிடைமருதீச்சுரரை
யுமையத்தவரையமையோர்ந்துதம்மையுமோர்ந்தருள்பெற்
றமையத்தவரையடிமலர்தாழ்ந்துள்ளடங்குறினே. (௨)

அடக்கந்தரத்தனைமேற்பயிலாமன்பருளடையா
மடக்கந்தரத்தனையென்றுழிநல்கவருகொடிய
விடக்கந்தரத்தனைமேவிடைமாமருதூரின்மென்புற்
றடக்கந்தரத்தனையெவ்வாறுநாஞ்சென்றுசார்வதுவே. (௩)

சாராததென்னைதமைவிழைந்தாரைவிண்டாங்குதவிற்
சோராததென்னையிடைமருதீசர்தந்தூமனமு
மோராததென்னையொருவேள்சமருமுடற்றியென்றுந்
தீராததென்னைதரக்கரம்வீசுறுந்திங்கள்வந்தே. (௪)

வந்தித்தவரையயன்மால்வந்திக்கவிண்வைப்பவரைச்
சிந்தித்தவரையிடைமருதீரென்றுந்தீயமதின்
முந்தித்தவரையெடுத்தீரென்றுந்திண்ணார்மொய்செருப்புக்
கந்தித்தவரையுடையீரென்றுஞ்சொலக்கற்றனமே. (ரு)

கற்றனமாலையிடைமருதூரரைக்கம்பவென்று
முற்றனமாலைவயலாருங்கோமுத்தியும்பவென்றுஞ்
சொற்றனமாலைமின்னாரம்பராவென்றுஞ்சொற்றிடநாண்
விற்றனமாலையிராவதவாழ்க்கையும்வேண்டலமே. (சு)

வேண்டாதவரைவிழையாதவரைவிழைந்தெனுள்ளத்
தீண்டாதவரையிடைமருதீசரையென்றுமன்பே
பூண்டாதவரையரையக்கரைப்போந்துகொடி
தீண்டாதவரையுறைவாரையன்றியொர்தெய்வமுண்டே. (எ)

உண்டலங்காரவன்னையாயத்தாரொடுமுற்றுச்செய்த
வண்டலங்காரவுற்றேனென்றுகூறியொர்மாரனொப்பா
னொண்டலங்காரமனையாரிடைமருதீசர்க்கொல்லாக்
கண்டலங்காரகனைப்போற்பறித்திவள்கைத்தந்ததே. (அ)

தந்தவளக்கரிகொங்கையொண்பாம்பல்குல்சங்கங்கள
நந்தவளக்கரியன்றுதருநஞ்சநாட்டமிய
லந்தவளக்கரியான்கோலமாகியறமுயன்று
முந்தவளக்கரியானிடைமாமருதூர்முதலே. (கூ)

முதலைப்பரவைதருநஞ்சமுண்டமுதல்வமணி
மதலைப்பரவையிடைமருதூரவிண்வாழ்க்கைபெற்ற
சிதலைப்பரவையகந்தாழ்வன்மீகசிறியனென்றும்
விதலைப்பரவையழுந்தாதுகாத்தலுன்மெய்யருளே. (க0)

மெய்யருளத்தனைநண்மருதூரனைவீணர்க்கெல்லாம்
பொய்யருளத்தனையீயானைமாரிப்புயல்சமழ்க்கப்
பெய்யருளத்தனையும்முடையானைப்பெரிதெண்ணினேஞ்
செய்யருளத்தனையாறுறுந்தீர்த்தருடேவனென்றே. (கக)

தேவவருக்கம்பணிவானயனரிதீர்தருநாண்
மேவவருக்கவெலும்பணிவான்விழைகங்கைமங்கை
நோவவருக்கஞ்சடையேற்றினனென்னுதல்வதன
மேவவருக்கன்மதியழலான்வைப்பிடைமருதே. (கஉ)

மருதவனத்தனிடைமுதலாங்கடைமன்னியவுள்
கருதவனத்தனரிமுதலோருங்கழிந்தபெரு
விருதவனத்தன்விண்மண்முடிந்தாலும்விளங்கவனெற்
றொருதவனத்தன்மையனெனவோதுமெம்மொண்ணுதலே. (கங)

ஒண்ணுதலானைகரந்தீர்ந்தவர்க்கொளியைப்புரவு
பண்ணுதலானையுகைப்பானைத்தன்னுருப்பற்றுருவென்
றெண்ணுதலானையெனையாண்டவனையிடைமருதூர்க்
கண்ணுதலானைக்கருதார்பிறப்பிற்காங்கணன்றே. (௧௪)

காமனகத்தையுறுநாயுமற்றொளிகால்கனக
வாமனகத்தைவளைத்தபிரானிடைமாமருதப்
புரமனகத்தையலர்பணிபூண்டுழல்புன்மையரப்
பாமனகத்தைமுழக்காரடைந்தபவத்திணுமே. (௧௫)

பவம்பலவாயினுமாகவெனக்குவிண்பற்றுகன
கவம்பலவாயினுநல்லவகற்றுவல்லாமுருடர்க்
குவம்பலவாயினுந்தீதில்லிடைமருதூர்குறுகுந்
தவம்பலவாயினுமென்றொருஞானந்தலைப்படினே. (௧௬)

தலையுமடியுமிசைகிழக்கார்பியறுங்கப்பெற்றே
அலையுமடியுமதளாரிடைமருதார்நமனார்
குலையுமடியுமென்னுதருள்வார்நஞ்சுகொண்டிலரே
னிலையுமடியும்படைப்புமடியுநெடுநிலத்தே. (௧௭)

நிலங்காவலவென்றுமேதக்கவதமிழ்நேயத்தின்மிக்
கலங்காவலவென்றுபோலொளிர்வாய்கவியாய்கொடையின்
மலங்காவலவென்றுபாடாமலேயிடைமாமருதூர்த்
தலங்காவலவென்றுமுள்ளாரயென்றீசனைச்சார்மின்களே. (௧௮)

சாரலங்கற்றைநினைந்துசெலாவெனத்தானங்கிழி
வேரலங்கற்றையொளிக்கயிலாயத்தும்வேட்கைமிக
வாரலங்கற்றையலாள்பாகன்வாழ்மத்தியார்ச்சுனத்தை
யோரலங்கற்றையையோவறிதேபொழுதோட்டுவமே (௧௯)

ஓடுங்கனகமுமொன்றாக்கொண்மன்றுமுபரிகையென்
றூடுங்கனகமுஞ்சேரிடைமாமருதூரண்ணலைப்
பாடுங்கனகமுமுண்டாகுமின்பப்பயனென்பது
நீடுங்கனகமுமொவ்வாவருள்வந்துநேர்நிற்குமே. (௨0)

நிற்குநடக்குமிருக்குநின்றுடனெறியனைத்துங்
கற்குநடக்கும்படியெவனென்றுகருதியுள்ளத்
தற்குநடக்குமிடைமருதூரவத்தாணியிருப்
பிற்குநடக்குமுலாவிற்குங்காமுற்றவென்மயிலே. (௨௧)

என்னுவியன்னமணிமிடற்றானையிமையவர்தோய்
துன்னுவியன்னமலியிடைமாமருதூரனைச்சொ
னன்னுவியன்னமவென்குழல்பாகனைநாடினர்போன்
மன்னுவியன்னமடமாதர்மேவுமிவ்வைகலிலே. (௨௨)

வையம்பரவவிடைமருதூர்வதிவார்வளைவாய்க்
கையம்பரவமெனக்கொடுவேடர்கலப்பருள
னையம்பரவலரிப்பானிற்பானெனினண்ணவனு
தையம்பரவவருதியித்தானந்தராதியனே. (௨௩)

தாங்கந்தருவல்விடமூணிடைமுதல்சார்மருதே
புரங்கந்தருவமறையுடைதோறில்லங்காடுபொலி
யரங்கந்தருவமைவாழ்க்கையர்யாருமடிமையென்னிற்
றிரங்கந்தருவகைசெய்யும்பிதாவிவர்செய்கைநன்றே. (௨௪)

நன்றாவிருக்கினுந்தீதாவிருக்கினுநல்லருளே
யொன்றாவிருக்கினுமோராவிடைமருதூரன்செய்கை
யென்றாவிருக்கினும்பாலேயிகபரமெய்துங்குணக்
குன்றாவிருக்கினுமாலாதியரிதுகொள்வரிதே. (௨௫)

அரியரவிந்தன்மகவான்முதலியரஞ்சலிக்க
வரியரவிந்தம்புனைவாரிடைமருதூரர்வரைக்
குரியரவிந்தமடவாள்பொருட்டிங்ஙனுற்றுச்சொல்லும்
பெரியரவிந்தமுயலூனுந்தேனும்பெறுகைநன்றே. (௨௬)

பெற்றங்குலவவிடைமருதீசர்பிறங்குமறு
குற்றங்குலவக்கரங்குவித்தாளிவ்வொருபிழைக்காச்
சுற்றங்குலவமடமாதரம்பறுணியப்பொன்செ
யிற்றங்குலவவெளிப்பட்டுளாளென்னிளங்கொடியே. (௨௭)

இளங்கொடியானவுமைபாகன்வாழுமிடைமருத
வளங்கொடியானஞ்செயேன்பூசநீர்த்துறைவாஞ்சைவையேன்
களங்கொடியானலைவேளையையோவென்னகன்மந்திரு
வுளங்கொடியானனினைத்ததென்றேனுமொன்றுமோர்கிலனே. (௨௮)

ஓராதவனையிருட்புகுத்தானையுணர்தலில்லார்ச்
சாராதவனையொருபாகனைத்தங்கிடைமருதம்
போதவனைப்பெயருகென்றாலுமென்பேதைநெஞ்சந்
தீராதவனைமயிலொடுவாழுந்திறனெவனே. (௨௯)

திறப்பாவனையமனமோரானுத்துணைசெப்பலென்ன
மறப்பாவனையமனமிலையோவிடைமாமருதுஞ்
சிறப்பாவனையமருதருந்தேவியுந்தேவிடையு
மறப்பாவனையக்கொடுவைகவென்னுளடக்கியதே. (௩௦)

அடத்தருமன்றண்டங்கொண்டமாற்றியலக்கணைந்தும்
விடத்தருமன்றண்டங்கொண்டாடவந்துவிலக்குதுயில்
வடத்தருமன்றண்டமென்னிடைமாமருதூரவினு
நடத்தருமன்றண்டவுஞ்செயய்வேண்டுமிந்நாயினையே. (௩௧)

நாயகத்தன்மைகொளச்சிலர்நாணிலர்ஞாலமுற்று
மேயகத்தன்மைவிழியொருபாகனிடைமருத
னாயகத்தன்மைவிளக்கவிரங்கியரியகண்ட
வாயகத்தன்மையுறநஞ்சங்கொண்டவலிகண்டுமே. (௩௨)

கண்டனங்கோலம்வருமாமுயல்வுங்கண்டங்கறுப்பும்
பெண்டனங்கோலமெய்வாழ்வுந்தலைப்பெருக்கத்தொடையு
முண்டனங்கோலமடமாரிடைமருதூருறையு
மண்டனங்கோலமலையானாமொருளண்டனன்றே. (௩௩)

அண்டத்திருப்புநரலையிலாகியடர்ந்தவிடங்
கண்டத்திருப்புமண்ணாதியபூதங்கலங்கிலைய
மண்டத்திருப்புவதுசூலமேனண்மருதர்மதித்
துண்டத்திருப்புவனமான்றவனைத்துணைபவரே. (௩௪)

துணைத்ததனத்தியொருபாகர்மாண்டுதொலைந்ததன்னோ
பணைத்ததனத்தியெனான்வாள்கொடுத்தவன்பால்விருப்ப
ரணைத்ததனத்திரளென்னாவியார்நண்மருதராவா
வுணைத்ததனத்தினாழலாதருளெற்குதவுவரே. (௩௫)

உதவாதவரையுபகாரரொன்றுங்கல்லாதவரு
சிதவாதவரைவெனுங்குரவோரெனவேதிறந்த
புதவாதவரைப்புகழாநும்வாயிதுபோக்கியோரீஇ
மதவாதவரையிடைமருதூரரைவாழ்த்துமினே. (௩௬)

வாழ்த்தாதவாயுமிடைமருதூரர்மலரடிப்பாற்
றாழ்த்தாதவாயுந்தலையுமுன்னாத்தனிநெஞ்சுந்தள்ளூ
ஊழ்த்தாதவாயுமறுப்பாங்குணமுமுலகத்தில்லாப்
பாழ்த்தாதவாயுமெனக்கேபிரமன்படைத்தனனே. (௩௭)

படைப்பருந்தானையிடைமருதூரர்பதம்பணியார்
கிடைப்பருந்தானைசிதராகக்கொண்டுகெழுமுசெல்வப்
புடைப்பருந்தானையர்வீடுகடோறும்புக்குண்டுபுலான்
முடைப்பருந்தானையுடம்போம்பிநிந்தைமொழிகுவரே. (௩௮)

மொழிவருங்கூற்றநல்லார்தமைப்பேசிமுனிந்துசினங்
கொழிவருங்கூற்றமுமெண்ணார்பாரிற்குறுகியுண்டே
யிழிவருங்கூற்றமுமில்லாரிடைமருதீசனெந்தைக்
கொழிவருங்கூற்றமுதனீள்கருணைபெற்றுய்வதென்றே. (௩௯)

என்றுவருந்துமதுதீர்ந்தின்பெய்தியிருப்பன்மிளிர்
மின்றுவருந்துதிவேணியிடைமருதூரன்விடைக்
குன்றுவருந்துகளிலானடியர்குழாங்குறுகி
நன்றுவருந்துபணியாற்றியுள்ளநலமடைந்தே. (௪0)

நல்லங்கமலேசிராப்பள்ளிகாஞ்சிநணுகுடந்தை
வல்லங்கமலேவயற்றில்லைவாழிடைமாமருதர்
சொல்லங்கமலேபவரெற்றுறைசையிலாண்டிலரே
லொல்லங்கமலேவறக்கோடிகொள்ளினுமுய்தியுண்டே. (௪௧)

உய்தியவாயகுணமேலிடைமருதூர்ப்பரனை
எய்தியவாயவொருநானடைந்தனனென்றிருத்தல்
செய்தியவாயடையாத்தெருச்சூழ்துதெரிசிமலர்
கொய்தியவாயமலன்றருள்புனைந்துகொண்டாடுநெஞ்சே. (௪௨)

ஆட்டிற்குவந்தவிதியெவனோவன்றியானைகொன்றன்
றோட்டிற்குவந்தமுறினுமறுநகைசேதான்றவெறி
நாட்டிற்குவந்தமையும்மன்றிலேறனைகைதருமென்
பாட்டிற்குவந்தவிடைமருதூரன்பளிவளைக்கே. (௪௩)

வளையாதவளைமகட்பேசல்வேட்டுவருகுருக்
குளையாதவளைமறுத்தலொல்லாதின்னுமுத்தமர்க்குக்
களையாதவளையிருட்கரவொத்திடுங்காவலபொன்
னளையாதவளையிடைமருதூரரணிவளைக்கே. (௪௪)

அணியாமருவியிடைமருதீசரமர்ந்தருளு
மணியாமருவிவழங்குங்குற்றாலவளைக்கணன்றித்
தணியாமருவியனரமெங்குண்டுதரிற்கவரோங்
கணியாமருவியவாமருதாயிற்கவருதுமே. (௪௫)

கவராததில்லைகடவுளரேனுமென்கையதிதற்
குவராததில்லையுளாருட்டுறவுளிலேகுறிகொள்
ளவராததில்லையுளேன்கொளல்வேண்டுமென்றொணங்கே
யுவராததில்லையிடைமருதீசனொருவனைக்கே. (௪௬)

ஒருவனையூழியங்காதுசெய்வான்கொளுளங்குறித்தல்
மருவனையூழியலர்தாச்சூழிடைமாமருதா
ரிருவனையூழியாக்கொளுமீசனினையவன
கருவனையூழியளவும்வசைக்கதிர்வேலருக்கே. (௪௭)

வேலவன்றந்தையிடைமருதீசன்விரிந்தமறை
நாலவன்றந்தையுறழிடைபாகன்வெந்நஞ்சங்கண்டு
மாலவன்றந்தையறவுண்டுமாலவன்வாழச்செய்தான்
மூலவன்றந்தையெனக்குபதேசமொழிந்தனனே. (௪௮)

மொழிமனங்காயமைதீர்தரநண்ணுபுமொய்த்தவலஞ்
சுழிமனங்காயமைமெய்பாதியென்றவன்சொற்றநன்னூல்
வழிமனங்காயமைதுஞ்சில்லிடைமருதூர்வசிப்பாங்
கழிமனங்காயமைசாராதுமுத்திகலப்புறுமே. (௪௯)

னின் னூடலை யுணர்த்த, வடிபணி பொழுதி லுணர்த்திடல் வேண்டு மஃதுடன் பலிக்குநீ யறிதி, கடிதலில் கழகஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௨)

தாவருஞ் சிருக்கு மணிவடஞ் சங்கு சக்கரஞ் சூற்படை யிலை வே, லோவருஞ் சிறப்பின் வேறுவே றேந்து முண்மையா லொண் மல ரோன்முன், மூவரு மியற்று மூவகைத் தொழிற்கு மூலநீ யென் பது தெரிந்தேன், காவரு மலர்நல் கிடுந்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௩)

தாயினைக் கொன்றுந் தந்தையைக் கொன்றுந் தவலரு மனைவி யைக் கொன்றுஞ், சேயினைக் கொன்றுங் கடும்பினைக் கொன்றுஞ் சேர்ந்தவர்க் கருள்வனின் கொழுநன், வீயினைப் பொருவும் பத மடைந் தார்க்கே விருப்பினீ யருள்வதோர்ந் தடைந்தேன், காயினைச் சுமந்த பொழிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௪)

குற்றியை யடைந்த பசும்புலை யுழுநர் கொடியவன் ஞாஞ்சிலென் செயுமப், பெற்றியி னின்னை யடைந்தநா யேனைப் பிறையெயிற் றந்த கன் காத்துப், பற்றிய தண்டப் படைசெய லென்னே பரவிய கரு ணைவா ரிதியே, கற்றிணி மதில்கள் சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௧௫)

முடிமிசை யொருமந் தாகினி வாழ முதல்வன்வைத் திடுதலிற் சிறந்த கொடியவ ளென்றி யார்நினைப் பவர்கள் கோதற மெருக்கெனும் பாதி படிதரு மிடத்திற் சற்றிட முடம்பிற் பாதியோ விடமருட் டாயே கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

பெருவள னமைந்த நீருரு வாய பெருந்தகை நீருரு வாய [த்தா வொருகுல மகளை மலர்மிசைத் தேவு முணர்தரக் காட்டிடை மறை னருகுநுண் ணிடைநிற் கஞ்சியே யன்றே லணியுருப் பாதிமற் றிலையோ கருமுகி றவழு மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௭)

அலையடி யடைந்த வகத்தடி நிலையா தலையடி யேற்கிரங் குபுபுன் றலையடி சூட்டிப் பிடியடி யென்பான் றடியடி விலக்கியா ளிமய [தாய் மலையடி யுதித்து வளர்ந்துவெண் ணாவன் மரத்தடி வாழ்பவற் புணர்ந் கலையடி யுணர்ந்தார் புகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

இருவினைச் சிமிழ்ப்புண் டுழல்கொடி யவன்மற் றிவற்கரு ளென் றிரங் குபுநின், னொருமுத லவனுக் குணர்த்துதி வருத்த முன்ன லுன் பரிசினுக் கடாது, வருபசுங் குழவிக் குறுபிணி தீர்க்கு மருந் தனை யன்றியார் நுகர்வார், கருமுகி லுறங்கு மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௯)

எடுப்பது பிச்சை யேந்துவ தோடாங் கியக்குவ தொற்றையே றனைக்க ணுடுப்பது புன்றோன் மற்றிவர் மனையா யுற்றநீ யுயிர்வயிற் றழலா

யடுப்பது தவிர வூட்டுத லாதி யறமெலாம் வளர்ப்பையீ தழகே
கடுப்பது தவிர்ந்த மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உ0)

முற்றவம் புரிந்து முழுமலந் துமித்த மோனமெய்ஞ் ஞானிய ரன்றி
மற்றவர் கவரப் படுங்கொனின் கருணை வானகத் தெழுமதிக் கதிரை
நற்றவம் புரிந்த சகோரமோ கொடிய நவில்கருங் காகமோ கவருங்
கற்றவர் புகழ்ந்து சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உக)

தொண்டவாய் மனமா திகளொருங் குய்க்குந் தூயவ ரன்றிமற் றேருரு, மண்டரா தியரு மணுகரு நின்று ளடைவரோ வளவறு மேன்மை, கொண்டவான் கங்கை யடைவதோ திமமோ குரண்டமோ குணப்பெருங் குன்றே, கண்டவர் பவங்கா ணுத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உஉ)

இடையறு வன்பின் மெய்கொடு துதிப்பா ரின்றுதி முன்னர் மெய்ந் நிழல்போற், புடையறு வினையேன் பொய்கொடு துதிக்கும் புன்றுதி யெங்ஙன மென்னி, னடையறுத் தேமாங் குயிற்குர லெதிரோ ரரிட்டமுங் கதறுதல் பொருவுங், கடையறு மருதஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உங)

மறைபல துதிக்கு நின்பெரும் புகழை வழுத்திய வான்றவர் நாவு
மறையுமோ மற்றைப் புல்லிய தெய்வத் தமைபுக ழறையுமே லினிமை
நிறைதரு கருப்பஞ் சாறவா வியநா நிம்பநெ யவாவுதல் போலுங்
கறையறு வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உச)

மனைதொறு மிரப்புத் தொழில்கொடு புகுவார் மறலித னுலயம் புகுவார்
நினைதரு முடியாக் கருக்குழி பலவு நிரம்புற வோடுபு புகுவா [வாய்
ரினையவர் புகாநின் றிருப்பெருங் கோயி லேழையேன் புகவருள் புரி
கனைகடல் வாவி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உரு)

எண்ணருங் கொடிய பாதகம் பலவு மியற்றுமா பாவியா னெனினு, நண்ணரு நினது திருவரு டோயி னண்ணுத லரிதுகொல் புனிதம், பண்ணருங் கொலைசெய் வாளும்பொன் னுமே பரிசன வேதிதீண் டுதலாற், கண்ணருங் கழனி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உசு)

முழுவதுங் குணமே நாடின்முற் றுது முகுந்தனு தியரிடத்தினுநீ
பழுதற வுணர்த்தா விடினுணர் வாரோ பரமனைப் பண்டவர் புரிதோ
மெழுதரி தவரு மின்னரே லம்ம வென்செயல் யாதெனப் புகல்கேன்
கழுவிய மணியிற் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உஎ)

உலகிடை யழுத பிள்ளைபால் குடிக்கு முண்மையென் றுரைப்பதற் கே
விலகுசீ காழி மழவழ வளித்தா யின்முலைப் பாலமூா விடினு [ற்ப
மலகற விரங்கி யளிப்பவ ரிலையோ வத்தகு மழவியா னருள்வாய்
கலகமில் கழகஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உஅ)

அழுமழ வொன்றற் களித்தனன் றீம்பா லம்பலத் தாடிய பெருமான்
பழுதற நீயு மளித்தனை தீம்பால் பசித்தழு மிளமழ வொன்றற் [ம்பாய்
கெழுதரு மிவற்று ளினக்குறு புகழ்போ லெம்பிராற் குண்டுகொ லிய
கழுமணிச் சிகரி பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௨௯)

இடையறு வன்பு பெருக்கிநீ பூசை யியற்றிட வினிதுள முவந்து
சடையறு முடியோ னுறைதரப் பெற்ற தண்ணிழ லுவலந் தருவோ
புடையறு தமர ருறைதரப் பெற்ற பொலந்தரு வோசிறந் ததுகட்
கடையறுக் கருணை யாய்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

சிறுபிறைக் கொழுந்து வீற்றிருந் தலினற் றேவதே வன்றிரு முடிமேன், மறுவிலச் சுவடு பொலிதரு மைய மருவுறு தஃதுமற்றெ வர்க்கு, முறுமறைக் கரிய நின்னடி யகத்து மொளிருமச் சுவடுகா ரணமென், கறுவொழித் துளைப்பாய் புகழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௩௧)

எதிர்மலர் தொடுத்த மாரவே ளுடல மெரிக்குண வாக்கிய பெ ருமா, னதிர்வரு மெய்யிற் பாதிநீ கவர்ந்தா யமைதர முழுவதுங் கவ ர்ந்தா, ளுதிர்தலி னினது திறமையா ருணர்வா ரோங்கவன் வியப் பியப் படலாற், கதிர்படு மிதுவே யருடிரு வானைக் காவகி லாண்ட நா யகியே. (௩௨)

தவவலி யுடையோர் பலரையு மயக்கிச் சடைமுடி யோ மயங்கி, யிவருமம் மயக்காற் புணர்ந்தொரு மகவு மீன்றமான் மோ கினி தனித்துப், பவர்படர் வனம்புக் குறைதன்மற் றவன்மெய்ப் பாதிநீ கவர்ந்ததோர்ந் தன்றே, கவலரும் வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௩)

நீயெனப் பெருமான் விரும்பியோர் தினத்து நிகழ்தரப் பொலி வதும் புவிக்குத், தாயெனப் படுநீ யவனெனப் பொலியுந் தன்மையும் வேறலே மென்று, சேயெனப் படுபல் லுயிர்க்கெலா முண்மை தெரிப் பது போலுமீ தருளே, காயெனப் பவமுற் றகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௪)

பாவுநங் கருணை வான்றவ முடையார் பாலலாற் புன்மையோர் பாலும்
விரவுமோ வென்னி னெழுபெரு வெள்ளம் விரிதரு வாரிதி மட்டோ
வுரவுதீ ருறவி யளையினும் புகுமே யுவமையில் கோமளக் கொழுந்தே
கரவுதீர் முனிவர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௫)

சடையெனும் வனத்து வாழ்தருங் கங்கை தனித்துறை வாள் கொலென் றெண்ணி, விடைமிசைப் பெருமா னவளுயிர் வாழ்வான் மிலைந்தனன் கொன்றையாங் கன்னப், பெடையன நடையா யனைய வன் றனைநீ பித்தனென் றெண்ணுதல் பிழையே, கடையுறு வளமை க் காவகி லாண்டநா யகியே. (௩௬)

பாவுறு முலகத் துயிரெலா மீன்று பருவா லவையுறு தோங்க
வுாவுறு கருணை யால்வளர்த் திடுநீ யொருமலை மகளென வுதித்து
விரவுறு புறவு கிளிமயில் பூவை விரும்புபு வளர்த்தவா றென்னே
காவுறு மவர்கா ணுத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௭)

பரிதிவந் துதய மெழுமுறுக் குடையும் பங்கய மலர்மிசை யுறைவா
ரரிமறு மார்பு மயன்றிரு நாவு மமர்பவ ரென்பர்நின் முகமாம் [ல்கேன்
விரிமலர்க் கமலத் துறைவரென் றுணாார் மேதினி மடமையென் சொ
கரிசறு வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௮)

விரும்புநின் செங்கை தாங்கலா லிரண்டாம் வேற்றுமை விரித்துரை செய்யா, தரும்புதா மரைதாங் குவாரென லான்மூன் றுவதும் படுசொலும் விரிக்கும், பெரும்புவி மலர்பூ மாதெனும் பெயர்கள் பெறும்வினைத் தொகைகுணத் தொகைப்பேர், கரும்புபைங் கமுகிற் பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௯)

நந்திய வறியா மையினினைத் துதிப்பே னுயினே னுயினு மதனுன், முந்திய வினைமுற் றொழிதரா துறையு முறைமையென் மறவியினேனு, முந்திய வழலைத் தொடிற்சுடா துறுங்கொ லொழிவருங் கருணைவா ரிதியே, கந்திதென் பொருவப் பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪0)

அங்கையேந் துறுபைங் கிள்ளையின் மொழியோ வறுமுகக் குழவிவாய் மொழியோ, சங்கையே குழையாக் கொண்டவ னூடறணித்திடப் புகலுமின் மொழியோ, மங்கைநின் செவிக்கு நாயினேன் புன்சொன் மற்றுநீ யிரங்கலெவ் வாறோ, கங்கைதாழ் பொன்னி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௧)

ஒப்பினின் புகழே கேட்கவென் செவிகண் ணோங்குநின் னுருவமே காணத், தப்பினின் றனையே பாடட வாய்கை தவாதுநின் னடிப்பணி யாற்ற, விப்படி யுறுமேற் செங்கதி ருதய மெத்திசை யெழினுமற் றென்னே, கப்பிணர்த் தருக்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௨)

ஓதுறு முறைமை யொன்றின்முன் மூன்று ளொருசிறி யேற்குநின் பதிக்கும், போதுறு குழனீ நடுப்பொலி தலினூற் புரிந்துநின் பதியொடு மெனைப்பின், றீதுறு மிரண்டி னீக்கியொன் றுக்குந் திறனினைக் கன்றியார்க் குளது, காதுறு கண்ணூர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௩)

கோவண மறைபாக் கொண்டனன் பெருமான் கொண்டனை நீயுமே கலையாத், தூவண வவன்மா தேவன்மா தேவி துதிக்குநீ யெனிற்றிரு நெடுமா, லேவண வவற்கு நீவியாப் பியமென் றிசைப்பதெங் ஙனமருட் டாயே, காவண மறுகு மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௪)

பொறியரி தொடரு மருமலர்த் தாளோன் பொலியனந் தொடர்
சடா முடியோ, னறியுநின் கொழுநன் பொறியரி தொடரு மலர்க்
குழ லிணைநடை யன்னஞ், செறிதரத் தொடர்மென் பதத்தினை யெனி
னீ தேவொடு மாறுளாய் கொல்லோ, கறிபயி லளிசூழ் பொழிற்றிரு
வானைக் காவகி லாண்டநா யகியே. (சரு)

திருந்துறு தந்தை யாகிய வரையைத் திரிபுர மெரித்தநாட்
குழைத்த, பெருந்திற லுணர்ந்தம் மலையுள மகிழப் பெருந்தகை நிற
முலைக் கோட்டாற், பொருந்துறக் குழைத்தாய் போலுநின் றிறமை
புகலுதற் கடங்குமோ தாயே, கருந்துழாய் மார்பன் புகழ்திரு வா
னைக் காவகி லாண்டநா யகியே. (சசு)

மறைமுதல் பொருவ வேந்தினை நீயு மலர்புரைதருகையில் வன்னி
யுறைதரு மனையா னிறமுநின் னிறமு மொத்தன வாயினு மவன [ன்
தறைதரு மெழுநா வதுநின தொருநா வதுசெவி யவாமொழி யதுதா
கறையற வெதுநீ புகறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சஎ)

குடகட லொடுங்கு மிரவிதண் மதியங் குணகட லுதிக்குமென்
றுரைக்கும், படவர வேந்து முலகநின் னொருகைப் பங்கயத் தொடு
ங்குநின் கொழுநன், றடமலர் வதனத் துதிக்குமென் றுரைாத் தன்
மையென் மென்மைசான் மயிலே, கடவுளர் பலருஞ் சூழ்திரு வானைக்
காவகி லாண்டநா யகியே. (சஅ)

பெருவழக் கெடுத்துப் பேரவை யேறிப் பேசுவ குறையறப்
பேசி, யொருதிரு நாவ லூரனை யாண்டா னோங்குவெண் ணெவலூ
ரண்ண, லருளொடு நீயு மத்தகு செயலோன் றுற்றினன் றென்றியா
னினைந்தேன், கருளற வொளியின் மலிதிரு வானைக் காவகி லாண்
டநா யகியே. (சகூ)

முதுபுக ழுடைநின் பதியிரு பாத முழுமலர்க் கருச்சனை யாற்
றின், மதுமல ரொன்று குறையினு மதற்கு மாறுகண் ணிடந்திடல்
வேண்டு, மதுசெய மாயோ னல்லன்யா னின்பொன் னடியருச் சனை
செய்வான் புகுந்தேன், கதுமென வருள்செய் தருடிரு வானைக்
காவகி லாண்டநா யகியே. (ருo)

தருமமென் றுரைக்கு மளியமர் நின்கைத் தாமரை மலரின தலர்ச்சி
பெருமதி மலர்ச்சி மாற்றுமென் றுரையார் பெருமதி யலர்ச்சியே செ
மருமலி கமலமலரினதலர்ச்சிமாற்றுமென் றுரைப்பரீதென்னே[ழித்த
கருணையங் கடலே யருட்டிரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

நீவிழைந் தத்தா னின்பதி முகக்க ணிகழ்கைசேர்த் தெடுத்திடுங் கால
மோவிய மனையாய் கணமுமின் றுனக்கஃ தும்பரா தியபல வுயிர்க்கு
மேவிய கோடி யுகம்பல வாமவ் விநோதநீ யாற்றுத றகாது
காவியங் கண்ணூர் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருஉ)

தென்னவன் புரிந்த பெருந்தவப் பேற்றாற் செழுந்தமி லகத் தொரு மகவே, யென்னநீ யுதித்த வாஞ்சையுட் குறித்தே யிறை நுதற் கண்புதை யாது, மன்னமற் றிருகண் புதைத்தனை நின்னை மதிக்குல மென்பதோர்ந் திலையோ, கன்னவி ரோளார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருங)

அரும்புமோர் நின்கைக் கணிபல வணிந்துள் ளவாவொடு தாங் குமா தர்களை, விரும்புபு சுமக்கு மெல்லிதழ்க் கமல மெய்த்தவ முடையன வெனவே, யிரும்புவி புகன்று லனையமா தர்கட மிருந்த வப் பெருமையென் புகல்கேன், கரும்புநேர் மொழியார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருச)

சிலம்பகத் துதித்த நின்னடி தற்சூழ் சிலம்பகத் துதித்தமா தனைவல், வலம்பகப் பொலியு முலையினு யங்கை மலரகத் துதித்தமா தென்ன, வுலம்பகப் பொருதோ ளரன்முடிக் கொளாமை யுணர்ந் தன்றோ வூடலிற் றுக்குங், கலம்பக முலாமுற் புனைதிரு வானைக் கா வகி லாண்டநா யகியே. (ருரு)

பெரியவர்க் கிடுக்கண் புரிவதை யுணர்ந்து பெரும்புகழ்த் தந் தைதன் மரபென், றரியவர் சிந்தை யாலயம் புகுவா யயர்ந்துமெண் ணுமல்வண் குறிஞ்சிக், குரியவன் காத்துப் புகூஉக்குரு குப்பே ரொருவனை கொன்றனை யழகே, கரியவன் பிரமன் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருசு)

நினையுணர் மகடாய் மரபென வொருமா னெடுங்கையே பந் தினன் பெம்மா னம்மான், றனையுணர் மகன்றாய் மரபெனக் கிள்ளை தன்னை நின் கையிலேந் தினையால், வினையுண ரார்சொன் னீயுநின் பதியும் விரும்புறு மாடலென் னுரைக்கேன், கனையுண ரளிசூழ் பொழிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருஎ)

பொலிதரப் பசந்து நீர்மழை யெங்கும் பொழியுமே புயலது போல, மலிதரப் பசந்து நீயும்வண் கருணை மழைபொழி குவைகொடு வினையான், மெலிதர வூற்ற வெனையொழித் திடுவான் விதியெவன் விமலமெய்ச் சுடரே, கலிதரு துயர்சா ரத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருஅ)

நறையிலா மலரோ நயமிலா மொழியோ நயனமில் லாதவாண் முகமோ, பொறையிலாத் தவமோ, மகவிலா மனையோ, புனலிலா வோடையோ நீதி, முறையிலா வரசோ மதியிலா விரவோ மூட னேன் பத்தியில் பாடல், கறையிலா வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருகூ)

குணமிலேன் மொழிபா நயமில தெனினுங் குறித்ததை யேற் றருள் செய்ய, விணர்மலி குழானிற் கேதகுஞ் சிலம்பி யியற்றுநூற்

பந்தரு முவந்து, புணாருள் புரிந்தா ளின்பதி யந்தப் புராணநீ யோ ர்ந்தனை யன்றே, கணமலி முனிவர் சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (கூ0)

வரிவிழிக் குடைந்த மானையு நுதற்கு மா னுருப் பிறையையு மல் குற், கிரிதரும் படவெவ் வரவையு மருங்குற் கிணைதராத் துடியையுஞ் சுமந்தான், றுரிசறு வனப்பார் நின்னுறுப் பினுக்குத் தோற்றறும் விசேடமென் றுணர்ந்தே, கரியகண் டத்தோ னருட்டிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூக)

பொறையரு ளடக்க மன்புப சாரம் பொலியுமா சாரநல் வாய் மை, யுறைதரு மின்ன குறையுளே னெனினு மடிமையே நினக்கியா னுறுப்புக், குறையுடை யாரு மக்களென் றெடுத்துக் கூறுவ ருலகர்நீ யுணர்வாய், கறையற விளங்கு மருட்டிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூ௨)

உரைசெய்வெண் ணாவ னிழலுறை பெருமா னேங்கருண் முறை செலுத் தியகோன், வினைசெய்பூங் கொன்றை யவனென நீயும் விருப் பொடு செலுத்திடல் வேண்டும், புரைசெயென் பாலே மற்றது செ லுத்திற் பொருப்பின்மே லிடுசுடர் போலாங், கரைசெயா வளங்கண் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூங)

புண்ணிய வெள்ளை நாவலோ னாரம் பூண்டவ னெனும்பெயர் புனைந்தான், றண்ணிய குணத்து நீயுமென் பாட றமூவுப பூணுவை யாகி, னண்ணிய பாடல் பூண்டவ ளெனுமோ ரரும்பெயர் நினக்கு முண் டாமே, கண்ணிய வரங்க டருதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூச)

தழைசெய்வெண் ணாவ னறுநிழ லுறைவான் றனிமுத லவ னொருபாகத், துழைசெயொள் விழியா யுறைகுவை நீமற் றுன்னடி நிழலிலெஞ் ஞான்றும், விழைசெயா னுறைபப் புரிந்திடி னதனுன் மிக்கபுண் ணியநினக் குண்டே, கழைசெய்பூங் கழனி பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூரு)

பிரம்படி பட்டுங் கல்லடி யேற்றும் பிறைபொரு வில்லடி கொண்டு நிரம்புற வருள்வா னேங்குவெண் ணாவ னிழலுறை பவனடி யார்பா லுரம்பயி லவன்போ னீயவ்வா றேற்றின் புதவுர ளல்லண்மெல் லியனீ காம்பறு கழனி மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூகூ)

பற்பல ரறியப் பித்தனென் றெள்ளிப் பனவபோ வென்றுளார் தமையும், பொற்பலர் பெருமான் விடாமென வாண்டு புரந்தன னங் ஙன மின்றி, வெற்பலர் மருந்தே துதித்துவா வென்னும் வினையி னேன் றனைவிட விதியென், கற்பலர் நந்த வனத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஎ)

தேவியோ டினிது வந்தருள் புரிந்தான் சிவனடி யார்க்கென்ப தன்றி, யாவிநேர் கொழுந னோடுவந் தாண்டா ளம்மையென் பாரிலை யன்னே, மேவியச் சீர்த்தி நினக்குறு விதமென் விளம்பிட வேண்டு நா யேற்குக், காவியார் தடஞ்சூழ் தருதிரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௬௮)

அடியவர் குறிப்போர்ந் தாண்பனை காய்க்க வாற்றெதிர் செல்ல வே டென்பின், பொடிமட வரலா கக்கராம் விழுங்கும் பொருடாச் செய்தனன் பரமன், கொடியனேன் குறிப்போர்ந் துன்னடிக் கன்பு கொளப்புரி வதுமுனக் கரிதோ, கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௬௯)

அயனரி குலிச னமரருண் ணடுங்க வடர்ந்தெழுங் கொடுவிடம் வாங்கி, நயனமூன் றுடையா னுண்டனன் முன்ன நங்கைநின் பவ ளவா யமிர்தப், பயனுணர்ந் தன்றோ வலனெனி னனைய பரமனெவ் வாறுணத் துணிவான், கயன்மலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் கா வகி லாண்டநா யகியே. (௭௦)

ஒளிமிகு சம்பு லிங்கநா யகர்போ லுடையையா னுதல்விழி நீயு
மளிமிகு மனையார் மாரனை யெரித்தார் யானைநீ யெரித்தனை யம்மா
விளிமிகு நாயேன் வினையினை யெரித்தா லிரும்புகழெவரினு நினக்காங்
களிமிகு மமரர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௭௧)

நெடுவலி கொடுமா மேருவிற் பிடித்தாய் நீயஃ துணர்குவன் யானு
மடுதிறற் சூலி பிடித்தன னென்பா ரவனியுட் சிலர்கருத் தென்னோ
விடுகிடை நீயு மவனும்வே றல்லீ ரென்பதை யுணர்ந்தனர் கொல்லோ
கடுவிழி மடவார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௭௨)

அம்பலத் தாட வெடுத்ததா டணையென் றறைவனோர் கான்மலை யரையன், வம்பலர் முன்றிற் றிருமணத் தம்மி வைத்ததா டணையென்ப னோர்காற், செம்பொரு டுணியா னென்றெனை யிகழே றோர்ந்தொரு வழிநின்றே னன்னாய், கம்பலர்த் தடஞ்சூழ் தருதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௭௩)

எதிரறு பொதுவிற் குறட்பிணர் வெரிந்மே லியைத்திட றகா தென வுணர்ந்து, முதிருணர் வுடைய பரன்மறைச் சிலம்பார் மொய் வலத் தாணிறீஇ யிடத்தா, ளதிர்வற வெடுத்தான் வழுதியவ் வரு மை யறிதரான் பிழைத்தனன் பொறுத்தாய், கதிரருட் கழகே யது திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௭௪)

பரவுவெண் ணாவ னீழலோ னிடத்தாள் பற்றிய வென்முனங் குறுக
வுரவுசெய் தண்ட தரனுள நடுங்கு முதைத்ததத் தாளென வுன்னி
விரவுமப் பதநின் பதமன்றோ வதனை மென்பதமென்பதென் விளம்பாய்
கரவுறுப் புலவர் புகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௭௫)

ஒருகருங் கேழ லுருவெடுத் திணையி லுன்பதி யடிமலர் காண்பான், பெருநில மகழ்ந்த மாயவ னினது பிறங்குபே ராலயஞ் சூழ்ந்த, பொருவினீ றிட்டான் மதிலடி கண்டாற் போதுமே புண்ணியக் கொழுந்தே, கருள்கடிந் தொளிரின் மலிதிரு வானைக் காவகி லாண் டநா யகியே. (எசு)

உயன்மறந் தடருந் திரிபுரஞ் சிதைப்பா னொருவனை யெளிதினிற் குழைத்த, பயன்மதி முடித்த பாடல்சால் பெருமான் பாழியந் தடநெடுந் தோள்கள், வியன்முலைக் கோட்டாற் குழைத்தரு ணினக்கு மெல்லிய லெனும்பெயர் தகுமோ, கயன்மலர்த் தடங்கண் மலி திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எஎ)

மையவாண் மகளெள் ளெச்சிலுண் டாற்கு மகிழ்ந்தருள் செய்துநின் கொழுநன், மெய்யவாஞ் சீர்த்தி படைத்தன னெனக்கு விரும்பிநீ யருளுவை யாயி, னையபெண் மகளெள் ளெச்சிலுண் டானுக் கருளினு ளெனும்புகழ் நினக்காங், கையர்வந் தணுகற் கருந்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எஅ)

புனல்பயி றவளை முழங்கநின் கொழுநன் புகழ்ப்பெய ருனைத்ததா வுணர்ந்து, மினல்பயில் கனகம் வீசினு னொருவன் மெய்ம்மையே நின்பெய ருனைக்கு, முனல்பயில் குழாம்பு கேன்றுேழன் புகழே னுவந்திடே னெங்ஙன முய்வேன், கனல்பயின் மணிமா மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எசு)

மாவியல் பெருமான் மான்பிறை சுமந்தேன் வாமபா கத்தினி தமரு
நீவிளை யாடற் கென்பனம் பறக நிகழுஂ திடைமரு தூரின்
மேவியோ ராசில் விழுங்கிய தாதி வெறுப்புன மறைப்பதற் கென்று
காவியங் கண்ணு யுணர்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

அண்டகோ டிகளென் றுனைத்திடுஞ் சிற்றி லமைத்தமைத் தாடுடு வாய்நீ, துண்டவாண் மதியஞ் சூடிய சடிலச் சுந்தர னழித்தழித் தாடும், பிண்டறா லென்றும் பேதைநீ யனையான் பித்தனென் றுனைப்பது மெய்யே, கண்டவா மொழியார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அக)

மகளென நினைந்து தாயென விளித்த மலையிறை மனையறி யாமை
புகாறு பிரமன் முதற்பல வுயிர்க்கும் பொருந்துதா யாமுனைக் கணேச
னகநகு முருகக் கடவுடா யென்று நவிலறி யாமையை யேய்க்குங்
ககனமே லோங்கு மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

இலங்கற முப்பத் திரண்டென வகுத்தாங் கிகலற வவைவெலாம் வளர்த்து, மலங்குயிர் பலவும் புரக்குநீ கொடியேன் மாட்டருள் புரியினஂ தவற்றுட், டுலங்குமொன் றுெடுசே ராதுகொ றனிப்பிற்

சொற்றிமுப் பத்துமூன் றென்றே, கலங்கலில் வளமை மலிதிரு வா
னைக் காவகி லாண்டநா யகியே. (அ௩)

இனைத்தடைந் தேனை யாடியென் றனையா னிரந்திரந் தேத்தநீ யிரங்கி
வனைத்தபே ரருளா லானுவ தனிலு மன்றநீ யேயருள் புரிந்தான்
முனைத்தசீர் பரவ விடமிலை கேட்டோ முகின்மழை வழங்கிடுந் தாயே
கனைத்தடஞ் சிகரி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அச)

பிழைபல வுடையே னாயினு மவற்றைப் பேதைநீ யென்பதற் கிணங்கக், குழைமனத் தகற்றி யாளவே வேண்டுங் கூர்ந்தினி தாண் டிடா யென்னின், மழைமலர்க் கூந்தற் கங்கையைப் புகழ்வேன் வை வரே நொந்தவர் தாயே, கழைமலி கழனி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அரு)

சடைமிசை மாதை நோக்கியா ரெனினீ சங்கர னீரென்பான் முகமு, னிடைதெரி தரலென் னென்னினோக் குறுநின் னெழின்முக முதனிழ லென்ப, னுடையநா யகிநீ மறுத்திடிற் பிறரா லுணரென்பா னுணரவல் லவர்யார், கடையுற லொழிந்த வளத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அசு)

எனக்கருள் செயினின் கொழுநனைப் புகழ்வே னிமயநின் றந் தையைப் புகழ்வேன், மனக்கினி தாநின் மைந்தரைப் புகழ்வேன் மலரினின் றோழியர்ப் புகழ்வே, னினக்கினி யவரா மடியரைப் புகழ் வே னின்னையும் புகழுவேன் றாயே, கனக்கடி மதில்சூழ் தருதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அஎ)

பூவண நகரிற் பொன்னனை யாளிற் புகுந்தனன் முன்புகா மாரி, தூவண வன்பி னைந்திணை யெனுநூல் சொற்றதை விளக்கின னென்னின், மாவணத் தளிர்நேர் மேனியா யுலக மாதுகொ னீவிடை யிதற்கென், காவண நிறைவீ தித்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அஅ)

பேயொடு நடிக்கும் பித்தனே யென்றோ பெருங்கதி யிலியிவ னென்றோ
தாயொடு தந்தை யில்லவ னென்றோ தம்பிரா னொருதிரு மேனி
நீயொரு பாதி நின்முனோர் பாதி நிலவுறக் கொண்டது நன்றே
காயொரு வாத்தென் பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே.

மோகினி யுருக்கொண் டொருதரம் புணர்நின் முன்னவன் றன க்குமோர் பாதி, யேகலி லெழினின் றனக்குமோர் பாதி யெம்பிரான் மேனியி லென்று, லாகிய நீயே யவனெனத் தெரிந்தே னல்லையென் றுற்பொறுப் பாயோ, காகனஞ் சுமக்கும் வளத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூO)

பல்லுல கீன்ற நின்றிரு வுதரப் பாலுள தென்னுநின் னிடை நே, ரொல்லுமா றிலதா யினுமொரு பக்க மொத்தலிற் சிருட்டியை

யாற்றும், வெல்லுநா யகன்கைத் துடியெனி னின்றன் மெல்வயிற் றிற்கது புகழோ, கல்லுமா மலத்தர் சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (கூக)

வண்படு கருப்புச் சிலைகொடு நெடிய வலிபடு மேருவிற் கொ ண்ட, தண்படு மதியஞ் சூடியைப் பொருது சயம்படு நகைப்புரிந் துவ ப்பா, யொண்படு வலர்க்குப் பசும்புல்வன் படையென் றுரைப்பதை விளக்கினை தாயே, கண்படு மனச்செய் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஉ)

தேவிநின் னிடைதோ ளொத்திடு குணத்தாற் சிதம்பர தலத் தும்வேய் வனத்து, மேவிய நகைமுத் தணிமுலை யொக்கும் விதத்தி னுற் றிருமுல்லை வாயில், பாவிய கயிலை யிடத்தும்வீற் றிருப்பன் பரன் றலை மதியனே யன்றே, காவியன் சகன முறுந்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஙு)

சுவைபடு கனிசெய் பனசநெட் டரம்பை சூதமா மலகம்வெண் ணுவ, விவைமுதற் பலவான் றருநிழ லுறைவா னினியநின் மொழிச் சுவை யவாவி, நவைபடு கொடிய வச்சிர வனமு நயந்தனன் பித்தனு தலினுற், கவைபடு சூலி யெழிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூச)

இறையவன் வாமத் துறையுநீ தொழில்செ யிமையவர் தருப்ப ணங் காட்ட, மறைவின்மற் றதனை நோக்கியவ் விறைவன் வலப்புறத் தொருமடக் கொடிநன், குறைவதென் னெனமற் றவனொடு பிணங் கே லுற்றுநோக் கிடிற்பிழை யில்லான், கறைமலி களத்தன் வளத் திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூரு)

கொடியது பிறத்த லதனினு மம்ம கொடியதே யிறத்தலிவ் விர ண்டுந், தடிதரா நினைந்தேன் றந்தைதா யில்லான் றறுகண்வெங் கூற்று தைத் தாற்குன், னடியனென் றுணர்த்தி யருள்விலக் குவையே லகி லமீ தொருகதி யுண்டோ, கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூகூ)

தடியுண லென்றும் வனசரர் பெருமான் றருதடி மிசைந்தன னொழிக மிடியிடை யவர்மா லென்றுநிற் களித்தான் மேனியிற் பாதியா தலினுற் படிவிதி விலக்கி லான்பர னென்னைப் பற்றியா டற்கவை குறியான் கடிதரா துணர்த்து நீதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஎ)

வாக்கருங் கொண்மூ மழைபொழி யாதேன் மண்பயி ருயும் வகை யுண்டோ, திரக்கடுங் கவலை சிதைதரப் பல்காற் செய்யும்விண் ணப்பநீ யுணர்ந்து, மிரக்கமில் லவள்போ லிருத்தியேற் கருணை யெங் கினி யிருப்பது தாயே, காக்கரும் வளங்கண் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஅ)

மாயவ னுயோர் பாதியி லவளாய் மற்றொர்பா தியுங்கவர்ந் தனையா
னுயகன் மேனி யெனினவன் வடிவ நாடொறு மறைந்ததா யிருக்கச்
சேயமண் சத்தி மயமெனு தந்தோ சிவமய மென்பதென் னுளையாய்
காயமீ தெழுந்த மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூகூ)

பனிபடு நின்றாட் பங்கயம் பொங்கு பனிவரை யகநக நிகழுந்,
துனிபடு பொழுது பரன்முடி மதியந் துண்ணெனத் தாக்குநீர் வாவி,
நனிபடு முட்டாட் பங்கயம் பெறுமோ நவின்றன வினையிலென்
றுணர்ந்தேன், கனிபடு பொழில்விண் கமழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கoo)

திருவானைக்கா அகிலாண்டநாயகிமாலை முற்றிற்று.

---

உ

# *சிறப்புப்பாயிரம்.

தஞ்சைச் - சதாவதானம்

ம-ள-ள-ஸ்ரீ

சுப்பிரமணியஐயரவர்களியற்றியது.

ஞான கேத்திரத் தமரகி லாண்டநா யகிதன்
னீன மில்பதத் தியற்றமிழ் மாலையொன் றியற்றி
மான மார்ந்தமீ னாட்சிசுந் தரனன்னு வலவ
னூன மோவுறப் புனைந்தன னுலகுவப் புறவே. (க)

அன்ன மாலையைச் சோமசுந் தரப்பெய ரமைந்த
நன்னர் மேவிய சுகுணனச் சியற்றிநல் கென்று
பன்ன நன்றென்று தியாகரா சப்பெயர் படைத்த
மன்னு நாவலன் பதிப்பித்து வழங்கினன் மகிழ்ந்தே. (உ)

சிறப்புப்பாயிரம்முற்றிற்று.

---

* இது பழையபதிப்பைச்சார்ந்தது.

சிவமயம்.

திருவாவடுதுறையாதீனத்து

# ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்மாலை.



## காப்பு.

பொன்மலர் தடித்துந் தனிதமு முறுகார்ப் புயலிவர் தந்தையே பொருவ, வென்மல ரெயிறு முழக்கமும் வாய்ந்த வெறுழ்க்கரு மூடிக முகைத்துப், பன்மலர் முடிமுன் னடிவளை மலர்ந்து பயிலுமோ ரத்தியைத் துதிப்பாந், தென்மலர் துறைசைச் சுப்பிர மணிய தேசிகன் மாலைசீர் பெறவே.

## நூல்.

பூமலி நினதா ளுள்ளுபு துதித்துப் போற்றிடும் வாஞ்சையே மதனுக் காமலி மூன்று மொருவழிப் படுவா ளாருள் புரியுட லாதி தாமலி தரக்கே ளாதளித் தாய்க்குத் தருவதோ வருளெனக் கேட்ட றாமலி யறவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிரமணியதே சிகனே. (௧)

எண்ணுத றுதித்த லியற்றவல் லாநீ யெற்றைக்கு நம்மடித் தொழும்பெ, பண்ணுக வென்றாய் மெய்ப்பணி யென்று பற்றின னிது கொளற் பொருட்டோ, நண்ணுகூற் றுதைத்துங் கல்லெறி யேற்று நயந்துமுன் பழகிய தைய, சுண்ணவொண் மாடஞ் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணிய தேசிகனே. (௨)

எம்மையாள் பொருட்டுக் கயிலையு மழுமா னிலகிய திருக்கைசார் வடிவுஞ், செம்மைசால் பெயரு நீத்துவே றடைந்தாய் திகழ்தரு முன்னுள மூன்று, தம்மைநோக் குறினின் றுள்ளமூன் றனுக்குந் தாழ்ந்தன வென்றுளந் தெளிந்தேன், சும்மைநீர்த் தடங்கள் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩)

கேவலஞ் சிவாத் துவிதம்விசிட் டத்துக் கெழுமுமத் துவிதமோடும் பாது, நாவலந் தருசுத் தங்கொளென் றருள நாடுகே வலத்தினின் றெடுத்து, மாவலம் படருஞ் சகலத்து விடுத்தாய் வருவியாய் சுத்தமீ தென்னே, தூவல கலைஞர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௪)

இன்றுநீ யடியார் தமக்கரு டிறத்தா லெழும்புகழ்ப் படலமிக் கெழூந்தே, யன்றுநீ புனைந்த வம்பரங் கிழித்த தனுகுறித் துணர்தரி னின்று, நன்றுநீ பித்தன் றுனெனல் விளக்கு நாடுறின் மற்றது மருளே, துன்றுவா னவர்கள் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ரு)

மதிகதி ரிரண்டு முகவிழி யவற்றுண் மதியமுள் ளுவப்பவோர் மலரைப், பதிதர முடியிற் கொண்டனை மற்றைப் பரிதியு முவப்பவோர் மலரை, நிதிநிக ரடியிற் கொளல்கட னளித்தே னீகொளென் னிதயதா மரையைத், துதிபெறு முனிவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சு)

நிறைதகை யழிந்தும் வெண்மையே வாய்ந்து நெடியகட் குறுந்தொடி யவர்பான், முறைதிறம் புற்றுங் களங்கமிக் கமைந்து முனிதகக் கோடியு மடைந்த, பிறைமதி முடியிற் கொண்டநீ யதுபோற் பிறங்குமென் மதியடிக் கொளினென், றுறைதொறு மெகினம் பயில்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ)

மருவிவே தண்டத் திருந்தநீ யடியேன் வன்மனத் திருந்திட லரிதோ, பொருவிலவ் வரைமே னிசிசர னொருவன் போயற வூன்றிய நின்று, ளொருவிவன் மலம்போ யொழியமற் றதன்க ணூன்றிட லரியதோ சொல்லாய், துருவிமான் முதலோர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அ)

வளைதரு புறத்துக் கருகிருட் படலம் வயங்குநின் பார்வையா லன்றி, விளைதரு மற்றொன் றால்வில குவதோ விராவகத் திருட்படலமுநின், னளைதரு கருணைப் பார்வையா லன்றி யகல்வதி லனமிஞரோடு, துளைதரு பெருநீர்த் துறைகள்சூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூ)

கோலநின் செந்தா மரையடி விட்டார் கூற்றுவ னடிவிடா தவரே, சீலநி னங்கைச் செய்யதா மரைதஞ் சென்னிமேல் வைத்திடப் பெறுதார், சாலவு மொருதா மரைத்தவி சமர்வான் றன்கை வைத்திடுதல்பெற் றவரே, சூலநின் றொளிரு மாளிகைத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கO)

அத்தநின் றடந்தோட் செங்கழு நீரை யவாவிய வரிமதர் மழைக்கட், புத்தமு தனையா டளவமு மசோகும் பொன்னிறம் பொலிதளிர் மாவு, நித்தில முயிர்க்குஞ் சலசமும் பெற்று ணீலமும் பெறுகுவள் போலுங், துத்தமொய்த் திசைக்கு மளிப்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கக)

மன்னிய நினது நாமமைந் தெழுத்தை வயங்குநின் பாலுறப் பெற்று, மின்னிய மனத்துச் சுமந்திடா ரெல்லாம் விரிஞ்சனூர் நல்கு

பல் லெழுத்தை, முன்னிய துயரத் தொடுகருந் தலையின் முழுக்கவுஞ் சுமப்பவ ரன்றோ, துன்னிய கழனி சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கஉ)

பித்தவென் றிகழோம் பெண்கொடி மனைவாய்ப் பேயுறங் கிருட்பொழு தின்னே, யத்தசெல் லென்னோர் துதிபுரிந் திதய மாயவம் போருகத் திருத்தி, நித்தமு முவப்போ மடிகளுக் கெதன்க ணிகழ் விருப் பருள்செயல் வேண்டுஞ், சுத்தநற் றவத்தார் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கங)

மதிக்குமா ரூரின் மறுகுவன் பூவின் மலிகரு கிருளிடை மலர்ந்து, திதிக்குநின் பாதச் செய்யதா மரைக டெண்டிரை யுடுத்தவா ரூரிற், கதிக்குமெம் மனமா மறுகுவன் பூவிற் கவினுற மலர்தரு மென்றே, துதிக்குமோர் கடமை பூண்டனர் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கச)

தவருடை யலைவே ளெய்வது குறியார் தழைபுநின் செங்கழு நீர்வேட், டிவருடை யிழந்தா ளென்பது குறியா ரெம்மனை மார்கணேற் றிராவை, யவருடை யறுத்தா ரின்னமும் பசலை யழகிய மேனியிற் றீரா, டுவருடை யிதழா ளருள்புரி துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கரு)

ஐயநின் பொதுநா மத்தலாற் சிறப்பி னமைந்தநா மத்தினு மெமக்கு, மெய்யநன் குறலாற் பொதுமையி னன்றி மேவிய சிறப்பினு மடிமை, யுய்யநன் குறலா மெனத்துணிந் திருந்தோ முதுநிறை வேறுமா றருள்வாய், துய்யநற் புலவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கசு)

கொலைகுறித் தெடுத்தல் செய்திடா மழுவிற் கொண்டதன் றுன் றிருமேனி, யலைபுரிந் தெம்மை யடர்த்திடும் பந்த மடங்கலு மடர்த்திடற் கன்றோ, தலைமைமற் றதுகொண் டதுசெயா திருக்குந் தன்மைசான் றவர்க்கழ காமோ, தொலைவில்பல் வளமுஞ் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கஎ)

கருவினை யிகப்பிற் போதமாம் போதங் கையிகப் பிற்றிரு வருளா, மருவிய வருள்கை யிகப்பினின் பாமிம் மாண்புநின் னேக்கினு லன்றி, யொருவிய மற்றை யொன்றனு லாமோ வுரைப்பவ் ருனை யெலா மாயுந், துருவிய புகழோ யருட்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கஅ)

இருங்கடற் புவியி லிடமறப் பரந்த தெழுந்துமே லிடத்தினும் பரந்த, தொருங்குநின் புகழ்மற் றின்னுமங் கவாவி யுறமுய றன்மை தேர்ந் தன்றே, யருங்கலை வாத வூரர்முன் னினைப்பே ராசைவா ரியனெனப் புகன்றார், சுருங்கைநீர் முழக்க மருவயற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ககூ)

மதிநதி மழுமான் முதலிய மறைத்து மாரவேண் மேற்பகை மறையாய், பொதியுமத் திறத்தா லுன்னையா னகண்ட பூரண சிவ னெனத் தெளிந்தே, னதிர்கட லுலகிற் றெளிதரார் தாமு மறிதரப் புகலுவேன் கண்டாய், துதியொடு புலவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உ0)

ஐயயான் வெளிப்பட் டிடினடங் குவைநீ யடங்கில்யா னீவெ ளிப் படுவை, வெய்யயா னடங்கும் வகைபுரிந் தொருநீ வெளிப்படா திருப்பதென் னுரையாய், வையமே லுயர்தம் முதன்மையை மற ந்து வாழ்நரு முளர்கொலோ மதித்துத், துய்யமா தவர்கள் சூழ்பெ ருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உக)

என்றுநாம் விரும்புஞ் செங்கழு நீரை யிவள்விரும் பினளெனச் சினந்து, கன்றுமா மதியங் கனன்றெழு முழக்கங் கான்றெழு முயிர் த்தவா ரிதியுங், கொன்றுதீர் குவனென் றுடையவேள் சிலையிற் கோ ளுறு மடந்தையென் செய்வா, டுன்றுநீள் கருணை செய்தரு டுறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (உஉ)

யான்முத லென்றே யெழுவனெப் பொழுது மெய்தறி யாமைநீ யொருநான், றான்முத லென்றே யெழுதலஃ தன்றே சத்திய மென்ப ராய்ந் தமைந்தா, ரூன்முத லியவென் னொழிவினுக் கெதிர்பார்த் துறுதலென் னுரைத்திடல் வேண்டுஞ், சூன்முதல் பணைத்த கழனி சூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உங)

அடியவ னீயென் றுவண நீயே யமைத்தவை புகூஉவழக் காடி, நெடியவா ரூரர் தம்மையாண் டாய்க்கு நிகழுமோ ராவணமெழுதிக், கொடியயாங் கொடுப்போ மறுத்திடோ மடிமை கொண்டுநன் றுட ரத் தடையென், றுடியனை யிடையார் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உச)

பாலைநேர் மொழியாள் வேண்டுவார் வேண்டும் படியருள் படி யனீ யென்று, மாலையே வேண்ட மாலையே யளித்தாய் மாலையே நினக்குமீ தைய, நூலையோ ரெவரு மயக்கறுத் தாளு நோன்மைய னென்பது பொய்யோ, சோலைமேன் முகில்வந் துலாவருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உரு)

அன்றுவண் கூட னகரின்மா பாவி யாயினு னொருவனை யாண் டாய், நன்றுமற் றதனுற் பெரும்புக ழடைந்தாய் நாயினேன் றன் னையு மாண்டா, லின்றுமற் றதனுற் பெரும்புகழ் படுமே யிலாபமெண் ணுர்களு முளரோ, துன்றுமெய்த் தவத்தார் நிறைபெருந் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (உகூ)

உயரிய வொழுக்க மெனும்பெருங் கரையு ளுண்மையென் றுரை த்திடு மவலிற், பெயர்வில்சே தனமென் றுரைத்திடுஞ் சேற்றிற் பெரு

குறு மன்பெனும் புனலின், மயர்வறத் தோன்று நின்னடிக் கமலம் வருத்தலை யிலாதவென் னுள்ளத், துயரறை யகத்துந் தோன்று மோ துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௨௭)

நாடுநின் னடிக டியானியா ருவந்து நயத்தக வெடுத்தெடுத் துரையார், நீடுமண் டோயப் பணிதரா ருலகி னிகழ்தலிற் புள்விலங் காதி, கூடுமஃ றிணையாய் நிகழ்வதே நன்று குறித்துனை நிந்தையின் மையினாற், சூடுமெய்த் தவத்தர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணி யதே சிகனே. (௨௮)

வரைகெழு நினது புயத்தையா னவாவ மற்றையப் புயம்வட வரையைப், புரைதப முன்னங் குழைத்ததா மந்தப் பொருபகை நினை ந்ததற் கெதிராம், விரைகெழு வரையி னுதித்தமெல் வளியும் வெப்ப மிக் குறவெனை வருத்துஞ், சுரைநுக ரளிபண் பயில்பொழிற் றுறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (௨௯)

கலைபல பயின்று தெளிந்தவர் வருந்திக் கற்றதற் குறுபய னாக, மலைவரு நினையே பாடுதல் சிறப்பு மற்றுள பசுக்கண்மேற் பாட, லலை வரு தீம்பா லட்டெடுத் திழிநாய்க் காங்கலங் கவிழ்ப்பது போலாந், தொலைவில்பல் வளஞ்சா லற்புதத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩0)

முற்றிய கருணை நின்னையா னவாவ முன்னமோர் மாங்குயி றன்னைப், பற்றிய பகையிற் றடிந்தனை யாமப் பகைநினைந் தன்னைமார்க் கொல்லாச், செற்றிய சிறையக் குயிலின மளிமேயன் செவிவெதுப் பேறமீக் கூவுஞ், சொற்றியென் றருள்வாய் நன்றுசா றுறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (௩௧)

கருமல விருட்டுள் யானென தென்னக் கூதித்தெழு மொருமதி தோன்ற, வொருவில்பல் கொடுமைப் பணிவிரா யுடற்ற வுற்றதோ ரென்னிடத் தினுமுன், றிருவடிக் கமல மெங்ஙன மலருந் தேசிகோத் தமப்பெரு மானே, சுருதியா யிரமு முழக்கறாத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௨)

தெரிந்துனை விழைந்தேன் மதன்மணக் கோலஞ் செய்யவந் தானிது முறையோ, புரிந்தபொன் மலரா லாகிய பாயல் பொங்கழ றருமொரு மலர்க்கு, விரிந்தவெந் தழன்முன் றந்தனை யாம்பின் விரை ந்தவை மாறுசெய் வனபார், சொரிந்தவெண் டரள நிலாவருந் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௩)

மதியினை வருத்து நின்னடிக் கமல மாண்மையம் மதியினால் வரு ந்தும், பொதியசெங் கமல மெண்ணியுள் ளுடைந்து பொலிவிர குள சில பொலிவான், விதியினைச் சுமந்து முறுமையின் விளர்ப்ப வெள் ளிய தாமரை யென்பார், துதிபயில் கவிஞர் கழகமார் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௪)

மறையவன் படைத்தன் மாயவன் புரத்தல் வாய்த்திடா வொரு திரு வுருவ, மறைபெறும் புகழ்சீ கொண்டகா ரணத்தா லன்னநான் முகவிதி படைத்த, னறைகெழு துளவத் தாரினுன் புரத்த னவில்பல வுருவம்யா மொழிந்தேந், துறைகெழு பொன்னி வளப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௫)

மேவிய கிரியை ஞானமென் றேத்த விளங்குநின் றிருவடிக் கமலம், பாவிய சுவைப்பே ரானந்தத் தேறல் பருகுபு தேக்குமிக் கெறிவான், வாவிய வடியேன் மனக்கருஞ் சுரும்பர் வந்துவீழ் நாளு முண் டாமோ, தூவியந் தோகை பயில்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௬)

எனக்குனைக் கொடுத்து நினக்கெனைக் கோட லியல்பிலை தன்றி யொப் பில்லா, நினக்கெனைக் கொடுத்தென் றனக்குனைக் கோட னீதி யன் றேமுத னீயே, மனக்குவப் புறத்தும் பலசுதந் திரனீ மற்றலை தில்லவ னடியேன், சொனக்குல மதில்கோ புரம்பொலி துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௭)

மருளக லடியார் சூட்டிய கமுநீர் மாலைநின் சேவடிப் பொலித, விருள்படு பொழுதி லெழுமொரு கொழுந னெழின்மிக மணத்தலா லங்குப், பொருள்பெறு தானு மடுத்துற மணத்துப் பொலிந்துவாழ்ந் திருப்பது புரையுஞ், சுருள்விரி கதலிப் பொங்கர்சூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௮)

கறையடி வராகங் குரண்டமீன் மதியங் கரையிவை முதற்பல வற்றை, நிறைவலி தபநீ செய்தனை யவற்றி னித்தில மனைத்துமப் பகையான், முறைமையி னுன்றோ ளவாவிய வென்னை முறுகுவெப் புறுத்திவாட் டுவபார், துறைதொறுஞ் சங்கம் பயில்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௯)

அகத்திரு ளடியார்க் கொழிப்பவ னீயென் றறைந்திட லுண்மையே யழகு, நகத்திகழ் நினது தோளணி கமுநீர் நயந்தநா னிப்புறத் திருளும், புகத்தியங் கிடுவே னொழித்திடாத் திறமென் புகலுதி புண்ணியப் பொருளே, சுகத்தியன் முனிவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௪0)

மேயநீ புறத்து வெளிப்படு திறத்தால் வெவ்வினைக் குழிசியாம் யாமும், பாயநின் னடிக்கீ ழடங்கினம் புறத்தே பண்பினவ் வாறுமற் றகத்தே, நாயநீ வெளிப்பட் டிடினின தாட்கீழ் நாங்கணன் கடங்கி வாழ்ந் திடுவோந், தூயமா தவருண் மணியெனுந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௪௧)

அடுத்தடி யடைந்தார் தம்பசு போத மடங்குறு வகையுப தேசித், தெடுத்தநான் முகற்குங் கூற்றுவன் றனக்கு மிடையறுத் தொழி

ல்வளர்த் திடுவார், மடுத்தவா ரியரோ நோக்கினு லனைத்தும் வாங்கி யாங் கசைவற விருத்தித், தொடுத்தபே ரின்ப மருத்திடுந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சஉ)

கற்றவர் நின்னை யவாவின ரெல்லாங் கழன்றவ ரென்பது மெய்யே யுற்றமற் றிவரு முன்னல மவாவி யுடைகல முணவொடு துறந்து செற்றநாண் மடமை முதலிய துறந்து செவிலிதா யிருளைய ராதிச் சுற்றமுந் துறந்தா ணன்றிது துறைசைச் சுப்பிர மணியதே சிகனே.()

ஒளிகெழு மாற்று லுயர்கன கமும்பொன் னுற்றகா ரிரும்பும் பொன் னதுபோற், களிகெழு பசுபோ தந்தப வடைந்தார் களைப்புரந் தினிதருள் புரியு, மளிகெழு நீயுங் குருவது சிறிது மாற்றறி யார் களுங் குருவே, துளிகெழுமதுவத் துணர்ப்பொழிற் றுவறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (சச)

உற்றவர் பிறவிக் கடல்கடப் பதனுக் கொள்ளிய மரக்கல மாகிப், பற்றமை திரோத மருளெனப் பட்டுப் பாரந்தநின் றிருவடி யாய, பொற் றசெம் மணிக்கு நாயினேன் மனமம் பொற்றக டாகுநா ளுளதோ, சொற்றபல் வளத்தாற் பொலிபுகழ்த் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சரு)

கலவுமொன் றெனுமா மலமிரண் டென்னக் கனைதரு கருமமூன் றென் நிலவுறு மாயை யாயவிம் மூன்று நிகழ்ச்சியற் றொழிதரு பாக்குள[னை குலவுநின் றிருவாய் வயின்வரு கூற்றங் கூற்றமாய்க் கூடுநா ளென்றோ சுலவுநீ ருலகம் புகழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

அடியவர் மலத்தை யழித்திடு திறத்தி னும்பிர தாபமு மவர்க் குப், படியில்பே ரின்ப மளித்திடு திறத்திற் படுபெருங் கீர்த்தியு மெ மூந்து, வடிவமாய்ச் சேர்ந்து விளர்த்துறும் பரிதி மதியென வந்ததத் தியாசந், தொடியணி மடவார் பயில்பெருந் துறைசைச் சுப்பிர மணி யதே சிகனே. (சஎ)

திருவடி யாய கமலத்தி லொடுக்கஞ் சிவனுதன் முன்னமக் கமல, மருவடி யெழுத்தில் லவற்றொடுங் குதலே மானுமென் றனை யரு ளின்றேற், பொருவடி யந்த மிலாநினை யென்றும் புகழ்ந்துபா டிடுவா மளித்தி, துருவடி யவர்சூழ் தருபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சஅ)

கறைதபு காட்சிச் சிவப்பிர காசர் கருணையா லினிதுற வகுத்த, வறையகத் திருக்கை விதித்தன ரெனினு மடியமே மனத்தறை யிரு க்கை, நிறைபெரும் புகழோய் விலக்கினர் கொல்லோ நீயிஃ தொழிப் பது தகுமோ, துறைதொறு மடவா ராட்டயர் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ச௯)

கோலமார் பிடக ரெற்றைக்கு மருந்து கொண்டுறச் சுமப்பது மூன்று, ஞாலமார் பிணிய ரவையறற் கன்றோ நலமிகு போதநீ சுமத்தல், சீலமார் பவர்மும் மலமறற் கன்றோ சிறியனேன் விலக்குளேன் கொல்லோ, சூலமார் மணிமா ளிகைப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருo)

இவள்விழி மழைநேர் குவளைநே ரென்ப ரிதுநிச மெவ்விதத் தென்னிற், றிவளுரு நின்னை விழைந்திடை யறாது செறியநீர் பொழிதலி னானும், தவழ்மதி யுதிக்கு மிரவுகண் படாத தன்மையி னானு மென் றருள்வாய், துவள்கொடி முகில்கீண் டெழுமதிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருக)

நிலவுமுன் மாலை விரும்பின ளதற்கு நீயொரு சேய்ஞலூர் மறையோ, ருலவுசீர்ப் புதல்வி யல்லையென் றனன்முன் னுண்மையே யின்றுபல் லோருங், கலவுறக் கொடுப்ப துண்டென மொழிந்தாள் கருதி வண் முதுக்குறை வென்னே, சுலவுபூஞ் சோலை முகிலளாந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஉ)

பற்பலர் சூழப் பவனிநீ வந்தாய் பார்த்திரு கைம்மலர் குவித்தாள், பொற்பவிர் மடந்தை யதற்கணி வளைகள் பொருக்கெனக் கவர்ந்தனை முன்னு, ளற்புற விடுதல் செய்தனை யிந்நா ளமைதரக் கவருவை யெனினுன், சொற்புகழ் நன்று யிருந்தது துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருங)

வணங்கினர் வறுமை நோயொடு மலநோய் மாறிட வம்பொன்வட் டகையி, விணங்கிய சுவண நீறுநன் களிப்பா யெடுத்திடக் குறைபடா மையினாற், குணங்கெழு பதும நிதியென வதனைக் குறித்தனங் குரவர்க ளேறே, சுணங்கிள முலையார் பயில்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருச)

கூடிநின் றிருமுற் பணிந்துவீழ் போதே கூடிய கருமலம் வீழ
நாடியங் கெழுபோ தருள்விரா யெழுநீ நல்குநீற் றுலுடல் விளர்ப்ப
நீடிய விளர்த்த வுடம்புமற் றென்று நிலத்திது சிலரெண்ணு தென்னே
சூடிய புகழாற் பொலிபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

மலம்வியா பகமோ வியாப்பியங் கொல்லோ மருவிய வெனக்கென விரண்டு, மலவது வியாத்தி நீக்கநீங் கிடுமென் றருளுநின் வாய்மொழி யவ்வா, றிலகுவா ளிக்க மியற்றிடா தென்னே யிசைத்த சொன் முடிப்பவர் வேறோ, சுலவுதீர் மனத்தர் தொகுபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருசு)

கருதுறு கரும காண்டமு ஞான காண்டமு மிருபத மாக
மருவுப நிடத மேற்பரப் பாக வண்குமி ழேரெழுத் தாகப்[கருள்வாய்
பொருவறப் பொலிமுற் பாதுகை யெனவிப் போதது போற்றவெற்
சுருதியா னெடுமால் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதேசிகனே.

தேடிய மாலார்க் கரியைமுன் னுளுஞ் சிறந்தவிந் நாளுமத் தகையை
வாடிய மடவார் வளையுடை கவர்ந்தாய் மாதர்பா லின்றுமத் தகையை
கூடிய வளைமுன் னிட்டநீ யின்று குவிகரம் பிடித்திடா வகையென்
சூடிய மாலை யெனுமரு டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஅ)

கருவிழிச் செவ்வா யென்மகள் வருத்தங் காண்பது நினக்கழ காமோ, பொருவில்சங் கரனே நீயென வான்றோர் புகன்றிடு மாற்றமும் பொய்யோ, மருவுசெங் குவளை மதன்கருங் குவளை மறிதரச் செயுமெதி ரன்றோ, சுருதியா யிரமு முழக்கருத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருகூ)

மன்னுநின் காவிக் கொடிமிசை யெழுந்து வானகத் தாடுத லமரீர்[மம்
மின்னுநுண் மருங்கு லரம்பையர் போகம் வெறுத்தெனை யுடையவ னு
பன்னுற வம்மி னெனவிளித் திடுமப் பண்புதேர் தரினரு ளாமே
துன்னுபல் கழனி வளமலி துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. ()

ஆன்றநின் கருணை யென்னென வுணர்க்கே னையநின் பணிக்கமை நாற்கால், சான்றபல் பசுவு நின்பொது நாமந் தம்முடற் பொறித்திடப் படுவ, வேன்றவிவ் விருகாற் பசுவெனு மெங்கட் கினைந்தில வவைசெய்புண் ணியமென், றேன்றவெவ் விடத்துங் கழகமார் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுக)

கற்பக மாலை புனைபவர் நறிய கமலமா லிகைபுனை பவர்பா
செற்படுந் துளவ மாலிகை புனைவா ரிவரெலா நின்றிரு வடிச்சூட்
டற்புத மாலை புனையுமெங் களைநே ராவரோ வடர்மல மொழிந்து
சொற்புனை நின்னைக் கலந்தலாற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

மந்தண மாக வோதிம மேயென் மயலெலாந் திருச்செவிக் கேற்றிச்
சந்தமென் கழுநீர் வாங்கிவா வென்று டனிமுடி முன்புண ராது [பச்
நொந்தயான் செவிப்பா லடைந்திடு மாறு நோற்றிலே னென்றது மறுப்
சுந்தர மடவா ளயர்ந்தன டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுங)

மான்மிகு மென்னை வந்துநீ புணர்தல் வழக்கொலா தென்றியேல் வினாத்த, தேன்மிகு கழுநீ ரருள்செயல் வேண்டுந் திருந்துமுற் றதுவுமென் றிடின்முன், பான்மிகு திருப்பூ வணைத்தொரு மான்கைப் படர்நகக் குறிகொண்ட துரைப்பேன், சூன்மிகு சங்கம் புலம்புநீர்த் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுச)

ஒள்ளிய நினது குடைமதி மதவே ளுடற்றுவா னடைந்தனான் றவன்
லள்ளிய கவிகை யென்னலாங் காம மாற்றுவ தில்லையே யென்னி [பா
னள்ளிய வுயிர்கட் கினத்தியல் பானே நாளுமா மறிவெனல் பொய்யோ
துள்ளிய கயன்மீப் பாய்வயற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

வெள்ளிமால் வரையோ முல்லைவா யொருநெல் வேலியே யோதொடித் தோள்வே, யொள்ளிய பிறையோ நுதற்பிறை கண்ணு யுறு

மதி யோமுக மதிய, நள்ளிய நீலி வனக்கத லியோவென் னருது டைக் கதலியென் செய்வேன், றுள்ளிய வரான்மீ தெழுபுனற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுசு)

உள்ளுமெய் யடியார் சூட்டுமென் பூவுள் ளுன்னடிக் கேற்றிய நீலம்
விள்ளுபன் மலரே வுடையவன் வயமாய் வெங்கொலை புரிந்ததன் றீமை
தள்ளுதல் குறித்து விரும்பிநின் னடியாஞ் சார்புபெற் றமர்வதுமாணுந்
துள்ளிய கயல்வின் கிழிக்குநீர்த் துறைசைச் சுப்பிரமணியதேசிகனே.

காதன்மெய் யடியார் நின்னெதிர் நின்று கவின்றதீ பங்கொடு வளைத்
மேதகு பரிதி மண்டில மானும் விளங்கத னடுவணீ பொலித [தன்
லோதரு மனைய மண்டில நடுமுன் னுறைதரு தன்மையே காட்டுஞ்
சூதமுற் றருக்க டுறுபொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

விட்டது யானை முன்னர்வா சனைதான் வெண்பொரு ளியன்றபா துகையே, நட்டதுன் மலர்த்தா ளதுகுறித் திடுங்கா னருகதிர் வெள்ளியங் கிரிமேற், பட்டது பயின்ற பழக்கம தன்றோ பசுவருக் கைச்சுளை கடுவன், றொட்டது மந்திக் கீபொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுகூ)

நின்னிரு மருங்கி லடியர்போற் றிடுங்கா னெடியவெண் சாமரை பணித்தன், மன்னிரு வகைய ஞானமு மெழுந்து வயங்கலு மனையவை யுயிர்த்த, மின்னிரு வகைய புகழுமாங் கெழுந்து மேவுறத் துள்ளலும் பொருவுந், துன்னிரு பயனொ டின்பரு டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ0)

பிறையுரு வென்னத் தலைவனை தண்டம் பிறங்கிநின் றிருமுனம் பொலித, லறைதரு கிரியா குருக்கனென் றுனைக்கு மானைகட் கங்குச மென்கோ, வுறைதரு வெள்ளி பொன்னெனு மீன்க ளுராந்தபு தூண்டிலென் றுனைக்கோ, துறைபல கெழுமு பொன்னிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எக)

அந்தநா ணின்னைப் புகழ்ந்துபா டினருக் களித்தரு ளியானமா திகளை
யிந்தநா ணீயே கொண்டனை யவற்று ளிவர்களுக் கென்பய னென்று
சந்தமார் திருத்தாண் மலர்நிழன் மட்டேதரல்குறித் தனையதுபோதுஞ்
சுந்தரக் கனக மதில்வளை துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. ()

வெள்ளியங் கயிலை யமர்ந்தநாள் வெய்ய விடமெடுத் தயின்றனை யிங்கு, வள்ளிய வருளி னமருநா ளதுபோல் வலிவிளக் குவதெவன் செய்தா, யுள்ளிய வடியே னறிவெடுத் தயின்று லொத்ததென் றியாவரும் புகழ்வார், துள்ளிய கயல்சா லிலஞ்சிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எஙு)

பொறையெனுங் குலையு ளன்பெனு நிறைந்த புனல்படு மெய்யடி யவர்த
நிறைமன மெனுநற் றடத்துற மலரு நின்னடித் தாமரை மலரிற் .

சிறைபடு மடியே னறிவெனும் வண்டு சேர்ந்துவாழ்ந் தமருநா ளுள தோ, துறையுணர் புலவர் புகழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ௪)

வஞ்சனேன் மலநின் றுட்கெதிர் நமனே வாய்ந்தகைக் கெதிர் விதி தலையோ, மஞ்சவாங் களத்திற் கெதிர்கொடு விடமோ மறைந்த கட் கெதிர்சிலை மதனே, வெஞ்சுரு நெடிய சடைக்கெதிர் புனலோ வினியவாய் நகைக்கெதிர் புரமோ, துஞ்சன்மே வுதற்கு நவில்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ௫)

மதித்திடு முனையான் கண்டநாண் முதலா மாரவேள் கணைக்கி லக் காகிப், பதித்திடு மயற்சேற் றழ்தனன் றமோ பரிந்தருள் செய் திலா யென்னின், விதித்திடு கனவில் வந்தெனைப் புணர்தல் வெளிப் பட யாவர்க்கு முரைப்பேன், றுதித்திடு வளஞ்சான் மாளிகைத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ௬)

அறைதரு கருணை யாழிநீ யெனவாங் காறுகால் செல்லுமே யென்று, சிறையளி தூது சேறியென் றியம்பச் செறிந்தவெண் காற் புள்ளா கினன்மு, னிறையவ னவன்பாற் குறைந்தகா லுடையே னேகிலே னெனத்தளர் தருவா, டுறைபல கெழுமு காவிரித் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (எஎ)

மதித்திடு வளஞ்சான் மதுரையி லெல்லாம் வல்லசித் தெனப் பொலிந் தனைமு, னுதித்திடு மடியேன் மனங்குழை வித்தா லுரை செயு மதுபுதுக் கியதாங், கதித்திடு மந்நா ளுஞற்றிய தென்னிற் காலவேற் றுமையுனக் குண்டோ, துதித்திடு முனிவர் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ அ)

முத்தவெண் ணகையார் முயக்கமே பொருளா முன்னுவார் குழாத்தொடுங் கலந்து, சித்தமா ழாந்தா யென்றெனைப் பேசிச் சிரிப் பையேன் முன்னமாரூரி, னத்தநேர் குழலாண் மனைவயிற் றூது நடந் ததை யுனைத்துனைச் சிரிப்பேன், சுத்தமா தவத்தர் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ௯)

தரையுற மெழுகி யொருபொழு துண்ட தவத்தினல் யான்பெறு மகட்கு, விரைநறு மாலை தருதியின் றென்னின் மேவருந் தீக்கையா வதுசெய், புரைதபு முடலா தியவொரு மூன்றும் பொலியுமுன் வயத் தவா மன்றே, சுரையடிக் கமல மலர்புனற் றுறைசைச் சுப்பிர மணி யதே சிகனே. (அ0)

இழித்தவூ னருந்த லோப்புகென் றெங்கட் கியம்பிமுன் ளொருகிராதர், கழித்தவூ னுகர்ந்தாய் விதிவிலக் கொழிந்தாய் கடை யனேற் கின்னருள் புரிந்தாற், சுழித்தநீ ருலகி லென்செய்தா யென் றோர் தோடநிற் குரைப்பவ ருளரோ, தொழித்தளி முரலு மலர்ப் பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அ௧)

கலைபல வையந் திரிபறி யாமை கழிதா வுணர்ந்துளா ரெனினு, மலைவினின் செவ்வாய் மொழிபன்றி முந்தி வாய்ப்பரோ பலபொறி யிருந்து, மலைகடற் புடவி யிடைப்படு பொருள்கண் ணன்றிநோக் கிடுநரு முளரோ, துலைநிகர் நடுவோர் நிறைபெருந் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (௮௨)

ஆற்றிடு தொழிலுங் கொண்டிடு முகமு மைந்துமுன் னொருமு கந் தரித்துக், காற்றிடு மலைமந் திப்பொழு தென்னிற் கவினுமிம் முகப்புகழ் பெரிதா, லூற்றிடு கருணை யுவட்டெழ வடியா ருள்ளத் துள் ளுறைகுரு மணியே, தோற்றிடு மதியந் தவழ்மதிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௮௩)

ஆன்றநின் பவனி கண்டநாண் முதலா வரியநின் றேளலர் வேட் டுக், கான்றவூ ருள்ளார் வாயலர் மதவேள் கைபலர் நிரம்புற வேற்று, மான்றநெஞ் சினளாய்க் கண்ணலர் பொழிவாள் வயங்குநின் னுளத் தலர் கருணை, தோன்றவென் றடைவாள் சொற்றிவான் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௮௪)

வடவரை கோட்டி வாசுகி பூட்டி வனத்துழாய்க் கோலொன்று கூட்டித், தடமதில் வீட்டிப் பெருவிறல் காட்டித் தயங்குநீ யொரு மலர் தொடுக்க, வுடன்முனிந் தனைபன் மலர்தொடுத் தவ்வே ளூடற் றுபோ ரெங்ஙனம் பொறுப்பேன், சுடர்விடு கொடிமா ளிகைப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௮௫)

வல்லைநின் னடியென் றலைமிசை யேற்றின் மலரவன் கைவரைந் திடவவ், வெல்லைதீர் தவிருன் மலர்க்கைமற் றனையா னிருந்தலை யொன் றுவென் றதுமு, மெல்லைமென் மலர்த்தா ளன்னவ னெண்கை யொ ருங்குவென் றஃதிதன் புகழேன், றொல்லைநற் றவத்தார் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௮௬)

புன்மையெந் தலைமே னினதுகைக் கமலம் பொலிதரக் குவிந் துமே விடுமோர், நன்மைசார் தலின்மற் றயன்கர கமல நாடொறு மலர்ந்துநீங் கிடுமத், தன்மையே ராத மடவரப் பிரமன் றன்றொழில் வளர்ப்பவ ரன்றோ, தொன்மைமா தவத்தர் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௮௭)

பாரரையா லமர்ந்தான் முன்னமிப் பொழுது பாரவா சமருவாள் விழையிற், றாதல் முவவா தென்னவுங் கேளா டலைவன்மற் றவ னலா திலையென், றராவக லல்கு லன்னமென் னடையா ளயருவாண் முதுக்குறைந் தனள்காண், சுராதிபர் விரும்பிச் சூழ்பெருந் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (௮௮)

வெய்யவா பாச மார்க்கமத் தனையும் வீட்டிநின் றிருவடி யடைந்தே னையவெங் காலன் வீசுபா சத்தோ டைவகைப் பாசமுங் கழல

வுய்யவாழ் நினது முகத்துநம்பாச மொளிர்தாப் புரிந்தனை யுய்ந்தேன் றுய்யமாதவர்கள் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

புல்லிய வோரு ரேனுமில் லென்று புகன்றுமற் றதற்குமா றுக, நல்லியல் வெண்ணெய் நகுபுகழ்த் துறையூர் நலமலி கடந்தை கொற் றவனூர், வில்லிய திருவா வடுதுறை புரப்பாய் வெறுத்தமூன் றூர்ம கிழ்தரவோ, சொல்லிய வவற்றோன் றாகிய துறைசைச் சுப்பிர மணி யதே சிகனே. (கூ0)

உன்னிடைக் களங்க முறுதலி னுருமென் றுரைத்தியேன் முன் னையம் மதியந், தன்னிடை யமர்ந்தாய் களங்கமங் கிலையோ சாற் றெனி னியாதுசாற் றிவோ, யென்னிடை யதுநே ரென்றமர் வாயே லெய்தரும் புகழ்நினக் குண்டாந், துன்னிடை மடவார் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூக)

கரிகுழைத் தெழுதிப் புனைதரப் பெற்ற கண்கணின் றிருவுருக் கண்டு, வரிவளைக் குலத்தைக் கையினின் றொழிக்க மலர்க்கர நன்று கொ லென்னப், புரியுமக் கயற்கண் முத்துகப் பொருது பொம்மல் வெம் முலைமுத்தங் கருகுஞ், சுரிகுழற் கருள்வ தென்றுவான் றுறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (கூஉ)

பாயவெப் பகலா நின்னுடை யுளத்திற் பதிதர வமர்தரே மென் னின், மேயமுற் பரிதிமண்டலத் தமர்ந்த வித்தகன் யாரெனக் கேட்ப, ஞயவிவ் வினுவிற் கெவ்விடை கொடுப்பா யத்தகு தோல்வி நிற் காமோ, தோயமென் கழனி வளப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூங)

வேண்டமுன் கண்டத் தடக்கிய விடத்தை வெளிவிடுத் தென விரு ணிமிரு, மாண்டசெஞ் சடைநீர் கொதிப்பொடு வெளியே வந் தெனப் பானிலா விரியும், பூண்டவெம் பணியி னுயிர்ப்பென விளங் கால் போதரு மெங்ஙனம் பொறுப்பா, ரேண்டநின் றவிரா விளக்கனு றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூச)

ஆன்றநீ மிசைந்த பரிகலச் சேட மன்புமிக் கேற்றமா தவருக், கேன்றவெம் பசிநோய் மருந்துகொ லுடலி லெய்திய நோய்தெறு மருந்தோ, சான்றமும் மலநோய் தவிர்த்திடு மருந்தோ தவாவதன் பெருமையா துரைக்கேன், றோன்றமெய்ஞ் ஞானம் பயில்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூரு)

கையினுந் தவிர்த்தாய் நுதலினுந் தவிர்த்தாய் கடுந்தழ லினை யது குறித்து, நையினு நைக நினையெதிர்ப் பட்ட நங்கைமார் காலி யங் குறுவான், செய்யினு நன்று காலியங் குறுவான் செய்தன ரன் னதை நன்றோ, துய்யினுங் கூர்த்த மதியர்சூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூசு)

மிடைசடை மறைத்து நீயெழுந் தருளி மேவினை யாயினு நினக் குப், புடையுற மலர்க்கை கொடுப்பவ ரினையன் பொற்சடை புடை யன்முன் னென்று, தடையற வெவரு மறிதரு பாக்குத் தாஞ்சுமந் துணர்த்திடத் தெளிந்தேன், றொடைமதுப் பிலிற்றுங் காவணத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௬௭)

வழிவழி யடியார்க் கனுத்துணைப் போதம் வயங்குமேற் பொரு மையு மனையார், கழியவின் படையு மவாவுமற் றனையார் கருமல மே லடு முனிவு, மொழிநம பிரம வெனுமிரு மொழியு முடையையா னீயுமீ தறனே, சுழியலை யெறியும் பொன்னிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௬௮)

கறறவ ருவகக்கு கலவயல யானுங கடலகத் தங்கணப புனல் சார்ந், துற்றதேற் றிருத்த மாவது கடுப்ப வுன்பெரும் புகழ்விர வுத லாற், குற்றமின் றாகிச் செய்யுளா மென்றே குணமில்புன் சொற் கொடு துதிகள், சொற்றன னுவந்து கோடிவான் றுறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (௬௯)

மன்னிய கருணைப் பெருஞ்சயி லாதி மரபுபல் லூழியும் வாழ்க
வின்னிய முகிலின் முழங்கவெக் காலு மிலங்குநின் சந்நிதி வாழ்க
பன்னிய நினது நாமவைந் தெழுத்தும் பல்விடந் தொறும்புகூஉ வாழ்க
துன்னிய நின்சீர் வாழ்கவான் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே.

சுப்பிரமணியதேசிகர்மாலை முற்றிற்று.

---

உ

## *சிறப்புப்பாயிரம்.

திருவாவடுதுறையாதீனத்து
ஆறுமுகசுவாமிகளியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

யாமாலை நீங்கவரு துறைசையிற்சுப் பிரமணிய வெங்கோ மான்மேற்
பூமாலை வாடுறுநன் மணிமாலை பொள்ளலுறும் பொன்னுற் செய்த
மாமாலை தேய்வுறுமுத் தாமாலை வெள்ளையென மதித்து நாராற்
பாமாலை தொடுத்தணிந்தான் மீனாட்சி சுந்தரனும் பாவ லோனே.

---

* இது பழையபதிப்பைச்சார்ந்தது.

சிவமயம்.

தருமை

# ஸ்ரீ சச்சிதானந்ததேசிகர்மாலை.

—⊰✱✱⊱—

## சிவஞான விநாயகர்.

கட்டளைக் கலித்துறை.

மன்னும் புகழ்ச்சிவ ஞான வரோதய மால்களிற்றின்
பன்னும் புகழ்த்துணைப் பாதாம் புயங்கண்மெய்ப் பத்தியுற்ற
மின்னும் புகழ்த்தவ ரன்றிநன் னூல்விருப் பாளர்விழை
முன்னும் புகழ்ச்சச்சி தானந்த மாலைக்கு முன்னிற்குமே.

---

## நூல்.

பூமேவு நின்கழல் சார்ந்தாரை யன்பிற் பொருந்தியவர்
தாமேவு மின்பமுற் றூரன்று மின்றுமத் தன்மையரே
மாமேவு மிவ்விரண் டுள்ளேக மேனுமன் னேன்கதியென்
றேமேவு காத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௧)

ஒன்று முளேமற் றிரண்டு முளேமொரு மூன்றுமுளே
மென்று முளேமொன்றை யென்றடை வேமென் றிரப்பவருக்
கன்று முளேமென் றருள்வாயிப் பேருண்மை யாட்டைபல
சென்று முளேந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௨)

மதிக்கும் பெருங்கள்வ னீயேயென் பார்மழு மான்முதலாப்
பதிக்கும் பலவுங் கரந்தாயிங் குற்றுமொர் பாற்பசுக்கட்
குதிக்கு முணர்வுங் கவர்வா யுணரினுள் ளேயொளிப்பாய்
திதிக்குந் தருமைப் பதிச்சச்சி தானந்த தேசிகனே. (௩)

ஒன்றூ வெனினன்றென் பாயிரண் டாவெனி ஞேமுறையா
யென்றூ வருநிலை யென்றிரப் பார்க்கிரு காலுடனே
நன்றூ வயங்கொரு கையையுங் காட்டுவை நன்றுனியல்
சென்றூய் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௪)

மருந்து பிடகர் சுமப்பதெல் லாம்பிறர் மாட்டடைந்த
வருந்து பிணிமுற் றொழிப்பதற் கேபிற வாருயிர்கள்
பொருந்து வினையொழிப் பான்றனுத் தாங்குபு போந்தனைமெய்
திருந்து புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௫)

நின்னைப் பணிபவர் நல்லாக் கறப்பவர் நீர்மையிலான்
றன்னைப் பணிபவர் கல்லாக் கறப்பவர் தற்றெரிப்பான்
பொன்னைப் பணிகொள் சடாமுடி யோடிங்குப் போந்தமர்வாய்
தென்னைப் பொழிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சு)

யானுள போதுளை நீயுமென் றுய்சித்து நீயுமென் றுய்
வானுள விச்சை முதன்முச் சொருபன்மன் னீயுமென்றுய்
மீனுள வார்கட ஞனி புனலென்று விண்டதெவன்
றேனுள காத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (எ)

தத்துவ முற்று மசத்தென்பை யென்னைச் சதசத்தென்பை
யொத்துநிற் சத்தென்பை யிவ்வா றுரைக்கு முனைப்பெரியர்
மெத்து மொருமொழி யாளனென் றேதலென் விள்ளுகண்டாய்
சித்துரு வத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அ)

காண்பானுங் காட்சியுங் காணப் படுபொரு ளுங்கழித்தல்
வீண்பான் மதிகழி யாமையும் வீணென்று விண்டதெவன்
மாண்பா னிறைந்த சிவஞானச் செல்வ மலிதலினுற்
சேண்பான் மிளிர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூ)

மெய்யோ துவையென்பர் மேதக்க யாருமம் மேதகுசொற்
பொய்யோ புகலடைந் தாரிடந் தத்துவப் பொய்யுஞ் சொல்வா
யையோ வெமர்சொற் றிடினுறுப் பாயமு கேநினக்குச்
செய்யோ வருந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (க0)

பாடிவந் தார்க்கென் பரிசளிப் பாயுட் படுமறையிற்
கூடிவந் தார்வ முறப்பேசி மூன்றையுங் கொள்ளைகொள்வாய்
நாடிவந் தாருண் மகிழ்வள்ள லேபன் னகரினருந்
தேடிவந் தார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கக)

நிறைமதி யாயென்று நிற்பேசி யின்ப நினைந்தடைந்தேன்
மிறைமதி யாயிங்கு வம்மோவென் னுவிடின் மேல்வெகுண்டு
குறைமதி யாயென்று கூறிலென் னுவை குணத்தர்நல்கு
திறைமதி யாய்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கஉ)

மாலார் தமக்கரி யாயென்ப ரன்றின்றும் வாய்மைமணக்
கோலார் பகையுளை யன்றென்ப ரின்றுங் குலாயததது
மேலா ருனைக்கண்டுங் காணரி யாயென்று விள்ளுவன்யான்
சேலார் வயற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கஙு)

மூவா மதிமறைத் தாய்ஞாந சம்பந்த மூர்த்தியெனத்
தாவா நலப்பெயர் பூண்டா யஃது தகாதென்பன்யா
னுவா விராகுத் தலையென்ப தெண்ணி யடங்கினன்மெய்த்
தேவா புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கச)

செறிபிறப் பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பெனுஞ் செம் பொருள் காண்ப, தறிவெனத் தெரிக்குங் குறட்பொரு ளறிந்து மறி கிலன் போற்பிற காண்பேன், வெறிமலர்ப் பணைநெற் பச்சிளங் கதிர் கள் விண்ணகத் தேனுநா நீட்டிக், கறிசெய வளரும் படுகர்சூழ் பழ னக் கற்குடி மாமலைப் பரனே. (சுரு)

வெம்பிய காமம் வெகுளியுண் மயக்கம் வேரறப் பறித்துநின் பதமே
நம்பியென் புருக வன்புசெய் நாளு நாயினேற் குள்ளதோ வருள்வாய்
பம்புபன்மலர்கண் மருதவேந் துறையப் பன்மணிகுயிற்றியபைம்பொற்
கம்பலம் விரித்தாற் போலடர் பணைசூழ் கற்குடி மாமலைப் பரனே. ()

வையமும் வானு முய்யவன் புருவாய் வாதவூர் வந்தவ தரித்த
வையனன் புரையை நயந்துபா ராட்டு மவ்வள வாவதெற் கருள்வாய்
செய்யதா மரையின் பன்மலர் மீளிர்த றிகழ்தர விழித்துவச் சிரத்த
கையினன் கிடத்தல் போன்மெனும்பணைசூழ்கற்குடி மாமலைப்பரனே.

ஒழுக்கமன் பருளா சாரநற் சீல முறவுப சாரம்வந் தித்த [யே
விழுக்கிலா வாய்மை யுவந்துற வடக்க மிவைகளி லொன்றும்யா னறி
னழுக்கிலா வழுத மூடிக்கள் போற் சிதற வணிமதி மேற்பெரு வாளை
கழுக்கடை யெனப்பாய் படுகர்சூழ் தெய்வக் கற்குடி மாமலைப் பரனே.

நின்னுரை வழியே நிற்பவர் நில்லார் நீளற மறஞ்சுவர்க் காதி, மின்னுமோ கத்தா னரகத்தாற் றுலைத்து வீட்டிய்ப்போ னீயெனத் தெளிந்தேன், மன்னிய தென்னம் பழம்பல வீழ வருக்கையின் பழங் கிழிந் திழிதேன், கன்னலங் கழனி பாய்தரும் பணைசூழ் கற்குடி மா மலைப் பரனே. (சுசு)

மானிடப் பிறவி வந்தது மனத்தால் வாக்கினாற் காயத்தாற் பணி செய், தானிடத் தைந்து மாடுநின் னடிக்கீ ழமரவென் றறிந்திலன் சிறியேன், கூனுடைக் குலைய குறுங்கழுத் தாம்பைக் கொழுங்கனி யிழிந்ததேன் கருப்பங், கானிடைப் பாயும் படுகர்சூழ் தெய்வக் கற் குடி மாமலைப் பரனே. (எ0)

பொருள்செய்சன் மார்க்க நெடுஞ்சக மார்க்கம் புத்திர மார்க்க மின் பாக்கு, மிருமைசெய் தாத மார்க்கமிம் மார்க்கத் தியானொரு மார்க்கமு மறியேன், பருமா கதமுத் தந்துகிர் கண்டம் பாளைசெம் பழத்தினாற் காட்டிக், கருமுகி லணவுங் கமுகடர் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எக)

கொச்சையர்க் குயர்மா னியுமர சினுக்குக் குலவுமப் பூதியு முலக, நச்சுசுந் தாருக் குதிபரும் போல நான்சிறந் துய்வதெந் நா ளோ, வச்சணங் கயில்வேற் கண்ணுழத் தியர்நெல் லரிதருங் கொடும் புற விரும்பைக், கச்சப வெரிநிற் றீட்டிடுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எஉ)

படர்புகழ்க் காழிப் பிள்ளையார்க் கிவனைப் பாரெனச் சற்றுநீ மொழிந்தாற், பிடகன்மாத் தலைபி ளுருமுவீழ்த் தவரென் பெருவினைக்கும்மது வீழ்ப்பா, ரடமடைப் பள்ளி யுலைக்கழு நீர்செய் யாவிகால் குளம்பல நிரம்பக், கடலுடைத் தென்னப் பாயுமென் பால்சூழ் கற்குடி மாமலைப் பரனே. (எங)

நயந்தரு நாவுக் கரசருக் கிவன்பா ளுட்டம்வை யென்னினப் பூதி, பயந்தசேய்க் குற்ற விடந்தொலைத் தவரென் பாசவல் விடத்தையுந் தொலைப்பார், வயந்தரு மள்ள ருடைப்பினை யூரு வரைகுவி நவமணி வாரிக், கயந்தலை யெனநின் றடைத்திடுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எச)

பழிதபு குணவன் றொண்டருக் கிவன்பாற் பார்வைசெ யென்பையேற் கராவாய்க், குழியினின் றொருசேய் மீட்டவர் சனனக் குழியினின் றென்னையு மீட்பார், வழிமதுப் பொழிபூங் கொடிகடாய் வளைப்ப வளைந்துபைங் கழைகணின் றிடுதல், கழிவில்கைக் கொடுவேள் பொரல்பொருங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எரு)

அருவமா புருவ மாயரு வுருவா யனைதனுயிராக குயிருமா யறிவாய்ப், பொருள்படு மறைக்குந் தெரிவரி யாயாயுபுராணைநிற் றெரிதலெற் கெளிதோ, சுருள்விரி யரம்பைக் குருத்துமீ யசைந்து சுரர்மினார் கலவியெய்ப் பாற்றுங், கருள்படு பொதும்பர்ப் படிகர்சூழ் தெய்வக் கற்குடி மாமலைப் பரனே. (எசு)

செவியினூற் கேட்டு மறிகிலே னின்னைத் தெரிந்தவர் போற்பல பிதற்றிக், குவிதரக் கவியும் புனைவனுன் னிடினென் குணமெனக் கேநகை தருமா, லவிருநெற் பணையின் றொண்டுகள் கிளைத்த வளவில் பல் வளையெலா நிரம்பக், கவிழிணர்ச் சூதத் தாதுகுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எஎ)

அருமறை தெரிதண் டீசர்பா லென்னை யடைக்கலம் புகுத்துவை யானுல், வெருவறத் தந்தை தாடுணித் தவரென் வெம்பவத் தாளையுந் துணிப்பார், மருவிய வுணவு கொடுவரச் சென்ற மடவனச் சேவலை நோக்கிக், கருவுயிர்த் துறைபே டலமருங்கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எஅ)

நானவார் கூந்தற் பரவையார் மனைக்கு நள்ளிரு ளுப்பணீ தூது, போனநா ளாரூர் மறுகிலோ ரெறும்பாய்ப் பொருந்தினும் வருந்திடாதுய்வேன், கூன்முது கிப்பி யுயிர்த்தவெண் முத்தங் குவிதரக் கயிலையே யென்று, கான்மலர் தூவிச் சுரர்தொழுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எகூ)

கெடுத்திடு முலோகா யதன்முத லான கீழ்ப்படுஞ் சமயர்பொய் யுரையை, யடுத்திடும் படியெப் பிறப்பெனக் குறினு மருளனின் னடிக் கன்பே யருள்வாய், மடுத்தவெண் குருகோர் முடக்கிழ நாரை வாய்க்

கொளு முணவினைத் தட்டக், கடுத்திடா தறவோர் போலுறை கணி சூழ் கற்குடி மாமலைப் பரனே. (அ0)

தரிசனங் கொடுத்தா ளுயர்ந்தவ னீயான் முழ்ந்தவ னியல்பி னெப்பொருளுந், தெரிபவ னீயா னீதெரி விக்கத் தெரிபவ னின் னடிக்கடியே, னரிசிதர்ந் தயில்கொன் முள்வழக் கறுக்கு மங்கனார் முகமதி கண்டு, கரிசறக் குமுத மலருமென் பால்சூழ் கற்குடி மா மலைப் பரனே. (அக)

பொருவினின் பூசை யென்னும்புண் ணியத்தாற் பொலிசிவ ஞா னம்பெற்றடங்கி, மருவுற மேல்கீழ் தருமறம் பாவ மாற்றிநின் னடிக்கணென் றுறுவேன், குருமலர்ச் செந்தேன் புலியடிப் பைங்காய்க் கோழரை யாம்பையைச் சாய்த்துக், கருநிறக் கவரி நீந்தப்பாய் கணி சூழ் கற்குடி மாமலைப் பரனே. (அஉ)

யானது செய்தேன் பிறரிது செய்தார் யானென தென்னுமிக் கோணை, ஞானவா ரழலால் வெதுப்புபு நிமிர்த்து நான்செவ்வே நிற்கவென் றருள்வாய், மீனுண வளித்து விரிசிறை நாரை மென்மடப் பெடையொடு திளைக்குங், கானகன் மென்பூந் தடத்தமென் பால்சூழ் கற்குடி மாமலைப் பரனே. (அங)

மூதறி வுடையோர் புகழ்சிறுத் தொண்டர் முளரித்தா ளடைந் திலே னடைந்தான், மேதகு சேயை யறுத்தவர் வெறுத்தென் வினை யினை யறுக்கவுஞ் சுவரோ, மாதர்மென் நடத்தில் வெள்ளிதழ்க் கமல மலரினை மடவனச் சேவல், காதலி னணைக்கப் பெடைதுயர் பணை சூழ் கற்குடி மாமலைப் பரனே. (அச)

பெருகிய வெள்ளந் திரைக்கட லன்றிப் பிபீலிவா ழளையினும் புகல்போ, லுருகிய வன்ப ரன்றியென் பாலு முன்னருள் புகுவது வழக்கால், பருதியா யிரமோர் கடலிடைத் தோன்றும் பான்மை போ லொவ்வொரு மடுவிற், கருதுசெங் கமலம் பலமலர் பணைசூழ் கற்குடி மாமலைப் பரனே. (அரு)

உயிரெலா நின்ன தடிமையெப் பொருளு முன்னுடை மைப் பொரு ளென்னச், செயிரற வுணர்ந்த நின்னடி யவர்தாள் சிறியனே னடைந்துய்வ தென்றோ, குயிலெனப் பேசுங் கடைசியர் வதனக் குறு நகை மதிநில வென்னக், கயிரவங் கருதி மலர்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (அசு)

பாவியேன் சிந்தை நின்னடிக் காக்கிப் பணிவிடைக் கிருகையு மாக்கி, நாவினைத் திருவைந் தெழுத்தினுக் காக்கி நவையற வுய்யுநா ளுளதோ, வாவியிற் பொலிவெண் டாமரை மலர்போன் மதியுறப் பெருக்கெடுத் தொழுகுங், காவிரிப் புனல்பாய் நெடும்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (அஎ)

மிடைத்தம ருடற்றும் பலகுண மறுத்து மிகுசிவா னந்தமூற் றெடுப்பக், கிடைத்துனைக் காண வாணவ வெழினி கீழயான் பெறுவ தெந் நாளோ, வுடைப்பினை மள்ள ரடைக்குமுன் வாரலவ் வுடைப் படை படவுடை மடையின், கடைத்தலை வெடிபோய் விழும்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (அஅ)

ஐந்துபே ரறிவும் பார்வையாய் முடிய வடுத்திடு காணமீ ரிரண் டுஞ், சிந்தையாய் முடிய நின்றிரு நடனந் தெரிசிக்கு நாளுமெற் குளதோ, விந்திர தருவோ ரளிக்குந்தே னளியா வியல்பினை நோக்கி வெண் மலராற், கந்தவார் பொழில்க ணகைக்கு மென் பால்சூழ் கற் குடி மாமலைப் பரனே. (அகூ)

பூப்பயி னந்த வனம்பல வியற்றேன் பொருந்தல கிடேனினு லயத்தி, லாப்பிகொண் டைதா மெழுகிடே னெங்ங னடியனே னுய்யு மா றருள்வாய், வீப்பயி லளிகண் மூக்குழ வழிதேன் விரிகடற் படு முவ ரகற்றுங், காப்பயின் மென்பான் மருங்குடுத் தோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (கூ0)

அவாவெனப் படுவ வெவ்வகை யுயிர்க்கு மணியவெவ் விடத்து மென்ஞ் ஞான்றுந், தவாவரு பிறப்பின் வித்தென வுணரேன் றன்னரு ளெங்ஙனம் பெறுவே, னுவாமதி தவழுஞ் சோலையி லிளைஞ ரொளிர் கத லியைமறை மாதர், கவானென வணைக்கு நெடும்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (கூக)

மலைக்கொடி படருங் கற்பக தருவே வயங்கருண் மழைபொழி முகிலே, புலைக்கொடி யனையா ளென்றுமெய் யாவிப் பொய்யினே னடையுநா ளென்றோ, நிலைக்கொடி யாட வுலகங்கொண் டாட நிறை மலர்ச் செங்கொடி யாடக், கலைக்கொடி யாடு மாளிகை பலசூழ் கற் குடி மாமலைப் பரனே. (கூஉ)

அற்குடி கொண்ட விரைநறுங் கூந்த லணிமுலை யெம்பிராட் டியையான், சொற்குடி கொண்ட யாப்பினு லன்பாற் றுதித்திடப் பெறுநன்று னென்றோ, விற்குடி கொளும்பொன் னுலகமேத் தெடு ப்ப வியனொளி குடிகொள்பன் மணியென், கற்குடி கொளச்செய் நற் குடி மலைதாழ் கற்குடி மாமலைப் பரனே. (கூந)

பல்லெலாந் தெரித்துச் சொல்லெலாந் துறுத்துப் பாட்டெலாம் பாடினீர் யாமு, மில்லெலா மாய்ந்தோங் கொடுப்பதற் கிலையென் னிவர்கள்பாற் புலவரென் பெறுவார், சொல்லெலாந் திருவைந் தெழுத் திவண் வாழ்வோர் தொழிலெலாம் பணிவிடை யென்றுங், கல்லெ லாஞ் சிவலிங் கம்மெனச் சுரர்தாழ் கற்குடி மாமலைப் பரனே. (கூச)

பொற்பக மலர்ந்த மாதரார் மையற் புணரியி லழுந்திடா துன க்கே, யற்பக மலர்ந்து சிவானந்தப் புணரி யழுந்திடு மாறெனக்

கருள்வா, யெற்பக மலர்ந்த குவட்டுறும் யானை யீர்ங்கவு ளளிகளைக் கையாற், கற்பக மலர்ந்த குழையொடித் தோச்சுங் கற்குடி மாமலைப் பரனே. (கூரு)

புவிமுழு தளந்தோ னேடியுங் காணுப் பொன்னடித் தாமரை காண்பான், குவிமனத் தோடு மகம்படித் தொண்டு கொண்டியா னுல் வதெந் நாளோ, வவிர்தரு பிறையைக் கண்டவில் வேட ரவாவொடு கொடிச்சியர் தமது, கவினுத லென்னப் பொட்டணிந் துவக்குங் கற்குடி மாமலைப் பரனே. (கூகூ)

மன்றினின் னடனங் கண்டகண் கொண்டு மற்றினிக் காண்பதி யாதென், றென்றிய சிந்தை யுறுதிகொள் ளுவனே னுய்குவே னென க்கது போதுங், குன்றவ ரெனற் குரல்களை யறைக்கட் கொண்டுபோ ய்க் குவித்தடும் யானைக், கன்றினுன் மிதிப்பித் துதிர்த்தினை யளகுங் கற்குடி மாமலைப் பரனே. (கூஎ)

நனியிடை யறும லுன்னடி நினைக்க நாயினேற் கருளுவை யாயி, னினிவரு கதிரெங் கெழினுமெண் ணேன்யா னிருப்பனீ தருளிட வேண்டுந், துனியறு களிற்றின் கோடுபட் டுடைந்து சுட்டபொன் போற்பல வருக்கைக், கனிபழங் கீண்டு சுளைபல வுதிருங் கற்குடி மாமலைப் பரனே. (கூஅ)

நீதிசேர் சைவத் தடைந்தவ ரடையா நின்றவ ரடைபவர் தமக் கியான், பாதகக் குழிசித் தொடர்பற வடிமைப் படும்பரி சென்றுநீ யருள்வாய், கோதில்கற் பகத்தி னறுங்குள கருத்திக் கொழுமத யானையங் கூந்தற், காதலம் பிடியைப் புலவிதீர்த் தணைக்குங்கற்குடி மாமலைப்பரனே. (கூகூ)

சைவமே பொருண்மற் றவையல வென்று சார்திரு நீறுங்கண் டிகையுந், தெய்வவைந் தெழுத்தும் பற்றறப் பற்றத் திருவரு ளென் றெனக் கருள்வாய், பைவளர் மணியைத் தழலென நினைந்து பாவடிப் பருமகல் வேழங், கைவளர் கடநீர் மழையெனப் பொழியுங் கற்குடி மாமலைப் பரனே. (க00)

---

வெண்பா.

நிலமாலை கொண்ட நெடுஞ்சடையி லென்பின்
குலமாலை யுஞ்சேர்த்துக் கொண்டாய் - பலமேலோர்
சொன்மாலை கொள்செவியிற் றாக்கற் குடியாயென்
புன்மாலையுங்கொளது போல்.

கற்குடிமாமலைமாலை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருவாவடுதுறை ஆதீனத்து

# ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர்

# நெஞ்சுவிடுதூது.



## காப்பு.

வரமணிமா டத்தா வடுதுறைவா ழுஞ்சுப்
பிரமணிய தேசிகன்பாற் பெட்புற் - றுரமணியி
னுய்ந்துதஞ்ச மாயொருகோட் டண்ண லருட்கிலக்கு
வாய்ந்துநெஞ்சே தூதுசென்று வா.

---

## நூல்.

க. பூமேவு செங்கமலப் பொற்றவிசின் மேயவனா
மாமேவு மார்பினெடு மாயவனா - மோமே

உ. வரும்பொருட்பே றெய்து மருண்ஞான சித்தி
தருங்கரும பூமியெனச் சாற்ற - லொருங்குணர்ந்து

ங. நால்வேத மோது நகுநீற்று லைந்துபதத்
தால்வேறு மம்மனையென் றாயாமே - மேல்கீழு

ச. மன்னமு மேனமு மாய்ப்பறந் தும்புகுந்து
மின்னமுங் காணா வியல்பினான் - முன்னமே

ரு. பாசங் கலந்த பசுக்களி லோர்வகைக்கா
நேசங் கலந்த நிகழ்ச்சியால் - வாச

சு. மனையு மிதழிமதி யஞ்சடில முன்னா
வினையும் பலவும் விலக்கி - வனையும்

எ. பிறைதவழு மாடமலி போரா வடுதண்
டுறைதவழும் புண்ணியத்தாற் றோற்று - மிறைவ

அ. னொருமா னெமக்கொளிக்க வோர்கை யமரு
மொருமா னொளித்த வொருவன் - பெருமான்

கூ. மதிமறைத்த மாசெமக்கு மாற்றி யருள
மாசடையா வள்ள -

௧0. மிருள்கண்ட யாமவ் விருள்காணு வண்ண
மிருள்கண்டங் காட்டா திருப்போன் - பொருள்கண்ட

௧௧. மானிடனே யென்ன மருவி யிருந்தாலு
மானிடனே யென்ன வயங்குவா - னீனவுல

௧௨. காயதனைங் கந்த மறுப்பவரொன் றல்லாமுட்
டேயதரென் பார்பாறு மென்பாருஞ் - சேய்மையிற்கண்

௧௩. டாலுமிரு கைதலைமே லாக்கிமன நெக்குருகிச்
சாலும்வணக் கஞ்செய் தவாச்சிறப்பான் - வேலாசர்

௧௪. தன்னடிநீ ழல்வைகத் தாவாத் திருவரசின்
மன்னடிநீ ழல்வைகு மாதேவன் - றுன்னடியார்

௧௫. நந்தான மென்கயிலை நந்திமுதன் மெய்கண்டான்
சந்தான மோங்கத் தழைத்தருள்வோன் - முந்தான*

௧௬ - ௧௯. ... ... ... ...

௨0. எண்ணி யுழலு மிருளகற்ற வெங்கள்பா
னண்ணிய யமரு நகுபரிதி - கண்ணிய

௨௧. வாலங் கலந்தசுவை யாரமுத மானாலு
மாலங் கலவாத வாரமுதஞ் - சாலு

௨௨. மறப்புக் குணத்தை மருவியுழ லெங்கள்
பிறப்புத் தபப்பிறந்த பெம்மான் - சிறப்புறலாற்

௨௩. பொன்னை யினிதளித்துப் போகவென்று தெங்களுக்குத்
தன்னை யினிதளிக்குந் தம்பிரான் - முன்மறைத்த

௨௪. தொன்றேயென் றோதி யொழித்தெம்மை வேறுபடுத்
தொன்றே யருள்புரியு மொன்றுறு - னன்றமேதோர்

௨௫. கற்றூர் புரிபிழையுங் கைகுவித்துக் கூப்பிடுத
லற்றூர் குணமு மறமறப்பான் - பற்றுச்

௨௬. சுரவடிவி லெங்கண்மனந் தோயாமை யெண்ணி
நரவடிவங் கொண்டுவந்த நம்மான் - விரவுபுழு

௨௭. மென்பயிர் போல விடயத் தரிப்புண்டு
துன்புறுவேங் கட்கோர் துணையானு - னன்பமையு

௨௮. நாதாந்த முத்தியருண் ஞானவினோ தன்றெளிவாம்
வேதாந்தன் பேறென்றும் வேண்டாதான் - போத

---

* இதற்குப் பின்னுள்ள ௪-கண்ணிகளடங்கியபகுதி ஏட்டிற் சிதைந்து போய்விட்டமையாலும் வேறு பிரதி அகப்படாமையாலும் அவை இங்கே பதிப்பிக்கப்படவில்லை.

உக. நரனென் றிருந்தாலு ஞானமிலா தாரு
மரனென் றறிய வவிர்வா - னுரனுடைய

௩0. வல்லரக்க னேற்று மலையாத தாய்ப்புரத்தி
னெல்லரக்க வாங்க வியலாதாய்ச் - சொல்லரக்கு

௩க. மிக்க புகழாழி மேவிச் சுழலாதாய்ப்
பக்க மரியப் படாததாய்த் - தொக்ககய

௩உ. லாழி கரவாதா யான்ற தமிழ்முனிகைப்
பாழியறிந் தஞ்சப் படாததாய் - வாழி

௩௩. பொறையருவி யெஞ்ஞான்றும் போற்றிவறந் தாலு
நிறையும்வள நல்கு நிலைத்தாய் - மறைபுகல

௩ச. வாய்ந்ததரு வைந்தோ டழகியசிந் தாமணியும்
வாய்ந்த பெருங்கருணை மாமலையான் - றோய்ந்தகா

௩ரு. ரணவந் தீர்ந்த வறிவாங் குறிஞ்சியெனு
நீணவ மாயநில நின்றெழுந்து - காணவெழு

௩௬. காமமெனும் பாலை கடந்தேறி மாயையெனு
நாமநெடு முல்லை நகப்புகுந்தே - யேமமென

௩எ. வுற்ற பசுக்கவர்ந்தாங் கோங்காய ராயவைவர்
முற்ற வுஞற்றுதொழின் மோதியே - செற்ற

௩அ. வுளமா மருதநிலத் துற்று விடயக்
குளமாய வெல்லாங் குலைத்துத் - தளமாருங்

௩௯. கண்ணுய நெய்தல் கலந்துமலக் கட்டுற்று
ரண்ணுமே யெவ்விடனு மாய்ப்பெருகி - யெண்ணு

ச0. நிலமா விசும்பு நிறைந்தென்றும் வற்று
நலமாமா னந்த நதியான் - புலமாரு

சக. முப்பகுதி யாயவுயிர் முத்தி பெறவாழு
மூப்பகுதி மாயை முழுநாடன் - செப்பரிய

சஉ. மெய்யாய வன்பர் விடயக் கரவுருறல்
செய்யா மனமாந் திருநகரான் - கொய்யா

ச௩. யனைமல ராளி மனச்சாலை நின்றும்
வினையகால் வாயில் வெளிப்பட் - டினைசிறந்து

சச. மண்ணக மெல்லா மருவிப் பரந்தோடி
விண்ணக மெல்லாம் விராய்த்தாவி - யெண்ண

சரு. வொருநாட்டிற் காடா யுறைகுவதல் லாம
லொருநாட்டில் வெற்பா யுறைந்தும் - பெருநாட்டி

௪௬. வேலையைபோல் வெங்புறத்தி லேந்துவதல் லாதுதலை
மேலை யுறாது மிகத்தரித்துஞ் - சோலைக்

௪௭. கடலுலக மீர்த்துக் கடுகி நடக்கு
முடலின் மறைப்பரிமா வுள்ளா - னடல்சேரு

௪௮. மூலமல வேரென்னு மொய்கூர் தறிமுறித்துச்
சால மலமாந் தளையறுத்து - ஞாலமுத

௪௯. லாறாறு தத்துவ மாய படைதுரந்து
மாறாத கன்ம மாஞ்சாய்த்துக் - கூறு

௫௦. மனமாம் பரிமாவை மாய்த்துமத வேள்கைச்
சினமாங் கரும்பொடியச் சீறி - யினமாங்

௫௧. குடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு தோலு - மிடையிடையே

௫௨. வைத்த தடியும் வழும்பும் வெளித்தோற்ற
மொய்த்த கருந்தோலின் மூட்டொழியக் - கைத்து

௫௩. மடமா தனைமிதித்து வைத்த சமயத்
தடமார் படுகுழிசா ராம - விடமார்

௫௪. குறையாத வானந்தக் கொள்ளைநீ ராடி
மறையா கமமா மணிக - ணிறைய

௫௫. விருபாலுந் தூங்கி யிரட்ட வெழுந்து
வருபான்மை ஞானமத மாவா - னொருநான்கு

௫௬. சொல்லாய பூவைச் சுவையாய தேனெழுகப்
புல்லா வழுவாய புல்லியெலா - மில்லாமற்

௫௭. கற்று நிரம்பாக் கவியாங் கவிகளெலா
முற்று வருத்தா வுரவடையா - முற்றுமுணர்

௫௮. ரான்றோ ரெனச்சொ லளிக்கணங்கண் மொய்த்தலையச்
சான்றோர்சொ லன்பாந் தருநாரால் - வான்றோயுஞ்

௫௯. செந்நா வெனுங்கரத்தாற் சீர்தொடுத்து வாட்டமொன்று
மன்னு வகையமைபா மாலையான் - பன்னயமார்

௬௦. சித்தாந்த சைவமொன்றே தேற்றமற் றுள்ளவெலாம்
பித்தாந்த மென்றெடுத்துப் பேசுதல்போ - லொத்தபல

௬௧. வண்டாடு மாலையொடு மண்ணின்று வான்கிழித்துக்
கொண்டாடு காவிக் கொடியாளன் - றொண்டர்

௬௨. கடியாத பேரொலியாய்க் கற்றோராற் சொல்லி
முடியாத நாத முரசான் - குடியாகுந்

௬௩. தானமல ராளிமுன்னோர் தங்களைக்கொண் டைந்துதொழி
லானவைநன் காற்றுவிக்கு மாணையான் - ஞான

௬௪. வரமணிய வாவினரே வாஞ்சித் திடுஞ்சுப்
பிரமணிய தேசிகனெம் பெம்மா - னூரமா

௬௫. ரொருநமச்சி வாய னுயர்நமச்சி வாயன்
குருநமச்சி வாயனெங் கோமா - னருள்சான்

௬௬. மகர மதியின் வயங்குமுத ளுளி
னிகரிலபி டேகமுத னீடும் - புகரிலா

௬௭. வாரா தனங்கொண் டருளிமறு நாட்பகலி
லோரா ரடியவரெண் ணில்லாரோ - டோருமமு

௬௮. துண்டுளார் யோகசித்தி யுற்றுளார் ஞானசித்தி
கண்டுளா ராவரெனக் கைகுவித்து - மண்டிவரு

௬௯. மான்றவடி யாரோ டறுசுவை யாரமுது
தோன்ற வினிதுகை தொட்டருளிச் - சான்றவரு

௭0. ணூலை யினிது நுனித்தமதி யார்க்குப்பின்
வேலை முழுதும் விரித்தருளி - மாலைவா

௭௧. மாமுனிவர் தூய்மை மருவுநறு நீராட்டி
யேமுறுமெய் யொற்றுடை யிட்டதற்பின் - காமன்வலி

௭௨. வென்றதிறங் காட்டி விளங்குறுகற் றோயாடை
யொன்ற வரையி லுடுத்தருளி - நன்றமையு

௭௩. மாதனத்து மேவி யருகமரும் வட்டகையின்
மாதனத்தி னூறும் வயங்குவதாய் - மோதும்

௭௪. பசுமலநீ றுக்கியுயர் பண்பே யருளப்
பசுமலநீ றுக்கியமை பண்பாய் - வசுவி

௭௫. னடுத்தவையெல் லாம்புனித மாக்குந்திரு வெண்ணீ
றெடுத்தவை யவங்குலவ வேற்றி - விடுத்தசுட

௭௬. ரொன்பான் மணியு மொளிர்தருசிந் தாமணியும்
வன்பார் கவுத்துவ மாமணியு - மன்பி

௭௭. லொருதிரண மாக்கு முருத்திராக் கங்கள்
பொருவில் சிரமுதலாப் பூண்டு - கருது

௭௮. மிருவ ரழுக்கறுப்ப வேற்றசடா மோலி
யிருவரிரு கைகொடுப்ப தேற்றே - யொருவரினி

௭௯. தெங்கண் மணிமோலி யென்னவொளிர் பாதுகைமற்
றங்கணெதிர் வைப்ப வவற்றிவர்ந்து - துங்க

௮0. முரசு முழவ முருடு திமிலை
பரசு தடாரி படகம் - விரசு

௮௧. பலவு மெழுந்து பரம்பி முழங்க
நிலவு பிறவு நிகழக் - குலவு

௮௨. திருவா வடுதுறைவாழ் செல்வன்வந்தா னெம்மு
னொருவா வொருவன்வந்தா னுற்றோர் - மருவு

௮௩. பிறப்புமுழு தொழிக்கும் பேராளன் வந்தான்
சிறப்பருள் செம்மல்வந்தான் றிண்பா - றுறப்புகுந்த

௮௪. துங்க மலிஞான சூரியன்வந் தானுயிரின்
பங்க மறுக்கும் பரன்வந்தா - னெங்கள்

௮௫. குருசாமி வந்தான் குணக்குன்று வந்தா
னருண்ஞான மூர்த்திவந்தா னன்பர் - பெருவாழ்வாந்

௮௬. தம்பிரான் வந்தான் றழைசுப் பிரமணிய
நம்பிரான் வந்தா னலமாரு - மெம்பிரான்

௮௭. வந்தான்வந் தானென்று மாண்பார் திருச்சின்ன
நந்தா வொலியெழுப்பி நன்குவா - முந்தா

௮௮. தாம்பெருக வாலவட்டந் தாலவட்டம் பற்றி
வாம்பெருக வோர்பான் மலிய - நிரம்பு

௮௯. முழுமதிய மேலமர்வான் முந்திமுயன் றென்ன
வெழுகவிகை செய்யுநிழ லேய்ப்பத் - தழுவு

௯0. பெரும்புகழ்வெவ் வேறுய்ப் பெயர்ந்து பெயர்ந்து
விரும்பலுறத் துள்ளும் விதம்போ - லரும்பு

௯௧. பவளக்காற் சாமரைகள் பற்பலவு மொய்த்துத்
திவளத் தலைபணிப்புச் செய்ய - விவளவெனுக்

௯௨. கோணாத தண்டமொடு கோணலுறு தண்டமு
நாணுறு நீங்கா நலங்காட்டப் - பேணு

௯௩. வலர்மகர தோரணங்க ளாயு மொலியல்
பலவு நெருங்கிப் பரம்பக் குலவுதிற

௯௪. லோதுவார் பல்லோ ரொருங்குதே வாரங்க
ளோதுவா ராய்த்தாள மொத்தமொடு - போதவெளி

௯௫. வந்து மணிச்சிவிகை வாயோர் களங்கமிலா
விந்துநிறைந் தென்ன வெழுந்தருளி - முந்து

௯௬. மனைதுறந்தார் செஞ்சடிலம் வைத்தாரம் நின்றி
நினையு மழித்தலுற்ற நீரார் - புனையுமனைக்

கூஎ. கீழொடு மேலவணத்தார் மேதிகைபாத்திரத்தா
ராமொடுவாழ் வாயில் லறத்தமர்ந்தார் - நாளுஞ்

கூஅ. சரியை கிரியை தவயோக ஞானம்
விரியவனுட் டிக்கும் விருப்பார் - தெரிய

கூகூ. வுலகம் பழியா துறுவேடம் பூண்டா
ருலகம் பழிக்க வுவப்பா - ரிலகு

க00. திரிபுண் டரத்தார் திகழ்கண் மணியார்
விரிதரவுத் தூளனமே மேயார் - பரிபு

க0க. மானடியார் தொண்டி னமைந்தா ரனவாச்
சுரர்புகழ்கோ யிற்பணியே சூழ்வார் - விரவு

க0உ. மடியாருக் கன்னமுத லாதரித்து நல்கு
நெடியார் தியான நிறைந்தார் - கடியார்

க0ங. மலர்தொடுப்பார் தீபம் வயக்குவார் மற்றும்
பலர்புகழுஞ் சாத்திரங்கள் பார்ப்பார் - நிலவுபொரு

க0ச. ளாய்வார் வினவுவா ரங்கைகொட்டி நட்டமிட்டுத்
தோய்வாரா னந்தத் தொடுகடலில் - வாய்வார்

க0ரு. துதியா ரயன்முதலாச் சொல்லும் பிறரை
மதியா ரருளே மதிப்பார் - கதியா

க0சு. ரிவர்மு னெனவொரு பேதிக்கை கூப்பிக்
கவரடையா நெஞ்சங் கரைந்து - சிவசிவவென்

க0எ றார்ப்பாரோர் சில்லோ ராகாவென் றுனந்தம்
போர்ப்பாரோர் சில்லோர் புடைநெருங்க - வேர்ச்சிவிகை

க0அ. செம்மையுறு காட்சிச் சிவிகை கொடுத்தடைந்தார்
தம்மை யியக்குவார் தாங்கிவர - வெம்மைக்

க0கூ. கதிர்பன் னிருகோடி காணவெளிப் பட்ட
முதிர்விற் பெருந்தீப மொய்ப்ப - வதிர்சிலம்பிற்

கக0. பொன்னங்கொம் பன்னார் புகுந்துநீ ராசனஞ்செய்
தன்னம் பெயர்ந்தாங் கயலொதுங்க - புன்னம்

ககக. விரைமலர்கள் சிந்தி விரைச்சாந்தம் வாரிப்
புரையறப்பெய் வாரும் பொலிய - வுரைசிறந்த

ககஉ. மெய்கண்டான் சந்ததிக்கு மேன்மேல் விளக்கமுறப்
பெய்கண்டா னுய பெருமானே - வையம்

ககங. புகழ வருங்குரவர் போதேறு ஞானந்
திகழ வவதரித்த தேவே - யிகழ்வில்

ககச. வரமணியே யெங்கள்பெரு வாழ்வே யருட்சுப்
பிரமணிய தேசிகனே பெட்பி - னுரமணிய

ககரு. முன்னமே செய்தோ முயங்கு தவத்தையினி
யென்ன குறையுடையோ மென்பாருஞ் - சொன்னகதிர்

ககசு. முன்னமிரு ணின்றூலு முற்று முணர்ந்தோய்நின்
முன்னமிரு ணில்லாது முற்றுமென்பார் - நன்னயமார்

ககள. சித்தாந்த சைவமன்றிச் சேரமற் றுள்ளவெல்லாம்
பித்தாந்த மேலும் பிறப்பென்பா - ரித்தரணி

ககஅ. பெற்றபே றுண்டோ பெருவானி னீயயில
லுற்றநா ளாதி யுனையென்பார் - கற்ற

கககூ. குருமணிநீ யாரையுமாட் கொண்டு புரக்க
வருமணியோ வென்று வகுப்பார் - பெருகொளிசால்

கஉO. விண்மணியே ஞான விளக்கே யடியேங்கள்
கண்மணியே யென்று கரைதருவா - ரெண்ணுமுழு

கஉக. மாயப் பெருஞ்சாரு வாகன்முத லோருமரு
ளேயப் பொலிவா ரினியென்பார் - தோயும்

கஉஉ. பகுதி யளவே பகரைந் திரவோர்
தகுதிவெண்ணீ றென்றணியச் சார்ந்தார் - மிகுதி

கஉங. புனியா மெடுத்திங் குரைப்பதெவ னெல்லா
மினிமாறில் சைவமே யென்பார் - நனிபுரியும்

கஉச. வேலையொழிந் தான்பிரமன் வெய்ய நரகிலிடும்
வேலையொழிந் தானியமன் மேன்மேலுஞ் - சாலவருள்

கஉரு. வீசி யனைத்துயிர்க்கு மெய்ச்சுப் பிரமணிய
தேசிகன் செய்யுந் திறத்தென்பார் - மாசி

கஉசு. றிருவா வடுதுறையே திக்கனைத்தும் போற்றப்
பொருவாத தென்று புகல்வா - ரருள்சான்மா

கஉள. சில்லா மணியேமற் றிச்சுப் பிரமணியீ
தல்லா துரைப்பதுள தாங்கொலென்பார் - வல்லபிரா

கஉஅ. னெற்றிக்க ணீத்தமரு நேய மெவனென்பார்
பற்றிக் கரும்புகொடு பையவந்து - முற்றி

கஉகூ. யொருவே னுடற்றுமை யோர்ந்தென்பா ரம்மை
யிருவாள் விழியுமிரு கையாற் - பெருகப்

கஙO. புதையாமை தேர்ந்தென்பார் பொங்குதலை மாலை
யதையே யொழித்ததென்பா ராவா - கதைமாலும்

௧௩௧. பங்கயனு முன்போற் பரனும் பரனுமென்
சங்கையடை யாமையாற் றானென்பார் - பொங்கு

௧௩௨. மதியொழித்த தென்னென்பார் மாசிலா ருக்கே
கதியருளற் கென்று கரைவார் - பொதியு

௧௩௩. மிதழி மணந் தோளிலுறு தென்னென்பார் செவ்வா
யதுகமழ்த லாலென் றறைவார் - முதுமானென்

௧௩௪. றோட்டி விட்டதென் னென்பா ரோட்டிவிடா னேனுயிர்கள்
வீட்டி லுறலெவ் விதமென்பா - ரீட்டமுறு

௧௩௫. மாசடையா னென்னும் வழக்கிலையென் பாரொன்று
மாசடையா னென்னல் வழக்கென்பார் - பேசுமொரு

௧௩௬. தோகையிடப் பாலனெனச் சொல்லாமென் பாரணைசூழ்
தோகையிடப் பாலனெனச் சொல்லுமென்பார் - வாகை

௧௩௭. பரசுகைக்கொள் ளாத படியெவனென் பார்நம்
பரசுகைக்கொள் ளும்பரனே யென்பார் - விரசு

௧௩௮. மருள்விடங்கண் டங்கழித்த வாறென்னே யென்பா
ரருளமுதங் காணென் றறைவார் - தெருளுரு

௧௩௯. மடிநிலந் தோய்குவதென் னுமென்பார் தோயா
விடினியமன் றண்டநம் மெய்யின் - முடியப்

௧௪0. படுமே யஃதுணர்ந்து பாரீரோ வென்பா
ரிடுமாறு சென்னிவைம்மி னென்பார் - வடுவரிய

௧௪௧. னென்பதெவ னென்பார்மெய் யேகம ருள்ளிருந்
தன்பி னமுதுசெய்த தாலென்பா - ரின்பமிகு

௧௪௨. மிந்தவிதம் யாரு மியம்பித் துதித்துவரப்
பந்த மகற்றும் பவனிவந்தா - னந்தப்

௧௪௩. பொழுதொருநன் னெஞ்சமே போதுவா ரோடு
தொழுதுவரு மாறு துணிந்தே - யெழுதுமெழில்

௧௪௪. வீதியிடைப் போந்தேன் விசயன் குனிசிலையான்
மோதி யிடுவதுள முன்னுறு - யோதிப்

௧௪௫. பணிமலர்கள் சாத்தியிரு பங்கயக்கை கூப்பி
முனிவுதவிர்ந் தேத்து முடியுங் - கனியு

௧௪௬. நெருப்பைக் கரந்திருந்து நீறுகா வாது
விருப்பைச்செய் கின்ற விதத்தா - லொருப்படு

௧௪௭. காரணத்தைக் காட்டாது காரியத்தைக் காட்டுமெனத்
தாரணியோ ரோதத் தகுநுதலும் - வார்புனற்பூ

௧௪௮. வொன்றை மலர்த்துமற் றொன்றைக் குவித்தல்செயா
தென்று மலர்த்து மிருவிழியு - நன்றுமையாள்

௧௪௯. கூந்தன் மணத்திறனுடு கொள்ளா தடியரன்பாஞ்
சாந்த மணங்கொ டனிமூக்கும் - போந்தோ

௧௫௦. ரியற்பகையார் பான்மனையை யீதியெனக் கென்ற
தயர்த்ததிரு வாயு மமையப் பெயர்த்துமிழும்

௧௫௧. வேடரெச்சி லூனடங்க மெல்லுந் திறந்தீர்ந்தும்
வாடலற்றுத் தோன்று மணிநகையுங் - கூடுபுர

௧௫௨. மூன்று மவிய முகிழ்க்குந் திறமயர்த்துத்
தோன்றுஞ் சிரிப்புந் துணிபமைய - வான்ற

௧௫௩. வொருத்தி பதித்த வுகிர்க்குறிகாட் டாது
திருத்தியக போலமுமான் சீறிப் - பொருத்தும்

௧௫௪. பரவொலி யேலாது பற்று வடியேம்
பரவொலியேற் குஞ்செவியும் பண்டே - விரவுறுமை

௧௫௫. வண்ண வடிவொழித்து வாட்டந் தவிர்த்தருளோர்
வண்ணவடி வோடமரு மாமுகமும் - பண்ணமையும்

௧௫௬. பூணின்ப லொத்தெனப் போற்றற்கிடங்கொடா
தேணி னமைந்த வெழிற்கழுத்து நாணின்றி

௧௫௭. யேமாலை யென்ன வெழும்பணியா தெங்கள்வாய்ப்
பாமாலை சூடும் பணைத்தோளுங் - காமருமால்

௧௫௮. கண்காணி னுணக் கலங்கொள்வி லுண்மைநிலை
யெண்காணக் கொண்ட வெழிற்கரமு - மண்கா

௧௫௯. ணொருகுறியு மில்லென் றிருகுறி யுற்று
வருதிறங்காட் டாதவகன் மார்பு - மொருவர்

௧௬௦. மழவையரிந் தூட்டவெழும் வன்பசி தோற்று
வழகின் வயிறு மமையப் - பழகதனுந்

௧௬௧. திக்கும் பிணங்கத் திகழுங்கற் றோயாடை
நக்கு விளங்கு நலத்தரையும் - பக்குமலம்

௧௬௨. விண்டொழியக் கூற்றுவன்போல் வெவ்வா ளரக்கன்போற்
றண்டுதல்செய் தோவாத் தளிரடியுங் - கண்டுநனி

௧௬௩. யாசைப்பட் டேனெஞ்சே யந்தோவக் காரணத்தா
லாசைப்பட் டேனெனநா னாயினேன் - றேசுறமு

௧௬௪. னன்னங்கா ணுனைக்கண் டாரா மயக்கம்பூண்
டன்னங்கா ணுதவனே யாயினேன் - முன்னமொரு

௧௬௫. கோலங்கா ணானைக் குறுகியிரு கைதொழுது
கோலங்கா ணாமை குறுகினேனன - சால

௧௬௬. வளையாழி மாற்கீந்த வள்ளலைக் கண்டு
வளையாழி தோற்றுமனை வந்தேன் - விளையுமொரு

௧௬௭. காய்வெறுக்கப் பட்ட தகையானைக் கண்டடைந்து
காய்வெறுக்கப் பட்ட தகையானே - னாயுர்

௧௬௮. தனியானைக் கண்டு தனியாயி னேனென்
றுனிநீர நெஞ்சே சொலக்கேண் - முனியாமன்

௧௬௯. முன்னு மவனை முயங்கும்வகை நீபுரிவாய்
மன்னுமுனைப் போன்றதனை வாய்க்குமோ - பன்னுபல

௧௭௦. வேதாக மங்கள் விதித்த விதியனைத்து
மேதாகு நீயியைவ தில்லையெனின் - மீதாரும்

௧௭௧. போக மிருநான்கு முன்னை வயப்படுத்தற்
காக முயலுவன வல்லவோ - போகமுறு

௧௭௨. தன்மைக்குஞ் செய்யுந் தவத்திற்குங் கற்றுணரு
நன்மைக்குங் கொள்ளுமொரு நட்பிற்கும் - வண்மைக்கு

௧௭௩. மீகைக்கு மோர்த னியல்புணர்ந்து முத்திபுண
போகைக்கு நீயே யுறுதுணைகா - ணாகையுறு

௧௭௪. மில்லறத்தா ரைத்துறவி லேற்றுவிப்பாய் மெய்த்துறவா
நல்லறத்தா ரைக்கீழ் நணுகுவிப்பாய் - சொல்லு

௧௭௫. மறத்தைமற மாக வமைப்பாய் கொடிய
மறத்தையற மாக்குதற்கும் வல்லாய் - சிறப்பி

௧௭௬. னொடுக்குதலே முத்தி யுனைப்பொறிவா யோட
விடுக்குதலே பந்தவினை மேலு - நடுக்குதலற்

௧௭௭. றன்னா லுயர்ந்தவரை யுன்னா விழிந்தவரை
யென்னா லளவிடுதற் கேயுமோ - பன்னாளு

௧௭௮. மெம்மேனி யேனு மெடுத்தந்தி வானநிகர்
செம்மேனி யாளிவரச் செய்குவா - யம்மாநற்

௧௭௯. றில்லைவா ழந்தணர்மா தேவ னொடுங்கலவ
வொல்லை யுயர்ந்ததுவு முண்மைநெறி - வல்லபெருங்

௧௮௦. கோளாளர் நீலகண்டர் கோதை யொருத்திபுகல்
சூளா விளமை துறந்ததுவும் - வாளா

௧௮௧. ரியற்பகையார் தம்மனையை யீயேனென் னாது
மயற்பகையை நீத்துயர்ந்த வாறு - மயர்ப்பி

௧௮௨. விளையான் குடிமாற ரெய்தி யிருளின்
முளைவாரி யன்னமிட்ட மொய்ம்புங் - கிளையோ

௧௮௩. டமர்மெய்ப் பொருளா ரடாதந்தோ தத்தா
நமரென் றிடைவிலக்கு நண்புஞ் - சமர்செய்விறன்

௧௮௪. மிண்ட ரடியாரை மேவாது போகியவன்
றொண்டர்புறம் பென்னச் சொலுந்துணிபு - மண்டர்பிரா

௧௮௫. னேரேயோர் தட்டிலமர் நீதியார் பல்பொருளோ
டாராய வேறி யமர்ந்ததுவும் - பாரா

௧௮௬. வெறிபத்தர் சீறி யிபமாதி மாய்த்து
மறிவற் றுயர்ந்தபெரு மாண்புங் - குறிபெற்ற

௧௮௭. வேனாதி நாத ரிரும்பகைவ னெற்றியினீ
றானாமை கண்டுருகி யஞ்சியதும் - வானார்

௧௮௮. கலைமலிந்த கண்ணப்பர் கண்ணிடந் தப்பு
நிலைமலிந்து பெற்ற நிலையு - முலைவில்

௧௮௯. கலையர்மனை மங்கலப்பொன் கைக்கொடுநெற் கொள்ளார்
மலைவி றுணிபுற்ற மாண்பு - நிலைவளங்கூர்

௧௯௦. கஞ்சாறர் மாவிரதர் கையின் மகள்கூந்த
லெஞ்சா தரிந்தெடுத் தீந்ததுவும் - வஞ்சவரி

௧௯௧. வாள்கொண்டு தாயனார் வண்கழுத்து வேருக்குங்
கோள்கொண்டு நின்ற குணச்செயலுந் - தாள்கொண்ட

௧௯௨. வானாயர் கொன்றை யணைந்துருகி யஞ்செழுத்துந்
தானாய வோசைசெவி சார்த்தியது - மானாதை

௧௯௩. சீர்த்திபெறு மூன்றே சிறப்பத் தழீஇக்கொண்டு
மூர்த்தியுல காண்ட முறைமையு - மார்த்தி

௧௯௪. முருகர்திரு மாலையான் முன்னோ னருளுக்
கருகரா யுற்ற வறனும் - பெருகிப்

௧௯௫. பாவுருத்தி ரப்பேர்ப் பசுபதியார் நீரில்
விரவுதவஞ் செய்த விதமு - முரவிற்

௧௯௬. றிருநாளைப் போவார் திருத்தில்லை மன்றுள்
வருநாட்போய்ச் சேவித்த வாறு - மருவு

௧௯௭. திருக்குறிப்புத் தொண்டர் சிராவணத்திற் சென்னி
விருப்பறமோ துற்ற விதமுங் - கருப்பறிக்குந்

௧௯௮. தண்டீசர் தந்தையிரு தாடுணிய வீசுமழுக்
கொண்டீசர் சார்பிற் குறுகியது - மண்டர்புகழ்

கசகக. நாவரசு நீற்றறையு ணண்ணியிருந் தாலமுண்டு
மேவுகட னீந்திய வித்தகமும் - பாவு

உ00. குலச்சிறையார் யாரையுங்கை கூப்பிப் பணியு
நலச்சிறைசார் புற்றசிவ நண்பும் - வலத்த

உ0க. மிழலைக் குறும்பர் வியப்புறுமெண் சித்தி
யழகிற் பயின்ற வடைவுங் - குழகமைந்த

உ0உ. மாதுருவ நீத்து வருகாரைக் காலம்மை
பேயுருவங் கொண்ட பெருங்கோளுந் - தீதுதீ

உ0௩. ரப்பூதி யன்ப ரரசடிக் கன்புசெய்து
செப்பூதி யங்கவர்ந்த சீர்மையுந் - தப்பாத

உ0ச. நீலநக்கர் தம்மனையை நீத்திட் டானருள்பெற்
றேலவமைத் தின்புற் றிருந்ததுவுஞ் - சாலநமி

உ0ரு. நந்தி யடிக ணைகுகுளத்து நீர்மொண்டு
முந்தி விளக்கெரித்த மொய்வலியுஞ் - சந்த

உ0சூ. வருண்ஞான சம்பந்த ரங்கமா தாகத்
தெருண்ஞான வாய்மலர்ந்த சீரும் - பொருவில்கலிக்

உ0எ. காமர் வயிற்றிற் கருவி கொடுத்தி
யேமவருள் பெற்ற விருந்திறனும் - பாமருவு

உ0அ. மூல ருடம்பொழிய மூவா யிரவருடங்
கோலவா சின்கீழ்க் குலாவியதுஞ் - சாலவுயர்

உ0கூ. தண்டி யடிக டவாக்குளத்தி னீர்முழுகி
யண்டி விழிபெற் றமர்திறனுந் - தொண்டினியன்

உக0. மூர்க்கனார் சூது முயன்றடி மெய்யடியார்
யார்க்கு முவகை யருண்மாண்பும் - பார்க்குளுபர்

உகக. சோமாசி மாறர்வன் றொண்டர்க்கே யாளாகித்
தாமாறி வின்பந் தழைந்ததுவும் - போமாறென்

உகஉ. றில்லாத சாக்கியனா ரெண்ணியெண்ணி நாடோறுங்
கல்லா லெறிந்து களித்ததுவும் - வல்ல

உக௩. சிறப்புலியா ரன்புடையார்ச் சேர்ந்துபணிந்தேத்தி
மறப்பிலமு தூட்டும் வகையு - மறப்பான்மை

உகச. விள்ளாச் சிறுத்தொண்டர் வேண்டு மகவரிந்து
தள்ளாக் கறிசமைத்த தன்மையு - மெள்ளா

உகரு. வருளிற் கழறிற் றறிவார்மா வூர்ந்து
தெருளிற் கயிலைசென்ற சீரு - மருளில்

சுக

உகசு. கணநாத ரன்பிற் கரிசில்பணி யாற்றிக்
கணநாத ராய்ப்பொலிந்த கற்பும் - புணர்பெருமைக்

உகஎ. கூற்றுவனார் மோலியெனக் கொய்மலர்த்தாள் கூற்றினுக்கோர்
கூற்றுவனார் சூட்டக் குலவியதூஉம் - தேற்றுபுகழ்ச்

உகஅ. சோழர் சடிலமுடி தோன்றக்கண் டாரழலி
னூழங் குளிர வழுந்தியதும் - வாழுநர

உகசு. சிங்க முனையரையர் சேரவிகழ்ந் தாற்கிரட்டித்
தங்க மளித்த தவாப்புகழுந் - துங்கவதி

உஉ0. பத்தர் வறுமை பரந்தகா லத்துமொரு
மித்தங் கொருமீன் விடுத்ததுவு - மொத்தகலிக்

உஉக. கம்ப ரடிமை கலந்தடிய ரோடுவர
நம்புமனை கைதடிந்த நன்மையும் - வம்பில்

உஉஉ. கலியர் விளக்கெரிக்குங் காட்சிகுறையா
தொலிமிடற்று வாள்பூட் டுரவும் - வலியதிறற்

உஉங. சத்தியா ரீசர்கழல் சார்ந்தார் தமையிகழும்
புத்தியார் நாவரிதல் போற்றியது - மெத்திசையுங்

உஉச. கண்டேத்து மையடிகள் காடவர்கோன் வெண்பாவைக்
கொண்டேத்து மேன்மை குலவியதும் - பண்டுகணம்

உஉரு. புல்லர் விளக்கிட்டுப் போற்றுதற்கு முட்டுவர
நல்ல முடிகொளுத்து நன்மையுஞ் - சொல்லவரு

உஉசு. காரியா ரெங்குங் கவிபாடி யண்ணலருள்
வாரியா ரப்பெற்ற வன்மையு - மூரி

உஉஎ. நெடுமாறர் நீறணிந்து நெல்வேலி வென்று
தடுமா றிலாதிருந்த சார்பும் - விடுமாறில்

உஉஅ. வாயிலார் தூய மனக்கோயிற் பூசித்துத்
தாயிலார் பாதநிழல் சார்ந்ததுவு - மேயும்

உஉசு. முனையடுவார் மாற்றார் முனையடுசெம் பொன்னால்
வினையடுவா ராய விதமும் - வனைகழற்

உங0. சிங்கர் மனைவி திருமலர்கை தொட்டதென்று
பங்க மறத்தடிந்த பான்மையுந் - துங்க

உஙக. விடங்கழியார் சோரரென வெய்தினர் தம்மைத்
திடங்கழியா தோர்ந்துவிட்ட சீரு - மடங்காச்

உஙஉ. செருத்துணையா ரோர்மன்னர் தேவியார் மூக்கின்
பொருத்துணையா தீர்ந்த புகழுந் - திருத்து

௨௩௩. புகழ்த்துணையா ரென்பார் புனித னருள
நிகழ்த்துமொவ்வோர் காசுபெற்ற நேரு - மிகழ்ச்சிதவிர்

௨௩௪. கோட்புலியார் பாலுங் குழுவுங்கூ டாதென்று
வாட்புலியார்க் கீந்த வளத்திறனும் - வேட்குமொரு

௨௩௫. பூசலார் மிக்க பொருடேடி யாலயஞ்செய்
தேசலா ராதிருந்த வின்றிறனு - மாசகனு

௨௩௬. நீற்றின் பெருமை நினைமங்கை யர்க்கரசி
போற்றி யமைந்த புகழ்ப்பேறுஞ் - சாற்றரிய

௨௩௭. நேசனா ரன்பர்பா னேசனார் கோவணந்தந்
தீசனார் போருண்மிக் கெய்தியதும் - பாசமகல்

௨௩௮. செங்கட்சோ ழப்பெருமான் செம்பொற் றளிபலசெய்
தங்கட்டூ ராவன் பமைந்ததுவுந் - துங்கத்

௨௩௯. திருநீல கண்டர் செழும்பலகை யேற
வொருநீல கண்ட ருவப்பும் - பொருவில்

௨௪0. சடையரிசை ஞானியார் தாவாப் பெரும்பே
றுடைய வமைந்த வருளும் - விடையுடையா

௨௪௧. ரானைமேற் றங்கி யருணாவ லூரர்வெள்ளைக்
கோனை மதமாமேற் கொண்டதுவும் - வீணை

௨௪௨. யுறுநெஞ்சே மற்றனைத்து முன்னாலே யன்றே
மறுநின்சீர் யாவர் வகுப்பார் - வெறுதவருட்

௨௪௩. டாயே யனையாய் தவறுறுமோ நங்கரும
நீயேதூ தாக நிகழுங்கான் - மாயமன்றே

௨௪௪. முன்ன முயன்று முடிகா ணரிதாய
வன்ன முகமுன் னணையுமோ - முன்னமொரு

௨௪௫. பச்சை மயிலையொரு பாலடக்கி பாங்கரின்றோர்
பச்சைமயில் சென்றுற் பயன்படுமோ - வச்சை

௨௪௬. மதனைச் சுமத்தலினால் வாகையிலாக் கிள்ளை
யிதனைச் செயற்குவலி யாதே - சுதமகல

௨௪௭. வன்றுசடைக் காட்டி லடங்கிக் கிடக்குமுகி
லின்று புரிவ தெதுகண்டாய் - துன்றுபொருட்

௨௪௮. பாவை யடியர் பகரவேற் குஞ்செவிகள்
பூவை குழறுமொழி போற்றுமோ - பாவையெனுந்

௨௪௯. தோழி யுரிமை துணிந்தனுப்பி னாற்றிருமுன்
வாழி யடைய வலியளோ - பாழிமதன்

௨௫0. சின்னமா யெங்குந் திரிந்துகூ வுங்குயிலம்
முன்னவன்பாற் சேறன் முடியாதே - மன்னு

௨௫௧. மரவா பரணனென்பா ரம்மொழிகேட் டங்கு
விரவாதே தென்றல் விடுத்தா - லுரவாரு

௨௫௨. முன்னைப்போல் வேறுதுணை யுண்டோ குரவர்பிரான்
றன்னைப்போல் வேறொருவர் தாமுளரோ - வன்னை

௨௫௩. யனைய குரவர்பிரா னன்ற மரபு
நினைய வகுத்துரைப்ப னீகேள் - புனையவரு

௨௫௪. காமர் கயிலையிற்சீ கண்ட வுருத்திரன்பா
லேமவருள் பெற்றநந்தி யெம்பெருமான் - றேமில்

௨௫௫. வழியே வருசனற்கு மார முனிவர்
பழியேது மில்லாத பண்பிற - கொழியருள்சால்

௨௫௬. சத்திய ஞான தரிசனிகள் யாவோருந்
துத்தியஞ் செய்பரஞ் சோதியார் - நித்தியமார்

௨௫௭. மெய்கண்ட தேவர் விளங்குமரு ணந்தியார்
பொய்கண்ட யாரும் புணருஞ்சீர் - மொய்கடந்

௨௫௮. தைவாழ் மறைஞான சம்பந்தர் தாளின்மதி
கைவா ழுமாபதியார் காட்சிமிகு - செய்ய

௨௫௯. வருணமச்சி வாய ரமைசித்த ராய
கருளில் சிவப்பிர காசர் - தெருள்செய்

௨௬0. குருநமச்சி வாயர் குலவுமறை ஞானர்
திருவம் பலவாண தேவர் - மருவு

௨௬௧. முருத்திர கோடியா ரொப்பில்வே லப்பர்
திருத்தி யினிதருளச் செய்து - பொருந்து

௨௬௨. மிருகுமர சாமிகண்மா சில்லா மணியா
ரருமை யிராமலிங்க ரன்பார் - பெருமையிரு

௨௬௩. வேலப்ப ரென்று மிளிர்திருச்சிற் றம்பலவர்
பாலக்க ணில்லம் பலவாணர் - சால

௨௬௪. வருள்சுப் பிரமணிய ரம்பல வாணர்
தெருள்சுப் பிரமணிய தேவர் - பொருள்சான்

௨௬௫. மரபு நிலையிதுவால் வார்த்தைநீ பேசப்
பரவு சமயம் பகர்வேன் - விரவுநெஞ்சே

௨௬௬. பூதநான் கின்பம் புரிகுழலார் போகமெனுங்
கோதவுல காயதனைக் கூடாதே - யேதமிகு

உகஎ. கந்தமைந்துங் கெட்டாற் கனமுத்தி யென்றுழலும்
பந்தப் பவுத்தர்முகம் பாராதே - முந்தத்

உகஅ. தலைபறித்துப் பாயுடுத்தித் தாந்தவமே பேசிக்
கொலைசெ யமணரைக்கூ டாதே - யலைபுரியுங்

உகக. கள்ளைக் குடித்துக் களித்துழலும் வாமமதக்
கொள்ளைச் செருக்கரைநீ கொள்ளாதே - தள்ளாக்

உஎ0. கருமமன்றி வேறு கருத்தனிலை யென்று
தெருமருவார் கூட்டஞ்சே ராதே - பொருவிநெஞ்சே

உஎக. நின்னையணு வென்று நியாயம் புகன்றுழல்வான்
றன்னை யொருஞான்றுஞ் சாராதே - சொன்ன

உஎஉ. பகவனுக் குண்டு பரிணாம மென்னுந்
தகவிலெந் திராவினர்ச்சா ராதே - யிகவரிய

உஎங. முத்தியிலே யான்மா முதல்வனோ டொக்குமெனும்
புத்தி படைத்தவர்பாற் போகாதே - மெத்துமொளிப்

உஎச. பாலவிழி யாற்குப் பரிணாமஞ் சொற்றுழலு
மாலமைந்தார் கூட்ட மருவாதே - ஞாலமிசைத்

உஎரு. தாம்பிரம மாகாமை தஞ்செயலி னாலுணரார்
நாம்பிரம மென்பாரை நாடாதே - யோம்பு

உஎசு. திருவா வடுதுறையைச் சேர்ந்து வளங்க
ளொருவாத் திருவீதி யுற்றுப் - பொருவாத

உஎஎ. தென்முகப்பின் வாயில்வழிச் சென்றுகொலு மண்டபத்தின்
பொன்முகப்பி னுள்ளே புகலுற்று - நன்முகத்திற்

உஎஅ. சாத்திரங்க ளோதித் தனியமர்வார் சிந்திப்பா
ரேத்திரங்கும் வண்ண மெடுத்திசைப்பார் - பாத்துச்

உஎகூ. சடைகாய வைத்துத் தனியமர்வா ரன்னோர்
புடையாரை யும்வணங்கிப் போற்றி - விடையா

உஅ0. நலமா ரதிகார நாடுதிருச் சிற்றம்
பலமா முனியைப் பணிந்து - பலமியாவுஞ்

உஅக. சேர்தரவுள் ளாற்போய்த் திருமாளி கைத்தேவர்
வார்கழல் போற்றி வணங்கியே - யோருங்

உஅஉ. குரவர்பிரான் மூல குருநமச்சி வாயன்
பரவுகழல் போற்றிப் பணிந்து - விரவு

உஅங. மிரண்டா மொடுக்க மெனப்புகல்பொற் கோயி
லரண்டா னெனவமரு வானைத் - திரண்ட

௨௮௪. கலைஞான வாழ்வைக் கருதுவார் பேற்றைத்
தொலையாப் புலவர்குழாஞ் சூழ - வுலையா

௨௮௫. வினாவிடை பேசி வியப்புற் றமரு
மனாதியுரு வாய வமுதை - யினாதகுண

௨௮௬. மெல்லாரு நீங்க வினிதுபோ தித்தமரு
நல்லாதரவு நயப்பானைச் - சொல்லு

௨௮௭. மொருநமச்சி வாயவென்ன வோதப் பொலிந்து
வருநமச்சி வாயனடி வாழ்த்திப் - பொருவாக்

௨௮௮. குருசாமி கோயில்வலங் கொண்டுபடி யேறிக்
குருசாமி பூசைமுனங் கூடி - யுருகாமெய்

௨௮௯. யன்பின் வணங்கி யடியா ரமுதுகொள
வன்பி னமர்கோயில் வந்தித்தே - யின்ப

௨௯0. விதமார் முதலொடுக்க மென்றிசைபொற் கோயிற்
புதவோர்பான் மெல்லப் புகுந்து - கதமோவி

௨௯௧. யாங்குநிற்பார் தம்மை யடுத்துச் சமயம்வினாய்ப்
பாங்குபெற வுள்ளாற் பயப்புகுந்து - தேங்குதிரு

௨௯௨. முன்னஞ்சேச வித்து முனிவர்முத லோர்போற்ற
நன்னர்நீ றள்ளியள்ளி நல்கியம - ரன்ன

௨௯௩. பொழுதுரையா தேயல் புலவர்கவி பாடும்
பொழுது முரையாதே போற்றி - யெழுதுமடல்

௨௯௪. வாசித்து நிற்பாரை மாணிக்கு மப்பொழுது
நேசிக்குந் தன்மை நிறைந்தாராய்ப் - பூசிக்குந்

௨௯௫. தொண்ட ருவக்கச் சுருதிப் பொருள்புகறல்
கொண்ட சமயத்துங் கூறாதே - மண்டவரு

௨௯௬. மன்னர் முதலோர் வணங்க வவர்க்குவப்பு
நன்னரியற் றும்பொழுது நாடாதே - சொன்ன

௨௯௭. மறையோர் பலரிரக்கும் வார்த்தைசெவி யேற்றுக்
குறைதவிர்க்கும் போதினுங்கூ றாதே - மறைசொல்

௨௯௮. சிதம்பரமுன் னாய திருக்கோயிற் கெல்லாம்
பதம்பரவு நித்தியமுற் பண்பி - னிதம்பரவ

௨௯௯ நன்றுவிசா ரித்து நயவாக் குறைதவிர்த்துத்
துன்று பொழுதுமிதைச் சொல்லாதே - சென்று

௩00. பணிசிறா ணாக்கற்கும் பாடம் வினாவைத்
துணியுங்கா லத்துஞ்சொல் லாதே - வணிதருமா

௫௱௧. னந்தக் களிப்பா னகச்சிலர்வந் தேத்தெடுக்கு
மந்தப் பொழுது மறையாதே - சந்த

௫௱௨. வுவளகத்து மேவு மொருசமய நோக்கித்
திவளநெஞ்சே நீகூடச் சென்று - தவளப்

௫௱௩. பொடியணியு மேனியெங்கள் பூரணன்பொற் றாளிற்
படிமிசை வீழ்ந்து பணிந்து - நெடியகுணக்

௫௱௪. குன்றேமெய்ஞ் ஞானக் கொழுந்தே யருட்கடலே
நன்றே யுயிர்க்கருளு நாயகமே - யன்றே

௫௱௫. யடுத்தமல பந்த மகற்றவுருக் கொண்டு
மடுத்த பெருங்கருணை வாழ்வே - படுத்தமைந்த

௫௱௬. மைம்மாறு சிந்தை வயங்கு மடியார்பாற்
கைம்மாறு வேண்டாத கற்பகமே - பொய்ம்மாறும்

௫௱௭. பேறேயா னந்தப் பெருக்கேஞா னக்கருப்பஞ்
சாறேமெய் யன்பர் தவப்பயனே - நாறுமருட்

௫௱௮. சிந்தா மணியே செழுங்காம தேனுவே
சந்தாபந் தீர்க்குந் தனிச்சுடரே - நந்தா

௫௱௯. வரமணியே கோமுத்தி வாழ்வே யருட்சுப்
பிரமணிய தேசிகப்பெம் மானே - பரவு

௫௱௰. குருநமச்சி வாயவென்று கொண்டாடி யேத்திப்
பெருகரு ளுண் டாகநனி பேசி - யொருவரிய

௫௱௧௧. பாலை யுணர்த்திப் பசியநறுஞ் செங்கழுநீர்
மாலை கொடுவிரைந்து வா.

ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது முற்றிற்று.

# தனிப்பாடல்கள்.



## நேரிசைவெண்பா.

கண்ணன் மதனைக் கடிந்ததற்கேற் பப்புரப்பாற்
பெண்ணொ ருருச்சுப் பிரமணிய - வண்ணல்
திருவா வடுதுறையுரய் சிற்றடியே னிகின்ப
மருவா வடுமாற வை. (க)

## விருத்தம்.

மாமேவு புகழ்த்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய வள்ள லாய
தூமேவு குரவன்பேர் சொற்றவுட னென்பிறப்புத் தொலைந்த தம்மா
பாமேவு மிதுகண்டும் பிறப்பொழிப்பா னிவனென்று பலருஞ் சொல்வார்
தேமேவு நலந்தெரியென் வாயினையே புகழாத செய்கை யென்னே. (உ)

உரவுபொலி மறைமுடியாஞ் சிவக்கொழுந்தைப் பரானந்தத் துவாவை நாளுங்
கரவுதவி ரன்பருளத் தகலாம லமுதூற்றுங் கருணை வாழ்வைப்
புரவுமலி மெய்ஞ்ஞான வாரிதியைத் துறவரசைப் பொருவி லாத
பரவுபுகழ்த் துறைசையிற்சுப் பிரமணிய குருமணியைப் பரவி வாழ்வாம். (ங)

செல்லார்க்கும் பெருமுழக்க மண்முழக்க மெனமேற்போய்த் திகழ்மா டத்தாற்
சொல்லார்க்குங் கழனிகளாற் றொலையாத வளங்காட்டுந் துறைசை மேவிக்
கல்லார்க்கு மல்லார்க்கும் வல்லார்க்கும் வல்லார்க்குங் கணக்கி லாமற்
றெல்லார்க்கு மெய்ப்பில்வைப்பாஞ் சுப்பிரம ணியகுரவ னிருதாள் போற்றி. ()

தேடுகயி லாயபரம் பரைத்துறைசை மேயநமச் சிவாயன் றன்னைக்
கூடுதன்முன் னுள்ளபதி னெல்வருமுற் றோன்றலெனக் கொண்டா ரவ்வா
றூடுதவிர் தரக்கொண்டும் பிற்றோன்ற லெனவுங்கொண் டுவக்குங் கோமான்
நீடுபெரும் புகழமைசுப் பிரமணிய குருமணியை நினைந்து வாழ்வாம். (ரு)

ஒப்புயர்வில் லவன்சிவன்மூன் றம்முடைமை யாலிரண்டு மொன்று மேற்றோர்
தப்பறத்தாழ்ந் தவரெனறோர்ந் தனந்திருவா வடுதுறைநற் றலத்துள் வார்தம்
வைப்பனைய சுப்பிரம ணியகுரவன் றன்பெயரை வகுத்து ளானை
யெப்படியும் விலக்கலின்மற் றிவன்மூன்று மிலனென்றே யியம்பு வோமே. ()

திருமணியை நிறத்தமைத்த நீன்மணிமெய்ம் மால்பிரமன் றேடிக் காணு
வருமணியென் னையும்பொருளா வாண்டசிந்தா மணியன்ப ரகத்தே மேய
வொருமணியம் பலவாண சிரோமணிகண் மணியடிமை யுவந்தார் கண்ணுட்
கருமணிவண் டுறைசையிற்சுப் பிரமணிய குருமணியைக் கருத்துள் வைப்பாம்.

---

## வஞ்சித்துறை.

ஒப்பருந் துறைசைச், சுப்பிர மணிய
அற்புத குரவன், நற்பதந் துணையே. (அ)

# குளத்தூர்க்கோவை.

## கைக்கிளை.

காட்சி.

பொன்பூத்த கஞ்சமு மேற்றெழி னீலமும் பூந்தளவுந்
தென்பூத்த கோங்கமும் பாங்கமர் காந்தளுஞ் சேரக்கொண்டு
மன்பூத்த செந்தமி ழாய்வேத நாயக மால்குளந்தைக்
கொன்பூத்த மால்வரை வாய்வினை வாயொர் கொடிநின்றதே. (க)

ஐயம்.

விண்ணுல கோவிதி நண்ணுல கோதிரு மேவுறுமால்
கண்ணுல கோவர வொண்ணுல கோதண் கடலுடுத்த
மண்ணுல கோபொறைப் பூண்வேத நாயக வள்ளல்வெற்பி
லண்ணுல கோதிவர் பொன்னடி தோய்தவ மாற்றியதே. (உ)

துணிவு.

பூவென்ற மேனியிம் மங்கையென் ஞமகள் பூமகளோ
காவென்ற செங்கைத் தலவேத நாயகக் காளைதன்பாற்
றூவென் றடையலர் போல்வா டுவகுழற் றுடிநம்மை
வாவென் றழைப்பன போன்றிமை யாநிற்கும் வாட்கண்களே. (ங)

குறிப்பறிதல்.

கயலார்தம் பேடுக் கிறவூட்டி யன்னங் களிக்குஞ் செந்நெல்
வயலார் குளந்தை வருவேத நாயக வள்ளல்வெற்பி
லியலா ரிவர்கண் மருளரு ணோக்க மிரண்டுநல்கு
மயலார் விடமு மமிழ்துநல் காழியி னும்மனமே. (ச)

## இயற்கைப்புணர்ச்சி.

இரந்துபினிற்றற்கெண்ணல்.

விழியே யெவர்க்கு மனவேத நாயக வேள்குளந்தைப்
பொழியோர் வனாயிடத் தஞ்சேனெஞ் சேயுட் பொருதுயராங்
கழியே யிரப்புமொ ரோருடைத் தம்ம காப்பினவர்
பழியே யெனறெரிந் தாயிரப் பாமிவர் பாங்குற்றே. (ரு)

இரந்துபின்னிலைநிற்றல்.

கணிசெய்திண் டோணெடு மால்வேத நாயகக் காமன்வெற்பிற்
பணிசெய் திறத்தமைந் தேன்கொடுங் காமப் பசிதணிய
மணிசெய் குழற்றிரு வன்னீர் நுங் கொவ்வைச்செவ் வாயமிழ்த
மணிசெய்நும் மல்குற் றடமூழ்கி யுண்ண வளித்திடுமே. (௬)

முன்னிலையாக்கல்.

தோற்றிய கல்விக் கடல்வேத நாயக தூங்கன்வெற்பிற்
போற்றிய வாயத் தொடுசுனை மூழ்கியும் பூக்கள்கொய்துஞ்
சாற்றிய வூச லுகைத்துநன் றூட றணந்தடியே
னூற்றிய மாதவ மோதனி நின்ற தறைகுதிரே. (௭)

வண்டோச்சிமருங்கணைதல்.

காரணி கற்பகங் கற்றோர்சிந் தாமணி கல்விக்கட
ளூரணி சிந்தைப் புகழ்வேத நாயக நண்பன்வெற்பில்
வாரணி வண்டினங் காணடு நீங்கவிம் மாதனைம்பாற்
றாரணி யாண்டு மதுவுண் டிருத்த றகாதுமக்கே. (௮)

மெய்தொட்டுப்பயிறல்.

பொன்போற் பொலியுங் குணவேத நாயக பூபன்வெற்பி
லென்போற் பெறலரும் பேறுபெற் றார்க ளெவரிவர்கா
மன்போன் மறையிடைப் பட்டாடை நீவி மகிழ்ந்துகண்ணன்
பின்போ லிவர்பதங் கையால் வருடவும் பெற்றனனே. (௯)

பொய்பாராட்டல்.

கல்லாது நல்லவர்க் கீயாது வீணிற் கழித்திடுநா
ளில்லாது வாழும் புகழ்வேத நாயக வேந்தல்வெற்பி
லொல்லாது சேடன் படமுங்க ளல்கு லுடனெதிர்த்து
வெல்லாத தாலல வோமண் சுமந்து மெலிகின்றதே. (௧0)

இடம்பெற்றுத்தழால்.

மின்னிசை போர்த்திய மெய்வேத நாயக வேள்வரைவாய்ப்
பொன்னிசை பாறைபு மாதவிப் பந்தரும் பூவுதிர்ந்து
மன்னிசை பாயலு முண்டணங் கேயுள் வருத்தமற
வின்னிசை யோர்மண நாமினி தாற்றற் கிடமிதுவே. (௧௧)

வழிபாடுமறுத்தல்.

எண்ணம் பொலிய விரப்பாரில் யாரு மிரக்கநல்குந்
திண்ணம் பொலியும் புகழ்வேத நாயகச் சேய்வரைப்பாற்
றண்ணம் பொலியு மலர்க்கொடி யேயென் றனுவளையும்
வண்ணம் பொலியு மொருநாண் பொலியும் வகையருளே. (௧௨)

இடையூறுகிளத்தல்.

நங்காம னென்று மடவார் கருத நகுமெழிற்சிங்
கங்காமன் றுங்குளத் தூர்வேத நாயகக் காளைவெற்பில்

வெங்காம வேட்டத் திருமத வேழம் வெளிவரச்செய்
தங்காம ரம்பு மறைப்பது வோவெற்றி யாவதுவே. (௧௩)

நீடுநினைந்திரங்கல்.

எய்யாச் சழக்க ரெனுமத வேழத்திற் கேறனைய
கையான் குளந்தை வருவேத நாயகக் காமன்வெற்பி
னையா வுருகிப் பதைபதைத் தாவி நடுங்கிடுவேன்
மெய்யா மிவர்திரு வாயூற லுண்டின்ப மேவலென்றே. (௧௪)

மறுத்தெதிர்கோடல்.

மேன்மே லெழுந்து கொழுந்துகொண் டோங்கழல் வீயவைக்கோ
ருன்மேல் விழுந்து தடுப்பது மானுந் தவாதபுகழ்
வான்மேல் வயங்க வளர்வேத நாயக வள்ளல் வெற்பர்
மான்மே லெழாவகை நந்நாண் டடுக்கும் வலிகொள்வதே. (௧௫)

வறிதுநகைதோற்றல்.

ஆற்று மெனவந் தடுத்தாளை வேந்தரு மாய்ந்தடுக்கப்
போற்று வுயர்த்தும் புகழ்வேத நாயக பூபன்வெற்பின்
மாற்றுத வன்ப ருறுகாம வாரிக்கொர் வங்கமெனத்
தோற்று விடையவர் செவ்வாயில் வெண்ணகை தோற்றியதே. (௧௬)

முறுவற்குறிப்புணர்தல்.

தந்தா வளம்பல வாளவேத நாயகத தண்ணம்பனைற
னந்தா வளவளை வாயிவர் வாண்முக நன்மதியின்
முந்தா நகைவெண் ணிலவாய தென்றன் முகமெனுமோ
ரந்தா மரையை மலர்த்திய தாலிஃ ததிசயமே. (௧௭)

முயங்குதலுறுத்தல்.

புனைதவிர் மங்கள மால்வேத நாயக பூபன்வரைத்
தனையிவர் கொங்கைக் குடம்பற்றி யல்குற் றடங்குடைந்து
வினைகமழ் திப்பியச் செவ்வா யமிர்தும் விரும்பியுண்டா
னனைதினை மூப்பு மொழிந்தா நமனு நமக்கஞ்சுமே. (௧௮)

புணர்ச்சியின்மகிழ்தல்.

தூயோ ரிணக்க மருவேத நாயகத் தூயன்வரை
வாயோ ரருமல ரிச்சோலை யோர்தட மற்றதனு
ணீயோர் கொடிநி னகலல்குல் பூவதி னீடுசுவை
யாபோர் மதுவஃ துண்ணும்வண் டாயினன் யானணங்கே. (௧௯)

புகழ்தல்.

எள்ளி விடலில் புகழ்வேத நாயக வேந்தல்வெற்பிற்
றுள்ளி யெழுமறி நோக்கீ நுங் கொங்கைக்குத் தோற்றதனை
யுள்ளி யுறுதுயர் பூண்டு விளர்த்த தொருகயிலை
வெள்ளி வரையென் றறியார்சொல் வாரென் விளம்புதுமே. (௨0)

ஏற்புறவணிதல்.

இம்மா நிலஞ்சொல் புகழ்வேத நாயக வேந்தல்வெற்பில்
விம்மா வெழுமுலை யிம்மா தருக்கு மிளிர்கலங்க
எம்மா குழன்முதற் பொற்றுண்மட் டுந்தொட் டலங்கரிக்க
வெம்மா தவஞ்செய்த வோவறி யேனென் னிருகைகளே. (உக)

---

## வன் புறை.

அணிந்துழிநாணிய துணர்ந்துதெளிவித்தல்.

பொன்னே முகிற்கும் புகழ்வேத நாயக பூபனுக்கு
மென்னே யுருவன்றி யீதலிற் பேத மெனக்குமற்றை
நின்னேய மாருயிர்த் தோழிக்கு நீடுருப் பேதமன்றிக்
கொன்னே யணிதொழிற் பேதமுண் டென்கை குறித்தருளே. (உஉ)

பெருநயப்புரைத்தல்.

மெலியீரென் றியார்க்கு மருள்வேத நாயக வேள்குளந்தை
யொலியீர்ம் புனற்றடத் தூண்டே யெனைத்தொண் டுவப்பக்கொண்டு
பொலியீரரும்பு மாக்காம்ப றுமொர் பூவுமென்னுள்
வலியீர்மற் றோர்மல ருங்கொண்டோர் வல்லி வயங்கல்வண்டே. (உங)

தெய்வத்திறம்பேசல்.

எறியுங் கலிதன் றலைசாய்த் திடத்தமி ழின்னருமை
யறியும் புருட மணிவேத நாயக வண்ணல்வெற்பிற்
செறியும் படிநம் மிருபே ரையுமின்று சேர்த்ததெய்வ
முறியும் படியிடை யேசெய்யு மோசற்று முன்னலையே. (உச)

பிரியேனென்றல்.

கோனுடன் மேழிக் கொடியாளன் மாலைக் குவளையினுன்
வானுட னேரும் புகழ்வேத நாயக வள்ளல்வெற்பிற்
றேனுடு பூங்குழ லாய்வான் பிரியினுஞ் செங்கதிர்யா
னூனு டுயிர்நிகர் நிற்பிரி யேனென்று முண்மையிதே. (உரு)

பிரிந்துவருகென்றல்.

பெருவேத நாயக மால்பா லடுத்தொன் று பெற்றவர்பாற்
றருவேசிந் தாமணி யேயென் றடைபவர் தம்வினைவும்
பொருவேயன் றென்னவிந் நின்றகன் றியானிப் பொழிலகத்தே
வருவேன்வந் தும்மடி கூடுவ னீடுவன் மையிலனே. (உகூ)

இடமணித்தென்றல்.

பொன்னே புகழுயி ராணிகொ லோவெனும் பொற்பணங்கே
யென்னே திருவுளத் தெண்ணறும் மூர்க்குமெம் மூர்க்குமென்று
மின்னே டுல்வு புயல்வேத நாயக வேள்பொருட்கு
மன்னே வறியர்க்கு மெத்தனை தூரமற் றத்தனையே. (உஎ)

---

## தெளிவு.

திகழ்வேலை பொங்கி யெழுவோங்கள் முற்றுஞ் சினந்துவன்கா
லகழ்வே ரொடுபறித் தெங்கணும் வீசிடி மன்றுமென்று
மிகழ்வேயில் லாததம் வார்த்தைபொய் யார்வஞ்ச மேதுஞ்செய்யார்
புகழ்வேத நாயக மால்குளத் தூர்வரைப் புண்ணியரே. (உஅ)

## பிரிவுழி மகிழ்ச்சி.

செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.

வண்டேய் குவளைத் தொடைவேதநாயக வள்ளல் வெற்பிற்
றண்டே மலர்க்குழல் சோர்தரக் கொங்கைத் தனிப்பொறையால்
விண்டே மருங்குறள் ளாடநன் னேக்கநம் மேலமையாக்
கொண்டே யியங்குதல் பார்நெஞ்ச மேநங் குலதெய்வமே. (உகூ)

பாகனொடுசொல்லல்.

கனம்போல நல்குகை யான்வேத நாயகக் காளைவெற்பின்
மனம்போல நோக்கமென் பாலுற யானிறு மாப்பெழுந்த
தனம்போ லடையவென் கையால் வருடிய தாள்களபெயர்த்
தனம்போ னடப்பது பார்வல வாவென தாருயிரே. (௩0)

## பிரிவுழிக்கலங்கல்.

ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

தூணே பொருதிர டோள்வேத நாயக துங்கன்வெற்பி
னேணே யுரைப்பதிம் மாண்புடை யார்க்கு நமக்குநனி
சேணே யிவர்முலை சேர்ந்தன மோவன்றிச் சேர்ந்ததுபோல்
வீணே கனவொன்று கண்டன மோவென் விளைந்ததுவே. (௩க)

வாயில்பெற்றுய்தல்.

பாமாலை சூடும் புகழ்வேத நாயகப் பண்பன் வெற்பி
னாமாலை மாய்க்கு மருந்துணர்ந் தாம்வினை நாவிகமழ்
பூமாலை யோதி யிவர்விழி மான்சென்று புக்குலவு
மாமாலை யாவொரு மின்னார் வதன மதியகத்தே. (௩உ)

பண்புபாராட்டல்.

நனியா வருஞ்சொல் புகழ்வேத நாயக நம்பிவெற்பி
லினியா முவமை தெரிதலிற் குற்ற மிலதரிதுட்
கனியா விணையுறுப் பிற்கிணை மாறிக் கழறிமற்றைத்
தனியா முறுப்பிற் கதுவே யிணையெனச் சாற்றுதுமே. (௩௩)

பயந்தோர்ப்பழிச்சல்.

அண்டானை வாட்டி யடுத்தானை நாட்டிநன் காதரிக்கும்
வண்டானை வேய்ப்புய மால்வேத நாயக மன்னன்வெற்பி
லெண்டானை மாறினு மாறாத் திருவுற் றெனையடிமை
கொண்டானை யீன்றவர் வாழிய கோவிக் குவலயத்தே. (௩௪)

கண்படைபெறாதுகங்குனோதல்.

பொருட்கடல் கல்விக் கடல்பொறு மைக்கடல் பொற்புக்கட
றெருட்கட லாய புகழ்வேத நாயகச் செல்வன்வெற்பி
லருட்கட லாமெனை யாண்டானை நீங்கி யஞர்க்கடலோ
டிருட்கடன் மூழ்கின னின்பக் கடலையென் றெய்துவனே. (௩௫)

# இடந்தலைப்பாடு.



தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

திருவேத நாயக மால்குளத் தூரன்ன சின்மொழியைப்
பொருவேவின் மாட்சியின் முன்றந்த தெய்வமிப் போதுந்தருந்
தருவே யெனவிருப் பிற்கொடுப் பார்க்கொர் தடையுமுண்டோ
மருவேயு மன்ன பொழிலிடைச் சேறும் வருதிநெஞ்சே. (௩௬)

முந்துறக்காண்டல்.

எண்ணே யிலாத புகழ்வேத நாயக வேந்தல்வெற்பின்
மண்ணே புரிந்தது மாதவ மென்ன மலரடிவைத்
துண்ணேய மோங்க வுவமை யிலாத வுறுப்பொடிமோர்
பெண்ணே யெனநின்ற தான்முன்பு யாஞ்செய் பெருந்தவமே. (௩௭)

முயங்கல்.

கைப்பட்ட வின்சொற் புயல்வேத நாயகக் காளைவெற்பி
கைப்பட்ட வானுத லாரிவர் பேரருள் கண்டடுத்தோ
கைப்பட்ட வாவு கருவூலஞ் சாரக் கனதனமுங்
கைப்பட்ட தாலினிச் சிந்தா மணியுநங் கைப்படுமே. (௩௮)

புகழ்தல்.

செல்லார் பொழிற்றென் குளத்தூ ரதிபன் றிருந்திய நூல்
வல்லா ருணாக்கும் புகழ்வேத நாயகன் மால்வரைவாய்
நல்லா ருறுப்புட் சிலவமு துண்டென்பர் நானுருவ
மெல்லா மிவர்க்கமு தென்பேன் மழுவுங்கை யேந்துவனே. (௩௯)

ஆயத்துய்த்தல்.

நினக்கே பரமெமைக் காப்பதென் பார்க்கு நிலைமைநல்கி
மனக்கேத மாற்றுந் திறல்வேத நாயகன் மால்வரையா
னுனக்கே யடிமை பலசொல்வ தால்வரு மூதியமென்
புனக்கேழ் மயிலனை யாய்நின தாயம் புகுந்தருளே. (௪0)

## பாங்கற்கூட்டம்.



தலைவன் பாங்கனைச்சார்தல்.

கொடுப்பார் பலர்க்குங் குருவாயி னோன்கொக்கின் கொம்பரன்றி
வடுப்பா ரொழிய வளர்வேத நாயக வள்ளலைச்சார்ந்
தடுப்பா ரலாரின் வருந்தேலம் மாதை யடுப்பநம்மைத்
தடுப்பா ரெவர்மன னேயுயிர்ப் பாங்கனைச் சார்தரினே. (சக)

பாங்கன் தலைவனை உற்றதுவினாதல்.

விற்போர் புரிந்தனை யோதெவ்வ ரோடு விடாதெடுத்துச்
சொற்போர் புரிந்தனை யோதர்க்க ரோடுவிண் டொட்டுநிற்க
நெற்போர் புரிகுளத் தூர்வேத நாயக நேயன்வெற்பின்
மற்போர் புரிநின் புயம்வாடற் கேதுவென் மன்னவனே. (சஉ)

தலைவன் உற்றதுரைத்தல்.

மடவார்க ணன்றி வலியா ரிடத்துண்டு வண்டமிழ்க்குக்
கடவா ரணந்தரு மால்வேத நாயகக் காளைவெற்பி
லிடவா ருறுமென் கலைமாமதியையொ ரேழையல்குல்
விடவா ரரவம் விழுங்கிய தானண்பின் மிக்கவனே. (சஙு)

கற்றறிபாங்கன் கழறல்.

சொற்றது நாட்டுந் துரைவேத நாயக துங்கன்வெற்பி
லுற்றது சொற்றதென் காதூ டழல்புக் குலாவலொத்த
திற்றது வெண்ணிடைக் கிவ்வாறு வாடுமை யேற்கலைகள்
கற்றதுங் கேட்டது நன்றுநன் றுமெலங்கள் காவலனே. (சச)

கிழவோன் கழற்றெதிர்மறுத்தல்.

கோணுமை நின்ற குணவேத நாயகக் கொண்டல்வெற்பி
ணுமை யும்பி னுனக்குள தோமதி நன்முகமு
மாணுமை யோவிளங் கொங்கையுஞ் செங்கையு மற்றவையுங்
காணுமை யானண்ப னேகரைந் தாயிக் கடுமொழியே. (சரு)

கிழவோற்பழித்தல்.

புதையாம னல்கு பொருள்வேத நாயக பூபன்வெற்பிற்
பதையாம னின்றொரு பேதை மருட்டவுட் பட்டறிவிற்
றதையாம லிவ்வண்ணம் வாடுவை யேலைய தன்வயிற்றுட்
சிதையாமல் வைக்கும் பிரமாண்ட முற்றுமொர் சிற்றெறும்பே. (சசு)

கிழவோன் வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

போதுசெய் மாலைப் புயன்வேத நாயக பூபன்வெற்பிற்
றீதுசெய் கூற்றம் வரினுமஞ் சேனொரு சேயரிக்கண்
மாதுசெய் நோய்க்கினி யாதுசெய் வேனுய் மருந்தின்றன்றோ
ளோதுசெய் யாம்பலு மொவ்வாச்செவ் வாயமு தொன்றன்றியே. ()

பாங்கன் தன்மனத்தழுங்கல்.

கரும்பே மொழியஞ் சுரும்பே விழிபொழிற் காமருகோங்
கரும்பே முலையென்று பல்காற் சொலுமிவ னுன்றமதி
யிரும்பேயவ் வேந்திழை காந்தங்கொ லோவிதற் கென்செய்தும்யாம்
வரும்பே ரறிஞர் புகழ்வேத நாயக மால்வரைக்கே. (சஅ)

தலைவனோடழுங்கல்.

விடன்மேன் மனமில் புகழ்வேத நாயக வேள்வரைப்பான்
மடன்மே லொளிர்குழ லாள்பொருட் டென்சொன்மன் ஞநின்செவிக்
கடன்மே லெழுவடி வேலாயிற் றுலினி யாதுசெய்கேன்
கடன்மேல் வரினதற் கியாரான் முடியுங் கரைசெயவே. (சகூ)

எவ்விடத்து எவ்வியற்றென்றல்.

மண்காக்குஞ் செல்வப் புயல்வேத நாயக மால்குளத்தூர்
விண்காக்கு மால்வரை யோதினை யோவுரை மேவுமிடங்
கண்காக்கும் பேரியல் யாதண்ண லேவெற்றி காக்குமொரு
பெண்காக்குந் தோணியினை யிவ்வா று வாட்டிய பெய்வளைக்கே. (ருo)

அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்றென்றல்.

என்னுயிர் மேவிட மால்வேத நாயக வேந்தல்வெற்பே
மன்னுயிர் போற்றவன் றேண்மலர் கண்ண வனைப்பகைத்துத்
துன்னுயிர் போன்மெலி யும்மிடை மற்றவற் சூழ்ந்துநட்ட
கொன்னுயிர் போலிரு மாக்குநண் பாவிளங் கொங்கைகளே. (ருக)

பாங்கன் இறைவனைத்தேற்றல்.

வழியென்று போறங் கொள்வேத நாயக மால்வரைவாய்
விழியென்று வேல்கொண்ட மின்னினை யான்கண்டு மீளுமட்டுங்
கழியென் றுயரிங் கிருவைய கான்மகற் காணுமட்டு
மிழியென்று மோவு துணிபுற் றிருந்த விரமனொத்தே. (ருஉ)

பாங்கன் குறிவழிச்சேறல்.

கனியாடு பூம்பொழில் சூழ்குளத் தூரண்ணல் கல்விக்கண்ணே
நனியாடு நுண்மதி மால்வேத நாயக நம்பிவெற்பிற்
பினியாடு மோதன் பெருகாயத் தோடு பிரிந்துநின்று
தனியாடு மோவறி யேனிறை கூறிய தார்க்குழலே. (ருங)

இறைவியைக்காண்டல்.

தீதே யிலாத புகழ்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
சூதே முலைசிலை யேநுதல் செய்ய துவர்க்கமலப்
போதே முகமரும் பேநகை செங்கைப் புயலுரைத்த
மாதே யிவளிது வேயிட மாலைய மற்றில்லையே. (ருச)

இகழ்ந்ததற்கிரங்கல்.

செறியாமை யிற்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பின்
மறியாமை நோக்கி யியலிது வேற்புய வாட்டமொரீஇக்

குறியாமை கொண்டு வருந்தா திருக்கவுங் கூடுங்கொல்லோ
வறியாமை யாலிகழ்ந் தேன்புகழ்ந் தேனல னண்ணலையே. (ருரு)

தலைவனைவியத்தல்.

பொறையாற் புவிவென்ற மால்வேத நாயக பூபன்வெற்பி
னிறையாற் குறைவி னறையார் குழலி நெடுங்கணொனுங்
கறையாற் பொலியயி லேறுண்டு நெஞ்சங் கலங்கலின்றித்
திறையாற் பொலியுநம் மண்ணல்வந் தான்மிகத் திண்ணியனே. (ருசு)

தலைவியைவியத்தல்.

மேகத்தை யேநிகர் கைவேத நாயக வேள்வரைக்கைந்
நாகத்தை யேபொரு மாமுலை தாங்கிவர் நன்மனுநூ
லேகத்தை யேகொண் டிம் மண்முழு தாண்டருளெம்பெருமான்
சோகத்தை யேதுணிப் பார்பிணிப் பாரலர் தோற்றத்திலே. (ருஎ)

தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்.

கடியொன்று மிற்குளத் தூர்வேத நாயகக் காளைவெற்பிற்
படியொன்று மாமுகி லொன்றனை நாடிப் பரிந்துமல
ரடியொன்று மாற்றி நிலத்தூன்றி யெங்கு மவிரமின்னுக்
கொடியொன்று நின்றது கண்டுவந் தேன்புகழ்க் கொற்றவனே. ()

தலைவன்சேறல்.

வளர்வேத நாயகன் மால்வரைப் பாற்பொறி வண்டுகிண்டி
யுளர்வே யலங்கற் குழல்சுவ ரேய வொளிர்குழைகள்
கிளர்வேய் பொருவு திரடோள் வருடக் கிளர்ந்தென்மனத்
தளர்வே யொழிய வெதிர்நிற்கு மோவென் றனியுயிரே. (ருசு)

தலைவியைக்காண்டல்.

உருவுடைத் தன்றுயி ரென்பது பொய்ம்மைபல் லோருமவாந்
திருவுடைத் தண்ணளி மால்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
பொருவுடைத் தொண்கணுஞ் செவ்வாயு மேந்தெழிற் பூண்முலையு
மருவுடைத் தண்குழ லும்மற்றும் வாய்ந்ததென் மன்னுயிரே. (சுO)

கலவியின்மகிழ்தல்.

பொன்மலை யுஞ்செம் மணிமா மலையும் புணர்ந்ததென்கோ
வென்மலை வின்றென் சுவைப்பாலுந் தேனு மிணைந்ததென்கோ
தென்மலை வாய்குளத் தூர்வேத நாயக நேயன்வெற்பிற்
கன்மலை தோண்முலை யானுமிம் மாதுங் கலந்ததுவே. (சுக)

புகழ்தல்.

புரவலர் கண்மணி மால்வேத நாயக பூபன்வெற்பிற்
பாவல ராம்பனுஞ் செவ்வா யழகுட் படர்ந்துகவர்
தரவலர் நீங்குமென் றேர்ந்திரந் தேயமர் தன்மைகண்டே
யிரவல ரென்று புகல்வார் புலவ ரெடுத்தின்னுமே. (சுஉ)

பாங்கியொடுவருகெனப்பகர்தல்.

மைப்பே ரகனெடுங் கண்மட வாய்கவி வாணர்செம்பொன்
வைப்பே யனைய தமிழ்வேத நாயகன் மால்வரைவாய்க்
கைப்பே யிலாதநின் மெய்ந்நிழ லென்னவிக் காவகத்தென்
னெய்ப்பே யொழிய வினிப்பாங்கி யோடு மெழுந்தருளே. (கூஙு)

பாங்கிற்கூட்டல்.

தளிர்புரை செங்கைத் தலவேத நாயகத் தண்ணியன்றன்
குளிர்மலி சோலை யெனும்பொற் றகட்டி குழையரெனு
மொளிர்மணி சூழப் பொலிவன வான்மற் றுவைநடுநீ
மிளிர்தரு நாயக மாமணி யாயின்று மேவுகவே. (கூச)

## பாங்கிமதியுடன்பாடு.

—— ⇝✳✳⇜ ——

தோற்றத்தாலாராய்தல்.

போதுசெய் மாலைப் புயன்வேத நாயக பூபன்வெற்பிற்
காதுசெய் வேல்விழி யெம்பெரு மாட்டி கவின்செயெழின்
மீதுசெய் போதுகொய் தோசுனை வாய்விருப் பிற்குடைந்தோ
யாதுசெய் தோவறி யேன்றிரு மேனி யலசியதே. (கூரு)

ஒழுக்கத்தாலையந்தீர்தல்.

கனைப்போ வரும்வண் டுளர்குழ லாய்வின் கலந்தபிறை
நினைப்போ வருநற் குணமே நிரம்பி நிலாவுதவி
னனைப்போது மாலைப் புயன்வேத நாயக நம்பிபுகழ்
தனைப்போல் விளங்கலி னின்றுற் றெழுப்படுந் தன்மையதே. (கூகூ)

சுனைநயப்புரைத்தல்.

எண்ணுங் குணம்பெரி யோன்வேத நாயக வேந்தல்வெற்பிற்
கண்ணுங் கதிர்முலை யாய்செங் கமலக் கருங்குவளை
யண்ணுஞ் செழுஞ்செங் குவளைசெவ் வாம்பல்வெள் ளாம்பலெனப்
பண்ணுந் திறனுடை வான்சுனை யாது பகர்ந்தருளே. (கூஎ)

சுனைவியந்துரைத்தல்.

வண்டா ரணிபுயன் மால்வேத நாயக மன்னன்வெற்பிற்
கண்டார் மொழியாய் முலைக்குநற் சாந்துங் கருங்குழற்கு
வண்டாரு மெய்க்குப் பசலையு மின்று வழங்குவதேற்
கொண்டார் வளச்சுனை வாயடி யேனுங் குடைகுவனே. (கூஅ)

தகையணங்குறுத்தல்.

வேளாண் மரபுக் கணிவேத நாயக வேள்வரைப்பாற்
றாளா னனிச்சம்வெல் வான்மக ளேயிவண் சற்றிருவேய்த்
தோளான் மருள்வயிற் றெங்கோ மகளிச் சுனையகம்புக்
காளான் மகிழவின் னேவரு வாளொத்தி ராடுவிரே. (கூகூ)

நடுங்கநாட்டம்.

நாட்டுக்கு நல்லன் பதிஞ யிரம்பொ னவிலுமொரு
பாட்டுக்கு நல்கும் புகழ்வேத நாயகப் பண்பன்வெற்பின்
மாட்டுக் கலங்கினன் கண்டுடல் கிளை வலியொருசெங்
கோட்டுக் களிற்றெதிர் வேலெறிந் தானொரு கொற்றவனே. (௭0)

பெட்டவாயில்பெற்றிரவுவலியுறுத்தல்.

மறச்சார்பு நீத்த புகழ்வேத நாயக வள்ளல்வரைப்
புறச்சார்பு பற்றிப் பொருளடை வாரிற் புகலரும்பே
ரறச்சார்பு பற்றிக் கதியடை வாரினிவ் வாயிழைதன்
றிறச்சார்பு பற்றி யடைவாமின் றேயத் திருவினையே. (௭௧)

ஊர்வினாதல்.

யானோ புதியன் மதியன்ன வாணுதலின்சொனல்லீர்
வானோ வெனவயங் கும்மூ ரெதுமது வார்கழைவிற்
கோனோ புவிபுரப் பானோ வெனவளர் கொண்டல்வண்டார்
மேனோ வறவமர் தார்வேத நாயக வேள்வரைக்கே. (௭௨)

பெயர்வினாதல்.

தருமந் திரமெனக் கொள்வேத நாயகத் தண்ணியன்கார்
பொருமந் திரம்பல சூழ்குளத் தூரன்ன பொற்றொடியீர்
தெருமந் திரந்து முறையிர் நும் மூரினிச் செப்பரிய
பெருமந் திரமெனி னும்முறைப் பீர்நும் பெயரினையே. (௭௩)

கெடுதிவினாதல்.

என்றோ வெனவொளிர் மால்வேத நாயக வேந்தல்வெற்பிற்
கன்றோ வருங்கைநல் லீர்நும் புனத்துக் கடுகியன்கை
வன்றோய் கணைபட்ட புண்பட்ட வொண்பட்ட வாணுதற்கைக்
குன்றோ வெனவந்த தோவிரு கோட்டொரு குஞ்சரமே. (௭௪)

ஒழிந்ததுவினாதல்.

பொழியா மழையன் றெனும்வேத நாயக பூபன்வெற்பிற்
கழியாது நும்புன முற்றேனுக் கொன்று கடைக்கணித்து
மொழியா திதமென் மொழிந்தாற் பழிவந்து மூளுங்கொலோ
வொழியா திடங்கொண் டெழுமுழுப் பூண்முலை யுற்றவரே. (௭௫)

யாரேயிவர்மனத்தெண்ணம்யாதெனத்தேர்தல்.

சீரே புனையுந் திறல்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
பாரே றியநுண் மதியர் புதியர் பதியர்சிலே
போரே விலர்மத யானையெய் தோமென்றும் பொய்யுரைப்பா
ராரே யிவர்மனத் தெண்ணமற் றியாதென் றறிகிலமே. (௭௬)

எண்ணந்தெளிதல்.

தோராசை யும்புவி யும்பெரு வானுஞ் செறிந்துபுகழ்ப்
பேராசை யேகொண் டவன்வேத நாயகப் பேகன்வெற்பி

லூராசை மற்றுமற் றோராசை யாயுற லாலிவருட்
கூராசை நம்மட வாராசை யாய்க்குடி கொண்டதுவே. (எஎ)

இருவருமுள்வழிஒருமையிற்போதல்.

தாவா வலியின்முன் யாஞ்செய் தவமுந் தவப்பயனுங்
கோவா வொருங்கிருந் தாலெனப் பாங்கியுங் கோமகரு
மேவா விருந்தனர் போய்ச்சொல்லு வாம்வெல்லு வாமயனோய்
மாவாழ் குளந்தை வருவேத நாயக மால்வரைக்கே. (எஅ)

மான்விஞதல்.

திருமான் மகிழ்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பி
லிருமான் மதியிற் பொலிவா ணயனத் தெழின்முகத்தீர்
வருமானந் தன்னுயிர்க் கேகொண்டு தைத்தவென் வாளியுங்கொண்
டொருமானிங் கேவந்த துண்டோவுண் டாயி னுரைமின்களே. (எகூ)

மனம்விஞதல்.

கனத்திடை மின்ன லெனவிளங் காவிற் கலந்துநிற்பீர்
சினத்திடை யென்றுஞ் செலாவென் மனஞ்செயிர் தீர்புலவர்
மனத்திடை வாழும் புயல்வேத நாயக மால்வரைநம்
புனத்திடை யேவந்த தோநொந்த தாகிப் புகலுமினே. (அ0)

பாங்கி எதிர்மொழி கொடுத்தல்.

படுமாந்தும் வண்டுகள் காம்போதி காமரம் பாடிடமேம்
படுமாம் பொழிற்குளத் தூர்வேத நாயகப் பண்பனுக்குட்
படுமாந்தர் வெங்கலி காணுமை போற்சக பாலவண்டு
படுமாம் பலையிக் குறிஞ்சியி லேயென்றும் பார்த்திலமே. (அக)

இறைவனை நகுதல்.

இழைகொண் டொளிர்நிற மால்வேத நாயக வேந்தல்வெற்பிற்
கழைகொண்டு செய்சிலை கைக்கொண்டு சித்தசர் காமருழை
குழைகொண்டு தோன்று மலர்கொண்டெய் வாரிந்தக் கொற்றவருந்
தழைகொண்டு காம ருழையெய்வர் வில்லின்றிச் சான்றவரே. (அஉ)

பாங்கிமதியினின் அவரவர் மனக்கருத்துணர்தல்.

பழியே யிலாத புகழ்வேத நாயகப் பண்பன்வெற்பிற்
கழியே ரிவர்புனங் காத்தல்பொய் யென்று கரையுமிவர்
விழியே யவர்வந்த வேட்டைபொய் யென்று விளம்புமவர்
மொழியே யிருவர்க்கு முள்ளீடொன் றேயென்று முன்னுதுமே. ()

## பாங்கிற்கூட்டம்.

தலைவன் உட்கோள்சாற்றல்.

விண்மணி நேரும் விளக்கமிக் கோன்றமிழ் மெய்ப்புலவர்
கண்மணி யாய புகழ்வேத நாயகக் காளைவரை
யுண்மணி யேர்பல் படைத்தா வேந்து மொளிமணியே
தண்மணி யாயசிந் தாமணி யேநகை சாற்றுமினே. (அச)

பாங்கி குலமுறைகிளத்தல்.

தனைவா யெழுகடற் பகம்வேத நாயகத் தண்ணியன்றன்
வனைவாய் மடங்கல் சிறுதேனை யூனுமவ வாவுங்கொல்லோ
புனைவாய் களிற்றண்ண லேயுயர் வான்குலப் புண்ணியர்புல்
லுனைவாய் குறவர் குலக்கொம்பை வேட்ட லுரிமையன்றே. (அரு)

தலைவன் தலைவிதன்னையுயர்த்தல்.

நம்பே ரிருநிதி மால்வேத நாயக நம்பிவனைக்
கொம்பே யிவர்தினைக் கொம்பேயல் லாற்றனைக் கொம்பென்பது
வம்பேயவ் வாறிருந் தாலும் பரிதி மதியிருஞ்சேற்
றம்போ மலரை யவாவுத லான்வரு மாசென்னையே. (அசு)

பாங்கி அறியாள்போன்று வினாதல்.

விந்தனக் காமெனுந் தோள்வேத நாயக வேள்வனைவாய்ச்
சந்தனக் காவில்விண் மீன்போற் பரந்து தவாவண்டலா
டந்தனக் காரிகை மார்பல ரைய வவருளுன்ம
னந்தனக் காக்கவர்ந் தாளிவ ளென்று நவிலுதியே. (அஎ)

இறையோன் இறைவி தன்மையியம்பல்.

மஞ்சே குழலுழ னஞ்சே விழிமொழி வானமுதே
பஞ்சே பதமத வஞ்சே விமின்முலே பார்க்கணியாய்
விஞ்சேர் மலிகுளத் தூர்வேத நாயக வேள்வனையென்
னெஞ்சே யிடையணங் கேயென்னை வாட்டிய நேரிழைக்கே. (அஅ)

பாங்கி தலைவியருமைசாற்றல்.

வாமான் றமிழ்க்குத வும்வேத நாயக மால்வனையெங்
கோமான் புதல்வி யெளியள்கொல் லோநலங் கூர்மிதிலைப்
பூமான் றிருமக ளாகிய சீதையைப் பூதலம்வா
ழேமான் விழிமட வாருளொ ருத்தியென் பாரெவரே. (அகூ)

தலைவன் இன்றியமையாமையியம்பல்.

குருவிருந் தாலுண்டு வான்கதி யிம்மை கொளாதவர்க்குத்
தருவிருந் தாலுண்டு பல்போக முந்தை வானவர்க்கு
மருவிருந் தாரணி தோள்வேத நாயக மால்வனைநுந்
திருவிருந் தாலுண் டெளியேற்கெஞ் ஞான்றும்பல் செல்வமுமே. ()

பாங்கி நின்குறை நீயேசென்றுரையென்றல்.

நன்று வதிமனத் தான்வேத நாயக நம்பிவெற்பிற்
கன்று வதிகை யுயிர்நீமெய் யேற்கனை நின்குறைநீ
வென்று வதிவடி வேலண்ண லேயுடன் மேலுயிர்வந்
தொன்று வதியல் லெனுஞ்சூத் திரமு முணர்ந்திலையே. (கூக)

பாங்கியைத் தலைவன்பழித்தல்.

பொன்னு லமைமணிப் பூண்வேத நாயக பூபன்வெற்பி
னின்னுன் முடியுமிக் காரிய மென்று நினைந்துளத்துன்

பின்னு ழுழன்று திரிந்தன னீயின்ன பெட்பின்மொழி
சொன்னு லினியுனைச் சொல்வதென் னேயென் சுடுவினையே. (கூஉ)

பாங்கி பேதைமையூட்டல்.

திக்கே றியபுகழ் மால்வேத நாயகச் செம்மல்வெற்பி
லிக்கே றியமொழி யோவியப் பூசைகண் டேய்ந்தகட்சி
புக்கே றியகிளி பொத்துவள் பேதைமை பூண்டவளுண்
மிக்கே றியநின் றுயரறி வாள்கொல்செவ் வேலவனே. (கூங.)

தலைவன் தலைவி மூதறிவுடைமைமொழிதல்.

பொன்னைப் பொருமட வாயெனை நோக்குகட் பூவழியே
யென்னைக் கவர்ந்துதன் பால்வைத்துத் தேம்பிடு மென்மனத்தே
தன்னைப் பொருந்தவைத் தாள்பேதை யென்பது தக்கதுவோ
மின்னைப் பொருமணிப் பூண்வேத நாயக வேள்வரைக்கே. (கூச)

பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

ஒன்றுற்றி முன்மெளிந் தார்பின்னு மாற்றற் கொருதுணைதேர்ந்
தின்றுற்ற வேண்டு மெமக்கிதென் னுரெளி யேனுமக்கு
நன்றுற்றுங் காரிய மென்வேத நாயக நம்பிசெம்பொன்
மென்றுற் றிளங்கமு கங்குளத் தூர்வரை வித்தகரே. (கூரு)

தன்னிலைதலைவன்சாற்றல்.

எள்ளாத பேரெழி லேந்திழை யேநின் னிலங்கிறைவி
விள்ளாத போருண் மேவாத போதென்றும் வெய்யவழி
நள்ளாத நுண்மதி மால்வேத நாயக நம்பிநட்புக்
கொள்ளாத பாவியி னென்னுவி தேம்பிக் குலைந்திடுமே. (கூசு)

பாங்கியுலகியலுரைத்தல்.

நல்லா ருரைக்கும் புகழ்வேத நாயக நம்பிவெற்பின்
மல்லார் புயத்தண்ண லேயிடை யூறு மடங்கவெங்கள்
வில்லார் நுதலியை வேட்டனை யேற்றமர் வேட்டுவப்பப்
பல்லா ரறிய வரைந்தெய்து வாய்மணப் பந்தரிலே. (கூஎ)

தலைவன்மறுத்தல்.

நந்தாத நீர்நசை யால்வாடு வாற்கொரு நண்பனன்னீர்
செந்தா மரைத்தடந் தொட்டுண்டு தீரெனுஞ் சீர்மையொக்குங்
கொந்தார் குழலியை வேட்டனுர் தீரெனக் கூறியது
மந்தார தாரு நிகர்வேத நாயக மால்வரைக்கே. (கூஅ)

பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

வில்லார் மணிப்பணி மால்வேத நாயக வேள்வரைவா
யல்லார் நிறத்தெமர் பொல்லா ரருளுமற் றச்சமுமுள்
ளில்லார் கொடுஞ்சிலை வல்லாரிங் கெய்துவ ரெய்தினுனை
மல்லார் புயத்தைய வெய்வார்செய் வாருண் மதிப்பரிதே. (கூகூ)

தலைவன்கையுறைபுகழ்தல்.

நந்தா மணிப்பணி மால்வேத நாயக நம்பிவெற்பென்
னந்தா மணிமக வான்காம தேனுவை யாத்தரிய
சிந்தா மணியுந் தரினுங் கொடேனிச் செழுமணிநம்
பந்தா மணிமுலை தாங்கினம் றியான்செய்த பாக்கியமே. (கOO)

பாங்கி கையுறைமறுத்தல்.

மந்தார தாரு நிகர்வேத நாயக மால்வரையெஞ்
செந்தார்ப் பசுங்கிளி மாமுலை மேனுஞ் செழுமணித்தார்
கந்தார் களிற்றெமர் காணிற்கண் சேந்து கறுத்திநின்று
தந்தா ரெவரெனின் யாங்கனென் றேசொலத் தக்கதுவே. (கOக)

ஆற்றாநெஞ்சினோடவன்புலத்தல்.

பாடத் தவஞ்செய் தவர்கடை வாயிலைப் பற்பலரு
நாடத் தவஞ்செய் தவன்வேத நாயக நம்பிவெற்பிற்
கூடத் தவஞ்செய் திலமட வாரைக் குழையுநம்போல்
வாடத் தவஞ்செய்த தாலென்செய் வாமிந்த வல்வினைக்கே. (கOஉ)

பாங்கிதலைவனைஆற்றுவித்தகற்றல்.

சோலையி லேகுயில் கூங்குளத் தூரன் றுதிசெய்தமிழ்
வேலையி லேதுளை வோன்வேத நாயக வேள்வரைவாய்க்
கோலையி லேர்விழி யாட்குறைப் பேனின் குறைவருதி
காலையி லேநின்கை மாலையு மேற்பல் களிற்றண்ணலே. (கOங)

இரந்துகுறைபெறாதவருந்தியகிழவோன்மடலேபொருளெனமதித்தல்.

வாய்க்கு மருந்து னிசையென நாடிவந் தார்கலிநோய்
தேய்க்கு மருந்து புகழ்வேத நாயகச் செய்பனிநோய்
சாய்க்கு மருந்து திவாகர னேயுட் டவாமயனோய்
மாய்க்கு மருந்துநெஞ் சேமட லேயன்றி மற்றிலையே. (கOச)

பாங்கிக்கு உலகின்மேல்வைத்துரைத்தல்.

சேலேறு செய்க்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பி
னூலே றியல்பிற் கிழியேறு கையி னுவலருந்தீம்
பாலேறு மென்மொழி யார்விழி யேறுபட் டேறுநெடு
மாலேறி னார்மடன் மேலேறு வார்மதி வாணுதலே. (கOரு)

அதனைத் தன்மேல்வைத்துச்சாற்றல்.

பூவேறி வண்டுபண் சாதாரி பாடும் பொழிற்குளந்தைக்
கோவேறி யம்புறு சீர்வேத நாயகக் கோன்வரைப்பாற்
றாவேறி கைவிழிக் காவென் பெருக்கணி சூடிமடன்
மாவேறி நாளைநின் னூர்வீதி வாய்வரு வாமயிலே (கOசு)

பாங்கிதலைமகள் அவயவத்தருமைசாற்றல்.

அடையு மவர்க்குநன் மால்வேத நாயக வண்ணல்வெற்பிற்
றொடையுஞ் சுரும்புஞ் செறியுமைம் பான்முதற் றேன்றுறுப்பு

மிடையு மவையவ மாகா தெழுதியென் மின்னனையா
ரிடையு நடையு மெழுதுவை யேன்மட லேறுவையே. (க0எ)

தலைமகன் தன்னைத்தானே புகழ்தல்.

பொருந்த வுலகர் வழக்கோர்ந்து மெய்யிது பொய்யிதென்று
திருந்த வெழுதுந் திறல்வேத நாயகச் செம்மலொப்பக்
கருந்தடங் கண்குழன் மாமுலை யல்குல்செங் கைம்முதன்மெய்
யிருந்தவ மாத ரிடையொன்றும் பொய்யென் றெழுதுவனே. (க0அ)

பாங்கியருளியல் கிளத்தல்.

சேலப்பு வென்றகண் ணோர்நட மாடல்செய் சீர்க்குளத்தூர்
மாலம் புயக்கு வளைவேத நாயக வள்ளல்வெற்பி
லேலம் புனைகுழ லாள்பொருட் டாகவிறைவநெடுந்
தாலம் புரப்பவர் தாலஞ் சிதைத்த நகாதென் றுமே. (க0௯)

பாங்கி கொண்டு நிலைகூறல்.

நம்பனை யாய வருள்வேத நாயக நப்பிவெற்பி
லம்பனை யாத கரும்பனை யாரம் பகற்றவிண்டோ
யும்பனை யார்சிதை வுட்குறித் தாயவ் வொருவினையெங்
கொம்பனை யார்நின் குறைமறுத் தாற்பின் குறித்தருளே. (கக0)

தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

வளையாள் குடங்கையன் மால்வேத நாயக வள்ளல்வெற்பிற்
றளையாள் குழன்மொழி கண்களை வின்று தூகிலுருவக்
கிளையாள் குறிப்பி னளையாள்கல் லார்மொழி கேட்டலினிவ்
விளையா ணலமண்ண லேவிழைந் தாயெனி னென்பயனே. (ககக)

தலைவன் தலைவி வருத்திய வண்ணமுணர்த்தல்.

கோங்கிற் பொலிகுளத் தூர்வேத நாயகக் கோன்வரைப்பா
னீங்கிற் றெறாஉங்குறு குங்காற்றண் ணென்று நெருப்பினைத்தன்
பாங்கிற் பதியவைத் தென்னுவி வாட்டிய பான்மொழியைத்
தாங்கிற் றெனுமிடை யாயிளை யாளென றக்கதுவே. (ககஉ)

பாங்கி செவ்வியருமை செப்பல்.

செறியவித் தாரணி சூழ்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
குறியவித் தார்வடம் போலோர் சிறிய குரம்பையுட்புக்
கறியவித் தார விளையாட லோவி யடங்கியைந்து
பொறியவித் தாரி னிருப்பாட்கென் சென்று புகல்வதுவே. (ககரு)

தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

சந்தான தாரு வெனும்வேத நாயகத் தண்ணியன்ற
னந்தாநன் மால்வரை வாய்விரை வாயன் னகுகுழலாய்
பந்தா ணியன்முலை யெவ்வா றிருப்பினும் பார்தலைவன்
வந்தா னென்னினென்ற வந்தா னெனவெதிர் வந்திடுமே. (ககச)

என்னைமறைப்பினெளிதெனநகுதல்.

உடையார் பிறரில் லுடைமை யுறவந் துறுங்கொ லுண்ணூ
லிடையார் நினக்குரி யாரா யினுமென் னுதவியின்றி
யடையார் புயத்தொடை யாயடை வாய்கொ லடுகளிறு
விடையா ரரியெனு மால்வேத நாயக வேள்வரைக்கே. (ககரு)

அந்நகைபொருதவன் புலம்பல்.

மெய்யோ மதித்த புகழ்வேத நாயக வேள்வரைவா
யையோ விவர் திரு வாய்க்கென்செய் தேன்வெவ் வழற்கொழுந்தே
பொய்யோ வெனச்சில வார்த்தைமு னல்கிப் பொலியவிடு
நெய்யோ வெனநகை நல்கிய தாற்பி னினைப்பரிதே. (ககசு)

பாங்கி தலைவனைத்தேற்றல்.

விற்று ரணிபுய மால்வேத நாயக வேளொடுக
லுற்று ரெனவுட் கலங்க லலங்க லொளிர்புயத்தாய்
பற்றார் மகளி ரலர்தோ ழியாருள் பற்றினவர்
மற்றுரென் போலென்சொ லிந்நாண் மருளம் மடமயிலே. (ககஎ)

பாங்கி கையுறையேற்றல்.

ஏழிற் பொலிகளிற் றுன்வேத நாயக வேந்தல்வெற்பிற்
சூழிற் புரக்குமித் தோன்றல்கை சான்றமென் றூயதழை
காழிற் பொலியல்கு லாட்கணி யாகவென் கையுற்றம்மா
வூழிற் பெருவலி யாவுள வென்ப துணர்த்தியதே. (ககஅ)

தலைவன் ஆற்றல்.

ஓருயிர் நோயைமற் றோருயி ரேற்பதி லொண்டமைமேற்
றோருயிர் நோயைப் பேருயி ரேற்ற தருளுணர்ந்திச்
சீருயி ரோம்பவென் செய்வதென் செய்யுமண் செல்லுக்குட்டல்
வாருயி ரோம்பு புகழ்வேத நாயகன் மால்வரைக்கே. (ககக)

இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கவன்குறையுணர்த்தல்.

பரியர் கரியர்கள் சூழ்வேத நாயகப் பாரிவரைக்
குரியர் பிரிய ரொருவர் வருவர்நம் மோர்புனத்தே
யரியர் தெரியவும் வாய்திற வார்தளி ரங்கையரப்
பெரிய ருவப்புற யாஞ்செயத் தக்கதென் பெண்ணமுதே. (கஉ0)

இறைவி அறியாள்போன்று குறியாள்கூறல்.

கனியிற் பொலிபொழில் சூழ்குளத் தூரன் கரிசறுத்த
வனியிற் பொலியும் புகழ்வேத நாயக வள்ளனட்பு
நுனியிற் கரும்பு தினல்போ லினிக்கு நுவலரிய
பனியிற் பொலிபிறை போல்வள ராநிற்கும் பான்மொழியே. (கஉக)

பாங்கி யிறையோற்கண்டமை பகர்தல்.

மையுறை வாட்கண் மடந்தைநல் லாய்கடல் வாரியெனுஞ்
செய்யுறை நீர்க்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பிற்

பொய்யுறை யாமொழி யார்கழி யார்நம் புனத்தினின்றுங்
கையுறை யார்நிற் கருதின ராய்நிற்பக் கண்டனனே. (கஉஉ)

பாங்கியைத் தலைவி மறைத்தல்.

தென்னைக் கருதிய சீர்வேத நாயகச் செம்மல்வரை
தன்னைக் கருதிப் புகுவன்றி மான்குஞ் சரங்கருதிப்
பொன்னைக் கருதி மணியைக் கருதிப் புனம்புகுவா
ரென்னைக் கருதிவந் தாரென்ப தென்செவிக் கேற்பதன்றே. (கஉங)

பாங்கி என்னைமறைப்பதென்னெனத்தழால்.

பொன்னை மறைப்ப தொரீஇயடைந் தார்கலி போகநல்கு
மின்னை மறைப்பரு மால்வேத நாயக வேள்வரைவா
யன்னை மறைப்பதுண் டோதன் மகவுக் கடிப்பணிசெ
யென்னை மறைப்பதென் னேபெரு மாட்டி யிதுவியப்பே. (கஉச)

பாங்கி கையுறைபுகழ்தல்.

அலைத்தலை மானனை யாய்நிதிக் கோனுயி ராயமனை
முலைத்தலை காணரி திம்முத்த மென்று மொழிபலவான்
கலைத்தலை யார்விருப் பாற்கொடுத் தாரென் கயிற்சுருணை
மலைத்தலை யேறிநின் றேன்வேத நாயக மால்வரைக்கே. (கஉரு)

தோழி கிழவோன்றுயர்நிலைகிளத்தல்.

செய்யோ வருங்குளத் தூர்வேத நாயகச் சேய்வரையென்
மெய்யோ விளைத்தது காலோ நடந்து மெலிந்தனவங்
கையோ சலித்தன மாந்தளிர் கொய்தென்பர் காணொருவ
ரையோ பிறிதொன் றும் வாய்திற வார்நின் றலசுவரே. (கஉசு)

மறுத்தற்கருமைமாட்டல்.

மழையேந்து காக்குளத் தூர்வேத நாயக மால்வரைப்பைந்
தழையேந்து கையொடு காணுந் தொறும்பெருந் தக்கவர்முன்
பிழையேந்து பொய்பல பேசினன் யானினிப் பேசறியேன்
குழையேந்து மொண்செவி யாய்மறை வேயுட் குறித்தனனே. (கஉஎ)

தலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்.

சீலத்தை நோக்கிய மால்வேத நாயகச் சேய்நகரோர்
தாலத்தை நோக்கி யுதியர்வெங் கோபமுந் தாங்கவந்த
காலத்தை யென்செய்வ தென்றுயிர்த் தாரக் கருத்திலுறுங்
கோலத்தை யோசிறி யேனறி யேன்குறி யேனென்றுமே. (கஉஅ)

தோழி தலைவியைமுனிதல்.

விள்ளத் தகாத புகழ்வேத நாயக வேள்வரைவா
யெள்ளத் தகாத விளமயி லேசிறி யேனைநட்பாக்
கொள்ளத் தகாதறி யாமையி னுற்சொன்ன கூற்றினையு
முள்ளத் தகாது னுளத்ததுற் றுருக் குவந்துரையே. (கஉகூ)

தலைவி பாங்கியைமுனிதல்.

காயு முனியு மெனுவேத நாயகக் காளைவெற்பி
னீயு முனியும் படியடைந் தாரொரு நேயர்நமர்
வாயு முனியு மினிவெளிப் பட்டு வரினயற்பல்
பேயு முனியுமென் றுலென்னை யோநின்னைப் பேசுவதே. (கரு0)

தலைவி கையுறையேற்றல்.

பொன்னேடு நேரு மதிவேத நாயக பூபன்வெற்பி
னின்னேடு வாடுந் தழையது நோக்கியென் னேயமன
மென்னேடு வாடுநின் சொன்மறுப் பேன்கொல்கை யேற்றதழை
மின்னேடு நேரிடை யாய்தடை யாதென்கை மேவுதற்கே. (கருக)

இறைவிகையுறையேற்றமைபாங்கியிறைவற்குணர்த்தல்.

நன்னிலை யேநிற்கு மால்வேத நாயக நம்பிவெற்பிற்
பொன்னிலை வேல தழையென்று கூறிய போதுவகை
யென்னிலை யேற்றனண் மோந்தன ளொற்றி யியம்பியபோர்
முன்னிலை யேவல் வினையா வுணர்ந்தனண் முற்றிழையே. (கருஉ)

பாங்கிதலைமகற்குக்குறியிடங்கூறல்.

பாங்கா மரகதப் பாறை முகின்மண் படிதலுற்று
நீங்கா துறைந்தென நாப்ப ணுறச்சுற்று நின்றொளிர்பூ
வாங்கா மருசந்த னச்சோலை யாம்பக லாடுமிடம்
வீங்கா வெழுபுகழ் மால்வேத நாயக வேள்வரைக்கே. (கருங)

பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

சீர்மலி சாந்த குணவேத நாயகச் செம்மல்வரைச்
சார்மலி மாமயி லாடுதே னேக்கித் தளிர்கள்கொய்து
கார்மலி குன்றெதிர் கூய்வீழ் புனலெதிர் கைமறித்தியா
மேர்மலி காவினன் காடற் கிறைவி யெழுந்தருளே. (கருச)

பாங்கிதலைமகளைக்குறியிடத்துய்த்துநீங்கல்.

குலவு நலமலி சீர்வேத நாயகக் கோன்வரைப்பா
லுலவு நலமலர் கொய்திங் குறுவ னுறுமளவு
மிலவு கலவுசெவ் வாயமு தேயினி திவ்விடத்தே
நிலவு கலவ மயிலாட னேக்குபு நின்றருளே. (கருரு)

இறையோன்குறியிடத்தெதிர்ப்படுதல்.

அந்தோ நடந்து வருந்தின வோபத மல்குமிடை
பந்தோ வெனுமுலைப் பாரம் பொறுது பதைத்ததுவோ
நந்தோ வெனுங்களத் தீர்வேத நாயக நம்பிவரை
வந்தோ வியமென நின்றதென் மேல்வைத்த மன்னருளே. (கருசா)

புணர்ச்சியின்மகிழ்தல்.

கண்ணத் தவஞ்செய் ததுமன மற்றிவர் காமருரு
நண்ணத் தவஞ்செய் ததுதோண் முலையை நலிகலியை

மண்ணத் தவஞ்செய் தவன்வேத நாயக மால்வரைவா
யுண்ணத் தவஞ்செய் ததுவா யமுதெனக் கொப்பெவரே. (கஙௗ)

புகழ்தல்.

இரவே விளங்குங் களங்க மறுதிக லேற்றரவம்
வரவே மறையு நிறையுங் குறையுமற் றோர்தினமெய்க்
கரவே யுறுமம் மதியோ விவர்முகக் காமர்மதி
திரவேத நாயக மால்வரைப் பாலொக்குஞ் செப்பரிதே. (கங அ)

தலைமகளைத் தலைமகன் விடுத்தல்.

பொருவேயில் பன்மலர் பூத்திருந் தாலும் புனற்றடமொண்
டிருவேசெந் தாமரை நாப்ப ணுருவிடிற் சீருறுமோ
வொருவேத நாயக மால்வரைச் சார லுறவனப்பை
யிருவே யுறழ்திர டோளாய நாப்ப ணெழுந்தருளே. (கஙௗ)

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

முகப்பகை யாய கமலமும் வண்டு முழங்குமங்கைக்
ககப்பகை யாயசெங் காந்தளுங் கொய்தரும் பாயமுல்லை
பகப்பகை யாய நகையாய் கொணர்ந்தனன் பார்கவிக்கு
மிகப்பகை யாய கொடைவேத நாயக வேள்வரைக்கே. (கச0)

தலைவியைப் பாங்கிற்கூட்டல்.

இருளிற் கமல மலர்ந்தது வள்ளையி லேறியது
சுருளிற் கழிந்த கருநீல மாயத்திற் றுன்னுவம்வா
வருளிற் பெரியன் பொருளிற் பெரிய னமைந்தபண்ணூற்
றெருளிற் பெரிய னெனும்வேத நாயகச் சேய்வரைக்கே. (கசக)

நீங்கித்தலைவற் கோம்படைசாற்றல்.

நிறவேல்கைக் கொண்ட நெடுந்தகை யேயெமர் நீதியுமிவ்
வுறவே லெனும்பக்க முந்தேர்ந் திடையி டுறப்புரிந்தேன்
றிறவேல் விழிபழி சாரா வகையது சிந்தைசெய்யேன்
மறவே லெனென்று நூல்வேத நாயக மால்வரைக்கே. (கசஉ)

உலகியன் மேம்படவிருந்து விலக்கல்.

பாலிற் சமைந்த தினைமூ ரலுமெமர் பற்றுகொடுங்
கோலிற் சமைந்த முயலூ னுந் தேனுங்கைக் கொண்டருந்தி
வேலிற் சமைந்தகை யாயின்று வைகி விடியுமுன்சென்
மாலிற் சமைந்த கொடைவேத நாயக மால்வரைக்கே. (கசங)

விருந்திறைவிரும்பல்.

காதா யினுமினி யாயென்பர் பாலருள் காட்டுபெருங்
கோதா யினும்வளர் சீர்வேத நாயகக் கோன்வரைப்பாற்
சூதா யினும்வளர் பூண்முலை யிருங்கை தொட்டபொருள்
யாதா யினுமெனக் கின்னமு தாமுணற் கென்கசப்பே. (கசச)

## ஒருசார்பகற்குறி.



கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்.

வேயாமல் வைப்பதில் சீர்வேத நாயக வேள்வனைவா
யீயாம லீட்டுந ரீயா வளற்றி னிடைவிழல்போற்
பாயாமல் வல்லிருள் சீப்பவன் மேல்கடற் பால்விழுந்தான்
மாயாம லன்னர் பழிபோ லெழுந்தது மாலையுமே. (கசரு)

பாங்கி புலம்பல்.

நம்மாலை யேநிகர் மால்வேத நாயக நம்பிவெற்பி
லெம்மாலை யோசெய் வதியா திறைவ ரிணைத்தடந்தோ
ளம்மாலை யேவிழைந் தாமாலை யேற்ற வணங்கணங்க
ளிம்மாலை யேவினர் யாரவர் வாழிய வெற்றைக்குமே. (கசசு)

தலைவனீடத் தலைவிவருந்தல்.

பொன்னோ வெனுமதி மால்வேத நாயக பூபன்வெற்பி
லன்னோ வருள்விழி காவியென் றார்தனி யாவியென்றார்
மின்னோ வெனுமிடை தேம்புமென் றார்கடு வேம்புமென்று
ரென்னோ வராதொளித் தாரளித் தாரெம் மிறையவரே. (கசஎ)

தலைவியைப் பாங்கிகழறல்.

கூடினர் பின்பிரி வார்பிரிந் தாரும்பின் கூடுவர்வா
னோடினர் தோன்று வதும்பின் மறைவது முள்ளுணர்பாப்
பாடினர் கற்ப தருவேத நாயக பார்த்திபனோ
டேடினர் போற்கலங் கேலய லோரி னெழிவதன்றே. (கசஅ)

தலைவி முன்னிலைப்புறமொழிமொழிதல்.

தகையுற் றிடுகுறிப் பான்மொழி யாமுனந் தாமுணரு
மிகையுற் றிடுநால் லார்க்கொரு வார்த்தை விடுப்பதினுந்
திகையுற் றிடுமெய்ப் புகழ்வேத நாயகச் செல்வனொடு
பகையுற் றிடுமது வேநன்று நன்று படர்பவர்க்கே. (கசகூ)

தலைவி பாங்கியொடுபகர்தல்.

ஏட்டிற் பதிப்பருஞ் சீர்வேத நாயக வேந்தல்வெற்பில்
வேட்டிப் படித்துய ரென்றுசெய் தோனிரு மெய்யுமொன்றா
நாட்டிப் படைத்திலன் யானென்செய் கேன்சொன் னவின்மொழியோ
கூட்டிப் பிரித்துப் பிரித்துப்பின் கூட்டவொண் கோற்றொடியே. ()

தலைவியைப் பாங்கியச்சுறுத்தல்.

நெஞ்சிறை கொண்ட விறைவெளித் தோற்ற நிறீஇப்புனத்து
ளஞ்சிறை வன்னி யிறைகொளச் செய்த தறிந்தனவே
னஞ்சிறை வேனம ரிற்சிறை வைப்பர்நன் ளார்நவிய
வெஞ்சிறை செய்த திறல்வேத நாயக வேள்வனைக்கே. (கருக)

நீங்கற்கருமை தலைவிநினைந்திரங்கல்.

காவியொன் றுக மதன்வேத நாயகக் காளைவெற்பி
ஞாவியொன் றுகப் புனைகுழ லாய்நல நண்ணவெங்கட்
காவியொன் றுக வமைந்தது போன்மெய்யு மன்றுசெய்த
பாவியொன் றுகப் படைத்தில னேயென்ன பாவமிதே. (௧௫௨)

தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றல்.

பேரொலி நீர்வயல் சூழ்குளத் தூரன் பெருந்தமிழ்ப்பாச்
சீரொலி யேற்குஞ் செவிவேத நாயகச் செம்மல்வெற்பிற்
காரொலி யேற்று மகிழ்மயில் போலநங் காவலர்தந்
தேரொலி யேற்று மகிழ்வாய் குழைநின் றிருச்செவிக்கே. (௧௫௩)

பாங்கி தலைவற்குச் சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.

பணியார் பணிய நகுவேத நாயகப் பண்பன்வெற்பிற்
கணியார் மதுமலர் வாய்திறந் தார்முற் கடிந்தபகை
தணியார் தினையற நாட்குறித் தார்தடிந் தாரினியாந்
திணியார் மனத்தின் மயில்காள்செல் வேமெஞ் சிறுமனைக்கே. (௧௫௪)

முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

சிறப்பினுஞ் செல்வத் தினும்பொலி வோன்செம்பொ னேற்றவரோ
யுறப்பினு நல்கு மொருவேத நாயக வும்பல்வெற்பிற்
பறப்பினும் பாடினுங் கூடினு நீடின பார்த்திபர்தா
மறப்பினு நீவிர் மறவீர்வண் டோரங்கண் மாதினையே. (௧௫௫)

முன்னின்றுணர்த்தல்.

தாவேங்கை யென்றிரப் பார்காம தேனு தழனுமிழ்கண்
மாவேங்கை யன்ன வலிவேத நாயக மால்வரைமேற்
பூவேங்கை காட்டத் தடிந்தார் தினையிப் புனத்தையினிக்
காவேங்கை விட்டனங் காப்பே மனையகங் காவலனே. (௧௫௬)

முன்னின்றுணர்த்து ஓம்படைசாற்றல.

தினையென் றுளங்கொண் டிருந்தேமெம் முள்ளஞ் சிதைத்திடுதீ
வினையென் றுளங்கொண் டிலேமைய னேயினி மேவிடமூர்
மனையென் றுளங்கொண் டவண்வா புரத்தி மயிலையுல
கனையென் றுளங்கொண்ட மால்வேத நாயக வண்ணலொத்தே. (௧௫௭)

கிழவோன்றஞ்சம்பெறாதுநெஞ்சொடுகிளத்தல்.

தண்ணிய வாறடி கொப்புள்கொள் வெப்புந் தருவதுபோற்
கண்ணிய வின்பந் தருபுனந் துன்பமுங் காட்டியது
புண்ணிய வான்குளத் தூர்வேத நாயக பூபன்வெற்பி
னண்ணிய வாமன மேயென்செய் வாமுண் ணலிதுயர்க்கே. (௧௫௮)

---

## பகற்குறி இடையீடு.



இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

புறவரி வானிக ருங்குர ளைக்கப் புனம்புகுந்து
குறவரி யாளி பொருமா றுலாவுவர் கோற்றொடிப்பொன்
னிறவரி மானப் பொலிவேத நாயக நேயன்வெற்பின்
மறவரி வேல்விழி பாற்பல காலும் வருமன்னையே. (கருகூ)

இறைவியைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

கடங்கொண் டெழுகளிற் றன்வேத நாயகக் காளைவெற்பி
லிடங்கொண் டெழுமுலை யுங்குலை யுஞ்சிற் றிடையுமெய்யிற்
றிடங்கொண் டெழுபசப் புங்கண்டென் னைசிந்தை செய்தனளாய்
மடங்கொண் டெழுமயி லேயினி வாரலிவ் வண்பொழிற்கே. (கூ0)

இறைமகளாடிடநோக்கியழுங்கல்.

கனமே பொருவுசெங் கைவேத நாயகக் காளைவரைப்
புனமே வுதலை நினையா மனையிற் புகுதுவமித்
தினமேயெங் நன்றிகொன் றார்க்குமுய் வுண்டெவ்வு செப்பினிலை
மனமேசெய்ந் நன்றிகொன் றார்க்கென் பதனை மறந்தனமே. (கூக)

பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

குரல்கவ ராது கடிந்ததெண் ணுதிக் குளிர்புனத்தே
யுரல்கவர் காற்களிற் றார்வரிற் போஞ நுற்றறன்மீன்
சிரல்கவர் செய்க்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்ப
தால்கவ ரோதியர் சென்றுரொன் றேறுமின் றத்தைகளே. (கூஉ)

பின்னுள்நெடுந்தகை குறிவயினீடுசென்றிரங்கல்.

வேனினங் காமரு வேள்வேத நாயக வீரன்வெற்பெ
னூனினங் காமுயிர் நிற்குங்கொல் லோகண் ணுறுதொழியி
னேனினங் காதன் மயிலனை யாரிவ் விடத்தெதிரார்
மானினங் காளளி காள்கிளி காளென் மருவியதே. (கூங)

வறுங்களநாடிமறுகல்.

ஒருமான்பின் சென்று வருமான வன்கண்ட வோரிடம்போற்
றிருமா னிருங்க விடமாயிற் றலின்னுஞ் செய்வதுண்டோ
பொருமான வீரப் புயன்வேத நாயக பூபன்வெற்பில்
வருமான் மயிலினங் காண்முன்பு போலின்ப வாழ்வினையே. (கூச)

குறுங்தொடிவாழூர்நோக்கிமதிமயங்கல்.

கொண்டலை வென்ற கொடைவேத நாயகக் கோன்வரைபித்
தண்டலை நின்றுழல் கின்றனம் யாமதுத் தாரையுண்டு
வண்டலை யொண்குழல் வாழுஞ்சிற் றூரது மற்றதனைக்
கண்டலை கின்றன கண்களென் செய்யக் கடவனவே. (கூரு)

# இரவுக்குறி.

இறையோன் இருட்குறிவேண்டல்.

மின்னு முழங்குவ மேகங்கல் லாமை மிகுமனத்திற்
றுன்னு மலிந்தது தூங்கிரு ளோங்குமுட் டேயர்தமிழ்த்
தென்னு வெனவளர் மால்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
பொன்னு வெனுமட வீர்விருந் தாய்நும்மிற் போதுவனே. (கசுசு)

நெறியினதருமைகூறல்.

வேலோ டுலாவு மெமருமுள் ளஞ்சுவர் வேழமிரு
நாலோடு கீளச் சமையே யுலாவு நடவையுற
நூலோடு நாளும் பயில்வேத நாயக நுண்மதிச்சீர்
மாலோடு நட்படை யார்க்கே தகுநீ மருவரிதே. (கசுஎ)

இறையோன்நெறியினதெளிமைகூறல்.

போதே யிடங்கொணின் பொன்னனை யாண்முலைப் போர்க்களிறு
மாதே யிடைச்சிங்க மல்குற் பணியொடு மாறுகொள்ளேன்
காதே தெளினுமுள் ளஞ்சுவ லோகலங் கேன்சுருணை
மீதேறி நின்ற புகழ்வேத நாயக வேள்வரைக்கே. (கசுஅ)

பாங்கியவனூட்டணியியல்வினாதல்.

நின்னூட் டியன்மட வார்விளை யாடுநன் னீழலெவன்
பொன்னூட் டிழையெவன் பூசும் விரையெவன் போற்றுடையெ
னின்னாட் டின் மேவைந் தருமேவத நாயக வேந்தல்வெற்பின்
மின்னூட் டிசையண்ண லேயெண்ண லேதும் விளம்புகவே. (கசுகூ)

கிழவோன் அவனூட்டணியியல்வினாதல்.

என்னூட் டணியிய லாயுங் குறிப்பு ளினிதுணர்ந்தேன்
பொன்னூட் டியன்மட மாதே புனல்கொடு பொங்குபொன்னி
நன்னூட் டியல்குளத் தூர்வேத நாயக நம்பிவரை
நின்னூட் டணியிய லெல்லா மெனக்கு நிகழ்த்துகவே. (கஎ0)

அவற்குத்தன்னூட்டணியியல்பாங்கிசாற்றல்.

நாடுவர் கற்ப தருவேத நாயக நம்பிவெற்பிற்
சூடுவர் முத்த முடிப்பர்பொன் வேங்கைத் துணர்குறிஞ்சி
பாடுவர் பூசுவர் செஞ்சாந்து நீந்து படர்சுனைபுக்
காடுவர் பிண்டி நிழற்பயில் வாரெம் பரிவையரே. (கஎக)

இறைவிக்குஇறையோன்குறையறிவுறுத்தல்.

எட்டினை யொக்கும் பழியு மிலான்றெவ் விரிதரும்வாள்
வெட்டினை யொக்கு நகைவேத நாயக வேள்வரைவாய்
வட்டினை யொக்கு முலையாய்பன் மாவுறும் வட்டையிற்கண்
கட்டினை யொக்கு மிருள்வரல் வேண்டினர் காதலரே. (கஎஉ)

நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்.

கண்ணனை யார்புகழ் வாரெனச் சீர்த்தவன் காவின்மலர்க்
கண்ணனை யார்குளத் தூர்வேத நாயகக் காளைவரைக்
கண்ணனை யார்கரி தேர்ந்தரி மேவுங் கடுவழிநங்
கண்ணனை யார்வரு வார்மன மேயென் கருதுவதே. (களங)

நேரிழைபாங்கியொடுநேர்ந்துரைத்தல்.

கருவா ரணங்கவிக் கீவோன்வெள் வாரணங் கையுடையோன்
மருவார ணங்கட வாவேத நாயக வள்ளல்வெற்பி
லொருவா ரணங்கர வஞ்சூ ருலாவழி யுற்றொருவர்
வருவா ரணங்கனை யாய்நினை யாயென் மறுப்பதுவே. (களச)

நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குரைத்தல்.

குரவிடை யார்குழல் பொன்னடி வீழ்ந்துன் குறையுரைத்திவ்
விரவிடை யானிரந் தேன்கரந் தேனல னெட்டிணையுந்
திரவிடை யாவன் சிலைகனி யாக்கவுந் தேர்ந்தனன்சீர்
வரவிடை யாளி யெனும்வேத நாயக மால்வரைக்கே. (களரு)

குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்.

வண்டியை பூந்தொடை மால்வேத நாயக மன்னன்வெற்பிற்
கண்டியை மென்மொழி மாதே காடக் கடவயிரத்
தண்டியை கோட்டுக் களிற்றன் றுனக்குத் தளிருதவும்
பிண்டியை வந்தலைக் கின்றது நின்றது பேதுறவே. (களசு)

இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.

வடியொன்று வேனெடுங் கண்மட வாய்திட வாய்மைகொள்பல்
குடியொன்று வான்குளத் தூர்வேத நாயகக் கோன்வரைப்பாற்
கடியொன்று வான்புன முன்றுள் வருவெங் களிறுவந்து
பிடியொன்று நாடிநிற் கின்றதின் றோர்நம் பெரும்பொழிற்கே. (களஎ)

அவட்கொண்டுசேறல்.

பூக்கொண்ட வேங்கையின் வாய்த்துப்பி வந்து பொருந்தியது
காக்கொண்ட பூங்குழ லாயிறும் பூதது காண்பதற்குத்
தேக்கொண்ட தாமரைத் தாள்பெயர் மெல்லச்செல் வாநிறத்து
மாக்கொண்ட கொண்ட லெனும்வேத நாயக மால்வரைக்கே. (களஅ)

குறியுய்த்தகறல்.

மண்ணிற் பொலியும் வணஞ்செந் தமிழை வளர்த்தறிஞ
ரெண்ணிற் பொலியும் புகழ்வேத நாயக வேந்தல்வெற்புன்
கண்ணிற் பொலியு நறுநீலங் கொய்துகைக் கொண்டுநடு
விண்ணிற் பொலியுநின் னேயுறு வேனிங்கு மேவுகவே. (களகூ)

வண்டுறைதாரோன்வந்தெதிர்ப்படுதல்.

இரியா விருளின் மலர்மாளி கைச்செவ் விதழ்ப்புதவு
புரியா முழுமணிப் பூஞெளி யேகதிர் போலவெழுந்

தரியா தனர்கண் மணிவேத நாயக வண்ணல்வெற்பில்
விரியா வுலாய்த்திறந் தோதிரு மாதிங்கு மேவியதே. (௧௮௦)

பெருமகள்ஆற்றினதருமைநினைந்திரங்கல்.

கல்லார் மனத்திற் கருகிருள் வாய்முட் கடுவழிக்கை
வில்லார் விழிக்கு மரிமாவ மர்க்கும் விலங்கிமதி
வல்லார் புகழ்குளத் தூர்வேத நாயக மன்னவனுக்
கொல்லாரி னீங்கடைந் தாய்பாவி யேன்பொருட் டுத்தமனே. (௧௮௧)

புரவலன்றேற்றல்.

ஒருகோட்டு வாரண மாளரி கூற்றிற்குட் கேனலையே
பொருகோட்டு வாரியு நீந்துவன் வெங்கரி பொங்கிநேர்
வருகோட்டு வின்னுமர் கான்யாற்றுக் கஞ்சுவ லோமயங்கே
திருகோட்டு நன்மொழி வாய்வேத நாயகச் சேய்வரைக்கே. (௧௮௨)

புணர்தல்.

தறியா மதியுமத் தாமந் தருமுந் தனிக்கயிரு
முறியா வரவு மொருதாழி யாமுழுப் பாற்கடலைச்
செறியா திருக்கவு முண்டே மமுதித் திறமெவர்க்காம்
வெறியார் மலர்த்தொடைத் தோள்வேத நாயக வேள்வரைக்கே. ()

புகழ்தல்.

ஏற்றல வோதைக் குளத்தூரன் வெங்கலி யென்னுந்துய்க்குக்
காற்றல வோவெனு மால்வேத நாயகக் காளைவெற்பிற்
கூற்றல வோவெனுங் கண்மட வீருங் குளிர்நகைக்குத்
தோற்றல வோமுத்த நாளுக்கு நாண்மெய் சுருங்குவதே (௧௮௪)

இறைமகளிறைவனைக்குறிவரல்விலக்கல்.

பரிகரி பாவுக் கருன்வேத நாயகப் பண்பன்வெற்பிற்
புரிகரி நீதிக் கெனுமிறை வாரற்க போற்றியிது
தெரிகரி யாதமுள் ளாறுநள் ளாறு செலுமெமரு
மரிகரி யென்ப ராகா வென்பரல் வாயடைந்தே. (௧௮௫)

அவன் இறைவியையில்வயின்விடுத்தல்.

வாரகந் தோய்முலை யாய்வேத நாயக வள்ளல்வெற்பிற்
சூரகந் தோய்பொழி லிவ்விரு ணீநிற்ற றாய்மையன்று
நாரகந் தோயு மனைதேடி நண்ணினு நண்ணுமெல்லப்
பாரகந் தோயநின் பாதார விந்தம் படர்மனைக்கே. (௧௮௬)

இறைவியையெய்திப்பாங்கிகையுறைகாட்டல்.

விளைமலி கூந்தலங் கானந் தளவுகண் வீளையெய்த
வுளைமலி மானடமின் னேருடி யொற்றி யுறக்கொணர்ந்தேன்
றிளைமலி நானா யணைத்துப் பெடைக்கிதஞ் செப்பவெண்டா
மளைமலி வான்குளத் தூர்வேத நாயக மால்வரைக்கே. (௧௮௭)

இற்கொண்டேகல்.

வம்பனை நட்புக் கொளாவேத நாயக மால்வரைப்பூங்
கொம்பனை நீயணைத் தாலுஞ் சினந்துட் கொதிக்குமன்னை
யிம்பனை மேவியிக் கங்குலின் வாய்நிற்ப தேற்குங்கொலோ
வம்பனை யாள்விழி யாய்மெல்லச் செல்கநின் னய்மனைக்கே. (கஅஅ)

பிற்சென்றிறைவனைவரவுவிலக்கல்.

சீராழி யங்கைப் புயல்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
காராழி மேலெழுந் தென்னச் செறிகருங் கங்குலின்வாய்ப்
போராழி யம்புய மாளிகை வாழுமொர் பெண்பொருட்டின்
றோராழி யேழ்பரி யொண்டேரி லாய்வா லோவுகவே. (கஅகூ)

பெருமகன்மயங்கல்.

மயிர்நீத்து வாழுமென் னுமா னெனப்பெரு மானமிக்கோன்
செயிர்நீத்து வாழும் புகழ்வேத நாயகச் செல்வன்வெற்பிற்
பயிர்நீத்து வாழும் பசுங்கதி ரொற்றுமைப் பட்டுறுமின்
னுயிர்நீதது வாழு முடலென்னை யேனுய்வ னெண்டொடியே. ()

தோழிதலைமகள்துயர்கிளந்துவிடுத்தல்.

இரக்காம்பல் காட்டி யெனநா வலரிறு மாப்பகல்குந்
தரக்காம்ப னோர்வலி மால்வேத நாயக தாருவெற்பில்
வரக்காம்ப னோர்திர டோள்குழன் மாதுன்கை வண்டுநின்வா
யரக்காம்பல் சேர்த்திடி னின்பரி ணும மறிந்துய்வளே. (கசுகூக)

திரும்கட்புணர்ந்தவன்சேறல்.

காலேகண் ணுகக் கருகிரு ளாயினுங் காவல்கொண்ட
மாலே நிகர்குளத் தூர்வேத நாயக மன்னன்வெற்பிற்
சேலேய் விழிமுலை தாக்கவென் றேறுற்ற செஞ்சந்தொளி
போலே யகற்ற வெளிதாவென் னூருக்குப் போதுவனே. (கசுகூஉ)

# இரவுக்குறியிடையீடு.



இறைவிக்கிகுறை இறைவரவுணர்த்தல்.

நகைத்தா ரணிகுழன் மாதேதைபந் தோகை நகுமயில்கண்
முகைததார் தருகணிச் சூழலின் வாயெல்லி முற்றும்பற்றித்
தகைத்தா ரணிபுகழ் மால்வேத நாயக தாருவொடு
பகைத்தார் பொருவத் துயிலா தழுங்கிப் பதைத்தலென்னே. (கசுகூ௩)

தான்குறிமருண்டமைதலைவியவட்குணர்த்தல்.

ஆயிரே யெனுஞ்சொ லனமெ யிதாருக் கறைகுவலென்
னுயிரேய் பவர்குறி யென்றுமற் றோர்குறி யுற்றுமத்தார்
தயிரே யெனவுள் ளுடைந்திடைந் தேன்கங்கு றங்களவுஞ்
செயிரே யிலாத புகழ்வேத நாயகச் சேய்வரைக்கே. (கசுகூச)

பாங்கிதலைவன்றீங்கெடுத்தியம்பல்.

வடிக்கடி வேல்விழி யாய்வேத நாயக வள்ளல்வெற்பிற்
றொடிக்கடி மாலையந் தோள்வாடி யெல்லி துணைந்திணைந்தாங்
கடிக்கடி நீசென்று மாழாந் தனுகவுள் ளன்பிலர்போன்
முடிக்கடி மாலைந மன்பர்செய் தார்பொய் முழுக்குறியே. (கசுரு)

புலந்தவன்போதல்.

கனமேய் குழலி பொருட்டுக் குருட்டுக் கருங்கங்குல்வாய்
வனமேவு வட்டை யிழுத்துப் பழுத்தசொல் வாணர்கொளத்
தினமே சிவிகை யருள்வேத நாயகச் சேய்வரையென்
மனமே யெனைக்கெடுத் தாய்கொடுத் தாய்துயர் வாழியவே. (கசுசு)

புலர்ந்தபின்வறுங்களம் தலைவிகண்டிரங்கல்.

மன்னுக மேவி வளர்வேத நாயக வள்ளறுறைப்
புன்னுக மேயெத் தவம்புரிந் தாய்துயர் போர்த்துநிற்கு
மென்னு கமுமிவ ணுற்றோர் பயனின்றி யெய்திறைவன்
றன்னுக முந்துன்னு தார்நீ யணிந்து தழைப்பதற்கே. (கசுஎ)

தலைவிதன்றுணைக்குரைத்தல்.

பொன்னா மார்பப் புயல்வேத நாயக பூபன்வெற்பின்
மின்னா மார்ப னொருகணிக் கீழ்நின்ற மென்கொடிக்குத்
தன்னாம் வாங்குபு சூட்டினன் யானென்று தங்கிருள்வா
யென்னா ரமுதனை யாய்தெரிந் தார்க்கி திகழ்ச்சியன்றே. (கசுஅ)

தலைமகளவலம்பாங்கிதணித்தல்.

காமனை வென்ற கவின்வேத நாயகக் காளைவெற்பி
னுமனை யாமத்து நண்ணினர் செய்த நகுகுறியோ
பாமனை மேகலை யாய்மெய்ம்மை யேயுட் பரிவொழிக
தாமனை வேங்கையின் மேலே றியதிறந் தானுணரே. (கசுகூ)

இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.

பாட்டார் சுரும்பு முரன்றொடை யீர்புகழ் பற்றியகோ
னட்டார் குடிக்கு முதல்வேத நாயக நம்பிவெற்பின்
மாட்டாரெம் மூர்க்கு வரன்மறந் தீரின்பம் வாய்மடுப்ப
வேட்டார்நும் மூர்க்கு வருவேமவ் வூர்ப்பெயர் விள்ளுமினே. (உ00)

இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்.

நத்தேர் மணிசெங்கை மால்வேத நாயக நம்பிவெற்ப
கத்தேநின் மங்கையை யாய்ந்ததற் கோதுங் கரியதுவே
புத்தே யெனுநகை யாய்பிறர் குற்ற மொழிநான்றி
யொத்தேதங் குற்ற முனைப்பா ரெவரிவ் வுலகத்திலே. (உ0க)

அவள்குறிமருண்டமையவளவற்கியம்பல்.

மேலாய தென்குளத் தூர்வேத நாயக வேள்விலங்கற்
பாலாய நின்குறி யோராது வேறு படுங்குறியன்

பால்ாய நின்குறி யென்றடைந் தேயல் லழுங்கவெங்கள்
சேலாய கண்ணிதன் பாலுற்ற தாலொரு தீவினையே. (உ0உ)

அவன்மொழிக்கொடுமைசென்றவளவட்கியம்பல்.

ஏடா ரலங்கற் புயவேத நாயக வேந்தல்வெற்பி
லோடா விருளில் வெருளில் வழுவை யுழுவையரி
கூடா வெதிர்கொளக் கண்டுமோர் மான்குறு காமையினால்
வீடா வருநுற்றுச் சென்றேனென் றான்பர் மெல்லியலே. (உ0ங)

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்.

கந்தோ டிகல்களிற் றன்வேத நாயகக் காளைவெற்பில்
வந்தோ வவர்செய் குறிகுறி யாது மயிறுயிலா
திந்தோ வெனுநுத லாய்பிணங் கோதையை யேற்றழுங்கி
யந்தோ விறைவருக் கியான்செய்த தீங்குக் களவிலையே. (உ0ச)

தாய்துஞ்சாமை.

நிலங்கொண்ட தாமெடு மால்வேத நாயக நேயன்வெற்பி
னலங்கொண்ட வாண்முகத் தாய்நொச்சிப் பூவுதிர் நள்ளிருளு
மிலங்கொண் டதாய்கண் டுயிலா கருநெய்த லென்றுவமை
புலங்கொண் டவர்சொல் வதுதகு மாலப் பொருவிழிக்கே. (உ0ரு)

நாய்துஞ்சாமை.

வாய்துயின் றாலு மறுவம் பருக்கு வருத்துகொடு
நோய்துயின் றாலு நிலைமை யுறுதெங்கு நோக்கியலை
பேய்துயின் றாலும் புகழ்வேத நாயகப் பேகன்வெற்பெ
ன்றாய்துயின் றாலுமென் னாய்துயி லாது தவக்குனாத்தே. (உ0சு)

ஊர்துஞ்சாமை.

ஆடுவர் தென்குளத் தூர்வேத நாயக வண்ணல்புகழ்
பாடுவர் மன்ற லணிகாணத் தீபம் பலவமைத்துக்
கூடுவ ரிந்நக ருள்ளாரிவ் வாறு குலவியின்ப
நீடுவ ரென்னினெவ் வாறன்பர் தாமிங்கு நேர்வதுவே. (உ0எ)

காவலர்கடுகுதல்.

மிடியொலி மாற்றிய மால்வேத நாயக வேள்குளத்தூர்க்
கடியொலி யோங்கு மதுவும்பற் றுதென்று காவலர்கைத்
துடியொலி யோங்கக் கடிப்புறத் தாக்குமித் துன்றொலியா
லிடியொலி யேற்கு மாவாயி னேன்செய்வ தென்னணங்கே. (உ0அ)

நிலவுவெளிப்படுதல்.

சினக்கதிர் வேலுடை யானெளி யேற்கருள் செய்யமதன்
றனக்கதிர் வாற்றவென் மான்றேர் கடவித் தனிவருநாண்
மனக்கதிர் வில்வலி மால்வேத நாயக வள்ளல்புக
ழெனக்கதிர் வீசி நெடுவான் முகட்டி லெழுநிலவே. (உ0கூ)

சலமே சலஞ்சல மேமொழி யாதது சஞ்சலமே
வலமே வுருவல மேயன்பர் தோளை மருவலமே. (உ௨௪)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

குலவு குவளையந் தார்வேத நாயகக் கோன்கடலே
நிலவு மணியும் வெறுப்பாய் பசந்த நிறம்படைப்பா
யுலவு வளைபொருந் தாதெறி வாயல் லுறங்கிலையுட்
கலவு கருத்தென் றணந்தாய்கொ ணீயுங் கணவனையே. (உ௨௫)

நெறிவிலக்குவித்தல்.

தாயனை யான்செந் தமிழ்வேத நாயக தாருவெற்பிற்
றீயனை யார்பயில் வெங்கா னெறியிற் செறியிருட்டோள்
வேயனை யாயுயிர் கொண்டேகி னுய்வெற் றுடனிமித்தஞ்
சாயனை யாய்வரல் பொல்லா தொழியென் றலைவனுக்கே. (உ௨௬)

குறிவிலக்குவித்தல்.

இளைத்தே மெலியு மிடையாயின் றேயித ணைறுபுனம்
வளைத்தே தழல்கவண் கொடியென் றுளனை மற்றிருவி
கிளைத்தே குரல்கொண் டனவேத நாயக கேசரிவெற்
பிளைத்தே மலர்க்குழ லாய்வார லீங்கென் றியம்பிறைக்கே. (உ௨௭)

வெறிவிலக்குவித்தல்.

முறியாடல் கொண்ட பொழிற்குளத் தூரர் முதலவனன்
னெறியாடல் கொண்ட புகழ்வேத நாயக னேயன்வெற்பின்
மறியாடல் கொண்டகண் ணுமெயினைச் சூர்மரு விற்றென்றன்னை
வெறியாடல் கொண்டன ணீபிறி தோதி விலக்குகவே. (உ௨௮)

பிறவிலக்குவித்தல்.

நன்றே கருதி நகுவேத நாயக நம்பிசெம்பொற்
குன்றே கொடுவந் தெனக்கொணர்ந் தேபொன் குவித்தனரா
மின்றே திலரென் முலைவிலைக் காமிவ் வியல்பின்மொழி
சென்றே செவியகந் தீத்ததென் செய்வ திருந்திழையே. (உ௨௯)

குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

வேயாதி புல்வழி யல்வர னீங்க விரிபுனற்கோர்
சாயாதி செய்குளத் தூர்வேத நாயக தாருவெற்பின்
மாயா தியலன்பர் பொன்கொண் டெனைவரை யப்புகினார்
தாயா தியரெதிர் காயா திசைநறுந் தார்க்குழலே. (உ௩0)



# வரைவுகடாதல்.

வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்.

கைத்தாய்நங் கண்மணி கண்டணி சோரக் கனதனமும்
பைத்தா யடைய வடைந்ததென் கூறெனப் பார்க்கொருவாய்
மைத்தா யனைய வருள்வேத நாயக மால்வரைநிந்
தைத்தாய் வருமென்று மாற்றினன் வேறென்று சாற்றியின்றே. ()

அலரறிவுறுத்தல்.

பலராய் புகழ்பெற்ற மால்வேத நாயக பானுவெற்பின்
மலராய் தொடைத்தடந் தோளண்ண லீசெய்த மன்னருடா
னலராய் தளிர்க்கை யரும்புமென் மாமுலை நங்கள்கொடிக்
கலராய் முடிந்தது காயா தெவர்புகழ் வார்களிந்தே. (உ௯உ)

தாயறிவுறுத்தல்.

தெவ்வாய் வருநரி லாவேத நாயகச் செம்மல்வெற்பிற்
குவ்வாய் பிளப்பப் பலாக்கனி தொட்டுக் கொளுநகராய்
வெவ்வாய் வடிநெடு வேல்விழி மாதுபொன் மேனியொடு
செவ்வாய் விளர்ப்பிற் களவோர்ந்து தாய்கண் சிவந்தனளே. (உ௯௩)

வெறியச்சுறுத்தல்.

மேலா னறிவின் மிளிர்வேத நாயக வேள்வரைவாய்ச்
சூலான் மலிமுகி லொத்தகை யாய்தெய்வந் தொட்டதென்றாய்
மாலான் மயங்கு மடமானு ணேய்மதி யாதுவன்னி
காலா னியங்கத் தகரியங் காமை கருதினளே. (உ௯௪)

பிறர்வரைவுணர்த்தல்.

சொல்லார் பெரும்புகழ் மால்வேத நாயகத் தூயன்வெற்பின்
மல்லார் புயத்த மடமாது கொங்கை வழங்குதொழி
லில்லார் திருவி னிடைபோய்க் கழிய வெழுதல்கண்டு
பல்லார் விரும்பினர் யார்விரும் பார்தனம் பாரிடத்தே. (உ௯௫)

வரைவெதிர்வுணர்த்தல்.

கழைமல ரங்கை கொளாவேத நாயக காமன்வெற்பிற்
றழைகதிர் வேலண்ண லேமட மான்மணத் தைக்குறித்திவ்
வுழையுறு வாயெனின் யாருவ வாரின் புறவெமருண்
மழைமுகில் கண்டுவ வாதவைங் கூழெவன் மண்ணகத்தே. (உ௯௬)

வரையுநாளுணர்த்தல்.

ஒருபா சடையிடை வெண்டா மரையென வூருற்றதேர்
தருபான் மதிநிதி போற்பூ வுதிர்க்குந் தழைகனிகள்
வருபா வலருண் மகிழ்வேத நாயக வள்ளல்வரை
நிருபா மணம்புரி காலமின் னேவந்து நேர்ந்ததுவே. (உ௯௭)

அறிவறிவுறுத்தல்.

செறிவென் பதுகொள் புகழ்வேத நாயகச் சேய்வரைப்பெண்
ணறிவென் பதுபெரும் பேதைமைத் தென்ப ரதுமறுத்தாண்
முறிவென் பதுபுகு நாவே லவவெம் முலையெமர்க்கு
மறிவென் பதுகுறி யாநெறி யோதுநன் மாண்படைந்தே. (உ௯அ)

குறிபெயர்த்திடுதல்.

இரவல ரேத்து மதிவேத நாயக வேந்தல்வெற்பிற்
பாவலர் நல்கிய இப்பொழில் வேறொன்று பார்வடிவேற்

கரவல வேடர்கண் காணும லேகளித் தாடவருட்
புரவல பொங்கெழி லெங்கண்மின் ஞொளொடு போதுகவே. (உநகூ)

பகல்வருவானையிரவுவருகென்றல்.

புரவுக் கிரவு ரவமாதி நீக்கும் பொலிவினுக்கா
தரவுக் கிரவு குறிவேத நாயக தாருவெற்பில்
வரவுக் கிரவு சிதவே லவபகல் வாரற்கநீ
கரவுக் கிரவு சிறந்ததென் பாரிக் கடற்புவிக்கே. (உசO)

இரவுவருவானைப்பகல்வருகென்றல்.

முகத்தா மரைகை யகத்தா மரையின்ப முற்றியபொற்
பகத்தா மரையம் பகத்தா மரைபதத் தாமரைமற்
றகத்தா மரையிரு ளிற்பொலி யாபக லங்கடையேன்
மகத்தா மரையர் புகழ்வேத நாயக மால்வரைக்கே. (உசக)

பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்.

வண்கொடி வாய்நின் றிரவிற் பொலியு மலர்கள்பல
வெண்கொடி வாவிற் பொலிமல ரும்பல வென்னின்வெற்றி
யொண்கொடி யாரணி யாயிரு போது முறவருதி
திண்கொடி யானைச் செறும்வேத நாயகச் சேய்வரைக்கே. (உசஉ)

பகலினுமிரவினுமகலிவணென்றல்.

பகலிற் குவலய மாயு மலர்படு மேயிரவி
லிகலிற் கருதரி யாம்பல் சிவக்கு மிலங்கறிவு
மிகலிற் பொலிகுளத் தூர்வேத நாயக வேள்வரைப்பா
லகலிற் சொலுமிரு போது மணுகு மவர்மணமே. (உசங)

உரவோனுமூருங்குலனுமரபும்புகழும்வாய்மையுங்கூறல்.

ஆர்க்குங் கொடைப்புகழ் மால்வேத நாயக வண்ணல்வெற்பிற்
போர்க்குந் திறற்பெருந் தோளாய்நின் னூட்டிற்கும் பொங்குதிரு
வூர்க்குங் குலத்திற்கு மொவ்வாக் குடிக்கு மொழிவரிய
சீர்க்குநல் வாய்மைக்கு மேலாது நீசிந்தை செய்களவே. (உசச)

ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

கடாவடி நென்மலை யாங்குளத் தூரன் கருதலர்வந்
தடாவடி வீழப் பொலிவேத நாயக வண்ணல்வெற்பில்
விடாவடி வேல படமாது சோருமவன் மீகமுற்றுங்
குடாவடி சூழ்ந்தகழ் காரிரு ணீவருங் கோளஞ்சியே. (உசரு)

ஆற்ருத்தன்மையாற்றக்கூறல்.

பூச்செறி வாணிற மால்வேத நாயக பூபன்வரைக்
காச்செறி வாள்பின்னு மிற்செறி வாளுநட் கனன்றுசில
பேச்செறி வாள்கை வளையெறி வாள்கனல் பெற்றநெடு
மூச்செறி வாள்விழு வாளெழு வாளெங்கண் மொய்குழலே. (உசகூ)

காவன்மிகவுரைத்தல்.

படித்தலத் தேர்மலி யிற்குளத் தூரன் பகைவர்முடி
யடித்தலத் தேவைத் தருள்வேத நாயக வண்ணல்வெற்பின்
முடித்தலத் தேந்து தொடையாய் மகளை முனிந்தனையென்
மடித்தலத் தேதுயி லென்றனைப் பாடியில் வாஞ்சையற்றே. (உசஎ)

காமமிகவுரைத்தல்.

விண்ணு டியமெய்ப் புகழ்வேத நாயக வேள்வரைவாய்ப்
புண்ணு டியவடி வேலண்ண லேவெளி போர்த்தவல
ருண்ணுடி மேனி யுறவாடி யுள்ள முருகுநட்குன்
கண்ணுடி யன்ன கடிமார்ப மன்றிக் கதியிலையே. (உசஅ)

கனவுநலிபுரைத்தல்.

நந்தனை யாநல் லருள்வேத நாயக நம்பிவெற்பி
னிந்தனை யாஞ்சொல்வ தென்னோற் றிரவிடை நீகனவில்
வந்தனை யாங்கண் டுவந்தனை யாமனம் வைத்துமுத்தந்
தந்தனை யாம்பின்பு சென்றனை யாமென்று சாற்றுமின்னே. (உசகூ)

கவினழிபுரைத்தல்.

மிகையே பொருவு மிலாவேத நாயக வேள்வரைவாய்
முகையே பொருவு முலைமாது மேனி முருந்துவென்ற
நகையே பொருவும் விளர்ப்புற லானவி நுண்மருங்குற்
றகையே பொருவு மிளைப்புற லாலென்கொல் சாற்றுவதே. (உருo)

---

## ஒருவழித்தணத்தல்.



தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.

பெருவானை தென்னம் பழம்வீழத் தாவும் பெருநகருக்
கிருவானை வென்றகண் ணாயின்று சென்றிக லென்னுமிருட்
கொருவானை யொத்த திறல்வேத நாயக வும்பல்வரைத்
திருவானை வந்து வரைவேனங் குற்றிது செப்புகவே. (உருக)

பாங்கிவிலக்கல்.

சொல்லத் துணிந்தனை யூர்க்கே குவலென்று சொற்றதன்றிச்
செல்லத் துணிந்தனை வன்கண்மை பூண்டு தெறுபகையை
வெல்லத் துணிந்த விறல்வேத நாயக வேள்வரைவாய்க்
கொல்லத் துணிந்தனை யெங்களை யோநின் குறிப்புநன்றே. (உருஉ)

தலைவனீங்கல்வேண்டல்.

சற்றோர் குறையுண் டதன்பொருட் டேகித் தவாதவினை
யுற்றோர் கணத்திலிங் கெய்துவல் யான்கலை யுள்ளவெல்லாங்
கற்றோர் புகழுங் கனவேத நாயகக் காளைவெற்பின்
மற்றோர் கருத்துளங் கொள்ளேன் மறேலொண் மடமயிலே. (உருங)

பாங்கிவிடுத்தல்.

கொடுப்பது வேயற மேற்றருக் கொன்று குறையுரைத்து
விடுப்பது வேமற மென்வேத நாயக வேள்வரையாய்
கடுப்பது வேயெனு மான்றோர் கடவிவெங் காற்றின்விரை
தடுப்பது வேமெய் யெனினேக லாநின் னணிநகர்க்கே. (உ௫௪)

பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.

கோங்கரும் பன்ன குவிமுலை யாய்தங் குலப்பதிக்கின்
றாங்கரும் பன்ன மொழியினை யானக லேனகன்றாற்
றாங்கரும் பன்னருந் துன்புற மேயென்றுஞ் சாற்றிநம்முள்
வாங்கரும் பன்னர்சென் றார்வேத நாயக மால்வரைக்கே. (உ௫௫)

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

கையால் வெரிந்தை வருவாரென் கைகடங் கண்ணிலொற்றி
வையா லயிற்படை யாருவப் பார்முலை மார்பணைப்பார்
மெய்யால் விளங்கு புகழ்வேத நாயக வேள்வரைவாய்ப்
பொய்யா னிறைந்தவர் போற்பிரிந் தாரென் புகலுவதே. (உ௫௬)

சென்றோ னீடலிற்காமமிக்ககழிபடர்கிளவி.

பொன்பொழி யார்வப் புயல்வேத நாயக பூபன்முந்நீ
ரின்பொழி யாத கரும்புன்னை காளிருங் கேதகைகா
டன்பொழி யாய்துறை யாரின்ன ராலெனச் சொல்லுகிலீ
ரன்பொழி யாமையன் றோவளி யார்க்கணி யாவதுவே. (உ௫௭)

தலைவியைப்பாங்கியாற்றுவித்தல்.

நாடுவ மான மிலாவேத நாயக நம்பிவெற்பி
னீடுவ மானனை யாயன்பர் தம்மூர் நெறிவருய்யாற்
றூடுவ மானன மாறா மலரு மலர்பறித்துச்
சூடுவ மான மிகப்பா டுவமவர் தொல்புகழே. (உ௫அ)

தலைவிக்கிறையோன்வந்தமையுணர்த்தல்.

தேருங் கலைமெய்ப் புகழ்வேத நாயகச் செல்வனென்னூர்
சாருங் கவலை யடையன் மினையஞ் சலஞ்சலநீ
ரூருங் கவின்மலி தண்டுறைச் சேர்ப்பருற் றருணர்தி
யீருங் கணைமதன் போருங்கண் ணீரு மினியிலையே. (உ௫௯)

பாங்கிதலைவனொடுநொந்துவினாதல்.

கொங்கிருந் தாரணி தோள்வேத நாயகக் கோன்வரைசூழ்
பொங்கிருந் தாரணி யாண்மன்ன வாவுயிர் போற்றுபுயா
மிங்கிருந் தாமெம்மி னீங்கிய நாண்முற்று மெவ்வணநீ
யெங்கிருந் தாய்நின் மனமெங் கிருந்த தியம்புதியே. (உ௬0)

தலைவன்பாங்கியொடுநொந்துவினாதல்.

யானோ கியபி னடைந்ததெல் லாமுன் னணங்குநடுத்
தானோ யெனுமெ னுடம்பே சொலும்பலர் சாற்றலரிக்

காமே னொருமதன் றாற்றலர் போற்றிநன் காற்றிமின்னை
மானேயெவ் வாறிருந் தாய்வேத நாயக மால்வரைக்கே. (உகூக)

தலைவியையாற்றுவித்திருந்தவருமைகூறல்.

கார்காட் டியகொடைக் கைவேத நாயகக் காளைவெற்பிற்
சீர்காட் டியநின தூர்காட் டியுநின் றிருந்தகலத்
தார்காட் டியுங்குறிச் சார்காட் டியுமொண் டடறுருவிப்
போர்காட் டியவடி வேல்விழி மாதுயிர் போற்றினனே. (உகூஉ)

## வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல்.



என்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்.

வேறுய தெவ்வரை வெல்வேத நாயக வேள்குளத்தூர்ச்
சேறுய கண்ணி முலைவிலை யாவத் திகழ்முலைக்கு
மாறுய யானை வெரிந்மேற் சுமந்து வரக்கொணர்வல்
பாறுய கான்சென் றருநிதி போய்ச்சொல் பணிமொழிக்கே. (உகூங)

நின்பொருட்பிரிவுரைநீயவட்கென்றல்.

நன்றே நவிலு நயவேத நாயக நப்பிசெம்பொற்
குன்றே புரைதிர டோளாய் நினது குலவுவரை
வொன்றே யலாற்பிறி தோதே னுரைக்கின்மற் றேறுவியமா
மின்றே மொழியிடை நீயேசென் றேறுதி யெழுந்தருளே. (உகூச)

நீடேனென்றவனீங்கல்.

தவியாமன் மன்பதை யாள்வேத நாயக தாருவரைப்
புவியானை மீது நெடுவேங்கை யேற்றிப் பொருசிங்கம்போ
லவியா மணிவிளக் கன்னூர் முகத்தி னலர்ந்தமலர்
குவியாமுன் யான்வரு வேன்மறுக் கேலொளிர் கோற்றொடியே. ()

பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.

நன்றேயென் கோவன்றித் தீதேயென் கோவென் னவிலுவல்யான்
வென்றே புகழ்கொண்ட மால்வேத நாயக வேள்பகைவர்
சென்றே யுழல்கொடுங் கானடந் தாரன்பர் தேமொழியுன்
குன்றேய் முலைவிலை தந்துட னேமணங் கூடுதற்கே. (உகூரு)

தலைவியிரங்கல்.

பிரியேன் மடமயி லஞ்சாய னின்னைப் பிரியினுயிர்
தரியே னெனமுனஞ் சொற்றநல் லோர்குழை தாவியசே
யரியேன் மலர்வழி சொல்லா தகன்றதென் றொற்றும்வகை
தெரியேன் மயங்க வொருவேத நாயகச் சேய்வரைக்கே. (உகூஎ)

பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.

வெப்பா யுலகை வளையுங் கலியழல் வீப்பதற்கோ
ரப்பாய் முளைத்த வருள்வேத நாயக வண்ணல்வெற்பி

லொப்பா யினுமரி யாயுண ராம லுளங்கவறி
செப்பாய் பிறரை வரைவதற் கோவன்பர் சென்றதுவே. (உகூஅ)

தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

சுரும்போதை சாரொடைத் தோள்வேத நாயகத் தோன்றலொன்
றரும்போகை நீத்தடை வெங்கானி லன்ப ரடைந்ததும்வேள்
பெரும்போரி னலெற் கடைந்தது மோர்ந்துமிப் பேச்சுரைத்தா
யிரும்போகல் லோவறி யென்குறி யேனின் னியன்மனமே. (உகூகூ)

வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

போரே வெதிரு மிமையார் கண்டீக்கெதிர் பொத்திச்செல்லு
வாரே பெடையைக் கபோதஞ் சிறைநிழல் வைத்தளிக்குஞ்
சீரே யருமையை நோக்குவர் நோக்கிற் றிரும்புவரால்
வேரேய் குழலணங் கேலவேத நாயக வேள்வரைக்கே. (உஎ0)

பருவங்கண்டுபெருமகள்புலம்பல்.

புகழ்வேத நாயக வள்ளல்பண் டாரம் புகாவறிஞர்
திகழ்வேய்பொன் வாரி வருவது மானத் திரைக்கடனீ
ரிகழ்வேயின் மாமுகில் வாரி வருமிதற் கென்செய்வல்யா
னகழ்வே தணையுடை யேனுக வன்ப ரடைந்திலரே. (உஎக)

இதுவோவம்பென்றல்.

உண்மை யுணரப்ப னுணர்வேத நாயக வுத்தமன்றன்
வண்மை நிகர்ப்பப் பயில்வா னெழுந்து மழைபரவைத்
தண்மை நிரப்பு புனல்வா ருபுவருஞ் சங்கணிகைக்
கண்மை மலர்க்குழல் கார்கால மென்று கருதல்வம்பே. (உஎஉ)

தலைமகண்மறுத்தல்.

காலந் தழீஇயபைங் காரன்று தேரென்று கட்டுரைத்தாய்
ஞாலந் தழீஇய புகழ்வேத நாயக நம்பிவெற்பிற்
கோலந் தழீஇய பசுமயி லாடும்பொன் கொன்றைநல்கு
மேலந்தழீஇய குழலாய்செங் காந்தள்கை யேற்குமின்றே. (உஎங)

அவர்தூதாகிவந்தடைந்ததிப்பொழுதெனச்சாற்றல்.

பின்னே தலைவர்தந் தேர்வரு கின்றது பேசிடநம்
முன்னே மலைவரு கார்வந்த தான்முழு நீலவுண்கண்
மின்னே குளந்தைப் பதிவேத நாயக வேள்வரைவா
யென்னே யினித்துய ரோவுதி யேவுதி யின்பத்தையே. (உஎச)

தலைமகளாற்றல்.

யானுற்ற வின்ப மவர்க்கு மிலாததன் றென்னிலென்பாற்
றானுற்ற துன்பமு மற்றுத லாலென் றளர்வொழிய
வூனுற்ற வாருயி ரன்னார்முன் றாதிங் குறவிடுத்தார்
மீனுற்ற செய்க்குளத் தூர்வேத நாயக வேள்வரைக்கே. (உஎரு)

அவனவட்புலம்பல்.

காரோ வெனுங்குழல் சோர்தா வார்தரு கண்களின்மை
நீரோ பெருகவவ் வெள்ளத் தழுந்தி நிலைதளராங்
கேரோதை சால்குளத் தூர்வேத நாயக வேந்தல்வெற்பி
லாரோ விரைந்துநெஞ் சேயெடுப் பார்நம் மணங்கினையே. (உஎசு)

பாகனொடுசொல்லல்.

உலவா முகில்சிலை வாங்கியம் பூடுரு வப்பொழியக்
கலவாத துன்பங் கலந்துநம் மான்கலங் குந்தமிழ்க்குக்
குலவார ணந்தரு மால்வேத நாயகக் கோன்வரைப்பால்
வலவா நளனெனத் தூண்டுக தேரினி வல்விரைந்தே. (உஎஎ)

மேகத்தொடுசொல்லல்.

சீரானை யாநின் வரவெனக் கன்பிற் சிறந்தமயி
லோரானை யாமுலை கண்முத்தஞ் சூட வுயங்கனன்றோ
தேரானை சூழு மனைவேத நாயகச் சேய்வரையென்
வாரானை கூறி மகிழ்வியென் றேர்முன்சென் மாமுகிலே. (உஎஅ)

பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.

பொங்கோதை வாரிப் புவிபுரப் போன்றெவ்வர் போற்றவெற்றி
யங்கோதை சூடு புயன்வேத நாயக வண்ணல்வெற்பில்
வெங்கோதை வேலவர் மேவின ரென்று விளங்கவர்கைச்
சங்கோதை யேநமக் கிங்கோதை யோர்திவண் டார்க்குழலே. ()

வலம்புரிகிழத்திவாழ்த்தல்.

ஊற்றுங் கரடக் கடகளிற் றூர்வர வோதியெனக்
காற்றுந் துணையிற் றுயர்தீர்த்த சங்கடைந் தார்கலியை
மாற்றுங் கமலக்கை மால்வேத நாயக மன்னவன்றன்
போற்றும் புகழிற் பொலிகவெஞ் ஞான்றும் புவியிடத்தே. (உஅ0)

தலைவன்வந்துழிப்பாங்கிதினைத்தமைவினுதல்.

கொளத்தாம் வரினுண் மகிழ்வேத நாயகக் கோன்வரைப்பொன்
வளத்தா தரம்வைத் தயனுட் டிடைத்தனி வைகுழித்தேநந்
தளத்தா தவிழ்குழ லெந்திரு மாது தராதிபநின்
னுளத்தா மனைமல ருற்றதுண் டோவுண்மை யோதுகவே. (உஅக)

தலைவனினைத்தமைசெப்பல்.

ஞாலங்கொள் சீர்த்திப் புயல்வேத நாயக நம்பிவெற்பில்
வேலங்கொள் கண்ணி மறந்தறி யேனுன் விளங்கிழைதன்
னேலங்கொள் கூந்தலுஞ் செவ்வாயும் வெண்ணகை யோர்முகமும்
கோலங்கொள் செங்கையு மென்னைமுன் னுட்கொண்ட கொங்கையுமே.

பாங்கிதலைவியையாற்றுவித்திருந்தமைகூறல்.

வண்டார வாரு மதுமல ரோதியை வண்கவிஞர்
பண்டார மான கொடைவேத நாயகப் பண்பன்வெற்பிற்
றண்டார வாந்தடந் தோளண்ண லேதனி யாற்றுவித்தேன்
கண்டார வாவுறு நின்பெரு வாய்மை கடைப்பிடித்தே. (உஅங)

## வரைவுமலிவு.



காதலன்முலைவிலைவிடுத்தமைபாங்கிகாதலிக்குணர்த்தல்.

சிலைக்குள நாணுமென் றோதுத லாயறஞ் சேர்தருநன்
னிலைக்குள நாணு மெனுவேத நாயக நேயன்வெற்பின்
முலைக்குள நாணும் பசும்பொன் வரையம் முலைக்குரிய
விலைக்குள நாணும் படிகுவித் தார்செம்பொன் வேந்தரின்றே. ()

தலைவிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

கோனாடு வாழ வருவேத நாயகக் கோன்வரைவாய்
மீனாடு பாற்கடன் மாயோன் வரவு விரும்பியது
போனாடு மன்னை வரவெதி ரேற்றுப் புரிந்துவக்குந்
தேனாடு மாலையொ டிந்நாடு மேவுநஞ் செல்வனையே. (௨௮௫)

பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்.

மழையொளிர் மின்னிற் கரும்புன்னை மேற்படர் வண்பவளந்
தழையொளிர் தண்டுறைச் சேர்ப்ப ரளித்த தனமுழுது
மிழையொளிர் பூண்முலை யாய்நம ரேற்றுவப் பெய்தினர்வண்
குழையொளி ரஞ்செவி மால்வேத நாயகக் கோன்வரைக்கே. (௨௮௬)

தலைமகளுவகையாற்றாதுளத்தொடுகிளத்தல்.

நெஞ்சே யருந்துயர் நீங்குவந் தாரன்பர் நீடுமவர்
விஞ்சேர் புகழ்பிர தாபங் களிற்றின்முன் வேள்கவிகை
நஞ்சேய் களிறு சிலைநிற்கு மோவின்ப நாம்படிவா
மஞ்சே யெனப்பொன் பொழிவேத நாயக மால்வரைக்கே. (௨௮௭)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

என்னா ருயிரவ் வுயிர்க்குயி ரோடு மிடர்க்கடல்வாய்
மின்னார் மணியணி மால்வேத நாயக வேந்தனட்புத்
துன்னார் பொருவ விழுந்தழி யாதிங்குத் தோன்றியருள்
பொன்னார் கழலவர் வாழிய ரோவிப் புவியிடத்தே. (௨௮௮)

தலைவிமணம்பொருட்டாகவணங்கைப்பராநிலைகாட்டல்.

நன்றேய் மனமெய் மொழிவேத நாயக நம்பிசெய்பொற்
குன்றேய் முலைநின் மணம்பொருட் டாகக் குலமலர்தூய்
வென்றே பொலியு மணங்கை யிணங்க விழைந்துபராய்
நின்றே வரம்பல வேண்டுதல் காண்டி நெடுந்தகையே. (௨௮௯)

பராநிலைகண்டதலைமகன்மகிழ்தல்.

நாமே மணம்பொருட் டாற்றிடத் தக்கதை நன்னுதலார்
தாமேநன் காற்றி வரம்வேண் டுவரெனிற் சாற்றுமிது
பூமேனம் புண்ணிய மோமுந்தை யோர்செய்த புண்ணியமோ
மாமேரு வென்னப் பொலிவேத நாயக மால்வரைக்கே. (௨௯௦)

## அறத்தொடுநிற்றல்.



கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.

கிளியைப் பருந்துறத் தொட்டது வோபந்து கெட்டதுவோ
வொளியைச் செயுமலை வண்டலம் பாவைகொண் டோடினவோ
களியைக் கடந்தன்னை சேர்ந்தன ளோகலுழ் காரணமென்
வெளியைப் பொருமிடை யாய்வேத நாயக வேள்வரைக்கே. (உகூக)

தலைமகள் கலுழ்தற்காரணங்கூறல்.

கனவே புகுந்து கலந்தகன் றுருகுக் காணவவாய்
நனவே கருமை நறுநீல முத்த நனியுகுத்துத்
தனவேர் மலிமுத்த மாநீல மாக்குவ தாருவைந்து
மனவேத நாயக மால்குளத் தூரன்ன வாயிழையே. (உகூஉ)

தலைவன்தெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.

சேனுண வுள்ளி யமர்குரு கோகரி செப்புநருத்
தானுண வண்டர்க் கருள்கைதை யோமுன்போய் சாற்றியதென்
கானுணர் வோர்தெய்வங் காட்டி யுரைத்தது கைதவமே
மானுண வோரும் புகழ்வேத நாயக மால்வரைக்கே. (உகூங)

இறைவி தலைவனிகந்தமையியம்பல்.

ஆய்மொழி மாறு படாவேத நாயக வண்ணல்வெற்பிற்
றூய்மொழி வாளயற் பேய்மொழி யேதெய்வஞ் சான்றெனவுள்
ளேய்மொழி கூறி யிகந்தார் தலைவ ரெனிற்புருடர்
வாய்மொழி நம்புவ தெவ்வாறு கூறு மதிநுதலே. (உகூச)

பாங்கி இயற்பழித்தல்.

தவரே புகழும் புகழ்வேத நாயக தாருவெற்பிற்
றுவரே யிதழ்மட வாய்தெய்வங் காட்டிமுன் சூளுரைத்த
வவரே விரத்தி யடைந்தவர் போலகன் றாரவரொப்
பவரே தெரியி னெவரே யுளாரிந்தப் பாரகத்தே. (உகூரு)

தலைமகள்இயற்படமொழிதல்.

திருவார் குளந்தைப் பதிவேத நாயகச் சேய்வரைவா
யொருவார் மறப்பர்கொ லோவெனை யன்றி யுளத்துமற்றோன்
றிருவா ரிருவார் முலைப்பி ரொழிதா வெப்படியும்
வருவார்வந் தின்பந் தருவார் பொருவார் வரிவிழியே. (உகூசு)

தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

காட்டை விழுங்கும் புகழ்வேத நாயகக் காளைமுந்நீர்ப்
பேட்டை யணைத்திற காலனந் துஞ்சும் பெருந்துறைவ
ரேட்டை யொழிப்பரெம் பால்வந் தின்னேபொய்ய ரென்றுளியோர்
கேட்டை யணங்கிழை யேலென்று வாழ்த்துவங் கேழ்மயிலே. ()

இல்வயிற்செறித்தமையியம்பல்.

சேரல ரஞ்சுந் திறல்வேத நாயகச் சேய்வரைவாய்
வாரலர் மாமுலை யாய்தன் வயிற்றின்முன் வைத்ததுபோ
ஞாலர் மாலை யொரீஇயெனை யோர்சிறை நாடிவைத்தா
ளூரலர் தூற்றுவ தோர்ந்தன்னை யென்னை யுளூற்றுவதே. (உகூஅ)

செவிலி கனையிருளவன்வரக்கண்டமைகூறல்.

கார்கொண்ட செங்கைக் கவின்வேத நாயகக் காளைவெற்பில்
வார்கொண்ட பூண்முலை யாயொழி யாது மருவவென்போ
னீர்கொண்ட கண்ணின எல்லள்கண் டாயன்னை நேற்றிரவிற்
றார்கொண்ட தோளர் வரக்கண்டு சீற்றந் தழைத்தனளே. (உகூகூ)

எறிவளைவேற்றுமைக்கேதுவினாதல்.

ஆடல்விட் டாடன் னணியாயங் கூடி யலர்பறித்துச்
சூடல்விட் டாளிசை பாடல்விட் டாளருந் துப்பெவையுந்
தேடல்விட் டாளின் புகழ்வேத நாயகச் சேய்வரையெற்
கூடல்விட் டாளென்னை யுற்றன ளோநங் குலக்கொழுந்தே. (௩00)

பாங்கிவெறிவிலக்கல்.

சேலாய கண்ணிக் குயிரீ வதுபொய் திருந்துபல
நூலாய நோற்ற மதிவேத நாயக நோன்மையன்கற்
பாலாய வாட்டுயிர் வாங்குவ தேமெய் பகர்வலியின்
மேலாய வெம்புலிப் போத்தென வீங்குற்ற வேலவரே. (௩0க)

வெறிவிலக்கியவழிச்செவிலிபாங்கியைவினாதல்.

வேய்தந்த தோளியுட் டோய்தந்த நோயற மெய்த்தமிழ்க்குப்
பாய்தந்த யானை தருவேத நாயக பானுவரை
யாய்தந்த வன்பினிங் கேய்தந்த வேல்வலத் தண்ணலைநின்
வாய்தந்த கூறுத லெம்மதி யம்மதி வாணுதலே. (௩0உ)

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

நன்னெடு மால்குளத் தூர்வேத நாயக நம்பிவெற்பி
னின்னெடு வேல்விழி நேர்வது நோக்கென்றோர் நீலங்கொய்து
கன்னெடுந் தோளொரு வள்ளறந் தான்முன்கை யேற்றனடன்
பொன்னெடும் பாவைக்கென் றேவண்ட லாயத்திப் பூங்கொடியே. ()

புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

தன்னிடை யாயவை தூண்ட வுறுப்பின் றகைகவர்வான்
மின்னிடை யாயைக் கடலலை யால்வினைந் தீர்த்திடுநா
ளென்னிடை யாயுற்ற தென்றமு தாள்வினைந் தெய்தினனோர்
மன்னிடை யாயளித் தான்வேத நாயக மாலையொத்தே. (௩0௪)

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

முலைப்பகை தீரக் கருதிய தோவொரு மொய்க்களிறு
சிலைப்பகை வாணுத னேரெதிர் நாட்டெறு பாவியர்க்குத்

தலைப்பகை யாய தகைவேத நாயக தாருவொத்தோர்
மலைப்பகை யாயதிண் டோளா ரளித்தனர் வாஞ்சைவைத்தே. (௫0௫)

தலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய்செவிலியைவினாதல்.

முலைமீது போர்த்தது பொன்கரு நீலம்வெண் முத்துருப்ப
விலைமீ தொளிர்குழற் குற்றதென் னோவெதி ரேற்றவர்தந்
தலைமீது வைக்குங் கழல்வேத நாயக தாருவெற்பிற்
சிலைமீ தெதிர்நுத லாய்மறை யாதுண்மை செப்புகவே. (௫0௬)

செவிலிநற்றாய்க்குமுன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்.

உளவுற்ற தோகை பயில்வேத நாயக வும்பல்வெற்பிற்
றளவுற்ற தோவெனும் வெண்ணகை யாண்மனஞ் சார்ந்தனரீ
தளவுற்ற தோமுலை தோன்றிய தோவிலை யோவலர்க்கண்
களவுற்ற தோவிலை யோவென்று நாள்வந்தொர் காதலரே. (௫0௭)

நற்றாய்தமர்க்குஅறத்தொடுநிற்றல்.

மழையே யனையகை மால்வேத நாயக வள்ளல்வரை
யுழையே யுறைவிர் முதுக்குறைந் தாணம் மொருமகளவ்
விழையேய் முலைதன் கருத்துக் கிசைந்த விறையவனைப்
பிழையே யறத்தெரி வீர்புரி வீர்மணம் பெட்புறவே. (௫0௮)

---

## உடன் போக்கு.



பாங்கிதலைவற்குஉடன்போக்குணர்த்தல்.

சீர்முழு தும்படைத் தோன்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
கார்முழு துந்தொழு மைம்பான் முலைவிலை காணுமென்று
பார்முழு துங்கொடுத் தாலுங் கொடாரெமர் பார்த்திபநின்
னேர்முழு துங்கொ ணகர்க்கழைத் தேகுக வின்றுவந்தே. (௫0௯)

தலைவன் உடன்போக்குமறுத்தல்.

பஞ்சிற் படினும் பதைக்குமென் பாதம் படரிது
நெஞ்சிற்கும் வெம்பா லாறணித் தன்றென் னெடுநகரு
மஞ்சிற் பொலியுங் கொடைவேத நாயக மால்வரைவாய்
நஞ்சிற் பொலிவிழி யாளொடெவ் வாறு நடப்பதுவே. (௫௧0)

பாங்கிதலைவனையுடன்படுத்தல்.

வரமே வியவுற் பவன்வேத நாயக வள்ளல்வெற்பா
சுரமே மருதங் கழுகே பெகினஞ் சுடுசெந்தழற்
றிரமேசெந் தாமரை வெங்கள்ளி யேசெறி காஞ்சிசெந்நா
யுரமே திகளல வோநின்னொ டேகினெம் மொண்டொடிக்கே. (௫௧௧)

தலைவன்போக்குடன்படுதல்.

அன்னே மலரடி யோமென் மையவெவ் வருஞ்சுரமோ
கன்னே வுறுதழற் றொண்டமிழ் வாணர்க்குக் காசினியோ
பொன்னே கொடுக்கும் புயல்வேத நாயக பூபன்வெற்பி
லென்னேமின் னேடு நடப்பதற் கெண்ணிய தென்மனமே. (௫௧௨)

சேவலங் கொடிக்கைச் செவ்வே டிருந்தனுக் கிரகம் பெற்ற
பாவல ராய வுங்கள் பாட்டில்யாம் வீழு மாபோற்
காவலங் குறுப லாக்கள் கனிந்தபல் கனியை நச்சி
மேவரும் பலவீ மொய்த்து வீழ்தரு வளமுங் காண்க. (௭௨)

சித்தநல் லொழுக்க மோவாத் தேசிகப் பொலிவு வாய்ந்த
வுத்தம வடிகே ளுங்கள் செய்யுளுட் பொருளே போலப்
பைத்தபூம் பொழிலு ளீரப் பலாப்பழுத் தடிமண் கீள
மொய்த்தபல் கனிசெ றிந்த முழுவளஞ் சிறிது காண்க. (௭௩)

செய்யகற் றோய்ந்த வாடை திருவரை யுடுத்துப் போந்த
வையரே யுமைக்கண் டோடும் புன்கவி யாளர் மானக்
கொயம்மலர்ச் சோலை மேலாற் குளிரொனும் பவன மேவ
மெய்ந்நடு நடுக்குற் றோடு மிக்கவா னரங்கள் காண்க. (௭௪)

எண்ணிலா வோடு கால்க ளியைதரப் பெற்று மென்றுந்
தண்ணிலா வழிவாழ் வேந்தர் நாட்டினைத் தணவா தாகிக்
கண்ணிலா நெய்தல் வேலிக் கடலகம் புகுதா தாகி
மண்ணிலா விந்த வையை மாநதி வளமுங் காண்க. (௭௫)

அடிகளும் மடிசார்ந் தோரை யளற்றகம் புகுத ராது
முடிவிலின் பெய்த வுய்க்கு முறைமைபோற் றன்பாற் சார்ந்த
மடிவரு வெள்ள முற்றும் வாரிதி யுவர்பு காது
படியிலின் பெய்த வுயக்கும் பழநதி யிதுவே யன்றோ. (௭௬)

என்றுபல் வளமுங் காட்டி மகிழ்விக்கு மியல்பி னோரோ
டொன்றுபன் மாடக் கூட லுட்புகுந் தோங்கு செம்பொற்
குன்றுநின் றனைய தாய கோபுர மருக்கு தாழ்ந்து
துன்றுபன் மணியி மைக்குஞ் சுடர்ப்பெரு வீதி சூழ்ந்து. (௭௭)

கொடியவெந் நிரயத் தாழ்தல் குறித்துவெங் கூற்ற மேய
கடிநகர் புகுவா ரென்றும் புகுதராக் கனகக் கோயி
லடியவ ரெதிர்கொண் டேத்த வன்பிடை யறாது பொங்க
நெடியகை குவித்துப் புக்கார் நிகரின்மா தவத்தின் மிக்கார். (௭௮)

விழைவரா நல்குஞ் சித்தி வேழத்தை வணங்கி மேருக்
குழைசிலை யொருகைக் கொண்ட குழகர்பொற் பாதம் போற்றித்
தழைதர வுலக மெல்லாந் தண்ணளி மிகையா லீன்ற
மழைமதர்க் கயற்க ணம்மை முன்சென்று வணங்கி நின்றார். (௭௯)

வணங்கிநிற் பாருக் கெல்லா வுலகமும் வாய்ப்ப வீன்றுங்
குணங்கெழு குமரி யேயா மெற்றைக்குங் குலவு மன்னை
யிணங்குறு மகவாந் தெய்வக் கோலமங் கினிது காட்ட
வுணங்கிய வினையார் கண்டு முடிதரா வுவகை யுற்று. (௮0)

## அங்கயற்கணம்மைபிள்ளைத்தமிழ்.

அருமைபா ராட்டுஞ் சான்றோ ரம்மைசந் நிதிமுன் னாகத்
திருமட மொன்று காட்டச் சென்றதி லமர்ந்து தெய்வ
மருமலர்க் கூந்த லம்மை மகத்திருக் கோல முன்னிக்
கருதுமே தா றினிக்கும் பிள்ளைக் கவிப்பிர பந்தஞ் செய்தார். (அக)

## அரங்கேற்றல்.

முந்துமே பருளா லம்மை மொய்த்தபல் வளமு மேவி
நந்துமந் நகரான் வேந்தர் நாயகர் கனவிற் சென்று
சந்துசூழ் வனாவாழ் நஞ்சேய் தன்னருள் பெற்றோ ரீங்கு
வந்துபா டியது கேட்கும் வாஞ்சையே மென்றுகூற. (அஉ)

நலமலி பத்தி வாய்ந்த நாயகர் துயிலெ ழுந்து
குலமலி யமைச்ச ராதி யறிஞரைக் குறித்து நோக்கி
நிலமலி நம்மூ ருள்ள விசேடமென் னிகழ்த்து மென்னப்
புலமலி யவரு மோர்ந்தா ருள்ளது புகலுவாரால். (அங)

நாதனே திருவை குண்ட நகரினி லவத ரித்தா
ராதர மிலாத மூகை யாயவ ணையாண் டெல்லை
மேதகு திருச்செந் தூரில் வேலவ ரருளப் பெற்றே
போதல்செய் பன்னூல் வல்லா ராயின ரொருவ ரின்னும். (அச)

செய்யகற் றோய்த்த வாடை திருவரை யுடுத்து மின்போன்
மொய்யொளிச் சடைக டாங்கி முன்னிய வேடம் பூண்டு
தெய்வவெண் ணீறு கண்டி திகழ்தரத் தலங்க டோறு
மையறச் சென்று சென்று வணங்கியித் தலத்து வந்தார். (அரு)

வந்தவர் கயற்க ணம்மை மலரடி வணங்கிப் போற்றிச்
சந்தமிக் கமைந்த பிள்ளைத் தமிழ்ப்பிர பந்தம் பாடிச்
சுந்தர வல்லி முன்பு தொழுதரங் கேற்றல் செய்வா
னுந்துதம் முள்ளத் தெண்ணி யிருந்தன ருணர்தியென்றார். (அசு)

மனநெக வறிஞர் கூறும் வார்த்தையுங் கயற்க ணம்மை
கனவில்வந் துரைத்த வாறுங் கடைப்பிடித் தரசு தேர்ந்தே
யனகமார் கனவை யாரு மறிதர வெடுத்துக் கூறித்
தனையரு மகிழ்ச்சி பொங்கத் தலைமிசைக் கரங்கள்கூப்பி. (அஎ)

யாவருந் தொடர்ந்து செல்ல வெவ்விடத் திருந்தா ரந்த
மேவருந் தவத்த ரென்று வினவியவ் விடத்தைச் சார்ந்து
தேவரும் பெறுதற் கொல்லாத் திருவருள் பெற்றீர் நும்மைப்
பாவருந் தவத்தாற் பெற்றே மெனப்பல வுரைத்துப் போற்றி. (அஅ)

யாதுநீர் செய்தீ ரெங்க ளம்மைமே லியம்பு மென்னத்
தாதுசெய் பூணீர் பிள்ளைத் தமிழ்ப்பிர பந்த மென்ன

வோதுநு மன்பா லம்மை யுரைத்தனள் கனவி லென்ன
வேதுநு மன்பே யம்மை யெழுந்தரு ளுதற்கென் றோதி. (௮௯)

வெள்ளிய நீறு நல்கி மேதகு மாசி கூற
வள்ளிய குணத்தான் மிக்க நாயகர் மகிழ்ந்தேற் றேயங்
குள்ளிய நன்று டோர்ந்தார் சுதினமு முடனே மேவத்
தள்ளிய வினையி னுரைத் தாழ்ந்தன ரழைத்துக் கொண்டு. (௯0)

சொல்லிய பலவாற் றானுஞ் சுடாலங் காரஞ் செய்தே
யல்லிய மலர்ப்பைங் கூந்த லங்கயற் கண்ணி யம்மை
நல்லியற் றிருமுன் வைகி நற்றமிழ் தனைப்பூ சித்துப்
பல்லிய முழக்கி யாரம் பஞ்செய வேண்டு மென்றார். (௯௧)

ஆர்கொண்ட சடையார் மைந்த ரருளுப தேசம் பெற்றார்
கார்கொண்ட முதலா வோதிப் பிரசங்கங் கவினச் செய்து
பார்கொண்ட பருவ மொன்று பகருமத் தினத்துத் தீர
நார்கொண்ட மகிழ்ச்சி பூத்தார் நாயக ராதி யோரும். (௯௨)

செற்றமில் புலவர் சிங்கந் தினமொரு பருவ மாக
வற்றமி லறிஞர் மெச்ச வணிந்தரங் கேற்றும் போது
பற்றிய புகழ்வா ரானைப் பருவத்தின் மழவா யம்மை
வெற்றிநா யகர்ம டிக்கண் மேவிவீற் றிருந்தா ளன்றே. (௯௩)

நாயக ரிறும்பூ துற்றார் நான்மறை யவர்பு கழ்ந்தார்
தூயமற் றுள்ளோ ரியாருந் தோன்றுதெய் வீக மென்றார்
மேயவிச் சிறப்பி னோடு மெய்த்தவத் தலைவ ரானோ
ராயவிப் பிரபந் தத்தை யணிபெற முற்று வித்தார். (௯௪)

முன்னிய பெரியோர்க் குற்ற மகத்துவ முழுதுந் தேர்ந்து
மன்னிய வரசர் செம்பொ னரியணை யேற்றி வைத்துப்
பொன்னியன் மணிக ளாலே பொருந்தபி டேகஞ் செய்து
மின்னியல் வீர கண்டை மிளிரெழிற் றாளிற் சேர்த்து. (௯௫)

மழைமதக் களிறு பாய்மா மாமணிச் சிவிகை நல்கி
விழைகுடை கொடிமுன் னான விருதுகள் பலவு மீந்து
தழைதிரு மடமொன் றம்மை சந்நிதி யுறச்ச மைத்துக்
குழைதரு மன்பு பொங்கிக் குலவமற் றிதுவுஞ் செய்வார். (௬௯)

**நீதிநெறிவிளக்கம். வேறு.**

இருபதினு யிரங்கலிப்பொ னியைந்தவரு வாயுடைய
வரியநா யகபுரமென் றறையுநக ரொன்றுதவி
மருவியநீ தியைச்சுருக்கி வகுத்தருள வேண்டுமெனப்
பொருவிலா நீதிநெறி விளக்கமுறப் புகன்றருளி. (௯௭)

**மதுரைக்கலம்பகம்.**

அம்மையென மகிழ்ச்சிசெயு மையனையு மெனப்பணிந்து
செம்மையுடைப் பலரிரப்பச் சிறந்தகலம் பகம்பாடி

வெம்மைதவிர் நாயகர்பால் விடைபெற்றுப் புறம்போந்து
தம்மைநிகர் பவரில்லார் வடதிசையே சாருவரால். (௯௯)

திரிசிராப்பள்ளியையடைதல்.

எண்ணரிய தருச்செறியு மிருங்கானுங் கருங்குன்றுங்
கண்ணரிய கான்யாறுங் கடந்துபரி சனஞ்சூழ
விண்ணவரு முனிவாரும் விழைந்தேத்தத் தாயான
பண்ணவர்வாழ் திரிசிராப் பள்ளிநக ரருகடைந்தார். (௯௯)

ஓதாம லுணர்ந்தவர்தம் வருகைகேட் டுளமகிழ்ந்து
போதாரும் புனற்றடஞ்சூ ழந்நகரப் புரவலனார்
மீதாரும் பெருஞ்சிறப்பால் விரும்பியெதிர் கொடுவந்து
பாதார விந்தமலர் பணிந்தழைத்துக் கொடுசென்றார். (௧00)

விண்ணளவு நெடுஞ்சிகர மேவுசிரா மலைப்பெருமான்
கண்ணளவு திருவடிகள் கண்டுதொழச் செய்வித்து
மண்ணளவு பெரும்புகழ்சான் மாதவர்க்குப் பலவரிசை
தண்ணளவும் படிசமைத்துத் தணவாது மருவுவார். (௧0௧)

வேறு.

வள்ளைக் குழைமா மறுமார்ப மாலை யனைய நாயகருங்
கொள்ளைத் தமிழார் பிரசங்கங் குலவக் கேட்டு மனமகிழ்ந்து
பிள்ளைப் பெருமா ளையங்கார் வந்து பிரிய முறக்கலப்ப
வெள்ளைத் திறமி ளிருவரையு நோக்கி யிது விளம்புவார். (௧0௨)

பேசு முலக முவந்துகொளப் பெருக வியற்றி நவமாகக்
காசு பரப்ப வேண்டுமதில் வைக்குங் குறிநீர் கிளைமினென
மாசு தவிருங் கருடனென முந்தி வகுத்தா ரையங்கார்
வீசு புகழ்சால் விடையென்றார் வேற்கைப் பிரானார் மாணுக்கர்.(௧0௩)

செம்புள் பறந்து செல்லுமென வட்ட மிட்டுச் செல்லுமது
நம்பு விடைதான் முட்டமுட்டச் செல்லு நலத்த தென்றுரைப்ப
வம்பு மொழிந்தா மெனச்சாம்பி வதனஞ் சாயத்தா ரையங்கார்
பம்பு மொழியின் பொருளுணர்ந்து மகிழ்ந்தா ரனைய பார்த்திவரே.()

சந்தப் பொருப்பி னமர்குமர சாமி யருள்பெற் றவருரைத்த
வந்தப் படியே வெள்விடைக்கா சகிலம் வியப்பப் போகட்டு
நந்தப் பெருகு மனமகிழ்ச்சி யடைந்தே பொருநா யகரிருந்தா
ரிந்தப் புவனத் தறந்தழைப்ப வுதித்தார் பின்ன ரிதுசெய்வார்.(௧0௫)

வாட்போக்கிமுதலியஸ்தலதரிசனம்.

பாக மொருபெண் குடியிருக்கும் பரமா னந்தர் வீற்றிருக்குங்
காக மெரியக் கனல்வீசும் பொருப்புங் கடம்பந் துறைப்பதியு
மாக முகிரேய் தருமீங்கோய் மலையுந் திருப்ப ராய்த்துறையு
மாக மணிமால் பணிபாச்சி லாச்சி ராமப் பெரும்பதியும். (௧0௬)

இமையார் வணங்கு பைஞ்ஞீலி யென்னுந் தலமுந் தவத்துறையு
மமையா வளங்கண் மிகப்பெருகு மானைக் காவும் பாற்றுறையு
நமையா வொருமூக் கீசரமு நன்றே பொலியுங் கற்குடியுங்
கமையா வெறும்பி யூர்மலையுங் கவலை களையு நெடுங்களமும். (௧௦௭)

பற்று முருக்குந் திருக்காட்டுப் பள்ளி நகரு மற்றுளவுஞ்
சற்றும் விலகாப் பரிசனமுஞ் சூழச் சார்ந்து சார்ந்துபணிந்
தெற்று திரைநீர்க் காவிரிசூ ழியலார் திரிசி ராமலைக்க
ணுற்று மகிழ நாயகர்க்குங் காட்சி கொடுத்தங் குறைகின்றார்.(௧௦௮)

சமயவாதம்.

ஆய பொழுது கருடனைக்கொண் டவையிற் றோற்ற வையங்கார்
மேய பலவை ணவர்கடமை யேவ வவருள் விரைந்தொருவர்
பாய புகழ்சால் குமரகுரு பரமா முனிவர் முனம்போந்து
மேய சமய வாதமது செய்வோம் விருப்ப முறினென்றார். (௧௦௯)

என்ற பொழுது முறுவலித்தே யெங்கு நிகழும் பெரும்புகழா
ரொன்ற வதனுக் குடம்பட்டா ருணர்விற் சிறந்த நாயகரு
மன்ற வறிஞர் பலரும்வர வழைத்தார் பாஞ்ச ராத்திரர்முற்
றுன்ற நெடுமால் புகழெடுத்துச் சொல்வா ரதுசற் றெடுத்துரைப்பாம்.

வேறு.

அவர்திரு நெடுமா லாதி யென்றன ரறிவின் மிக்க
விவரஃ துண்மை யந்த மென்பது முண்டே யென்று
ரவர்நறுந் துளவத் தாரோ னரூபமே யென்று ராய்ந்த
விவர்பெருங் கபாலத் தேற்ற தெவருடற் செந்நீ ரென்றார். (௧௧௧)

அவர்மறு மார்பன் ஞானச் சோதியென் றறைந்தார் சான்ற
விவரவன் மாயை தோயா திருப்பனே வுண்மை யென்று
ரவரரி மாயை போக்கும் வல்லனென் றறைந்தா ரப்போ
திவனொரு மான்பொய் மானென் றெண்ணுறு தென்னை யென்றார்.()

அவர்திகி ரியன்சு வேச்சை யாலுருக் கொள்வ னென்று
ரிவர்மகத் தெச்ச னுப்புக் கிழந்தனன் றலையை யென்று
ரவர்கரு மேனிச் செம்ம லாரண முரைத்தோ னென்று
ரிவர்சிவ மாதி நான்கு வாக்கையு மெழுப்பு மென்றார். (௧௧௩)

அவர்திரு மணாளன் யாவு மளித்தருண் முதல்வ னென்று
ரிவர்புதல் வரைக்கா வாம விருந்ததா லியையு மென்று
ரவர்பிறப் பொழிக்க வல்லோ னழியான் றனே யென்று
ரிவர்பரிப் பிறவி தீர்ந்த தில்லையே யின்னு மென்றார். (௧௧௪)

அவர்பிர ணவத்தின் மேய பொருளரி யாவ னென்று
ரிவர்நறுங் கடுக்கை சூடி மிறையவர் யாவ ரென்று
ரவர்மதக் களிறு கூவ வடைந்தவ னரியே யென்று
ரிவரிறை யவன்செல் வானோ வேவல னிருக்க வென்றார். (௧௧௫)

அவர்புரு டோத்த மன்கா ணருளுடை முகுந்த னென்று
ரிவரொரு சாத்தன் றுமென் றியாவரு மறிவ ரென்று
ரவரிரா வணனைக் கொன்றே யமரரைக் காத்தா னென்று
ரிவரிரா வணனென் போராய்ந் தெண்ணுக வீர மென்றார். (௧௧௬)

அவர்முதற் குணத்த னென்று மாழியம் படையோ னென்று
ரிவரவற் கதுசெ யற்கை யியற்கைதா மதமே யென்று
ரவர்சுர ரமர ராக வாழிமுன் கடைந்தா னென்று
ரிவர்கரு விடமுண் ணானேல் யாவரு மிறப்ப ரென்றார். (௧௧௭)

அவரரி யோமென் றுதி யறைகுவ துணர்வீ ரென்று
ரிவரஃ தம்மை யப்ப ரியற்றிரு நாம மென்று
ரவருல கனைத்து மாக்க வயனைமுன் னீன்றா னென்று
ரிவருல களிக்க மாலை யீன்றனன் பிரம னென்றார். (௧௧௮)

அவரிமை யவர்ச காய னரவணைச் செல்வ னென்று
ரிவர்துவட் டாவின் மைந்தன் செயததெச் சகாய மென்று
ரவர்திறல் வாணன் போரி லிரிந்தவன் யாவ னென்று
ரிவர்தவம் புரியத் தானே தருவர மெண்ணி யென்றார். (௧௧௯)

அவரவ னசையி னன்றி யணுவுமற் றசையா தென்று
ரிவர்பரன் யோகின் வேளை யேவிய தெற்றுக் கென்று
ரவரிரு கண்ணு மெங்க ளரிக்கிரு சுடரே யென்று
ரிவருமை பரன்கண் பொத்த விருண்டதெ னுலக மென்றார். (௧௨0)

அவரடுத் தவரை வஞ்சி யாதவன் றிருமா லென்று
ரிவரிது மெய்யே லோர்பெண் ணெய்திய தெவ்வா றென்று
ரவருல கோது நாரா யணனிஃ தறிவீ ரென்று
ரிவர்நுனித் துணரு நாரா யணியென்பாள் யாவ ளென்றார். (௧௨௧)

அவரரி முழந்தாட் பூறும் மண்ணால்சூ டினனே யென்று
ரிவரரி தானந் தானி யெம்முடை யிறைவ னின்னு
மவரவர் விழைந்த தேத்தே யருளுவான் முலைகன் றுப்போ
டிவரெழு முதல வற்றி னிழிந்ததோ முழந்தா ளென்றார். (௧௨௨)

அவர்விபா பகனு வுள்ளா னற்புத நெடுமா லென்று
ரிவர்சிலை யடியோ மத்தோ வெங்கணும் பட்ட தென்று
ரவர்வரங் கொண்டேற் றானை யட்டனன் றிருமா லென்று
ரிவரவன் றன்னை யட்ட தெவ்வர வலியா லென்றார். (௧௨௩)

அவருல குண்ட காலை யகப்படா ரெவரே யென்று
ரிவரகப் படான்கா ணண்டங் கடந்தவ னென்று மென்று
ரவர்மறை யவர்க்குத் தேவா மரவிந்தக் கண்ண னென்று
ரிவரவ ரியம்புங் காயத் திரிப்பொருள் யாவ னென்றார். (௧௨௪)

அவரர வணையான் சார்பே யுயர்ச்சியென் றறைந்தா ராய்ந்த
விவர்பணி கருடன் றன்னை வினவிய தெண்ணு மென்று
ரவருயிர் மயக்கம் போக்கி யருள்பவ னரியே யென்று
ரிவர்மயக் கொழிக்குங் குல்லை யாதலா லிதுமெய் யென்றார். (௧௨௫)

இன்னண மவர்சொல் வார்த்தை யாவையு மறுத்துப் பின்னு
மன்னநா யகனை மற்றை யறிஞரை யினிது நோக்கி
முன்னவ னாய வெங்கண் முதலவன் பெருமை சற்றே
நன்னர்யாம் புகல்வோங் கேண்மி னென்றனர் நவில லுற்றார். (௧௨௬)

வேறு.

ஓங்கு காயத் திரிமனுவுக் குரிய பொருளா தலினானுந்
தாங்கு தாச ரதிவணங்கித் தாபித் தேத்து தலினானும் [பப்
வீங்கு கயிலைப் பொருப்படைந்து மேன்மேற் கண்ணன் விழைந்திரப்
பாங்கு பெறுநற் குணத்தமைந்த மகப்பே றுதவும் பரிசானும். (௧௨௭)

வயங்கு மொருநேத் திரமாய மலரோ டோரா யிரங்கமல
நயங்கொண் மலர்கொண் டெம்மானை யரிநன் கருச்சித் தலினானு
மியங்கு மசுரர் தலைசாய்ப்ப வெஃக மதுதந் திடலானு
முயங்க வெழுந்த வாலால முவப்பி னருந்து திறத்தானும். (௧௨௮)

கரும்பு குழைக்குங் காமனுடல் கருக விழித்த திறத்தானும
விரும்பு மதலை நடுங்கவரு வெங்கூற் றுதைத்த விறலானு
மிரும்பு முதலா மும்மதிலு மெரியின் மூழ்கச் செயலானு
மரும்பு கொடிய மனத்தக்கன் வேள்வி யழித்த வதனானும். (௧௨௯)

வலிய பாசு பதப்படைகாண் டவற் குதவு வளத்தானு
மெலிய வொருமா னிடமடங்கல் வீரங் கெடுத்த வதனானும்
பொலிய மகடூஉ வரியாகப் புணர்ந்து சாத்தற் பெறலானு
மொலிய புனல்வைப் பிடத்தான்றே ரநேகர் போற்ற வுறலானும். ()

அன்னர் தமக்கு வேண்டுவன வெல்லா மளித்த வருளானு
நன்ன ரொருபான் பிறப்பினுமால் பூதித் தேத்து நலத்தானு
முன்ன ரிருவ ரடியினொடு முடியுந் தேட வெழலானுஞ்
சொன்ன முதலீ றுதியுயிர்க் குணர்த் தொளிருந் துணிபானும். ()

காசி வரைப்பிற் பொய்ம்மொழிந்தோன் கைதம் பித்த வதனானு
மாசின் மதில்செற் றிடுஞான்று மாலே றாய்த்தாங் குதலானும்
வாச மலரோ னளவிறலை மாலை யணியும் பொலிவானும்
பாச மறஞா னமும்வீடும் வேட்டோர்க் குதவும் படியானும். (௧௩௨)

துன்று கருணைப் பசுபதியே சொற்ற பலவா னவருள்ளு [யற்
மென்று முயர்ந்தோ னெனத்தெளிவீ ரின்றே நேற்றே வொருவனி
றன்று குழைமண் ணிடுநீவி ரந்தோ சைவ நிந்தைகொள
லென்று புழுதி மண்வாயி லிட்டுக் கொளற்கோ வுரையீரோ. (௧௩௩)

என்று முடிவு படவுரைத்தா ரெங்கள் சைவ சிகாமணியார்
மன்று வவையி லிருந்தோர்கள் யாரு மெழுந்து வணங்கினார்
பொன்னுன் மணியா லபிடேகம் புரிந்தார் மகிழ்ந்து நாயகரும்
பின்னு மொருமா மடமியற்றிக் கொடுத்தார் மலைபோற் பிறங்கவே. ()

அன்ன பணியிற் பொலியரசர் தம்பால் விடைபெற் றங்ககன்று
சின்ன முழங்கக் குடைநிழற்றச் செம்பொற் சிவிகை மேற்கொண்டு
பன்ன வரிய பரிசனமும் பாங்கு சூழ வழிக்கொண்டார்
கன்னல் கமுகிற் பொலிதருகீழ்க் காட்டை நோக்கி நடக்கின்றார். ()

அன்பிலாலந்துறைமுதலியவற்றைத்தரிசித்தல்.

அண்ண லிடங்கொண் டமரன்பி லாலந் துறையை வழிபட்டுக்
கண்ண வினிய கதிகாட்டுங் கானூர்க் கரும்பனைக் கைதொழுது
வண்ண மதில்சூழ் மழபாடி வானோர் புகழு நெய்த்தான
மெண்ண மருவப் பணிந்தேத்தி யெதிர்தோன் றையா றெய்துவார். ()

வேறு.

சதிர்கொளை யாற்றமர் தக்க யாவரு
மெதிர்கொள வவரொடு மெய்தி நீண்முடிக்
கதிர்தவ ழாலயங் கருதி யுட்புகூஉ
வதிர்மறை முதலித னடிகள் போற்றினார். (௧௩௭)

பகரரு சினைவெளிப் படுத்த வாவியு
நிகரறு கயிலையு நீள்வி மானமும்
புகரற வறம்வளர்த் தவள்பொற் கோயிலு
நகர்வள முழுமையு நன்று நோக்கினார். (௧௩௮)

பொய்யிலி யாரமர் பூந்து ருத்தியூர்
வையகம் புகழ்தர வயங்கு கண்டியூ
ரையர்சோற் றுத்துறை பழன மாதியா
மெய்யமை தலமெலாம் விரும்பிப் போற்றினார். (௧௩௯)

ஆயிடை நின்றெழுந் தறிவின் மேலவர்
மாயிரும் புவிக்கெலாம் வரங்க ணல்குபு
தாயன தங்குரு சாமி வைகுதன்
மேயதோர் திருமலை விருப்பிற் போற்றினார். (௧௪௦)

திருவலஞ் சுழியொடு திகழ்பட் டீச்சரம்
பொருவருஞ் சத்திமுத் தம்பொன் மேற்றளி
யருள்செறி தருபழை யாறு மற்றவுந்
தெருளுறப் பணிந்துபோய்க் குடந்தை சேர்ந்தனர். (௧௪௧)

முற்றிய வருட்குட மூக்கு வள்ளலார்
பற்றிய பற்பல தளியுஞ் சென்றுசென்
றுற்றிய வன்பினொ டுவந்து போற்றினார்
சுற்றிய நகரமுஞ் சூழ்ந்து தாழ்ந்தரோ. (௧௪௨)

பொருதுறை புகுமயிற் புலவர் மாணவர்
விருதுறை பரிசன மேவிச் சூழ்வர
வெருதுறை தம்பிரா னினிது மேவிய
மருதுறை மாநகர் வந்து போற்றினர். (௧௪௩)

வீழ்தர மறமெலாம் விரும்பி நல்லறம்
வாழ்தர வவதரித் தோங்கு மாண்பினர்
தாழ்தர விலாதறந் தழையப் பிப்பிலஞ்
சூழ்திரு வாவடு துறைவந் தெய்தினர். (௧௪௪)

அருண்மலி மாசிலா மணியை யம்மையைத்
தெருண்மலி மூலனை யரசைச் சேவியா
மருண்மலி மனத்தருட் புகாத மாண்புசால்
பொருண்மலி திருமடம் புகுதன் மேயினர். (௧௪௫)

பற்பல ரெதிர்கொளப் பாங்கி னேகுபு
மற்பொலி யருட்டிரு மாளி கைப்பிரான்
சிற்பர வுருநமச் சிவாய தேசிகன்
பொற்பமர் திருவடி புகழ்ந்து போற்றினர். (௧௪௬)

வெள்ளிய நீறுகண் மணியு மேதக
வொள்ளிய காவிதோ யுடையும் வேடமுந்
தெள்ளிய சடையுமுண் டிதமுஞ் செவ்விசால்
வள்ளிய குழாங்களை மகிழ்ந்து நோக்கினர். (௧௪௭)

தாதமார்க் கத்தருந் தழுவு மைந்தரென்
றோதமார்க் கத்தரு முலப்பி லாச்சக
நீதமார்க் கத்தரு நெடுஞ்சன் மார்க்கராம்
போதமார்க் கத்தரும் பொலியக் கண்டனர். (௧௪௮)

சாற்றுமித் தானமோர் தானந் தானெனப்
போற்றுசீர்க் குருநமச் சிவாய புண்ணிய
னுற்றுபே ரருணினைந் தகம கிழ்ந்தனர்
தோற்றுபே ரறந்தலை யெடுப்பத் தோன்றினர். (௧௪௯)

தாமலி குமரசு வாமி சற்குரு
வரவர வெனத்திரு வாய்ம லர்ந்திடக்
காமலர் குவித்தனர் வணங்கிக் காமர்சா
லூரவரு கிடனுற வுவந்து வைகினர். (௧௫௦)

போதத்திற் சித்தியிற் பொருந்த மற்றுள
பேதகு நூல்களிற் பலவி னுவியே
யாதரங் கூர்தெளி வுண்மை யாய்ந்தன
ரோதுநங் குரவனே யெனவுள் ளோர்ந்தனர். (௧௫௧)

மருவுற வளவளாய் மகிழ்ந்து பின்னெழீஇப்
பொருவரு வடமடம் பூசை யாற்றிவந்
தருள்செறி பந்தியி லமுது கொண்டனர்
வெருவிலவ் விடனெரீஇ விடைபெற் றேகினார். (௧௫௨)

பிரிவரும் பரிசனம் பெட்பிற் சூழ்தரப்
பரிவரும் விருதுகள் பலவு மொய்த்திடத்
திரிவரு வளஞ்செய்மா யூரஞ் சேர்ந்தனர்
புரிவரு சடையனைப் போற்றித் தாழ்ந்தனர். (௧௫௩)

அங்குநின் றெழுந்துபோய்த் தருமை யண்ணுபு
சங்குநின் றவிர்குழைத் தரும லிங்கர்தம்
பொங்குமென் மலரடி போற்றிப் புக்கனர்
தங்குமெய்ஞ் ஞானசம் பந்தர் தந்தளி. (௧௫௪)

ஆவயி னெதிர்கொளு மளவி லாரொடு
மேவரு ஞானசம் பந்தர் மேன்மைமுற்
றோவற வுணர்ந்தவ ருணர்ந்து போற்றினார்
தேவரும் பெறற்கருஞ் சித்தி பெற்றவர். (௧௫௫)

நுவலுமித் தானமு நோக்க லாமெனக்
கவலரு மனத்திடைக் கருது மேல்வையி
லவமகல் பலரெழுந் தருள வேண்டுமா
லுவமையி லீரென வுவந்து சென்றனர். (௧௫௬)

திருமடத் துட்புகுந் தருளித் தேசிக
ரருகுசென் றிருந்தன ரான்ற கேள்வியின்
மருவிய பற்பலர் வந்து சூழ்ந்தனர்
பொருவற வளவளாய் மகிழ்ச்சி பூத்தனர். (௧௫௭)

நடைகெழு கல்வியு நயக்கு ஞானமுந்
தடையற வெழுபிர சங்க வாய்மையு
மடையுடைந் தெனக்கவி வடிக்கும் வாக்குமிக்
குடைமையி னேக்கியாங் குளர்வி யந்தனர். (௧௫௮)

மாசறு பெரும்புகழ் மாசி லாமணித்
தேசிகர் பெருவளச் செந்தி லாதிபர்
வீசிய பேருள் சுமந்த மேலவர்
ரீதசுசான் முகங்குறித் திதனைச் செப்புவார். (௧௫௯)

குற்றமில் கல்வியுங் கோதின் ஞானமு
மற்றமில் குமரவே ளருளிற் பெற்றவர்
மற்றவன் றந்தையார் மலர டித்தொழும்
புற்றவர் தமைவணங் கார்கொ லோவென்றார். (௧௬௦)

வெள்ளிய நீறணி மேனி யாரெலாம்
வள்ளிய தொழற்குரி மாண்ப ராயினுந்
தெள்ளிய தாயவாச் சிரம பேதத்தா
னள்ளிய விதியையு நயப்ப ரேயென்றார். (௧௬௧)

மனத்திடை மாசிலா திருத்தன் மாண்பற
முனப்படு பிறவெலா மோசை நீரவே
யெனப்புக லுதலெவ னென்ன மாசறன்
மினப்படு காட்சியன் றென்று விண்டனர். (௧௬௨)

காட்சியே கருதுதல் கந்த வேளருண்
மாட்சிறும் போலுநர் மரபன் றூலென
வாட்சிசா லுண்மையை யறித ராவணப்
பூட்சிதா னருளொடு புணர்த ராதென்றார். (௧௬௩)

பிறரறி தலினெவன் வருதல் பேசுமென்
றறமலி தருமைவா ழவரு ளாத்திட
நெறியின ரினையரென் றுணர்ந்து நீணிலங்
குறிவழி பாடுசெய் துய்யக் கொள்கென்றார். (௧௬௪)

ஆடல்வரம் புரவியோ ரரச ராயினார்
வேடமே பொருளெனக் கொண்டு விண்ணரு
நாடரும் பெரும்பத நண்ணி னாரது
கோடலே பொருளெனப் பின்னுங் கூறினார். (௧௬௫)

ஐந்துபே ரறிவெனுஞ் செய்யு ளத்தமென்
முந்துநீ ரியம்புகென் றவர்மொ ழிந்திட
நந்துமச் செய்யுளின் பொருணா விற்றுகே
ளுந்துநீர் செம்மையேற் றறிகென் றாரரோ.* (௧௬௬)

வேறு.

எங்க ளாரியன் மேற்றுதி யாங்களெப் போது
முங்கள் போரு ளாற்செயல் வேண்டுமற் றுதற்குத்
திங்கள் சூடியோன் றிருமக னாருட் செல்வ
நங்கள் வாழ்வெனப் பெற்றுளீர் நயந்தருள் புரிவீர். (௧௭௪)

என்று வேண்டலு மும்மணிக் கோவையொன் றியம்பி
யொன்று மாதுதித் திருமினென் றவர்கரத் துதவிச்
சென்று நீள்வட மடம்புகூஉப் பூசனை செய்து
வென்றி மேவுவார் சிலபகல் விழைந்தவ ணமர்ந்தார். (௧௭௫)

---

* இதன் பின்னிருந்த எ - பாடல்கள், வரலாற்று முறைமையைச் செவ்வனே தெரியாதவர்கள்சொல்லக்கேட்டுச் செய்யப்பட்டமையின், இவைகொள்ளத்தக்கனவல்லவென்று பிள்ளையவர்கள், நாங்கள் பாடங்கேட்ட காலத்திற் சொல்லியிருந்தமையின் அவற்றை இங்கே பதிப்பிக்கவில்லை. இந்தப்பாகத்திற்குரியபாடல்களைப் பின்பு அவர்கள் இயற்றவில்லை.

கோல மார்தரு மாசிலா மணிப்பெருங் குரவர்
சால வன்புசெய் தன்மையாற் பந்தியிற் றமுஞ்
சீல மார்தரு திருவமு துண்டுடன் றிளைத்தார்
ஞால மேத்துசெந் தூர்ப்பிரா னயந்தமா ணுக்கர். (கஎசு)

மன்னு மாதரங் கூர்தர விங்ஙன மருவித்
துன்னு மப்புரப் பாங்குறு தலஞ்சில தொழுது
பன்னு மேன்மையா ரூர்ப்பிரான் பங்குனித் திருநாள்
கொன்னு மார்வத்திற் பணிதால் குறித்தெழுந் தனரே. (கஎஎ)

வழுவூர்முதலியவற்றைத்தரிசித்தல்.

மலையி னின்றிழி யருவியின் மும்மதம் வடிக்குங்
கொலையி னின்றுநீங் காப்பெருங் கொடுங்களி றுரித்தார்
நிலையி னின்றவர் செறிவழு வூரைநேர்ந் தருணூற்
றலையி னின்றதாட் டாமரை மலர்பணிந் தெழுந்தார். (கஎஅ)

கரிய கண்டர்வாழ் தருதிரு வம்பர்மா காள
மரிய மாதவர் தொழுதெழு வீழிநன் றமையும்
பெரிய வாஞ்சிய முதலிய பெருந்தல மெல்லா
முரிய காதலிற் போற்றியா ரூர்மருங் குற்றார். (கஎகூ)

கோல மார்தலத் தார்பலர் வந்தெதிர் கொள்ளச்
சீல மாதவப் பெரியவர் சிறப்பொடு சென்று
ஞால மேத்தணி முடிநெடு கியநல வீதிப்
பால லோசனன் றிருவருள் பெருக்கெழப் பணிந்தே. (கஅ0)

ஓங்கு கோபுர வாயிலுட் புகுந்தும்க் குபர்சீர்
வீங்கு கின்றதே வாசிர யப்பெயர் மேவத்
தாங்கு காவணம் பணிந்துபூங் கோயிலுட் சார்ந்தார்
தேங்கு காதலிற் புற்றிடங் கொண்டவர் திருமுன். (கஅக)

கரையி லன்புமீப் பொங்கிடக் கைதலை முகிழ்ப்ப
விரைய மார்பணி நீற்றினை விழிகணீர் கரைப்பப்
புரையி லாதகண் பெற்றபே றிதுவெனப் போற்றி
யுரைசெ யாதபே ரானந்தந் திளைத்துவப் புற்றார். (கஅஉ)

மாயன் மார்பமும் வானக நாடுமுண் மதியா
தாய பேரெயில் சூழுமத் தளியகத் தமர்ந்து
மேய நந்திபா கேசனை விருப்பொடு கண்டு
பாய கிண்கிணித் தாள்பணிந் தெழுந்தனர் பரிந்தே. (கஅங)

பரவு சீரச லேச்சுர முதலிய பலவும்
விரவு மன்பினுற் சென்றனர் மேதகப் பணிந்து
புரவு சாலொரு திருமடம் புக்கினி தமர்ந்தா
ராவு நீர்ச்சடை யண்ணலார் புகழ்விரித் துறைவார். (கஅச)

### திருவாரூர்நான்மணிமாலை.

அன்பு மீக்கொடு நான்மணி மாலையொன் றறைந்தாங்
கின்பு மீக்கொடு பலர்வியப் புறவரங் கேற்றி
வன்பு மீக்கொடு நவிமல மாய்த்தவர் மகிழ்ந்தார்
துன்பு மீக்கொடு சிலசம வாதர்க ளொக்கார். (௧௮௫)

### சமவாதமும், மறுப்பும்.

படிமை யாளர்நீர் பலவகை நூல்களும் பயின்றீர்
மடிமை யின்றியப் பொருள்களு முணர்த்திட வல்லீர்
கடிமை யார்கொளுஞ் சமமெனல் கடிந்துநீ ராண்டா
னடிமை யென்றுணா செய்வதெவ் வாறு[illegible] றறைவோம். (௧௮௬)

அநாதி நித்திய மகண்டபூ ரணசிவ முயிரு
மநாதி நித்திய முத்தியிற் சமமென வறைந்தா
ரநாதி நித்தியன் சருவவல் லவனுயி ராய
வநாதி நித்தியன் சுதந்தர னிலனென் றறுத்தார். (௧௮௭)

பச்சை மாமயில் பாகனும் பகருமன் மாவு
மிச்சை ஞானநற் கிரியையென் றியம்பிடு மூன்றால்
விச்சை யாளர்கள் சமமென விரித்துரை செய்வார்
கொச்சை யீரலீ ரிதற்கிறை கொடுத்திடு மென்றார். (௧௮௮)

ஏயு மிச்சையுண் மூன்றையு முயிர்ப்பொருட் டிறைவன்
றோயும் யார்பொருட் டினையமூன் றையுமுயிர் தோயும்
பாயு நூன்முறை யின்றியா ரியமெனப் பயில்வுற்
றாயு நூலுணர்ச் சியமென வழக்கெடுத் தறைவீர். (௧௮௯)

என்று கந்தவே டருவருள் பெற்றவ ரியம்பக்
குன்று வார்சிலை கோட்டுபு நாணராக் கூட்டி
யன்று மாற்கணை பூட்டிமுப் புரத்தெரி யமைத்த
மன்று ளாடிமாத் திரங்கொலோ சித்தென வகுத்தார். (௧௯0)

உண்மை யென்பது சற்றுமோர் கிலிர்தனை யுணர்வார்க்
கண்மை யாகிய தம்பிரான் போலல னான்மா
வண்மை யாயுணர்த் திடவுணர் சித்தென மதியா
வெண்மை யீர்நுமக் குரைத்தலிற் பயனிலை யென்றார். (௧௯௧)

திருந்து ஞானசம் பந்தர்வெள் ளெலும்புபெண் செய்தார்
பொருந்து மாமுய லகனெழித் தளித்தனர் பொன்போற்
றிருந்து மோர்கொடிக் கோர்பவுத் தன்றலை சிதைத்தார்
வருந்து மாறென வோதினர் மற்றவர் மீட்டும். (௧௯௨)

இரும்பு தீயடுத் தழற்றிடு மழற்றுவ திரும்போ
வரும்பு செந்தழ லோசிறி தாய்ந்துபார்த் துரைப்பீர்
விரும்பு மீசனுஞ் சீவனுஞ் சமமென விரித்துப்
பொரும்பு ராணரே யென்றனர் புகழ்ப்பெரும் புலவர். (௧௯௩)

என்று கூறலு மெத்தனை நாள்களிங் கிவரோ
டொன்று வாதநாஞ் செய்யினு மறுப்பரென் றுன்னிக்
கன்று நெஞ்சராய் மறுத்துரை யாமலே கழிந்தார்
நன்று நன்றிவர் வாதமென் றிவர்நனி நகைத்தார். (ககூச)

**தலயாத்திரை.**

ஆய காலையி லத்தல நின்றெழுந் தாரூர்
மேய தூய்மையின் மிகப்பொலிந் தோங்குகீழ் வேளூர்
பாய மாமறைக் காடுநால் பரவுநன் னாகை
நீய தாயது தீர்த்தருள் செறிக்குநள் ளாறு. (ககூரு)

திங்கள் சூடிதன் றிருப்பணிப் பெருமையைத் தெரிப்பா
னெங்க ணாவினுக் கரசுழ வாரங்கை யேந்தி
யங்க ணார்பணி புரிபுக லூரரு மகவாற்
றங்கள் வெம்பசி தணித்தவர் தயங்குசெங் காடு. (ககூசா)

பாங்கு சால்கட வூரருள் பதிந்தவெண் காடு
தேங்கு மற்றுள தலமெலாஞ் சென்றுசென் றிறைஞ்சி
வாங்கு நீர்த்திரை வாவியில் வாளைமீன் பாய
வோங்கு சீர்கொள்புள் ளிருக்குவே ளூரைவந் துற்றார். (ககூஎ)

விருப்பி னாலெதிர் கொள்ளுவார் தம்மொடு மேவிப்
பொருப்பி னாற்சிலை செய்துமுப் புரமடு புராண
ரருப்பி னாற்புரி முலையுமை யாளொடு மமர்ந்த
சுருப்பி னாற்பொலி மலர்செறி சுடர்த்தளி புகுந்தார். (ககூஅ)

வந்து ளாருடற் பிணியொடு பவப்பிணி மாய்க்கு
மிந்து வாழ்முடி வயித்திய நாதனை யிடுகித்
தந்து நேரிடைத் தையலைக் கண்டனர் தாழ்ந்தார்
முந்து கண்கணீர் பொழிதர வானந்த முகிர. (ககூகூ)

தமாது நீரரு மன்புபின் றள்ளவந் நின்று
நமாது கண்மணி போல்பவர் நீங்கிநன் குள்ள
மமாகு ழைந்திட வானந்த முகிழ்த்தெழ முத்துக்
குமார புங்கவன் றிருமுனர்க் குறுகினர் மாதோ. (உ00)

துதிக்க முந்திடு நாச்சுடர்த் திருவுருக் கோல
மதிக்க முந்திடும் விழியருள் வடிவினை வாங்கிப்
பதிக்க முந்திடு மனநிறை யின்பத்திற் படிந்து
கதிக்க முந்திடுங் கருமலத் தடைதவி ரறிவே. (உ0க)

ஆடு வார்மனங் குழைதர வாகர வென்று
பாடு வார்விழி பொழிதரு மருவியிற் படிவார்
நீடு வார்பெருங் களியொளி திகழநெட் டுயிர்த்து
மூடு வார்புள கத்தினான் மேனியை முன்னோர். (உ0உ)

இந்த வாறுபே ரானந்த முகிழ்த்தெழ வேத்திச்
சந்த மாரொரு திருமடம் புகுந்தனர் தணவா
வந்த நாயக ரருள்குறித் துறங்குமப் பொழுதக்
கந்த னாரிளங் குழவியாய்த் தோன்றினர் கனவில். (௨0௩)

**முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்.**

இங்கு நம்மைநீ பாடுறு தேகலே யென்று
தங்கு போரு ளானுதற் பூதியுஞ் சாத்திப்
பொங்கு பேரெழிற் புண்ணியர் மறைந்தனர் விழித்தா
ரெங்கு மாவிரிந் தெழுந்துபைங் கொழுந்துகொ ளிசையார். (௨0௪)

குமிழ்ம றிந்தகட் டையறன் மகனருள் குறித்தாங்
கிமிழ்பெ ருங்களி யோடுபொன் பூத்தவென் றெடுத்தே
யமிழ்து முற்சுவை புறந்தரச் சுவையமை பிள்ளைத்
தமிழ்மு டித்தனர் பாடுபு புலவர்தந் தலைவர். (௨0௫)

இன்ன செந்தமிழ் யாருமேத் திடவரங் கேற்றி
யன்ன மாநகர் தனிற்சில நாள்வதிந் தகன்று
பொன்ன வாங்கணைக் காழிநா யகனடி போற்றிச்
சொன்ன மாமதிற் றில்லையை யடைந்தனர் தொழுதே. (௨0௬)

எதிர்கொள் வாரொடும் பெருந்திரு வீதியை யிறைஞ்சிச்
சதிர்கொள் செம்மணிக் கோபுர வாய்தன்முன் றாழ்ந்து
பிதிர்த ராத்திரு மாளிகை வலங்கொடு பெயர்ந்து
முதிரு மன்பினுற் றிருநட ராசர்முன் சென்றார். (௨0௭)

நீடு மானந்த நிறைந்தெழ நெஞ்சநெக் குருகக்
கூடு மஞ்சலி யிருகரஞ் சென்னிமேற் குவியத்
தேடு மாலயற் கரியராய்ச் சிதம்பர மன்று
ளாடு வார்நடங் கண்டன ரவசராய்த் திளைத்தார். (௨0௮)

ஐயர் வாழ்திரு மூலட்டா னமும்புன லவல்வாய்ச்
செய்ய தாமரை மலர்திரு வேட்கள நகருங்
கைய ரோவுநெல் வாயிலுங் கண்டவர்க் கருளே
பெய்ய வாழ்கழிப் பாலையும் பெட்டடைந் திறைஞ்சி. (௨0௯)

தில்லை மாநட ராசர்த நடனமுஞ் சேவித்
தெல்லை யில்லதோர் களிப்பினு லாவயி னிருப்பார்
வல்லை மாமடம் வளம்பல மலிதரச் சமைத்துத்
தொல்லை மாவினை தீர்ந்தவர் சூழ்சிறப் போடும். (௨௧0)

**சிதம்பரமும்மணிக்கோவை.**

ஈண்ட வாவயி னிங்ஙன மமர்தரு மேல்வை
கூண்ட செம்பொருள் செறியொரு மும்மணிக் கோவை
யாண்ட குஞ்சிதச் செய்யதா மரையடிக் கணிந்து
நீண்ட பேரின்ப முழுகினர் நிகழுமப் போது. (௨௧௧)

**சிதம்பரச்செய்யுட்கோவை.**

பூதி சாதனக் கிழமையர் சிலர்வந்து போற்றி
நீதி நூன்முதற் பலவுரைத் திர்நிகழ் யாப்பிற்
காதி நாளுதா ரணமெலாம் பரமத மவாவு
மோதி யாமுயு மாறருள் செய்விரென் றுரைப்ப. (உகஉ)

காவை நேர்தர மகிழ்ந்துளங் கனிந்துபல் செய்யுட்
கோவை யாப்பியற் காட்டினி துரைத்தனர் கொடுத்தார்
மாவை வெண்டிரை வாரியை விலங்கலை மாய்த்த
தூவை வேலுடைத் தோன்றலார் சேவடித் தொழும்பர். (உகங)

**சமயவாதம்.**

அரிய செய்யுளுண் பொருளெலா மடைந்தவர்க் கருளிப்
பெரிய ராயிரக் காற்பெரு மண்டபம் பிறங்க
வுரிய சான்றவ ரோடுறை பொழுதிலங் கொருசார்
விரிய வந்தகம் பிரமவா தியர்புடை மிடைந்தார். (உகச)

அன்று கந்தனர் புரிதரு போரு ளடைந்தோ
மென்று வந்தொரு சைவசித் தாந்தியா ரீங்கு
நன்று மேவின ரென்பரா லவரெவர் நாங்க
ளொன்று பேசிட வந்தன மெனவிதந் துரைத்தார். (உகரு)

சோதி நாமென மருளுறச் சொற்றலை மாயா
வாதி யாருரை கேட்டலுங் குறுநகை மலர்ந்து
நீதி யாரவ ரிக்குழாத் தேயுளார் நீங்க
ளோதி யானிறுத் துவிரென மற்றவ ருரைப்பார். (உகசா)

ஏக மேயென மறையெலா முழங்கவு மென்றே
மோக நீராய் மூன்றென லென்றவர் மொழிந்தார்
பாக வாய்மையாற் பரவுமெய்ஞ் ஞானநற் பயனுன்
மாக நாட்டினு நும்மையொப் பாரெவர் மதிக்கின். (உகஎ)

ஏக மென்றுமா மறையுரைத் திடுமென விசைத்தீ
ரேக மென்றெவர்க் குரைத்ததம் மறையசத் தேலா
தேக மென்றது பதியையே யிதுசிறி தெண்ணு
தேக மென்றதா லென்பிர்நும் மறிவுநன் றென்றார். (உகஅ)

ஏக மென்றதே துணிபெனி னியம்பிய மறைதா
னேக மென்பதை மறந்து மூன் றிசைத்திடுங் கொல்லோ
வேக மென்றதை யன்றிமூன் றென்னெனி னிசைப்போ
மேக வாதர்காண் ஞாதிரு வாதிமூன் றென்றார். (உககூ)

என்ற காலையி லவித்தைவல் லவரிஃ துரைப்பா
ரொன்று கூறுகே மென்னையத் துவிதமென் றுரைத்த
னன்று மற்றித னுண்மையை நவிலுக வென்று
ரன்று மற்றதற் கிறைகொடுப் பாரறி வாளர். (உஉ0)

உரைசெய் நூல்களத் துவிதமென் றுரைத்திடு முண்மை
கரைசெய் வாமது வேறன்மை யாதல்கட் டுரைக்கும்
வரைசெய் மற்றித னுளுள மன்னுயிர் யாவுந்
திரைசெய் வைப்பிற்று ணநிற்கும் பதியென்று தெளிமின். (உஉக)

என்ற காலையிற் றத்துவ மசியென லென்னே
யொன்ற வோதுமி னென்றன ருண்மைநோக் காது
மன்ற யாம்பா மென்றளற் றழுந்திடு மதியோர்
நன்ற வாயினீர் நவிலுதுங் கேண்மென நவில்வார். (உஉஉ)

ஆய தத்துவ மசியெனு மறைப்பொரு ளமல
னேய மாரிய மானனென் றிருபொரு ணிகழ்த்தி
யேய வேறிலா மையைவிரித் திசைத்ததே யன்றித்
தூய மாமறை தனியென்ற தின்றெனச் சொற்றார். (உஉங)

ஏக வாதம்யாஞ் செய்யவந் தனமென விசைப்பீர்
மோக மாயெவ ரிடஞ்செய முன்னினீர் பிழையே
யாக விவ்வுரை பிதற்றலென் னடங்குதி றென்று
பாக மேவினுர்க் கருளுமுத் தமர்பினும் பகர்ந்தார். (உஉச)

இந்த வார்த்தைகேட் டனையர்தோற் றிருந்தன ரெங்கள்
சந்த ஞசலச் சாமியா ரருள்பெறு தக்கோ
ரந்த மாதலத் தடிகள்பால் விடைகொடங் கெழுந்து
பந்த மோவுமற் றுள்ளபஃ றலமெலாம் பணிவார். (உஉரு)

தலயாத்திரை.

பொருவி லாவள மலிதிருப் பாதிரிப் புலியூர்
திருவி லார்குறித் தடைதராத் திருத்தினை நகரங்
கருவி லாருடன் மாணிதாழ் குழிகருக் குழியி
லிருவி லாத்திரு வதிகைமுற் பலவுஞ்சென் றிறைஞ்சி. (உஉசு)

வேறு.

விரைகெழுசந் தனக்குறடு மேதருகா ரகிற்றுணியும்
வரைகெழுமு பலபொருளும் வான்றிவரு பெரும்பெண்ணைத்
திரைகெழுதண் புனல்வளங்கூர் திருவெண்ணெய் நல்லூரிற்
புரைகெழுமு பெரும்புகழார் பரிசனத்தி னெடும்புகுந்தார். (உஉஎ)

நாவலூர் நம்பிதனைத் தடுத்தாண்ட நம்பெருமான்
மேவுமா லயமபுகுந்து மேதினிமார் புறபபணிந்து
பாவுபே ரன்புமிகப் பரிந்துவிழிப் புனல்வாரத்
தாவிலா னந்தமெழப் போற்றிசைத்துப் புறஞ்சார்ந்தார். (உஉஅ)

வானேங்கு கயிலாய மலையோங்கு நந்திபிரான்
றானேங்கு போருளாற் றந்தவருட் டகைநூலைத்
தேனேங்கு செந்தமிழாற் றிருந்தமொழி பெயர்த்தருணங்
கோனேங்கு தளிபுகுந்து கும்பிட்டா ருள்ளுருகி. (உஉகூ)

தீராத பெருங்காதல் சிந்தையெழப் பணிந்தெழுந்து
நேராதார் புரம்பொடித்த நித்தனைவண் டிருத்துறையூ
ரோராவங் கணைந்தேத்தி யுள்ளுருகி யருணந்தி
தாரார்பொற் பூங்கழலுந் தாழ்ந்துபணிந் தின்புற்றார். (௨௯௦)

அரியபுக ழாளர்சக லாகமபண் டிதரடிகள்
பிரியமன மஞ்சினராய்ப் பேதுற்றுப் புறவிடைகொண்
டரியசிவ பெருமான்வா ழோங்குமதி லாமாத்தூர்
பிரியமிகு கோவலூர் பேணுபுசென் றிறைஞ்சினார். (௨௯௧)

பூமேவு நான்முகத்துப் புத்தேளு மறுவினொடு
மாமேவு வனமார்ப மாயவனு முரணடங்கத்
தாமேவு விண்கிழித்துத் தழலுருவ மாய்நின்றார்
தேமேவு திருவடிகள் சென்றுபுகுந் திறைஞ்சினார். (௨௯௨)

ஆயபெருந் தலநின்று மஞ்சிவிகை மேற்கொண்டு
பாயபரி சனஞ்சூழப் பழமலைபோய்ப் புகுந்துமிகத்
தூயமணி முத்தாற்றுத் தோய்ந்துபெரு மகிழ்திளைப்பத்
தாயனைய பெருமானார் சரண்பணிந்து புறம்போந்தார். (௨௯௩)

தூங்கானை மாடமுதற் சுற்றுமுள தலமெல்லா
நீங்காத காதலொடு நேர்சென்று தொழுதெழுந்து
பூங்காவின் மயிலாலும் புனற்பாலி நாட்டுமறந்
தேங்காத மறைச்சிலம்பாந் திருக்கழுக்குன் றினையடைந்தார். (௨௯௪)

திருவாத வூரருக்குச் செய்யபெருந் துறைக்கோல
மொருவாது காண்பித்த வும்பர்பிரா னருள்பணிந்து
பொருவாத வளம்பரவு மிடைச்சுரமும் புகுந்தேத்தி
மருவாதார் புரம்பொடித்தார் கச்சூரும் வணங்கினார். (௨௯௫)

தேவர்கள்வந் தமுதாட்டுந் திருவான்மி யூர்பணிந்து
யாவருங்கை குவித்தேத்த வெய்திமயி லையும்பணிந்து
பாவருவண் புகழ்படைத்த வொற்றியூர் பாசூர்பைங்
காவருவண் டிருமுல்லை வாயிலும்போய்க் கைதொழுதார். (௨௯௬)

அம்மைதிரு நடங்காணு மாலங்கா டணைந்திறைஞ்சிச்
செம்மைதிகழ் திருச்செந்தூர்த் தேசிகனா ரினிதமரும்
வெம்மையக றிருத்தணிகை வெற்படைந்து பணிந்தேத்தித்
தம்மைநிகர் வரியர்சில நாளங்குத் தரித்திருந்தார். (௨௯௭)

மேதகுவேங் கடகிரிவேந் தரும்விளங்கு திருநகரிக்
காதன்மிகு மன்னவரு மெதிர்கொண்டு கனவரிசை
யாதரவிற் செயப்பெற்றே யன்னவரோ டளவளாய்ப்
போதவுரு வார்பிறவும் போய்ப்பணிவான் குறிக்கொண்டார். (௨௯௮)

முத்திமுதல் வனைத்தணிகை முன்னவனை யொளிர்ஞான
சத்திதான் றனையங்கு விடைகொண்டு சார்ந்தோர்க்குப்
புத்திமுத லெப்பயனும் பொருத்துமொரு திருக்காஞ்சி
யத்திபுரிப் பெருமானை யடிவணங்க நினைந்தெழுந்தார். (௨௩௯)

பல்லாரு மெதிர்கொள்ளப் பரவுகாஞ் சியையடைந்து
சொல்லாரு மறைமாவி னொருமூலச் சுடரொளியை
வல்லாரு முலைச்சுவடும் வளைச்சுவடுங் கொண்டுமகிழ்
வில்லாரு மெய்ப்பொருளை வீங்குகா தலிற்பணிந்து. (௨௪0)

எவ்வுலகு மீன்றாளை யின்காமக் கோட்டத்துச்
செவ்விதெரிந் தடிபணிந்து தேசிகனா கியபெருமான்
முவ்வுலகுந் தொழுதேத்த முன்னிவள ரிடமாய
வவ்வியமில் குமரகோட் டம்பணிந்தா ரருட்பெரியர். (௨௪௧)

கற்றபல ரொருங்கணைந்து கைகுவித்துத் தொழுதேத்தி
யுற்றபெரு மகிழ்ச்சியினா லளவளா யுடன்மருவப்
பொற்றபுகழ்க் காஞ்சியிடைப் புண்ணியமா தலம்பலவு
மற்றமறப் பணிந்திருந்தா ராறுமுகற் கன்புடையார். (௨௪௨)

அன்னதலத் திடைநின்று மெழுந்தருளி யருங்கானு
முன்னரிய பெருவரையு முழங்கிவரு பன்னதியு
மின்னவைகள் கடந்தேகி யெண்ணில்பரி சனஞ்சூழப்
பொன்னசலச் சிலையாளர் காளத்தி போய்ப்புகுந்தார். (௨௪௩)

அன்னமலி புனற்செந்தூ ராறுமுகப் பெருமானா
ரின்னருள்பெற் றவரிங்கே யெய்தினா ரெனமகிழ்ந்து
பன்னரிய காளத்திப் பார்த்திபனா ரெதிர்கொள்ள
நன்னர்மகிழ்ச் சியிற்சிறந்து நல்லாரங் கினிதடைந்து. (௨௪௪)

பிறங்கிவரு பொன்முகலிப் பெருந்தீர்த்தம் படிந்தாடி
யறங்குலவு மால்வரையி னடிமருவிப் பணிந்தெழுந்து
நிறங்கிளருஞ் சோபான வழியேறி நேயமிக
மறங்கிளர்வெஞ் சூற்படையார் மன்னுதிரு வடிபோற்றி. (௨௪௫)

அன்புதிரண் டோருருவா யமைந்தருகி னிற்பானை
யென்புருகப் பணிந்தேத்தி யெல்லையிலா னந்தமுற
வன்புதவிர் மனங்கனிய மாறாது விழிபொழியத்
துன்புதவிர்ந் துய்ந்தேனென் றினிதுதுதித் தனர்மீண்டார். (௨௪௬)

அந்தநகர்ப் புரவலனா ரளவிலா வரிசையொடு
சந்தமட மொன்றியற்றித் தாஞ்சிலநா ளங்கமர்ந்து
பந்தமிறும் பெருமானார் பாற்சென்று விடைபெற்றுக்
கந்தர்திரு வருள்பெற்றார் காசிநகர் குறித்தெழுவார். (௨௪௭)

### வேறு.

உளைமலி சிவிகை மேற்கொண் டுலப்பிலா விருது மொய்ப்ப
வளைமலி மதமால் யானை வாம்பரிக் குழாங்கள் சூழக்
களைமலி சின்ன மார்ப்பக் கல்லென வியங்க ளேங்கத்
தளைமலி வளமை சான்ற தண்டக நாடு நீத்து. (உசஅ)

செறிதரு கானுங் குன்றுஞ் சிலைத்தெழு நதியும் யாரு
மறிதரு நகரு மாக வமைதரு தெலுங்கந் தள்ளி
வெறிதரு நெய்தல் பூத்துத் திசையெலாம் வீசும் வாசக்
குறிதரு கைதை வேலிக் கருநடங் குலவு நீத்து. (உசகூ)

மழைமுகி றவழா நிற்குஞ் சோலையு மருத வைப்புங்
கழைகெழு வரையு மாக மாளவங் கடந்து சென்று
குழைபொடி சுரமுங் காடுங் கொண்டல்கண் படுக்குங் குன்றும்
விழைதரு நகரு மாக விராடமுங் கடந்து சென்று. (உரு0)

குடம்படு செருத்தன் மேதி குறுகுபு கனைத்துப் பாய
விடம்படு தடத்து நின்று மெழுந்திள வாளை தாவத்
தடம்படு வானந் தோயுந் தாழைமுப் புடைக்காய் சிந்த
வடம்படு முலையா ரஞ்சு மத்திய தேய நீத்து. (உருக)

வெங்கை மால் வரையின் கோடும் விரைத்தசந் தனத்தின் றுண்டுங்
கொங்கையார் மலரு முத்துங் குருமணி களுந்த ரங்க
வங்கையால் வாரி வாரி யருகிரு கரைப்பால் வீசுங்
கங்கைசூழ் கிடந்த தெய்வக் காசிமா நகரம் புக்கார். (உருஉ)

### காசிநகரக்காட்சி.

அவிர்புனற் கங்கை பொங்கி யலையெறி கின்ற தோற்றந்
தவிர்தலின் றடைந்து காசித் தலத்திடை யிறப்போர்க் கெல்லாந்
தவர்சிலை யாகக் கொண்ட தம்பிரா னருளாற் சென்னி
யிவர்தர வேண்டு மென்ப தெண்ணுபு போலு மாதோ. (உருங)

மண்ணகழ்ந் திரைத்துச் செல்லும் வரநதி திரைக்கை யாலே
யெண்ணரும் புலிமால் யானை யெடுத்தகன் கரைமேல் வீசல்
கண்ணக னுங்கு வைகிக் கழிபவ ருடுக்கப் போர்க்க
வுண்ணயந் தீட்டி வைக்குஞ் சூழ்ச்சியே யொக்கு மாலோ. (உருச)

சுரநதி யென்னுங் கங்கைத் துறையெறி நுரையி னீட்ட
மரனரு ளாலங் கெய்தி யாருயிர் கழிப்போர்க் கெல்லாம்
வரனமை தோளிற் சாத்த வெண்டலை மாலை கோத்தே
யுரனுற விடங்க டோறு மமைத்ததை யொக்கு மாலோ. (உருரு)

வரையினின் றிழிந்து செல்லும் வரநதித் திரையின் வீக்கம்
புரையறு தவத்தா லாங்குப் போந்துயிர் கழிப்போர்க் கெல்லாம்
விரையக ஞூளிற் சூட்ட வெய்யகட் செவியின் கூட்டங்
கரையறச் சேர்த்து வைக்கப் புரள்வது கடுக்கு மம்மா. (உருகூ)

கோலங்கொள் கங்கை யாற்றின் குரைபுனற் கயலை வெளவுஞ்
சீலங்கொள் குரண்ட மெல்லாந் திரண்டுடன் பொலியுந் தோற்ற
ஞாலங்கொ ளாங்கு மேவிக் கழிபவர் முடிமே னண்ணுங்
காலங்கொள் வதுகு றித்துக் கவின்றன போலு மாதோ. (௨௫௭)

பொருவருங் கங்கை யாற்றுப் புகழ்ப்பெருந் துறைக ளோறு
மொருவரு மீனங் கூர்ம மொய்த்தன வுறந்த தோற்ற
மருவியங் கிறந்தோர்க்கெல்லாம் வளங்கொள்கை விரல்சே ராழி
திருவியன் மார்பத் தாரஞ் செறித்திடச் சேர்த்தன் மானும். (௨௫௮)

புண்ணியக் கங்கை யாற்றின் பொருவறு கரையின் பாங்க
ரண்ணிய மறையோர் யாரு மாரழல் வளர்க்குந் தோற்ற
நண்ணியங் கிறந்தோர் நெற்றி நடுக்கர நடுவித் தேத்துக்
கண்ணிய செந்தீ யேற்ற வளர்ப்பது கடுக்கு மாலோ. (௨௫௯)

இருகரை யுடைத்துப் பொங்கி யிரைத்தெழு கங்கை யாறு
தருவியல் கானக் கொன்றை சாடுபு கொணருந் தோற்ற
மொருவற வாங்கு மேவி யுடல்கழிப் பவர்தந் தோளின்
மருவணி சூட்டச் சேர்த்து வைத்திடு காட்சி மானும். (௨௬0)

வரைநடந் தனைய காட்சி வயக்கஞ்சால் கங்கை யாற்றின்
றிரைபல முகங்க ளோடும் வளையெடுத் தெறியுஞ் செய்கை
யுரையிறந் தங்கண் மாண்டோ ரொள்ளிய செவியிற் றாக்கும்
புரையறு குழைக ளாக வெண்ணில வீசல் போலும். (௨௬௧)

முன்னிய நாகர் வைப்பு முழுதளா யெழுநீர்க் கங்கை
மன்னிய வங்கு மேவி மாண்டவர் களத்து நஞ்சந்
துன்னிய புகுத்தற் கெண்ணி யுறையிடந் துருவிச் சென்று
மன்னிய விளைவு நோக்கி வருமொரு பரிசு போலும். (௨௬௨)

சொல்லரும் பெருமை சான்ற தூத்திரைக் கங்கை யாற்றி
னெல்லையில் வளங்கண் முற்று மிருவிழி விடுத்து நோக்கி
யல்லல்வெம் பிறவிப் பாச மலைத்திடு நன்னீ ராடி
யெல்லையி லின்ப வெள்ள மெய்தின ரப்பாற் செல்வார். (௨௬௩)

விண்ணவ ரொருங்கு சூழும் விச்சுவ நாதர் மேய
வண்ணலஞ் சிகரக் கோயி லணைந்திரு கண்ணீர் வாரக்
கண்ணரு மன்பு பொங்கக் கைகுவித் திறைஞ்சி வீழ்ந்தார்
பண்ணமு தனைய தீஞ்சொற் பைந்தமிழ் வடிக்க வல்லார். (௨௬௪)

**துண்டிவிநாயகர்பதிகம், காசிக்கலம்பகம்.**

வெருவரு மருள்சா றுண்டி விநாயகப் பெருமான் மீது
பொருவரு விருத்தம் பத்துப் புகழ்ச்சியிற் பாடிப் போற்றி
யிருவரு முணரா விச்சு வேசர்மே லியம்பு வோர்கள்
கருவரு நீ ராகக் கலம்பகம் புனைந்து பாடி. (௨௬௫)

முயிர்க ளெய்த வானந்த வல்லி யோடு
மானந்த மகார்க ளோடு மானந்த வனத்து மேய
வானந்த வடிவார் தம்மை யானந்தச் செய்யுள் பாடி
யானந்தம் பயப்பப் போற்றி யானந்த மெய்து நாளில். (உ௬௬)

இத்தகு தலத்தே நாளு மறம்பல வியற்ற வேண்டி
மத்தகை யறங்க ளாற்றற் கமைதரு மிடமும் வேண்டும்
பைத்தவிந் நகராள் வேந்தைப் பார்க்கவும் வேண்டு மென்னுச்
சித்தம்வைத் திருந்தார் செந்தூர்ச் செல்வர்தந் திருமா ணுக்கர். ()

சொல்லுமிந் நகராள் வேந்தர் துருக்கரா யிருத்த லாலே
யொல்லுமற் றவர்தம் பாடை யொருங்குநாந் தெரிய வேண்டும்
புல்லுமற் றதற்கெஞ் ஞான்றும் பொருந்துபல் வாக்கு நல்க
வல்லும்வெண் கமலச் செல்வி மாண்பினைத் துதிப்பா மென்று. ()

சகலகலாவல்லிமாலை.

புந்தியுண் முடிய வெண்ணிப் பொலியுநா மகளை நோக்கி
முந்திய பிரம ஞவி னமர்ந்தமுற் றிழைம டந்தாய்
நந்திய வெள்ளை மேனி நின்மல நங்கா யென்று
சிந்திய வினையார் மாலை சிறப்புற வொன்று பாட. (உ௬௯)

கலைமகள் கருணை பூத்துக் காட்சிதந் தருளி யங்கு
நிலைபெறு துருக்கர் பாடை நிகழ்மனு மறைமுன் னுய
தலைமைகொள் பலவுஞ் சால வல்லராய்த் தழைபு மாறு
மலைவறு மருள்செய் தாளுண் மகிழ்ச்சியிற் றிளைத்தா ரன்றே.(உ௭0)

அந்நகர் புரக்கும் வேந்தர்க் கமைந்தவா ரியர்பாற் சென்று
பன்னரு மனையார் வேத மாதிய பலவி ஞவி
முன்னரு மவருக் குள்ள சங்கைகண் முழுதுந் தீர்த்தா
ரென்னரு மிறும்பூ தெய்த வனையரு மெய்தி ஞரே. (உ௭௧)

மற்றவர் வள்ள லாரை மகிழ்ந்துட னழைத்துக் கொண்டு
கொற்றவர் முன்பு சென்று குலவிவர் பெருமை தேற்ற
வுற்றவர் தாமுங் கல்வி புண்மைபா திகளோர்ந் தேபற்
றற்றவ ரென்று பட்டாங் கறிந்தனர் சிறப்புச் செய்தார். (உ௭௨)

நயம்படு சிருங்கா ரத்தி னகுபிர சங்கங் கேட்டு
வயம்படு வீர ரெல்லா மயங்குபு சோர்ந்து வீழ்வார்
வியம்படு வெம்போ ராற்று மிகுபிர சங்கங் கேட்டுப்
பயம்படு முதியோ ருங்கண் சிவந்துமே லெழுந்து பார்ப்பார்.(உ௭௩)

காசியில் மடமமைத்தல்.

இன்னண நிகழு நாளி லெண்ணருந் துருக்கர்க் கெல்லா
மன்னவர் திருச்செந் தூர்வாழ் வள்ளலா ரருள்பெற் றூர்பாற்

பன்னரு மகிழ்ச்சி கூர்ந்து பரவுமக் காசி வைப்பின்
மின்னகு மடமொன் ஞற்றிக் கொடுத்தனர் விழைந்து மாதோ. ()

எண்ணற வுலகத் துள்ளோர் யாவரும் புக்க போதுங்
கண்ணக லறையொன் றேற்று வெளியிடங் காட்டு மாறு
பண்ணிய மடத்து மேவிப் பாந்தநீர்க் கங்கை யாடி
வண்ணவான் பூசை யாற்றி மகிழ்ந்தினி திருப்பா ராஞர். (உ௭௫)

அரசராற் பொருத்தப் பட்ட வளவறு நிதியங் கொண்டு
பரவுதம் மடத்து வந்தார் பசித்தழ லவியு மாறு
விரவறு சுவைநான் குண்டி விழைதர வூட்டி யூட்டிப்
புரவுற மற்று முள்ள வறமெலாம் போற்றி வாழ்நாள். (உ௭௬)

கேதாரேசர்கோயிற்றிருப்பணி.

சடைமுடிப் பெருமா ஞர்கே தாரநா யகஞ ரன்ஞர்
மிடைதரு கனவில் வந்து வெய்யவெங் காடு சூழ்ந்து
புடைநெருங் கிடம றைந்தேம் புரிந்துநீ வெளிசெய் யென்றே
யடைவுற வருளிச் செய்தா ரறிந்தன ரறிவின் மேலார். (உ௭௭)

ஆயிடைப் பலரோ டெய்தி யடர்பெருங் காடு போக்கித்
தாயினு மினிய ஞன தம்பிரான் றன்னைக் கண்டு
மீயுயர் மகிழ்ச்சி பொங்க விருப்பொடு பணிந்தெ ழுந்து
பாயுயர் செம்பொற் கோயில் பகருஞ் சிறப்பிற் செய்வார். (உ௭அ)

மன்னிய கோயி லாக்கி மறையவர் முதலோர் சூழ
வின்னிய முகிலி னேங்க வெண்ணிய காலந் தோறும்
பன்னிய பூசை யோங்கப் பண்புறச் செய்வித் தேத்தி
நன்னிய மத்து நீங்கார் நாடியங் கமரா நின்ருர். (உ௭௯)

துருக்கக்குருக்கண்மார்களின் அழுக்காறு.

இன்னரிவ் வாறு மேவ வேற்றமிக் கவ்வூ ராஞு
மன்னர்தம் பிரிய மேன்மேல் வளர்ந்தெழு வண்ணங் காணூஉ
வன்னர்தங் குருவா யுள்ளார் மடமையா லளவ ளாவு
முன்னர்நட் பொழிந்து தீரா மூண்டெழு மழுக்கா றுற்ருர். (உஅ0)

உறுமழுக் காறென் ருேது மொருபெரும் பாவி யந்தோ
செறுதலி றிருவஞ் செற்றுத் தீயுழி யுய்க்கு மென்று
மறுவறு சான்ருேர் சொற்ற வார்த்தையு முணரா ராகிக்
கறுவிறம் மரசர் தம்பாற் சென்றிது கழற லுற்ருர். (உஅ௧)

மறந்தரு பகைவ ரெல்லா மலரடி வணங்கிப் போற்ற
வறந்தரு செங்கோ லோச்சு மண்ணலே தென்பா னின்று
முறந்தவிந் நகரம் புக்கிங் குன்னருள் பெற்ருர் றூலிற்
சிறந்தவ ரெனினுங் கொண்ட தெய்வமாத் திரம்பொய் யென்ருர். ()

குருக்களா ருரைத்த வார்த்தை கொற்றவர் செவியிற் கேளா
வுருக்கிள ரடிகே ணீங்க ளுரைத்தது தகுமோ வென்னத்
திருக்கியா முரைத்தே மல்லேஞ் சிறந்தநும் மவையிற் கூவிப்
பொருக்கெனச் சோதித் தப்பாற் புகலுவி ரெம்மை யென்றார். ()

என்றது மியல்பே யங்க ணெய்தின ராக வெங்கண்
மன்றலங் கடப்பந் தண்டார் வள்ளலார் திருமா ணாக்கர்
நன்றென வரசர் தாமு நகைமுக மலர்ந்து முன்போற்
கன்றலி லிருக்கை நல்கிச் செயத்தகு கடனுஞ் செய்து. (௨அச)

எங்கடங் குருக்க ளாவா ரியம்புதல் கேண்மி னென்ன
வங்கவர் நீங்கள் கூறும் வார்த்தையை யறைமி னென்ன
வுங்கடந் தெய்வம் பொய்யே யுண்மையே லகங்கை தம்முள்
வெங்கன லிரும்பை யேந்திக் காட்டுமின் விளங்க வென்றார். (௨அரு)

அவ்விய மனத்த ராகிக் குருக்களா ரறைந்த வார்த்தை
செவ்விய மனத்தார் கேட்டுச் செய்பவாய் முறுவல் பூத்து
நவ்வியங் கரத்து முக்க ணயனு ருண்மை யிந்த
வெவ்விய மனத்தார் தேற விளக்குது மெனவுட் கொண்டு. (௨அசு)

சபதஞ்செய்து மழு ஏந்தல்.

வெருவுற விருப்புக் கட்டி வெந்தழற் புகுத்திக் காய்ச்சி
வருவியிங் கென்ன மன்னர் வயங்குகொல் லுலையி லிட்டுப்
பொருவறுந் திருத்தி யூதி யிருந்தைபோ கட்டுக் காய்ந்த
வுருவமற் றதனை யங்கு வருவித்தா ருலக மஞ்ச. (௨அஎ)

எதிர்வரக் கண்ட வேந்த ரிருவிழி வெதுப்ப முற்றார்
முதிர்சினக் குருக்க ளென்பார் முகம்பொதி யுரோம முற்று
மதிர்தரத் திக்கு மென்றே யஞ்சின ரகன்றி ருந்தார்
சதிரறி யாமை தீர்த்தார் சாற்றுவா ரெழுந்து நின்றே. (௨அஅ)

புரையக லுயர்வு சால்வே தாகம புராணங் கூறு
முரைபிர மாண மென்னி லுவமையில் சைவ மொன்றே
கரைதரு சமய மென்னிற் கருதுமச் சமயங் கூறு
நரைவிடை யுயர்த்த தேவே நாடரும் பிரம மென்னின். (௨அகூ)

நன்றிகொள் விபூதி யக்க நகுமணி யெழுத்தோ ரைந்துந்
துன்றிய வன்பிற் கோடல் சாதன மென்னிற் றேலா
வென்றிசெய் சரியை யாதி நான்குமே விளங்கா றென்னி
னென்றியொன் றூம லின்பத் துறுவதே முத்தி யென்னின். (௨கூ௦)

எண்ணிலா வுயிரீ டேற வெடுத்தருள் வேட மெங்க
ளண்ணலங் கைலை யாளி யடியவர் வேட மென்னிற்

கண்ணாரு மணையார் பாதம் வழிபடு கடமை பூண்டோர்
மண்ணாரும் பிறவிப் பௌவம் வறப்பது மெய்ம்மை யென்னின். ()

பதியெனுஞ் சிவனுக் கென்றும் பங்கய னெடுமால் வேந்தன்
மதிகதிர் வானோர் யாரும் வழிவழி யடிமை யென்னிற்
பொதிதரு கற்றோ யாடை புனைந்தயான் புனைந்து கூறும்
விதிவழு வாது நிற்கு மேதக வுடையே னென்னின். (உகூஉ)

யானுயர் திருச்செந் தூர்வா ழிறைவன்மா ணாக்க னென்னிற்
றானுயர் தரும நாளுந் தழைத்திட லுண்மை யென்னி
ஞானுயர் கொடிப்பி ரானு ராலயப் பொருளை நாளு
மீனுயர் கடல்வி டுத்த விடமெனக் குறித்தே னென்னின். (உகூ௩)

இதுசுடா திருக்க வென்றே யாவரு மறியக் கூறிச்
சதுமுக னெடுமா றேறுத் தனிப்பர சிவனே மெய்யென்
றதுகர மலரி லேந்தி யவையுளார் யாருங் காணக்
குதுகுதுப் பெய்தி நின்றார் குவலய முய்ய வந்தார். (உகூ௪)

ஆதனத் திருந்த வேந்த ரிழிந்தக நடுந டுங்கிக்
காதலிற் போற்றி யென்ன காரியஞ் செய்தோ மென்றார்
போதமிக் குடையோ ராகிப் புரிந்தவை யிருந்தார் யாரு
மேதகு சிவனே தெய்வம் வேறிலை யென்று தேர்ந்தார். (உகூ௫)

நீடிய பொறாமை யாலே நிறைபெருங் கலகஞ் செய்து
கூடிய குருக்கள் சென்னி குனிந்துமார் பழுந்தா நிற்கு
நாடிய முகரோ மத்தை நகங்களிற் கீறிக் கொண்டு
வாடிய மனத்த ராகி மாண்பொழிந் திருந்தா ரன்றே. (உகூசு)

எரிதழல் விழுங்கப் பட்ட விருப்பைக்கி ழிடுக வென்று
புரிமதி யரசர் வேண்டப் பூமியி லதைப்போ கட்டு
விரிதர வனையார் நல்கும் விருதுமுற் பலவும் பெற்றுப்
பரிதியின் விளக்க மிக்கார் பரவுதம் மடத்திற் புக்கார். (உகூஎ)

முன்னையிற் செல்வ நாற்றி முனிவற வரசர் நல்க
வென்னையிக் குருக்கள் செய்த சகாயமென் றுவகை யெய்தி
நன்னயத் தறங்கண் மேன்மே லுனிலாப் பரவ வாற்றி
யன்னையிற் பொலியு மெங்க ளையர்தா மிருந்தா ரன்றே. (உகூஅ)

முகாங்கிமடம்.

மாதவத் துயர்ந்தா ராய வாகீச முனியை நோக்கிக்
காதல்செய் விபூதிக் கேற்ற கண்மணி விளையும் பூமி
மேதகக் கொளினன் றென்ன வவர்முக ரங்கி மேவி
யோதுமப் பூமி கைக்கொண் டுயர்மட மொன்று செய்தார். (உகூகூ)

## பரம்பரையோர்.

அற்புதம் பயப்ப விவ்வா றமர்பவர் தமக்குப் பின்பு
சொற்பயி லறம்பா லிக்குந் தூயவர் யாவ ரென்று
கற்பனை கழன்ற தம்பாற் பணிபுரி காட்சி யாருட்
பொற்பமை சொக்க நாத முனிவரைப் புகழ்ந்து கொண்டே. (௯௦௦)

அன்னவர் தமக்குத் தீக்கை யாதிய வமையச் செய்தே
யுன்னருங் குமரப் புத்தே ளுண்மையுந் தெளியத் தேற்றிப்
பன்னருந் தம்போற் செய்து பாலிப்பா யறங்க ளென்று
நன்னலம் பயக்குஞ் சொக்க நாதனைக் கயற்க ணூனை. (௯௦௧)

மேதகு திருச்செந் தூர்வாழ் வேலுடைக் கடவு ளானை
யாதரம் பயப்ப நல்கி யமைதரப் பூசி யென்று
காதல்செ யிடபத் திங்கள் கருதிய கண்ண பக்கந்
தீதறப் பொலிந்து தோன்றுந் திரிதியைத் திதியின் மாதோ. (௯௦௨)

அன்றொரு திருச்செந் தூரி லணிகெழு குமா ரூகி
நன்றுவந் தருளிச் செய்த நாதனைத் தியானஞ் செய்தே
தொன்றுறு கலப்பிற் செம்பொற் றுணையடிக் கமல நீழ
லொன்றியொன் றாது மேவி யுலப்பிலா னந்த முற்றார். (௯௦௩)

பின்னர்வண் சொக்க நாதர் பிறங்கறம் பெருகச் செய்து
பன்னெடு நாள்கள் வைகிப் பகரரு ளாச லப்பேர்
மன்னிய வடுக டம்பால் வயங்குதம் முரிமை நல்கி
நன்னர்செ யிடப மாத நயந்தரு கண்ண பக்கம். (௯௦௪)

துவாதசித் திதியிற் செந்தூர்ச் சுப்பிர மணியர் பாதத்
தவாவறுத் தடைந்த தங்க ளாரியன் பாதத் துற்றார்
தவாவரு ளாச லப்பே ரடிகளுந் தருமம் யாவு
முவாவுற நடத்திப் பன்னா ளொழுக்கத்து வைகிப் பின்னர். (௯௦௫)

அம்பல வாண தேவர்க் கமைந்ததம் முரிமை நல்கி
நம்புறு மகர மாத நயந்தசுக் கிலபக் கத்திற்
பம்பிய திதியன் றென்கிற் றங்குரு பாதஞ் சேர்ந்தா
ரிம்பரம் பலவா ணப்பே ரிறைவரும் பன்னாள் வைகி. (௯௦௬)

அறத்தினை விருத்தி செய்தே யருட்சடை யப்ப தேவர்க்
குறத்தம தூரிமை நல்கி யொளிகெழு கும்ப மாத
நிறத்தசுக் கிலபக் கத்தி னிகழ்திர யோத சிக்கண்
விறற்பெருங் குரவன் பாத மேவின ருவப்பு மேவ. (௯௦௭)

சடையப்ப தேவ ருருந் தனைமிசைப் பன்னாள் வைகி
யடையப்பே ரறங்க ளெல்லா மமைதர விருத்தி செய்து

நடையுற்ற நலஞ்சா றில்லை நாயக மூர்த்தி யார்பான்
மிடையுற்ற வுரிமை நல்கி விளக்கஞ்சான் மேட மாதம். (௯௦அ)

பூரணைத் திதியி லாசான் பொன்னடிக் கமலஞ் சார்ந்தார்
நாரணை மனத்துத் தில்லை நாயக வடிக ளாரும்
பாரணை யறங்க ளோங்கப் பண்ணுபு காசி வைப்பிற்
சீரணை யொருவர் தம்மைக் காரியஞ் செய்ய வைத்து. (௯௦௯)

திருப்பனந்தாட்காசிமடம்.

திணைமலி பொன்னி நாட்டுத் திருப்பனந் தாளின் மேவி
புணைமலி மடமொன் றுண்டு பண்ணியவ் வூரின் மேய
வணைமலி சிலைகை யேந்தும் வன்சடை யப்பர் கோயிற்
புணைமணி பணிகள் பல்ல பொற்புற வியற்றிப் பின்னர். (௯௧௦)

நந்[illegible] மடத்து மேய தம்முடை யடியார்க் கெல்லா
நந்திய மகிழ்வி னூட்ட நன்னிலம் பலவுந் தேடி
முந்திய வாசா னும முனிவருக் குரிமை நல்கி
யுந்திய மீன மாத முற்றிடு கண்ண பக்கம். (௯௧௧)

நற்றிர யோத சிக்க ணலமலி யாசான் பாதத்
துற்றினி தமர்ந்தார் பின்ன ரொருமுதற் குரவ னும்
பெற்றவர் பன்னுள் வைகிப் பெருகிய வறங்கண் முற்றுங்
கொற்றவர் மகிழ்ச்சி மேன்மேற் கொளக்குறை யறந டாத்தி. (௯௧௨)

சிதம்பர நாத தேவர் கொளத்திரு வுரிமை நல்கிக்
கதம்படு விருச்சி கப்பேர் கலந்திடு திங்க டன்னி
லிதம்படு கண்ண பக்கத் தேற்றசத் தமியி லாசான்
பதம்படு நீழ லுற்றுப் பாவுபே ரின்ப முற்றார். (௯௧௩)

அச்சிதம் பரநா தப்பே ரடிகளார் பன்னுள் வைகி
நச்சிய காசி யாதி யறமெலா நயக்க வோம்பி
மெச்சிய சடையப் பர்க்கு விரும்புதம் முரிமை நல்கி
யுச்சமார் கும்ப மாதத் துற்றசுக் கிலபக் கத்தில். (௯௧௪)

மருவிய தசமி தன்னிற் குரவர்த மலர்த்தா ளுற்றார்
தருவினுஞ் சிறந்த வண்கைச் சடையப்ப வடிக ளாரும்
பொருவில்பல் லறமும் பன்னுள் பொற்பொடு பொலிய வோம்பி
யருமையா முரிமை தன்னைக் கணபதி யடிகட் கீந்து. (௯௧௫)

மகரமா மதியிற் கண்ண பக்கத்து நவமி வாய்த்த
நிகரறு திதியி லாசா னின்மல பாத முற்று
ரகமலர்ந் தறங்க ளோம்பிக் கணபதி யடிக ளாரு
மிகலறப் பன்னுள் வைகி யிசைபல வீட்டிப் பின்னர். (௯௧௬)

முழுதுணர் ராம லிங்க மூர்த்திகட் குரிமை நல்கிப்
பழுதக விடப மாதம் பரவிய கன்ன பக்கந்
தொழுதகு சிறப்பு வாய்ந்த துவாதசித் திதியிற் றிங்க
ளெழுதரும் புகழ்ப்பே ராசா னிணையடிக் கமல முற்றார். (௬௧௭)

முன்னிய விராம லிங்க மூர்த்திக டாமும் பன்னாண்
மன்னிய வறங்க ளோம்பி வளமலி யுரிமை யாரும்
பன்னிய சொக்க லிங்க வடிகட்குப் பரவ நல்கித்
துன்னிய மேட மாதஞ் சுக்கில பக்கந் தன்னில். (௬௧௮)

வருசதுர்த் தசியி லாசான் மரைமலர்ப் பாதஞ் சேர்ந்தார்
பெருகருட் சொக்க லிங்கப் பெயர்பெறு மூர்த்தி யாரு
மொருவறப் பன்னாள் வைகி யுற்றபல் லறமு மோம்பிக்
கருதரு முரிமை தன்னைக் கணபதி யடிகட் கீந்து. (௬௧௯)

துகளறு கடக மாதஞ் சுக்கில பக்கந் தன்னி
லிகழ்விலே காத சிக்க ணெழிற்குரு பாதஞ் சேர்ந்தார்
புகழ்மிகு கணப திப்பேர் பூண்டபே ரடிக ளாரு
மகமகிழ் பன்னாள் வைகி யறங்கள்பற் பலவு மோம்பி. (௬௨௦)

முழுப்புக ழிராம லிங்க மூர்த்தியார்க் குரிமை நல்கி
விழுப்பமார் துலாமா தத்தின் மேயசுக் கிலபக் கத்தி
லிழுக்கிலே காத சிக்க ணேற்றமார் ஞான மோன
வொழுக்கமார் குரவன் பாத முற்றினி திருந்தா ரன்றே. (௬௨௧)

பூரிய ரென்றுஞ் சாராப் புகழ்மிகு செந்தூர் மேய
கூரிய வடிவேற் செங்கைக் குமரவே ளருளப் பெற்ற
வாரிய ராதி யாகக் கணபதி யடிக ளீறாச்
சீரிய வொருபான் மூவர் திறமிவை தெரித்தா மன்றே. (௬௨௨)

இந்நூலை ஆக்குவித்தவர் சிறப்பு.

இவர்பெரும் புகழை யானோ வெடுத்துரை செய்ய வல்லேன்
குவலயத் தறிஞர் யாருங் கூறினு முடியா தாகுந்
தவலறச் சொல்லி முற்றத் திறத்தினுந் தாழ்வொன் றில்லை
யவமகல் சேட னாலு மறைந்திட முற்றா தென்னின். (௬௨௩)

சதுமறை முடிவுந் தேறத் தத்துவ முணர்ந்து வீர்கா
ளிதுவனா யுரைத்த தோர்ந்தீ ரினிமகிழ் வாய்மை மேன்மை
பொதுவக மொழுக்க மாதி யாவுமோ ருருவாய்ப் போந்த
முதுமதி யிராம லிங்க மூர்த்தியார் சீர்த்தி சொல்வாம். (௬௨௪)

ஆரரு ளுமையாள் பாக னலைப் பொருள்க டம்மு
ளோரணு வேனும் வெளவு மறக்கடை யோரைக் காணிற்

கார்கெழு நஞ்ச மென்றுங் கறுத்தெழு கூற்ற மென்றும்
போர்கெழு வடவை யென்றும் பொருக்கென வஞ்சு நீரார். (௯௨௫)

காணுதற் கெளியா ராயுங் கடுமொழி யடையா ராயும்,
பேணுதற் குரிய வான வொழுக்கத்துட் பிறழா ராயும்
வாணுதற் கொடியோர் பாகர் பணிவயக் கிடுவா ராயும்
பூணுதற் கமைந்த தென்றும் பொறைபெனப் பொலியு நீரார். (௯௨௬)

திருவளர் திருவாப் பாடிச் சிவபிரா னமருங் கோயி
லுருவளர் தரப்பு தூக்கி யுறுவிழா வாதி யோம்பிக்
குருவளர் மணிப்பூ ணுடை குடைகொடி யாதி யாவுந்
தருவளர் கொடையு நாணக் கொடுத்துளந் தழைக்கு நீரார். (௯௨௭)

தம்முதற் குரவற் கன்று தவாவருட் குரவ னுய
மும்முதற் கடவு ளார்க்கு முதலவன் றிருச்செந் தூரில்
விம்முறப் பூசை யாதி விருப்பொடு நடக்கு மாறு
செம்முதற் பொருணி ரப்பிக் கட்டளை செய்து வைத்தார். (௯௨௮)

தில்லைமா நகரந் தெய்வச் சேய்ஞலூர் திருப்ப னந்தா
டொல்லைமா வினைக ணீக்கிச் சுடர்திரி லோக்கி நாளும்
வில்லைவீ சுயர்பொன் மாட மிளிர்திரு வால வாய்மு
னெல்லையி றலங்க டோறுங் கட்டளை யியங்கச் செய்தார். (௯௨௯)

சீலமார் பெருமான் மேய சிலசில தலங்க டம்மி
ஞாலமார் கிலமின் றென்னப் பணிபல நகர டாத்திக்
காலமார் பூசை யாதிக் கட்டளை நியம மேவக்
கோலமார்ந் திலங்கு செம்பொற் கும்பாபி டேகஞ் செய்தார். (௯௩௦)

தருப்பல செறியுங் கோயிற் றடகை யீச்சு ரஞ்சார்
திருப்பனந் தாளின் முன்னுந் திருமடம் புதிய தாகப்
பொருப்புகள் பிளந்தெ டுத்துக் கொடுவந்து பொருள்கள் வீசித்
திருப்புகழ் மேன்மே லோங்கச் செய்தனர் வலிய தாயே. (௯௩௧)

அவனியிற் றங்கி ராம மாகிய பலவற் றுள்ளு
முவமையில் கருங்கல் செங்க லெனப்படு முறைகள் கொண்டே
தவலறும் பூசை யாற்றத் தகுமிட மட்டி னுளு
மிவர்புனற் கூவ லோடு மடம்பல வியற்றி னுரே. (௯௩௨)

வடமொழி பயின்று ளார்க்குந் தென்மொழி வளங்கற் றார்க்கு
மிடவிய வில்லம் பற்பல் பொலிவொடு மியற்றி நல்கிப்
படர்சுவைப் பாலூ ணுடை முதற்பல வளமு நல்கி
மடனறக் காணுந் தோறும் வரிசையி னுவப்புச் செய்வார். (௯௩௩)

இன்றுப நயனஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுகல் யாணஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுசோ பனமி யற்ற வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுசீ மந்தஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கும். (௩௩௪)

இன்றுபுத் திரன்பி றந்தா னென்றுவந் தியம்பு வார்க்கு
மின்றுநாஞ் சிராத்தஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுசெல் கின்றேந் தீர்த்த யாத்திரைக் கெனச்சொல் வார்க்கு
மின்றுநம் மிடத்தென் னேர்பொன் னெண்ணில வுதவு நீரார். ()

தென்மொழி வல்ல ராய சீரியர்க் குறுபொன் வீசிப்
பன்மொழி களினு முள்ள பாரம்பரன் சரித மெல்லா
நன்மொழிச் செய்யு ளாகச் செய்துநல் குகவென் றேர்தி
மென்மொழி முகமன் கூறி யாக்குவர் மேன்மே லம்மா. (௩௩௬)

ஆகம புராண மெல்லாம் பழையன வாகக் காணிற்
போகுயர் பனையிற் கொண்ட செழுமடற் புத்த கத்தி
லோகையி னெழுது வோரைக் கொண்டுற வெழுது வித்துச்
சேகறு கருமை யூட்டிப் பாசமுஞ் செறித்துச் சேர்ப்பார். (௩௩௭

காசியே முதலி ராமேச் சுரங்களை யிறுதி யாக
மாசிலாத் தரும நாளும் வளர்த்திடு மதனுக் கேற்பப்
பேசிய பொதுப்பே ரானும் பெருஞ்சிறப் புப்பே ரானும்
வீசினீ ருலகந் தேற விளக்குவார் விளக்க மிக்கார். (௩௩௮)

பொருந்திய திருப்ப னந்தாட் பொலிதிரு மடத்தி னுள்ளாத்
திருந்திய வாதி யாசான் றிருவுருப் பதிட்டை செய்து
பரிந்தபி டேகந் தூய நிவேதனம் பகரு மற்றை
விரிந்தபல் லுபசா ரங்க ணடத்திடு மேன்மை மிக்கார். (௩௩௯)

விடலரும் வேதி கட்டி மிக்கெருப் பெய்து நாளுங்
கெடலருங் கொடிவி ருக்க மாதிய கெழும வாக்கி
யுடலருங் கனையுங் கட்டே யொண்புனல் வழியப் பாய்த்திப்
படலரு நந்த னங்கள் பலபணி விடைக்காச் செய்தார். (௩௪0)

சலிப்பற விடத்தை யோம்பித் தமக்குப்பின் றங்கா நிற்கு
மொலிப்புகழ்க் கருவி யாய துண்மையி னுணர்ந்து தேடி
வலித்ததென் மொழியி னோடு வடமொழி யுறக்கற் பித்துக்
கலித்தநல் லொழுக்கம் யாவுங் கற்பித்துச் சிறப்புச் செய்வார். (௩௪௧)

அடிமணல் பரப்பி மண்ணு லைமைகல மதன்மேல் வைத்துக்
கடிபடு நறும்பூ விட்டுக் கமழ்செயச் சுத்த நீரும்
படியினீர் மோரு மற்றும் பரப்பிய தண்ணீர்ப் பந்தர்
குடிகொள மார்க்கந் தோறுங் கோடைவைத் துவக்கு நீரார். (௩௪௨)

கருங்கடல் குடிக்குங் கொண்மூக் கற்பகங் காம தேனு
விருங்குணப் பதுமஞ் சங்க மெனப்பொலி நிதியி ரண்டு
சுருங்குத லில்லா மேன்மை தொகுசிந்தா மணியிவ் வெல்லா [யார்.
மொருங்குசேர்ந் துருக்கொண் டென்னப் பொலிகொடை யுடைச்செங் கை

அகலிடத் தனைத்துஞ் சங்கை யறவறி பவர்தா மேனு
மிகலருந் தமது செல்வ மிவ்வள வெனத்தே ராமை
புகலரு முன்பெற் றோர்பின் புகினுமங் கறித ராமை
பகலரு மிவ்வி ரண்டு நீங்குருப் பண்பு மிக்கார். (௩௪௪)

வேறு.

பூமேவு திருச்செந்தூ ராறுமுகப் பெருமானார் பொற்றாள் வாழ்க
தேமேவு மவரருள்சார் குமரகுரு பரமுனிவர் சீர்த்தி வாழ்க
மாமேவு மவர்மரபிற் பதின்மூவர் புகழுமப்பால் வந்தோ ராகித்
தாமேவு மிராமலிங்க வடிகளும்பின் வருவோருந் தழைத்து வாழ்க.

குமரகுருபரஸ்வாமிகள் சரித்திரம் முற்றிற்று.

---

### அறுபத்துமூவர்.

மனமணுத் துணையே யென்று நியாயநூல் வகுக்கு மேனு
மனகமெய்த் தவத்தா ராய வறுபத்து மூவ ராவார்
கனசரித் திரம னைத்துங் கவர்ந்துதற் குள்ள டக்கும்
வினவுறீ ரெவ்வா றென்று விடைவித்தி னுமேல போலும். (கக)

### பஞ்சாக்கரதேசிகர்.

விழியறி வுடையார்க் காய மெய்ஞ்ஞானப் பெருங்கோ முத்திச்
செழியரு ணமச்சி வாயன் றிருப்பெரும் பெயர்ந வின்று
மொழிவிலப் பெயர்பி றர்க்கு முரைத்துமந் தோவன் னுனை
வழிபட நாணுஞ் சில்லோர் மடமைக்கோ ரொழிபு முண்டோ. (உ0)

### அம்பலவாணதேசிகர்.

வரியளி முரனுஞ் சோலை யாவடு துறைக்கண் வைகு
மரியமெய்ஞ் ஞான மூர்த்தி யம்பல வாண தேவன்
பிரியமிக் கெனையாண் டென்பாற் பெறுவது விடாது பெற்றெற்
குரியதை யுலோபஞ் செய்யா துதவினு னுய்ந்து ளேனே. (உக)

### மற்றச்சிவநேசர்கள்.

பெரியநா யகித்தா யோடும் பெருந்திரு வான்கு ளத்து
மரியநா யகர்பொற் கோயில் வழிபடு வார்கள் யாரும்
புரியுமத் தளியி னீங்கார் நீங்குதல் புணரு மேனும்
விரியுமென் னெஞ்சி னீங்கார் மேவிவீற் றிருப்பர் மாதோ. (உஉ)

---

## ஆக்குவித்தோர்.

மறைமுடி யமருந் தெய்வ மான்மிய நீறு பூசி
மறைபல விடத்து மோத வயங்குகண் மணிகள் பூண்டு
மறைநடுப் பொலியு மைந்து வன்னமா மனுக்க ணித்து
மறைமுறை யிட்டுந் தேரு மாதேவன் கழல்பூ சிப்பார். (க)

திருவான் குளப்பொற் கோயிற் றிருப்பணி யான வெல்லாம்
பொருவரு மன்பி னுலே பொதுத்திறங் கடிந்து செய்வார்
வெருவரு குபேர வாழ்க்கை மேலெனு வாழ்க்கை யுற்றூர்
பெருவள வல்ல நாட்டிற் பெருங்குடி வணிக ராவார். (உ)

அரியயன் முதலோர் போற்று மான்குளத் தலபு ராணம்
பிரியமிக் கமையு மாறு வடமொழி பெயர்த்தெ டுத்துத்
தெரியுநற் றமிழி னுலே செப்பிட வேண்டு மென்று
விரியுமெய்ப் பரிவிற் கேட்க விழைந்தியான் பாட லுற்றேன். (ந)

---

## அவையடக்கம்.

சுவைபடு கருப்பங் காட்டிற் றோன்றவீற் றிருந்து ளோனச்
சுவைபடா வேப்பங் காட்டுந் தோன்றவீற் றிருத்த லாலே
நவைபடாப் பெரியோர் சொற்ற நயக்குமின் பாட லோடு
நவைபடு மடியேன் சொற்ற பாடலு நயந்து கொள்வான். (க)

விட்புனன் முடிமேற் கொண்டு மேவினோர் குடங்கர் கொண்டு
மட்புனன் முகந்தே யாட்டி வழுத்திட வுவப்பர் மேன்மேற்
கட்புனல் பொழிந்து நால்வர் கரைந்தபா வேற்றூர் கண்ணி
லெட்புன லுந்தோற் றுவென் பாட்டுங்கேட் டினிது வப்பார். (உ)

இருவருங் காண வொண்ணு ரீரிரு மறைக்கு மெட்டார்
திருவரன் குளத்து வாழ்மா தேவனு ரெனவெ ரிந்தும்
பொருவரு மவரைப் பாடல் புரிகுவ னன்பர் தம்பா
லருவருப் பிலாா வெண்மை யாதல்கை கொடுக்கு மென்றே. (௩)

## சிறப்புப்பாயிரம்.

சீர்வருஞ் சிறப்பான் மிக்க திருவரன் குளப்பு ராண
மேர்வருந் தமிழாற் பாடி யினிதரங் கேற்றினுே
றோர்வருங் கலையுந் தேர்ந்தோன் றிரிசிரா மலையில் வாழ்வோன்
சோர்வருங் குணமீ னுட்சி சுந்தர நாவ லோனே.

# திருநாட்டுப்படலம்.



இறைவ னுர்திரு வரன்குளப் பெருந்தல மெழுவாய்
நிறைத லம்பல கொடுநிலா வல்லநா டாதி
யறைத ரும்பல நாடுந்தன் னகங்கொடு பொலிந்து
முறைபி றழ்ந்திடா வளவர்நாட் டணிசில மொழிவாம். (க)

சைய மால்வரைத் தாய்மனை நின்றெழூஉச் சலதி
யைய நாயகன் மனைபுக வினைதரு பொன்னி
வைய மாமகண் முகமெனும் வளவர்கோ னுடு
பைய நாடொறுந் தங்கிச்செலீஇ ருவமாம் படித்தே. (உ)

தாயி லாகிய சையமால் வரைமிசைத் தங்கு
மாயி லெண்ணிலா வயிரஞ்செம் மணிமுத லனைத்துந்
தோயில் சேர்தரக் கொண்டுபோய்த் தொகுத்தலா னன்றே
பாயி லாழியை யாதனு கரமெனப் பகர்வார். (௩)

தங்கு நீடுநல் லூழுடை யார்புடைச் சார்வா
லெங்குமுள்ளவ ரீண்டிநட் பாகுத லேய்ப்பக்
கொங்கு நாட்டொரு குலவரை யாம்பிரத் தடியிற்
பொங்கு நீத்தமோ டெண்ணிலா றளாவுவ பொன்னி. (௪)

கலியொ டும்பெரும் போர்செயக் கலித்தெழு பொன்னி
மலிது ரோணம்வேய்ந் தடைந்தென நுரையொடும் வருமால்
பொலியு மாம்பிரத் தடியெழு குடிஞையும் பொற்ப
வொலிகு லாமதற் குடன்பட்டாற் போற்சிவந் தூறுமால். (௫)

பொன்னி மாநதிக் கரையிரு மருங்கினும் பொலிய
மின்னி யாகசா லைகள்பல மிடைகுவ வாங்கண்
வன்னி மேலெழு தூபம்வா னளாய்ச்சுரர் வைய
முன்னி மேவுற மனுச்செவி புகாமுன முய்க்கும். (௬)

மாட மேனலார் குழற்கிடு விரைப்புகை வாசங்
கூட வானயாற் றுடார மங்கையர் கூந்த
லூட ளாய்முரு கேற்றலி னறுவிரை யுற்று
நீட வோர்ந்தவ ரியன்மண மென்பது நிசமே. (௭)

முதிரு மாக்கனி பலபடு விடபமேன் முழங்கி
யதிரும் வானரம் பாய்தர வாங்குதிர் கனியா
லுதிரு நெற்பல வேலைநாட் டறுத்தடித் துறச்செய்
பிதிரு றுதநெற் பொலியெனப் பிறங்குவ நாளும். (௮)

முனிவர் பற்பல ரடைந்துகா விரிப்புனன் முழுகிக்
கனிவ ரும்பவெண் ணீறுருங் கணிந்திருள் கடிந்து
பனித புங்கதி ரெதிர்பரப் பியசடைத் திவலை
யினிய செந்துகி ரித்தில முகுத்தென வியையும். (௯)

தழைசெ றிந்தபைம் புன்னைக ணடுவெழூஉத் தழைதீர்ந்
துழைசெ றிந்திடப் பலமலர்ந் தோங்கிய முருக்கு
மழைபொ ருங்குழற் றிருமகண் மஞ்ஞளூ மழைமேல்
விழைய வெம்பிரா னிவர்ந்தவோர் காட்சியே விழையும். (௧௦)

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

## திருவாவடுதுறை ஆதீனத்து

# ஸ்ரீ சிவஞானயோகிகள் சரித்திரம்.



## காப்பு.

### விநாயகக்கடவுள்.

சீர்பூத்த தாய்முலைப்பால் பருகுத்துணுங்கான் மூன்றுறுப்பாற்
சேயா யுள்ளா, ஞர்பூத்த மோத்தல்வரு டுதல்கவர்தல் செய்தருந்தி
நான்பி னென்ன, வேர்பூத்த வோருறுப்பா லத்தனையுஞ் செய்தருந்தி
யான்முன் னென்றே, பார்பூத்த வருள்கொழிக்கும் யானைமுகப்
பெருமானைப் பரவி வாழ்வாம். (க)

### சபாபதி.

பூமேவு முத்தொழிலாற் றுதலின்வலி யதுமறைப்பின் பொலிவை யா
ஞமேவு மதற்குவலப் பதமமையப் படிந்தாலு நாமு நோக்க [ற்ற
லாமேவு முறையென்றே யருள்பதங்குஞ் சிதமாயே யதனை நோக்க
வோமேவு கனகசபை நடநவிலும் பெருவாழ்வை யுன்னி வாழ்வாம்.()

### சிவகாமசுந்தரியம்மை.

சிகாவனை யுதயவனா சிற்சபைபொற் றேர்கனகச்சிலையோன் வெய்யோ
பகாவருஞ் சடைகிரண மனையகதி ரவற்காட்டும் பார்வை யேபோ [ன்
னகாமக ரந்தகர்க்கு மினையகதி ரவற்காட்டு நயன மாகி
யகாமுதற் குணமன்று ணின்றருளு மணிவிளக்கை யடுத்து வாழ்வாம்.

### தக்ஷிணாமூர்த்தி.

வேதமது முதலென்றும் பிரமனே முதலென்றும் வேலை மேற்றுஞ்
சோதமது முதலென்றுந் தம்மையே முதலென்று முரைப்பார் தத்தம்
போதமது தடுமாற வவ்வவர்தஞ் சென்னிமிசைப் புண்ட ரீக [வாம்.
பாதமது மலர்சூட்டி யாண்டருளுங் குரவர்பொற்றாள் பணிந்து வாழ்

### விநாயகக்கடவுள்.

ஒருகுறளுக் கன்னமிடு தடாதகையுண் ணினாண வுலக மோம்
புந், திருகுதவிர் சுந்தரபாண் டியனுமனை யவனுகத் தீரா தோங்கும்,
பெருகுவளச் சனகனிடு பதத்தவியாட் பசிவருத்தம் பிறங்கோர்
புல்லா, லருகுநிற மவித்தவரிற் புகழ்படைத்த மதகளிற்றை யடை
ந்து வாழ்வாம். (ரு)

### முருகக்கடவுள்.

பொருந்தியசெந் தமிழ்ப்பரமா சாரியனுக் குறுமுனிக்குப் போதம்பூட்
டிருந்தியவா சானுகி யதுமட்டோ வடகலைக்குந் தென்க லைக்கு [டித்
மருந்தியலும் பிறகலைக்கு மாரியனும் பரமசிவன் வணங்க நானு
மிருந்தியலா சாரியனு மெங்குமா குருபரன்று ளிறைஞ்சி வாழ்வாம்.

### திருநந்திதேவர்.

வடமொழியி லிரவுரவா கமத்தமைந்து பல்லோரு மதிக்கப் பெற்ற
திடமொழியாப் பன்னிரண்டு சூத்திரமும் வழிவழியே சிறந்து மல்கப்
படமொழியாப் பூணணிபா வனையில்குரு வாற்றெளிந்து பயிற்று நீராற்
றடமொழிமூ லாசிரியப் பெயர்படைத்த நந்திபிரான் சரணஞ்சார்வாம்.

### அகத்தியமுனிவர்.

சிறந்தவகத் தியமிரண்டு நவின்றருளிச் செந்தமிழா சிரிய னென்றே
குறந்தபுகழ்ப் பெயர்புனைந்த தன்றிபுநோக் காதிபல வுற்ற தீக்கை
யறந்தவரு துளவெனினும் பரிசத்தான் மால்சிவமே யாகச் செய்து
நிறந்ததிற லுடைப்பரமா சாரியனு மாஞனை நினைந்து வாழ்வாம். (அ)

### சமயாசாரியர்.

செம்மடியொண் புலித்தோலே யெனக்கொண்டா ரடித்தொண்
டின் சிறப்பான் மேக, மும்மடியென் றிடவிழிகண் முத்துகுப்ப வுரு
குதலான் முழங்கி நானுந், தம்மடிய ரெனப்பெருநீர் தலைநின்று பணி
புரிந்து தாழப் பெற்ற, வெம்மடிக ளாஞ்சமயா சாரியரோர் நால்வ
ரையு மிறைஞ்சி வாழ்வாம். (கூ)

### சண்டேசநாயனார்முதலியோரும், சேக்கிழாரும்.

தந்தைதா ளடைவதற்குத் தந்தைதா ளறவெறிந்தார் தம்பி ராற்கே
சிந்தையா தியமூன்றுஞ் செலுத்தறுபான் மூவரிவர் சீர்த்தி யாவு
நிந்தைதீர் தரமொழிந்த நிகரரிய சேக்கிழார் நீடு வாழ்வா
ரந்தைதீர் தாக்கருது மடியேனு ளனவரத மகலா ரரயே. (கo)

### மெய்கண்டதேவர்.

அகத்திருளைப் போக்கலும்பன் னிருகதிரோ வெனத்தமிழி
லழகு வாய்ப்ப, மகத்துவநான் மொழிபெயர்த்த துணர்ந்தியாமு
மொழிபெயர்த்தல் வல்லேமென்று, மிகத்தழைசத் தியஞான தரி
சனிப்பேர் மொழிபெயர்த்து மெய்கண் டானென், றிகத்தியலப் பாஞ்
சோதி யருளியவா சிரியனடி யிறைஞ்சி வாழ்வாம். (கக)

### திருமாளிகைத்தேவர்.

கச்சோதங் கதிராமோ யாங்கொள்வயி ணவமின்றே கழிவ
தாக, வச்சோவிவ் வாரியனெங் ககப்படுவா னென்றரங்க மகல நீத்
துப், பச்சோலைத் தெங்கடரும் கோமுத்தி யடைந்தரிய பலசெய்
தெல்லா, நச்சோத வருள்கொழித்து வளர்திருமா ளிகைத்தேவை
நயந்து வாழ்வாம். (கஉ)

### நமச்சிவாயதேசிகர்.

ஒருதிருமா ளிகைத்தேவை நட்டசிவப் பிரகாச ருணைத்த வாறே, தருதிருவா வடுதுறைசார்ந் தவர்வகுத்த வறையமர்ந்து சைலா திப் பேர், வருதிருவன் முதலோராங் கைலாய பரம்பரைமன் னுதவி னேங்கக், கருதிருவன் மேற்கொணமச் சிவாயதே சிகன்மலர்த்தாள் கருதி வாழ்வாம். (கங)

### அம்பலவாணதேசிகர்.

சோராத பெருங்கருணை தழைத்தோங்க வாவடுதண் டுறையை மேவி
யோராத வெனையாள்வா னோராத வனிற்றோற்று முருவந் தோற்றித்
தீராத மலமாயை கன்மமுத லொடுமாயச் சிரமேற் சூட்டு
மாராத திருவடியம் பலவாண தேசிகனை யடைந்தா மன்றே. (கச)

### சுப்பிரமணியதேசிகர்.

கொற்றவளம் பொலிதிருவா வடுதுறைச்சுப் பிரமணிய குரவ னவான், னுற்றதன தடியர்குடி கொளுஞ்சிறுவீ டொருங்குதகர்த் துலவா மேன்மை, பெற்றபெரு வீட்டிருத்தத் தான்குடிகொ ளாலயமும் பேணு னுகி, முற்றவொழித் தருள்வனெனி னவன்கருணை யெவராலு மொழியற் பாற்றே. (கரு)

### சிவஞானயோகிகள்.

சீலநிகழ் மூலவா கமப்பொருளொன் றென்றுகித் திறம்புறுது
ஞாலநிகழ் குலதெய்வ மெனப்பலருங் கொண்டாட நாங்க ளுய்யச்
சாலநிகழ் சமவாத முதலியபோ யொளித்திடவு தயமாய் வந்த
பாலநிகழ் விழிமறைத்த சிவஞான யோகிபதம் பணிந்து வாழ்வாம்.

---

## ஆக்குவித்தோர்.

குலவுமுரு கக்கடவுள் கருணையினே தாதனைத்துங் கூட வோர்ந்தே, யுலவுபுகழ்க் குமரகுரு பரமுனிவ னுதித்தமர புதித்த மேலோ, னிலவுபுக ழிலக்கணமு மிலக்கியமும் வரம்புகண்ட நிகரொன் றில் லான், கலவுசிறப் புத்தமநற் குணங்களெலா மோருருக்கொள் காட்சி போல்வான். (க)

கூடுபுகழ்க் கோமுத்திக் குருநமச்சி வாயனருள் கொண்ட மேலோன்
பாடுபுகழ்ச் சித்தாந்த பாடியமுற் றொருங்குணர்ந்த பான்மை யாள[ன்
னீடுபுகழ்த் துறவொழுக்கந் தவறுது காத்தோம்பு நெறியில் வல்லோ
றேடுபுகழ் வளர்குமர சாமிமுனி வான்முனிவர் செயசிங் கேறே. (உ)

---

## அவையடக்கம்.

அன்னமுனி வரன்கனிவிற் சிவஞான யோகிவா லாறு முற்று, நன்னர்வள முறப்பாடித் தருகவெனச் சொற்றமொழி நலத்தை யோர்

ந்தே, யென்னவலி யுளமெனப்பா டுதற்கிசையேன் மறுப்பதற்கு மிசையே னேனுஞ், சொன்னமொழி மறுத்திற மென்றொருவா றோதுதற்குத் துணிபுற் றேனால். (௧)

நலம்பூத்த தென்கலையும் வடகலையும் பணிசெய்சிவ ஞான யோகி, புலம்பூத்த வரலாற்றை யான்பாடப் புகுந்ததிறம் புலவோர் தேரின், வலம்பூத்த விலாமுறிய நகைப்பரெனும் வருத்தமுமென் மனநீங் காதித், தலம்பூத்த வல்லியற்றீர் தவிருதிரென் பாரொருவர் தமைக்கா ணேனே. (௨)

ஏய்ந்தவிளம் பூரணர்சே னாவரையர் நச்சினார்க் கினியர் மேலும், வாய்ந்தபரி மேலழகர் மயங்குசிவ ஞானமா தவத்தோன் சீர்த்தி, தோய்ந்தபுகழ்க் கச்சியப்ப முனிவர்பிரான் சொலிற்சொலலாஞ் சொல்லா ரொன்றும், பாய்ந்தநில வரைப்போர்மற் றகத்தியனு மகத்துவமாப் பாலிப் பானே. (௩)

மிகப்பெரிய னாகியசீர்ச் சிவஞான முனிவான்சீர் விளம்ப லாகு [ரு
மிகப்பின்மட முடையேனு மெவ்வாற்றா னென்னின்முன மிருவர்தே
நகப்படிவ மாய்வளர்ந்த சோதியையா ராதனஞ்செய் நன்மைபூண்டோ
ருகப்பரிய மூன்றிழைநான் கிழைத்தீப மல்லாம லுஞற்ற லுண்டோ.

---

## இ ர ண் டா வ து

### பா ண் டி நா டு.

திருமுனிவர் பல்லோருஞ் செந்தமிழிற் றனைச்சூழ
வொருமுனிவ னுலகுசம முறவுறைதற் கிடமாகித்
தருமுனிவன் கைக்களிறுந் தாபதர்தப் பழக்கத்தாற்
கருமுனிவா னெழுபொதியக் கவினதுபாண் டியநாடு. (௧)

தனையுண்ட முனியுறையத் தக்கவிடங் கொடுத்ததனை
நனையுண்ட விருக்கங்கள் கொணர்மினென நாலைவிடப்
புனையுண்ட வவையெழுந்து பொருநையெனும் வடம்பூட்டி
வினையுண்ட விருபானின் றீர்ப்பவென மிடைவனவால். (௨)

அறிவிலர்தாஞ் செய்வினையே யவர்க்கிடையூ றுயதுபோற்
செறிமடுவின் மோட்டெருமை செறிந்துழக்கிக் கன்றுள்ளி
முறிவொழியப் பொழிதீம்பான் மூரிநெடுந் திரையெறிந்து
வெறியதென வதையெடுத்து மிசையெறியு மிடனெங்கும். (௩)

பொருநைவரு புனன்முழுகிப் புறமதகுப் புனலொடும்போய்த்
திருகவிய நெடுந்துரஞ் சென்றோர்தடத் தெழுபறவை
யொருதடத்துப் புனன்முழுகி யொள்ளியநா வுக்கரசர்
திருதுமலி யையாற்றுத் தடத்தெழுந்த மேன்மைபொரூஉம். (௪)

போரகத்துஞ் சேரகத்தும் புணரியெனப் பொய்கைநிறை
நீரகத்தும் படிமேக நிறைபொழிலி னிடைப்புகுந்து
சீரகத்தப் பொழின்மேலாற் றெரியுமா துவக்குண்டல்
பாரகத்திந் திரன்முகிலூர் பரிசுதெரி தரக்காட்டும். (௫)

மடையெலாஞ் சங்கினங்கள் வரம்பெலா மவையுயிர்முத்
தடையெலாம் வெடியெழுமீ னுறெலா மதகினொலி
புடையெலாஞ் செஞ்சாலி போரெலாம் பொலிமேகங்
கடையெலாம் பொலிமருதக் காமர்வளங் கணிப்பவரார். (௬)

சாலியினுங் கந்தியினுந் தலைவிரிந்த வரம்பையினுங்
கோலியசெங் கரும்பினுமாய்க் குலவியெழு முத்தரித்து
வாலியதண் பொருநைகொடு கொற்கையக மருவுதலா
லாலியவத் துறைமுத்த மரிப்பதெனக் குலவியதால். (௭)

கொண்டறரு முதயத்துங் கோடைதரு கொல்லியினும்
விண்டுயிரொ லாநடுங்க வாடைதரு மேருவினும்
வண்டுறுசந் தமுந்தமிழு முடன்வரத்தென் றலைவயங்கு
மொண்டணிமா மலைசிறந்த துயர்ந்ததுமந் நாடொன்றே. (௮)

சேல்பாயும் புனற்குளத்துச் சென்றேறித் திரையெறிந்து
கால்பாயும் வயலகத்துக் கரும்புடைக்க வெழுந்தநறும்
பால்பாயுங் கனிச்சாறு பற்பலவு மப்படியே
நூல்பாயும் பொருநையொன்றே நுவலந்நாட் டிணையோப்பல். (௯)

நலிபாண்டித் திறமுயர்வா னாமெனவூ ழியுங்கருதா
ரொலிபாண்டின் முதற்பலவா மூர்தியன்றித் தனையியங்கார்
கலிபாண்டிப் பியமெனவே கரையவளி முரலுமலர்
பொலிபாண்டிற் கமலவயற் புகழ்ப்பாண்டி வளநாடர். (௧௦)

நீறுவிழி மணிபுனைவார் நீசரே யாயிடினும்
பேறுதமக் கருளவரும் பிரானென்றே யுபசரிப்பார்
கூறுமெழுத் தைந்தொடருட் குறிப்பூசை புரிகுவரேன்
மாறுதவி ரவராற்றும் வழுத்தினையார் வழுத்துவார். (௧௧)

இன்னவளம் பலதழுவி யேழுலகும் புகழ்வுள
பொன்னவிரு மணிகெழுமார் பப்புருடோத் தமனுமொவ்வாத்
தென்னவர்த நாட்டுளதால் விக்கிரம சிங்கையெனு
நன்னகரம் பாவநா சப்பதிநா மும்புகல்வார். (௧௨)

விக்கிரமசிங்கபுரம்.

மறையவரே முதலொருநால் வகைக்குடியும் பிறவாக
வறைகுடியுந் தத்தமொழுக்ககலாது மிகநெருங்கிக்
குறைசிறிது மில்லாது குலம்பொலிய நலம்பொலியும்
பறைபுகழான் மிக்கோங்கும் பாவநா சப்பதியே. (௧௩)

சீராலும் விருந்தினர்க டிருந்தினரா வுபசரிக்கு
மோரானு முழவுதொழி லோராலும் போராலுஞ்
சேரானு மளப்பரிய சிறப்பாலும் பிறப்பாலும்
பாராலும் பொலிவேளாண் குடிகள்பல பயில்வீதி. (கச)

அணங்குவன மகளிரிடை யலறுவன நூபுரங்கள்
பிணங்குவன குழல்வண்டு பிரிகுவன விலம்பாடே
யுணங்குவன வஞ்சகமே யுருங்குவன கண்ணயிலே
யிணங்குவன வறமுழுது மிரிகுவன மறமுழுதும். (கரு)

பாடகமெல் லடிப்படல்செம் பஞ்சிகொல்கா ளையர்சிரமு
மாடமிசை யாடுதல்பொன் மாண்கொடியோ காண்கொடியு
நீடமனை தொறும்வளர்வ நெடுந்திருவோ நிரம்பன்புந்
தேடவரும் பொருளாதல் சிவார்ச்சனைகொ றெருளருளும். (கசு)

புதிதடைநர் பிரிவுநமைப் பொருந்துமென வருந்துவரான்
மதியினுப சரிப்பவர்மேல் வாராமைக்கே வருந்துவரா
லதிநலமங் கையரூட லடாமைக்கே வருந்துவரால்
பொதியவளிப் போரிரப்போர் புகாமைக்கே வருந்துவரால். (கஎ)

தாழாது மேன்மையுறு மைந்தருடைத் தடங்கரமே
யாழாது மேன்மையுறு வம்மதில்சூழ் கிடங்குகளே
போழாது மேன்மையுறு பொருகரிவெண் கோடுகளே
வீழாது மேன்மையுறு சந்நிதிமெய் யன்பர்மெய்யே. (கஅ)

மாதருட னீர்த்துறையின் மற்றவர்க்குத் துணையாயே
யோதவினி தாடுவன வொண்செங்கா லோதிமமே
போதமையக் குற்றமைக்கும் பொழிற்றுணைமை கூடுவன
மேதகைய சாயல்வளங் கண்டவிரி சிறைமயிலே. (கசு)

கந்தியிடைப் பொன்னூசல் கழூத்தழுகு கவர்பிறைக்கா
முந்தியிறு குறப்பூட்டி மொய்குழலா ராடுதொறு
முந்தியுட னுடுவன வொண்குழைமுத் தாரங்கொல்
புந்திநனி தடுமாறப் புகுமைந்தர் தம்மனமும். (உ0)

கிள்ளையுறல் கைத்தலமோ கிளர்மகளிர் முலைத்தடமும்
வள்ளையுறல் பொய்கைகொலோ மடவியர்செங் கிடைவாயும்
வெள்ளையுறல் கவிஞர்தம்வா யோமதுமே வினர்வாயு
மெள்ளையுற னுசிகொலோ வெழிலரம்பை மார்நலமும். (உக)

கயிலாய பரம்பரையிற் காமர்பெற வவதரித்த
சயிலாதி மரபுடையோன் சந்தானந் தழைப்பிக்க
வெயிலாரு மணிமாட மிளிர்துறைசை யகம்புகுந்தார்
பயில்வாய்மை யதுதெரிந்து பரவாதா ருளரோயோ. (உஉ)

சந்தமலி நாவலர்தந் தலைவணங்க வடகலைக்குஞ்
செந்தமிழ்க்கும் விக்கிரம சிங்கமென வொருவருறப்
பந்தமற வவணாயுள்வார் பாவநா சம்படலால்
வந்தனவிப் பெயரந்த நகர்க்கெனவும் வழக்குண்டால். (உ௩)

பாண்டிவேளாளர்சிறப்பு.

அந்தநக ரத்துலகா ளாயபெருங் கருணையொடுஞ்
சந்தமுற வினிதமருந் தம்பிரா னடிக்கன்பே
நந்தலுற வளர்பாண்டி வேளாளர் நற்குலமே
யெந்தவுல கும்புகழ வினிதுநெருங் கியதம்மா. (உ௪)

முன்னோர்வரம்பெற்றமை.

அன்னகுலத் திடையொருவ ரருந்தவத்தா லகத்தியனார்
முன்னமைய வேழுதலை முறைப்புலமை நுமக்களித்தோ
மென்னவுமற் றவற்றீறே யேற்றநனி யாமெனவும்
பன்னவொரு வரம்பெற்றார் பாரடங்காப் புகழ்பெற்றார். (உ௫)

ஆனந்தக்கூத்தர்.

அவ்வாறு பெற்றவரு ளமையாறுந் தலைமுறையார்
செவ்வாய்மை யானந்தக் கூத்தரெனுந் திருநாம
மெவ்வாயுஞ் சொலப்பெற்று றில்லொழுக்கின் றலைநின்றார்
துவ்வாமை யுறுக்குணங்கள் சோராது திரண்டன்னார். (உ௬)

மயிலம்மையார்.

அன்னவர்த மனைக்குரியா ரருந்ததியிற் சிறந்துள்ளா
ரென்னவரும் விருந்தோம்ப லின்னிலையான் குடிமாறர்
தன்னமிலாக் காதலியார் தமையொப்பா ரெனப்புகழ்வார்
பின்னமிலா மனைக்குரிமை பேணுதலிற் றமையொப்பார். (உ௭)

ஏயமயி லம்மையா ரெனுநாமம் பெற்றுள்ளா
ராயவரோ டுளனா யானந்தக் கூத்தரென
மேயவர்தா மகிழ்சிறந்து மேதகவின் வாழுநாட்
டேயமகப் பெறுவாஞ்சை மேன்மேலுஞ் சுரந்துளதால். (உ௮)

இவ்விருவரும் மகப்பேறுகருதிநோற்றல்.

திருத்தமுழு கியுங்கருணைத் திருவுருவா முலகாளை
யருத்தமறை முக்களா லிங்கரையன் பொடுபணிந்தும்
வருத்தமுறு விரதமெலா மாண்புடனூற் றியுநீற்றுப்
பொருத்தமுடை யடியாரைப் புகழ்ந்தூட்டி யுபசரித்தும். (உ௯)

மற்றுளநற் கருமமெலா மறவாது நனிமுடித்து
மிற்றுளதீ வினையாள ரிவ்வாறே யொழுகுவார்
கற்றுளமற் றிவர்க்குமடங் கழியாமை யெவன்கொல்சிவப்
பற்றுளநங் குறுமுனிமுன் பகர்ந்தமொழி பழுதாமோ. (௩0)

## மயிலம்மையார்கருவுற்றமை.

இந்தவா றிவனொழுக வெம்பிரான் றிருவருளாற்
கந்தமார் குழன்மயிலார் கருக்கொண்டா ரன்றுமுதல்
வந்தமா மறையோர்க்கு மற்றையடி யார்க்குமவாச்
சிந்தவா தரித்தளித்தார் சிவானுபவ மகப்பெறுவார். (௯௧)

பொங்குமுலை முகங்கறுப்பும் புளிம்பழத்தி னெழுவிருப்புந்
தங்குமொரு பொய்த்துயிலுஞ் சார்ந்துவயா நிரம்பியெழ
வெங்குநிகழ் மழமலவா யிடுமணைய ஞுடாமே
யங்குதவிர்ந் திடப்புகைமண் ணதுசிறிது நுகர்ந்தமர்ந்தார். (௯௨)

## மகப்பேறு.

ஒருபதுதிங் களுநிரம்ப வெள்ளியநல் லோரையெழப்
பெருகுசம யத்துளுநற் பெருஞ்சைவங் குதுகலிப்பத்
திருகுதவி ரதனுள்ளுஞ் சித்தாந்த சைவமெழூஉப்
பொருவருநல் லின்படையப் போதநூ லுவப்பூற. (௯௩)

செப்பரிய தமிழ்வழங்கு தேயமெலாங் களிசிறப்ப
வெப்பரிய மறையோரு மெல்லோருங் கொண்டாட
வெப்பரிய சோணாட்டு மெய்த்துறைசை நகருவப்ப
வொப்பரிய தவப்பெரியோ ரொருவரவ தரித்தனரால். (௯௪)

## மகப்பேற்றுக்கொண்டாட்டம்.

சூதவினைச் சடங்கனைத்துந் தோற்றியநாண் முதற்றொடங்கி
யாதரவை யவிபுகைப்பார் நிம்பமலங் கரித்திடுவார்
மேதகைய நெய்விழா வீதியெடுப் பவராகப்
போதமகப் பயந்தார்நன் புனன்முழுகி வித்தளித்தார். (௯௫)

## பிள்ளைத்திருநாமம்.

மிக்களா வியசூத வினைகழியப் பின்னுளி
லக்களா வியவனையா ரருள்கருது தந்தையார்
திக்களா வும்பெருமைச் சேயார்க்குத் திருநாம
முக்களா லிங்கமென மொழிந்தனர்பல் கிளையுவப்ப. (௯௬)

## காப்புப்பருவம்.

தண்ணியநீ றெடுத்தணிந்தீ சானரவர் முதலாக
வெண்ணியவான் பதினொருவ ரிணையடிகள் கைதொழுது
மண்ணியமா மணிபுரைய வருமகவை வழுவாது
கண்ணியபே ரருளினொடு காப்பதுநுங் கடனென்றார். (௯௭)

## செங்கீரைப்பருவம்.

இருகையுமுன் பதித்தொருதா ளெடுத்தொருதா ளூறமடித்துத்
தருகைமலி சித்தாந்த சைவமலாற் பிறிதொன்றும்

வருகையுறல் சம்மதியோ மௌனமறுக்கு மாட்சிமையிற்
றிருகையுறூர் தலையசைத்துச் செங்கீரை யாடினார். (௩அ)

தாலப்பருவம்.

அத்தமணித் தூணிறுவி யாய்துகிர்விட் டங்கிடத்தி
முத்தவட மதிற்பொருத்தி முழுமணித்தொட் டிலையிணைத்துச்
சித்தமுற வதிற்கிடத்திச் செங்கைதொட்டுத் தாதியர்க
டத்தமனங் களிசிறப்பத் தாலோதா லெனவுவந்தார். (௩௯)

சப்பாணிப்பருவம்.

ஆயபன்மூ லத்தொடுமொவ் வாதமுரா றுரையெழுதித்
தீயசம வாதஞ்செய் சிவப்பிரகா சப்பெயரீர்
நாயகமா யினியொன்று நகைத்திடக்கை தட்டுதல்போற்
றாயனையார் கைகுவித்துச் சப்பாணி கொட்டினார். (௪0)

முத்தப்பருவம்.

சித்தநிலை திரியாது சித்தாந்த சைவமரீஇ
நத்தமல வலியகல நல்வினையுந் தீவினையு
மொத்தநிலை யுடையோரா யுற்றவருக் காரியனன்
முத்தமுவந் தளித்திடுவார் முத்தமுவந் தளித்திடுவார். (௪௧)

வாரானைப்பருவம்.

வருகசுதிர் மணிவிளக்கே வருககுல பூடணமே
வருகவிரு ளறுசுடரே வருகவிளங் கருமருந்தே
வருகமுழு மலப்பகையே வருககரு ணைக்கடலே
வருகவரு கெனவழைப்ப வந்துவப்புச் செய்குவரே. (௪௨)

அம்புலிப்பருவம்.

மதியவனு தலினொக்கா யல்லோனு தலின்மானுய்
விதியமையுங் கலைக்குறைவு மேவாது பொலிதருவாய்
துதிபொடுவா ரானையிறைற் சுடுகனற்சா பமும்பெறுவா
யதிவிரைவி னம்புலியே யாடவா வெனவுவப்பார். (௪௩)

சிற்றிற்பருவம்.

பொருவினுதற் சுட்டியொடு பொலிமார்மைம் பனைதயங்கத்
திருவிலிடு சதங்கையும்பொற் சிலம்புஞ்சீ றடியிரட்ட
வருதரும புரத்தர் புரன் மாயனைத்துஞ் சிதைப்பதுபோற்
றெருவின்மட வியரியற்று சிற்றில்சிதைத் தருளினார். (௪௪)

சிறுபறைப்பருவம்.

எடுத்தெதனுஞ்சொற் கிடுவயிரக் குப்பாய மெண்டிசையு
மடுத்துநிறை வதுபொருவ மண்முழுதும் போய்நிறைய
வடுத்தகுணில் காப்பற்றி யழகியவெண் ணீறிலங்கத்
தொடுத்தசிறு பறைமுழக்கி யருளினர்சொற் கலைமுழக்கார். (௪௫)

### சிறுதேர்ப்பருவம்.

இந்திரிய மெனும்பெருந்தே ரெண்ணிய வாறுருட்டுவதற்
கந்திமதி சடைக்கணிந்த வண்ணலார் சீறடியார்
முந்தியுறப் பழகுதல்போன் மொய்யழகு நலம்படைப்பப்
புந்திமகிழ்ந் தினிதிவர்ந்து பொற்சிறுதே ருருட்டினார். (௪௬)

### வித்தியாரம்பம்.

இந்தவித முறுபருவ மெலாநிரம்பத் தாய்தந்தை
சந்தமிகு மனங்களிப்பத் தண்டுறைசைப் பதிவாழு
மந்தமிலாக் குருநமச்சி வாயனருள் பொருள்வளரு
மைந்தனையு மையாண்டின் மேலாய பருவம்வர. (௪எ)

காவணமெங் கணுமிட்டுக் கதழிகதலி கமுகியாத்துப்
பூவணமா லையுஞ்சிறந்த பொன்னரிமா லையுந்தூக்கி
மாவணவே தியர்முழங்க மங்கலவாழ்த் தினிதியம்ப
நாவணநல் லவரோதும் பள்ளிநயந் தமர்வித்தார். (௪அ)

### கல்விவளர்ச்சி.

பள்ளியிடை நயந்தமர்ந்த பாலனு மன்றுமுதல்
வெள்ளியநூ றெரிவிப்பா ரொருமுறைவிண் டிடுவதன்மு
னுள்ளியநூன் முழுதுணரு முணர்வுடைய ராய்த்திகழ்வா
ரெள்ளியமும் மலத்துயரு மிரித்துயரு மேற்றத்தார். (௪௯)

### இருமுதுகுரவர்மகிழ்ச்சி.

சந்தமலி பாவநா சப்பதிசெய் பெருந்தவத்தா
லந்தமில்சீர் மயிலம்மை யானந்தக் கூத்தர்மன
நந்தமகிழ் தலைசிறப்ப நாளெலாங் கொண்டாட
வந்தவரோர் பானுண்டு மருவவளர்ந் தினிதமர்ந்தார். (௫0)

கலையமைதிங் களின்வளர்ச்சி காட்டியே நாட்டுநா
டொலைவில்குண மறிவினொடு தொக்கமையுந் தோன்றலா
ரலைபுனற்கா விரிநாட்டி னுவடுதண் டுறையடைந்து
தலையமைபா டியஞ்செய்த தன்மையினிச் சாற்றுவாம். (௫௧)

---

## மூன்றாவது

### திருக்கைலாயச்சிறப்பு.

வளங்கள் வேண்டுவ வந்திரந் தவர்க்கெலாம் வழங்கி
விளங்க மாயவ ரிந்திரர் முதலியர் மிடைந்து
துளங்க மேவிய கறுப்பலாற் றூற்றிடும் வேறு
களங்க மொன்றிலா துயர்ந்தது வெள்ளிவெண் கயிலை. (௧)

மேய வாதனக் கயிலையின் வெளுப்புமேன் மேய
நாய னுயதன் படிகமெய் வெளுப்புமோர் நம்மான்
மாய மாஞ்சிறு கறுப்பொரு களத்துறன் மாயத்
தூய நீறுமூ விரலள வங்குலந் தொகுப்பான். (௨)

சடைநி றஞ்சிவப் பெனல்விளர்ப் புறத்தலை மாலை
யடைநி லாமதி கொக்கிற கவிர்தரு துரோணை
மிடைதி ணைப்புனல் வெள்ளெலும் பருக்கமேல் விளங்க
வுடைய கோனணிந் தனன்கயி லையின்வள முவந்தே. (௩)

கரிய மாயவன் வெள்விடை யுருக்கொண்ட கருத்துந்
தெரிய வான்றுதி செயல்கொளு நான்முகன் செந்நா
வரிய வெண்கலை மகளுற வைத்தது மாயிற்
பிரிய மார்கயி லைக்கிரி பேணுதற் கன்றோ. (௪)

சைவ ராயவர்க் கநாதியே யெம்பிரான் றகைசா
றெய்வ வெள்ளிய நீறுகொண் டணிவது செய்தான்
பொய்வ குத்தவே றிலாஞ்சனம் புனைபவர் மாட்டு
மெய்வ கைப்பிரி யஞ்செயா தென்பது விழைந்தே. (௫)

நிறங்கு லாஞ்சடை யெம்பிராற் றொழுதுமே னின்றே
யிறங்கு வெள்ளராக் குலங்களை முடியினின் றிறங்கும்
பிறங்கு வெள்ளரு வித்திரள் களைப்பகல் பெட்டே
யறங்கு லாவுவா னவரினு முயலவு மாகா. (௬)

தருகை நீண்டநந் தம்பிரான் சரண்டரி சிப்பா
னுருகை மேற்கொடு படரும்வா ளராக்குல மொருங்கு
திருகை மேவுறு வருவிதங் குலமெனத் தெரியா
வருகை தேர்ந்தந்தோ சேவையா யிற்றென மருளும். (௭)

செங்கை வச்சிரப் படையினான் பதமிசைத் திகழு
மங்கை யெட்டுடை நான்முகன் பதமர விந்த
மங்கை மார்பினன் பதமிவை நவநவ மருவும்
வெங்கை யானையார் கயிலைமே வியபடி மேவும். (௮)

அருவி பல்லிடம் பாய்தரு முழக்கமு மமரர்
மருவி யார்ப்புறு துந்துபி முழக்கமும் வளையுங்
கருவி மாமுகின் முழக்கமு மலர்ப்பதங் கருத்தி
விருவி யன்பர்செய் யாமுழக் கத்தின்மே லெழாவால். (௯)

அடியிற் றங்கிய சுனைதலைத் தொடும்பகுத் தறியார்
தொடியிற் றங்குகை வானநா டியருளாந் துணியக்
கடியிற் றங்கிய குவளைகள் செறிவன கண்ணிற்
கொடியிற் றங்கிய பகைதபுத் துறவுகொண் டாடும். (க0)

அணங்க ஞர்பலர் குடைதொறுஞ் சுனையகத் தமைந்த
மணங்கொள் கொங்கையிற் குங்கும மண்ணிய நீத்த
மிணங்கு மீதெனு ரிராவணற் கடிந்தபோ தெழுந்த
குணங்கொள் செய்யநீர் வறந்தில தினுமெனக் குறிப்பார். (கக)

கந்த ரந்தொறு முனிவரர் பற்பலர் கற்பச்
சந்த வெள்ளிய நீற்றினு லுடலெலாந் தயக்கி
வந்த வாதனத் துறைகுவர் கண்டவா ளுடர்
நந்த வெள்ளிய முடங்குளை மடங்கலா நயப்பார். (கஉ)

நிலவு பாற்கரன் சேவைக்கு வருந்தொறு நீண்டு
குலவு வெள்ளிவெண் கற்றைபோ யவருடல் கூட
வுலவு பாற்கர னந்நிறம் போயதென் றுரைக்கின்
வலவு வாமதி களங்கநீங் கியதென மகிழ்வான். (கங)

மேக வண்ணனுங் கணைதொறும் வெள்ளிவெண் கயிலை
நாக நின்றெழு சுடர்ப்பிழம் பொருங்குநண் ணுதலாற்
போக மாமக ளுவப்புறக் கருநிறம் போக்கி
யாக முற்றுமுன் னிறஞ்செய்த தெளிதென வவாவும். (கச)

அயனி ராசதன் மாயனுந் மதனிவ ரளவி
னுயருஞ் சத்துவ வுருத்திர னொருவனே வலியன்
மயருஞ் செய்யதா மரையுநந் தொல்லிலை மட்டே
பெயர்வில் வெள்ளிவெண் கயிலையோ தாங்கிடப் பெறுவ. (கரு)

ஆயிரக்கால்மண்டபம்.

இன்ன மூலவரைக் கயிலையி லெற்றைக்கு முளது
சொன்ன மற்றைநான் கினுமிது துணைகுவ தரிது
பன்ன கேசனும் பகருவ லெனப்பெரும் பண்ப
தன்ன மண்டப மொன்றதன் கால்களா யிரமே. (கசு)

ஆய்ந்த காலெலாஞ் செம்பொனுற் பன்மணி யவையால்
வாய்ந்த மேற்பரப் பொண்மையை வகுக்கநாம் வலமோ
வேய்ந்த தோற்றந்தா னிளங்கதிர்க் கோடிக ளிராறும்
பாய்ந்த வவ்வரை மிசையுதித் தனவெனும் படிய. (கஎ)

திருவோலக்கமண்டபம்.

அன்ன மண்டப நாப்பணோர் மண்டப மதனை
யென்ன ருஞ்சொல்வார் வித்தினுட் படுமுளை யென்னச்
சொன்ன தூலத்துட் சூக்குமஞ் சொலத்துணி வாரு
மன்ன மற்றத னுண்டொழில் வகுத்திட மாட்டார். (கஅ)

சிங்காதனம்.

யாப்பஞ் சானனப் பெயருற்றும் பரத்தலீ தன்றி
யாம்ப லாகம மறைமுதற் றேற்றிடா வதனு

லெம்ப லோடணை சுமப்பமென் றரியியைந் தென்னப்
பூம்பன் மாமணி யணையொன்றம் மண்டபம் பொலிய. (கக)

சிவபெருமான்வீற்றிருத்தற்சிறப்பு.

அனைய திப்பிய முடங்குளை மடங்கலா தனத்து
வனையு மெம்பெரு மான்சிவ ஞானமா முனிவ
னினையு மெய்யரு ளிதயத்தி லிருப்பென நெருங்க
லினையு மாதித்த மண்டல நடுவிருப் பென்ன. (உ0)

குடை, சாமரைகள்.

குறைந்த மாமதி யன்றிவே றிலையெனல் கொளாது
நிறைந்த மாமதி முடிமிசை வெண்குடை நிழற்ற
வுறைந்த வான்புன லிரண்டுந்தம் மினத்தொடு கலந்தற்
கறைந்த மேற்செல வெனக்கவ ரிகள்புடை யசைய. (உக)

விடைக்கொடிகள்முதலியன.

விடையி ரண்டுள வெனவெதிர் கொடிகளான் விளங்க
வடைவ ளிக்கிடை யூறிலா மையினணிந் தனவாய்
மிடைந யங்கொள்சாந் தாற்றிகள் விளங்கமேன் மேலும்
புடைய நேகமா கியவிரு தாவளி பொலிய. (உஉ)

குடமுழா, சங்கம் முதலியன.

ஆய வாணனும் பானுகம் பப்பெய ரவனும்
பாய வண்குட முழவமும் பணிலமும் பற்றி
மேய வார்ப்பொடு மற்றைய வார்ப்பெலாம் விரவி
யேய மாகட லொலிமுகி லொலிதப விரிப்ப. (உங)

அரமுழக்கம்.

வான வாழ்வின ரிந்திரர் மலரணை வதிவா
ரூன நேமியார் வித்தியா தரர்சித்த ருரகர்
மான வாசைகா வலர்முனி வார்முதல் வளைந்தே
யான மாதரோ டெழுப்பர வொலிதிசை யளாவ. (உச)

நந்தி நாயகன் வேத்திரத் தொடுமெதிர் நடந்து
முந்தி யாருந்தன் பணிதலை நிற்பமு வுலகுஞ்
சிந்தி யாதுயிர்த் தவளிடப் பாகத்துச் சிவண
வந்தி வான்மதி சூடிய வழகன்வீற் றிருந்தான். (உரு)

தரிசிக்கவந்தவர்கள் தரிசித்துச்செல்லல்.

கண்கொ ளாத்திரு வோலக்கப் பெரும்பயன் கண்ணுற்
றெண்கொ ளாக்களி மகிழ்ச்சியிற் றிளைத்தன ரிறைஞ்சி
விண்கொ ளாக்கதிர் மோலியின் னவர்முத லியாரும்
பண்கொ ளாச்சொன்மா தர்களொடுந் தம்மிடம் படர்ந்தார். (உசு)

### திருநந்திதேவருடையவேண்டுகோள்.

கூடி நின்றவர் குழாத்தொடு மகன்றது மன்றத்
தாடி யாவயிற் றனித்தினி தமர்வது முளத்து
நாடி நல்லம யம்மிது வேயென நயந்து
பாடி யன்பொடு பணிந்தன னந்தியெம் பகவன். (உஎ)

இடைய றுமலே பணிந்தெழு நந்தியெம் பிரானை
யுடைய நாயக னுண்ணெகிழ் கருணையா னோக்கி
யடைய நீயுளங் குறித்ததெ னறைகுதி யென்னக்
கடைய னேன்செயும் விண்ணப்ப மிதுவெனக் கனைவான். (உஅ)

ஐய நின்னருள் வலியினுற் கைலைகாப் பமைந்த
செய்ய போதி காரத்திற் பிறவற்றிற் சிறந்தே
னுய்ய வேண்டிநின் னுகமப் பொருண்முழு துணர்வான்
வெய்ய னேன்விழைந் தேனெனப் பணிந்தனன் மீட்டும். (உகூ)

### ஆகமங்களை உபதேசித்தல்.

பணிந்த நந்தியெம் பகவனை யெழுகெனப் பணித்தே
துணிந்த நான்மறைப் பொருளொனுந் தோன்றலெம் பெருமா
னணிந்த தன்புடை யிருத்தியங் கையின்வெரிந் தடவித்
தணிந்த சிந்தையி னுகமந் தெருட்டுதல் சமைந்தான். (௩0)

### வேறு.

காமிகமே யோகசமே சிந்தியமே காரணமே யசிதந் தீத்தம்
பூமிபுகழ் சகச்சிரஞ்சூக் குமமஞ்சு மான்சுப்பிர பேதம் பொற்பி
னுமினிய விசயநிச்சு வாசஞ்சுவா யம்புவமே யனலம் வீர
நாமவிர வுரவமகு டம்விமலஞ் சந்திரஞா னம்விம் பம்மே. (௩க)

மேயபுரோக் கிதஞ்சருவோத் தம்பார மேசுரமே மினிர்சந் தானந்
தூயவில ளிதங்கிரணஞ் சித்தமே யுயர்வுறுவா துளமே யென்ன [ம்
வாயவிரு பத்தெட்டா மாகமத்தின் றொகையிவைக ளடைவே தோற்ற
பாயதிறங் களுமுறையே பகருவா மதுகுறிக்கொள் பண்பிற் கேண்மீ.

மறையனைத்து நம்முடைய நான்முகத்து நின்றும்வெளி வருமா
செய்து, பொறையமைக்கும் பொதுவாக்கிச் சிறப்பாக வாகமத்தைப்
புகல லுற்றுங், குறையறுக்கு மவைமூலங் கோணறுக்கு மிவையுணா
யாக் கோடி யின்னு; மிறைதபுக்கு மவைபசுவா மாகமந்தீம் பாலாகு
மெய்ம்மை யோரின். (௩௩)

தேடுகா மிகமுதல சிதப்வனாயோ னாந்துஞ்சத் தியோசா தத்தே
பாடுபொலி தீத்தமுறசுப் பிரபேதம் வரையைந்தும் வாம தேவங்
கூடுப்விச யம்முதலா வீரம்வரை யைந்துமகோ ரத்துண் டாய
நீடுமிர வுரவமுதல் விம்பம்வரை தற்புருட னேர்ந்த தைந்தும். (௩ச)

அறையுமிரு பதுநீங்கப் புரோக்கித முன் வாதுளமீ ருய வெட்டு, நிறையுமொளி வளரீசா னத்துநின்று தோன்றினவா னிலவ நாளுங், குறையிலொவ்வோ ராகமமுஞ் சரியைமுத லொருநான்குங் கூறு நிற்கு, மிறையிலினி துணர்தியென வொவ்வொன்று வாய்மலர்ந்தான் மேதக் கோனே. (௩௫)

முந்துகா மிகமுதலா வோரிருபத் தெட்டனுளு மொழிமு னுக்க, நந்துமிர வுரவத்திற் சிவஞான போதநிற்க நயந்தவெல்லாஞ், சந்துமுலை யொருபாக னுபாகமத்தோ டுணர்த்துதலுந் தவாது கேட்டவ், விந்துமுடி யவன்பாத மெழுந்துபணிந் தொருவினு வியம்ப லுற்றான். (௩௬)

திருநந்திதேவர் ஐயுற்றுவினவல்.

ஆயசுவா யம்புமுத லியவேழ்ப தார்த்தமெனு மமைதி பூண்ட
தூயபவுட் கரமதங்க முதலியவா றெனுமைந்தே சொலும்ப ராக்கியை
யேயமுதற் சருவஞா னோத்தரமுன் னன்கென்றே யியம்பா நிற்கு
மேயவிர வுரவமிரு கேந்திரமுன் மூன்றென்றே விளம்பா நிற்கும். ()

ஆதலினு லடிபேற்கு மலைவுபடு மிதுதெளிய வறைவா யென்று
காதலொடு கைகூப்ப முகமலர்ந்து நகைமுகிழ்த்துக் கருணை மூர்த்தி
மேதகைய மூவகைப்பா தங்களிற்பல் பேதத்தால் வேறு மேனுங்[றே.
கோதமையா ஞானபா தத்தியல்பெவ் வாகமத்துங் குறிக்கொ ளொன்

மன்னியப தார்த்தமேழ் முதலாக மூன்றளவும் வகுக்கு மேனு
மின்னியமற் றவைமலைவு படாவெனினு மிரவுரவம் விளம்பா நின்ற
துன்னியவான் சிவஞான போதமுணர்த் துதுமலைவு துன்னு தாகும்
பன்னியவ பரம்பரமாஞ் சிவஞான மென்றதனைப் பகர்த லுற்றான். ()

அவருக்குச் சிவஞானபோதத்தை உபதேசித்தல்.

அருமையினு மருமையென நாமும்பா ராட்டிடுவ தளவி லாத, பெருமையுடை நூற்கெல்லா முடியாவ தெத்துணைத்தாய்ப் பிறங்கு மென்னி, னிருமைதரு பன்னிரண்டு சூத்திரமா முடிவுபெற்ற திதுகே ளென்றே, யொருமைமன நடுப்பதியப் பெருங்கருணை தழைத்தோங்க வுரைப்ப தானான். (௪0)

எழுவாய்ச்சூத் திரம்பதிக்குப் பிரமாணம் பாசத்திற் கிரண்டு மூன்று, பழுதாகாப் பசுவிற்கா நான்கைந்தா றியல்பசுபா சம்ப திக் காம், வழுவாத விலக்கணமே மெட்டொன்பான் சாதனமே மற்றை மூன்று, மெழுதாத சாத்தியங்கூ றுதலாகு மின்னுமொன்றுண் டியம் பக் கேளாய். (௪௧)

முந்தியதாஞ் சூத்திரத்திற் சகந்தோற்ற நிலையிறுதி மூன்றதெ ன்று, நந்தியமற் றதுதானு லேயுடைய தென்றுமே னுடு மாறு, வந்தி

யனு மிருவருமுத் தொழிற்படுவ ரென்றும்வரை யறுக்கப் பட்ட, வுந் தியமூன் றதிகரண முள்ளதுகா ணிந்தியங்க ளொருங்கு மாய்த் தோய். (சஉ)

நேயவிரண் டாவதா னுயிர்களிலே யிரண்டறுமா நிற்ப னென்றும்
பாயகன்ம பலனையுயிர் களுக்கானே கொடுத்தூட்டும் பண்ப னென்று
மேயவுயி ரனைத்துமச்சு மாறியே பிறக்குமொன்று மேலோ னுய
தூயவான் சருவவியா பகனென்று நான்காகித் தோன்று நிற்கும். ()

மூன்றிலையென் னறிவுடனே சொல்லுகையா னறிவுயிர்தான் முழங்க வுண்டு, மான்றவென தூடலென்ற பொருட்பிறிதின் கிழமையா வழங்க லாலே, யான்றவுட லினுக்குமே றாயுயிருண் டொருவனே யைந்து மோர்வி, னென்றவொவ்வொன் றறிகின்ற வைந்தனுக் கும் வேறாயோ ருயிருண் டென்ப. (சச)

கனவுடலை விட்டுநன வுடலிலே வருகையினாற் கனவு டற்கு
மனனெனகவே றாயுயிருண் டொருவாநித் திரையினும்பி ராண வாயு
கனமருவு தொழில்செயவுஞ் சரீரத்திற் குப்புசிப்புந் தொழிலுங் காணா
வுணவின்மை யாற்பிராண னுக்குமே றாயுயிரொன் றுண்டு மாதோ. ()

மறவியுற்று மறவியுற்று நினைக்கின்ற படியாலே மறவி தீர்ந்த
வுறவியா னுக்குமே றாயுயிருண் டெல்லாத்தத் துவங்க ளுக்குஞ்
சிறவுபெற வெவ்வேறு பெயரிருக்கும் விதத்தாலே தெரிய வந்த
வறவருதத் துவங்களுக்கு வேறாக வுயிருண்டா லாக வேழே. (சரு)

நாலிலந்தக் கரணங்கட் குயிருடனே கூட்டுறவு நண்ணி னன்றிச்
சாலவொரு தொழிலிலா மையினந்தக் கரணங்க டமக்கு வேறா
யேலவுயி ருண்டுமல மறைப்பினு லுயிர்க்கறிவொன் றில்லை நாளுங்
கோலவுயிர் மூன்றவத்தைப் படியாக மூன்றென்றே கூற லாமே. ()

ஐந்தினுயி ராலேதத் துவங்களெலாந் தொழில்செய்யு மான்ற னாலே
மைந்துயிரெ லாமறியு மிரண்டேயா றனிலுயிர்கண் மதியி னாலே
முந்தியறி வனவனைத்து மழியுமொழி தருமப்பிர மேய மாக
நந்தியறி யப்படுவா னரனிதற்கு மிரண்டாக நவில லாமே. (சஅ)

ஏழிலான் பாசத்தை யனுபவியா னனுபவியா தியையப் பாசம்
வாழரனை யவ்விரண்டு மனுபவிக்கு முயிர்மூன்றே மருவு மெட்டி
லூழுயிர்க்கு நல்லறிவு தவத்தடையு மான்குருவா யுறுவ னைந்து
மாழுமுயிர் பற்றுதலிற் றனையறியாத் தனையறியு மவையற் றாலே. ()

ஒன்பானி லான்ஞானத் தாலரனைக் காணுமுயி ருயிர்பா சத்தில், வன்பார்பற் றறினான்றோற் றுவன்வாத னுமலம்போ பதித்தைத் தெண்ணி, லின்பார்மூன் றொருபதினீ யானுடனொன் றாகிநிற்றி

யியையு மாறு, நின்பாலாந் தொழிலனைத்து மான்பணியென் றே
கோடி நிகழ்த்தி ரண்டே. (ருO)

பதியொன்றின் ஞானியுறும் விடையமா னனுபவிப்ப னரனைப் பற்றி
முதிரான்பி னிருந்தாலவ் வானிடத்தே கலப்பனிறு மொழியி ரண்டே
யெதிரில்கடை மும்மலமுங் களைகசிவ ஞானியொடு மியைக ஞானி[கே.
கதியிலிங்கஞ் சிவனென்றே வழிபடுக படாமையையுட் கழிக்க நான்

பன்னிரண்டு சூத்திரத்தின் றனிச்சிறப்பு மோரோ வொன்றின்
பாகு பாடு, மின்னியநா மெடுத்துரைத்தா மின்னுங்கேள் சிலாதமுனி
வேண்ட வந்தோய், மன்னியசை வத்தமனு திகளினறி வரியனவா
னிறைவான் மாண்ட, துன்னியவ வியவநா திசத்திநித்தி யத்தனைந்
தாச் சொல்வர் மெய்யே. (ருஉ)

பதியுமதற் கடிமையாம் பசுவுமத னணவமும் பாற்ற வத்தைக் [தாம்
கதியவன்மா யையுங்கரும மும்மெனலா மவையிரண்டுங் கடைமலத்
பொதியவறி வித்தல்பதி யறிந்துநிற்றல் பசுசிவத்தைப் புணரா தஃது
விதியின்மண் ணுய்த் திடுவதா ணவங்கருவி மாயையுணு மேயகன்மம்.

உணர்வுருச் செயிர்வலியா னுறவிழுந் திட்டாணவத்தை யுறுப சுக்கட்
கணவுதாமெனவருளாற் பருவமுணர்ந் துடல்காணம் புவனமாக்கிப்
புணர்மாயை யாணவந்தீர்ந் தொளிரறிவை யுருவாய புனிதன் மாயை
தணவில்வினைப் பானுயிர்கட் கிருவுடனு மிறுமுட னுந் தகமுற் செய்து.

அருவுருவத் திறத்துடலா யுயிராப்மற் றுலகமா யமையும் வே
றாய், மருவுகொள மற்றவற்றி னுடனுமாய் வல்வினைகட் கேற்கு மாறு,
கருவியெலாந் தொழிற்படுத்தித் தகுதிபெற வுணவனைத்துக் காட்டா
நின்று, வெருவறநற் பதம்புகுத்து வான்புகர்மா மலங்கழிக்கும் விடலி
லாதே. (ருரு)

இரும்புகலந் தெரியழற்று மெரித்தொழிலே யழற்றிடுவ திரும்
புக் கில்லை, யருப்படைப்பா திபவிதியா தியரிடைச்செய் யினு
மொடுக்க லரன தேகா, ஞெருங்குவலி யநாதிபந்த மனுபந்த மல
மிரண்டு முயிரோ மேவு, நெருங்கியமற் றவையடையா னநாதிமுத்தன்
கலந்தருணின் மலப்பி ரானே. (ருசு)

மேயயா வையும்புரிந்தும் விகாரமொன்று மின்மையினுல் விடுப
டாத, தூயசுதந் தரத்தினு லொருவழியாங் குணங்கலக்குந் தூய்மை
தன்னுற், பாயவித மாருயிர்க்கேற் றுந்திறத்தா விவைமுதலாம் பண்
பான் மிக்காங், கேயவொளி முதல்வனெப்ப திலையிதுவ லாற்பதியு
மில்லை மாதோ. (ருஎ)

மருவுமுயிர் சிற்றறிவிற் பலவிதத்த விருண்மலத்த மவியீண்
டுற்ற, வொருவில்சகலத்த வசிப்பன வரும்வி யாபகத்த வொருங்கு

சூழு, மிருண்மலந்தீர் தாமுத்தி யடைவவெண்ணில் லனவெனினு மிருண்ம லத்த, பொருததனோ டுங்க நுமத் தனவவற்றோ டும்மாயைப் புணர்ப்ப மூன்றே. (ருஅ)

சத்துநிகர் தமக்கறிவில் லாதனவ சத்தெனச்சா ராத வல்ல, வொத்தறிந்துங் கனவின்மயங் குவசத்த சத்துணர்விற் சதசத் தோரே, பொத்தியவா ணவமயக்க முதலேமுதல் செயாதுவிண்ணம் புவிகீ ழின்ப, மெத்தியதுன் பருந்துநோய் முதலடுப்பின் வருந்துமற் றை மேவின் மேவும். (ருகூ)

தனையொவ்வாச் சத்தசத்து ருதசத்தோ ராதொன்றுந் தான் வேண்டாது, வினைபலவாங் காணம்வெவ்வே றுடல்புவன மியாவு முயிர் மேவற் கேகா, ணவையபெருங் கலாதியிச்சை யாதிகள்வந் தடையுமா றன்றே நெல்லின், வனையுமுளை யென்னவா ணவமுயிரிற் கலக்குமிச்சை யாதி மாற்றி. (கூO)

பதியகத்தி னிச்சையா திகளையுந்தோற் றுதணவும் பார்வை சாரு, மதியிருளின் விரவுதன்னை யழிப்பமுற்று சத்தியுந்தன் வழி யே யாக்கி, விதியமையு மூன்றிடத்து மிருதிறமா மவத்தையென விளம்போ ரைந்துந், திதியமையத் தள்ளாம லுயிருறப்பல் சத்தியாச் சென்று பற்றும். (கூக)

மேயவுறு திக்கருமஞ் செயவொட்டா திறுதியதே மிகவு மாக்கு, மாயவுயிர் நல்லறிவைச் சிதைப்பிக்கும் வளர்ப்பிக்கு மடவு ணர்ச்சி, தூயவெண்சொற் றொழிலணுவுந் தோற்றுது மறுதலையே தோன்றத் தோற்று, மாயவல்லா ணவந்தணிக்க வுயிர்டுக்கு மாயைசுத்த மசுத்த மாதோ. (கூஉ)

சுத்தமலி தத்துவமைந் தீரிருவாக் கைம்பத்தோ ரெழுத்துத் தோற்று, வித்தவெண்பத் தொருபதமேழ் கோடிமனு வாகமங்கள் விளங்கு நாலே, யொத்தவிரு நூற்றெழுபா கமமறைநால் புராணங்க ளொருமூ வாறு, தத்தமனக் கினிமைசெய்சாத் திரமாறு கலைத்தொ கையுந் தகவெட் டெட்டே. (கூங)

ஆயசிவஞ் சத்திநா தவிந்துசதா சிவமீச மானி வர்க்கு
மேயநல்விஞ் ஞானகலர் பிரளயா கலர்தீது விடுத்தா ராய
தூயசரி யைகிரியை யோகத்திற் செறிந்தவர்க்குந் தொகுத னுக்கள்
பாயகா ணம்புவன போகமைந்து கலையுயிர்த்தல் பண்ணுஞ் சுத்தம்.()

காலமொடு நியதிகலை வித்தையரா கம்புருடங் கணாநா லாறு
சாலமைதத் துவந்தன்பாற் றரும்பகுதி யோரேழுஞ் சாற்று நின்ற
மாலபன்வ லாரிமுனுஞ் சகலருக்குத் தனுமுதலா வகுக்கு நான்கு
மேலவினி யுதவிடுவ தசுத்தமா மாயைமற்று மிசைத்தல் கேட்டி. ()

மாயாகா ரியமயக்க வில்லையேல் வினைநுகர்ச்சி வரவு மில்லை
யேயாவவ் வினைக்கழிவு மாங்கெய்தா முனஞ்சூழ்ந்த விருண்மலத்தின்
சாயாத முயக்கறலி னுயிர்மாயா காரியத்திற் சரித்த லின்றிக் [வால்.
கூயாத விருவினையீட் டாதிவையின் றவையுமெய்தல் குறிக்கொ ளா

இருவினையென் பனமனமுன் மூன்றாலு மித மகித மியற்ற லாமப், பெருவினையின் பயனறனே மறனேயிக் கருமத்தின் பயனாப் பேணி, மருவியிடு மின்பதுன்ப மவைமாய்வி னவ்வினைகள் வந்து தோற்று, மொருதனுவுண் டாக்கமற்று மொருதனுவி லுணப்படுங் கெட் டுங்கே டின்றாய். (௬௭)

மனமுதலா மூன்றுமசை வறநிற்ப நல்வினையின் வரவும் பல்ல
மனமுதலா மூன்றுமசை வறநிற்பத் தீவினையின் வரவும் பல்ல
மனமுதலா மொருமூன்றும் புடைபெயர நல்வினையின் வரவும் பல்ல
மனமுதலா மொருமூன்றும் புடைபெயரத் தீவினையின் வரவும் பல்ல.

தூயவா யமைந்தவினை யாவருக்குந் தூயவா யமைநத பலல
தீயவா யமைந்தவினை யாவருக்குந் தீயவா யமைந்த பல்ல
தூயவா யொருவர்தமக் கொருவருக்குத் தீயவாய்த் தொலைவ பல்ல
தீயவா யொருவர்தமக் கொருவருக்குத் தூயவாய்ச் செறிவ பல்ல. ()

நல்வினைமா றுபுதீய வாய்த்தீய நல்லனவாய் நணலு முண்டு, வல்வினைமெல் லியவினையாய் மெல்வினைவல் லியவினையாய் வரவு முண்டு, நல்வினையாற் றும்பொழுதே யதன்பயன்போற் றீயவினை நணுக லுண்டு, புல்வினையாற் றும்பொழுதே யதன்பயன்போ னல்வினையின் புணர்வு முண்டு. (௭௦)

புரிமுறையிற் பிறழ்ந்துயிர்நெய் வம்பூத மென்றிவற்றிற் புகலு மொன்றான், மருவுமுழி விழைந்தவிழைந் திலவிழைந்த வன்றிமற்று வருவ வென்னத், திரிவிதமாம் பயனிழிந்த வினைதீர்வு செயினுநுகர்ந் தன்றித் தீரா, வரியமுழு வதுமிதுவி லையானுமிவை யும்பண்ணு மையுப்ப லிக்கும். (௭௧)

இன்பமே பயந்துவரும் புண்ணியமெல் லாமிழிந்த பாவ மெல் லாந், துன்பமே பயந்துவரு மிவ்விரண்டுந் தொகிற்பயனே துய்த் தாற் றீருங், கொன்செய்வினை யொழிந்தவிரு வினையறமே மறமே கொள் பயனை நாளும், வன்செயந்தப் பயன்போல வழங்குறு தொழிந் தொதுங்கும் வகையு முண்டோ. (௭௨)

இயம்புநாற் கதியினெழு வகைத்தோற்றத் தெண்பத்து நான்கி லக்கப், பயம்புபடு பலபவத்தில் வினையினாற் பலமுறைவீழ் பசுவை வாங்க, நயம்படுநின் மலனன்றே யுலகுவிதிப் புழித்தலைநீர் நல்ல மூர்த் தி, வியம்படுமூன் றுருவாகி விரிபுவன மெலாங்கதித்தான் விளங்கு மாறே. (௭௩)

அறிவுரு வகையறங்கண் முழுக்கவடுத் தறிதாச்செய் ததன்பின் ஞகச், செறியுமகச் சரியைமுத ஞன்குமிளங் கிடுமாமென் மெல ச்செ லுத்தி, நெறிகொளுண்மைச் சரியைமுதன் மூன்றுநிரப் புபு தனது வலிநேர் தேய்ந்து, பரிமலபா கப்பயிற்றிச் சத்திபதித் திரு வினையின் சமமும் பண்ணி. (எச)

பாசமொடு பசுவுங்கீழ்ப் படமேலாம் பசுபதிநீர் பயிலுங் கூர்ப் புத், தேசுபெறத் திரண்டென்ன வருட்குருவாத் திருவுருவொன் றெடுத்து வந்து, காசின்மனுப் பதமெழுத்துப் புவனங்க டத்துவங் கள் கலைக ளின்னு, மேசிலிவை யோராறு மிறபுமா தூய்மையினி தியற்றிப் பின்னர். (எரு)

கூட்டமே பொதுவேதன் னியல்பேயென் றுணாயுணர்வு குறி க்கு மூன்று, ஞட்டமிகு முப்பொருளு மொன்பதிஞ டிடப்படுமிங் கயந்த வெல்லாங், காட்டுபுகாட் டுந்தானுங் காணறிவுங் கதிர்விழியிற் கலப்பே யாகு, மீட்டவரும் பயனுமுறத் தெரித்ததனி னழுத்துமிவ ற்றையுங்கே ளாயே. (எசு)

மண்முதலாச் சிவமீறு மலிதருதத் துவமனைத்தும் வயங்க வா ற்று, மெண்முதலாந் தொழிலனைத்துந் தனித்தனிகா ணுதலவற்றிற் கியையு ரூபந், திண்முதன்மற் றவைசடமாக் காண்டறிசனமிடை யீத் திறங்க ணீங்கு, மொண்முதலுண் மையைக்காண்டல் சுத்தியாம் பாசத்தி னுற்ற மூன்றும். (எஎ)

பாசமிவ்வா றகலுதலு முறவுபகை நாடாது பகருந் தானே
நேசமுத லெனநிற்ற லுருவிதுகா றன்னியத்து நிரம்ப மூழ்கு
மாசநினக் குயிருநொன் றகற்றவரு ளாமுதலென் றவாவல் காட்சி
வீசவது கொடுசெயனோர்ந் தொழிதலுற லருளாயே விடுதல் சுத்தி.()

ஆயவரு ளான்முதலே யெனநினைத்த லருளிஞ லன்ன தாற்று, மேயதொழில் புரிகுவமென் றெண்ணுமெய லறல்விரும்பு மருளி னூடு, தோயவவட் போதமொடுக் கிடலெனமுன் கிளந்தவற்றிற் றோ ன்று மூன்றுப், பாயசிவ ஞருக்காட்சி யோகமாம் போகமுமேற் பகர்வாங் கேண்மோ. (எகூ)

ஒன்றுபடு மதனிலோர் பொருளாகா திரண்டின்வே றும்மா காது [ர
தொன்றுநிலை நிலையேயாய்க் கலந்துதுன்ன றுன்ஞமை யிரண்டுஞ் சோ
வன்றுமலத் தழுந்தியாங் கறிவாகி யறிவினுளாழ்ந் தறிவு மேவப்
பொன்றியும்பொன் றுதவசத் தின்பவாய் மடுப்பதுவே போக மாமால்.

இந்நிலைமே லொருநிலையு மில்லையிம் மொழிதார தெந்த ஞான்று [துந்
மன்னுயிர்மற் றெனபதுங்கண் ணூற்றுமாற் றிடுமிங்கு வகுத்த பத்
துன்னுமுண்மைஞானமே சுத்தவைந்த வத்தையுளே தொகவடங்கும்
பின்னர்நிலை நான்கிஞென்ப தடங்குமொரு நிலைபோக மேய டங்கும்.

இரிவரிய வுடலின்வினை வரும்வருங்காற் சாக்கிரா தீத மற்றைத் [திற்
துரியமென விரண்டினிற்பி னேருவாஞ் சுழுத்தியொடு சொப்ப னத்
பிரியமிகு சாக்கிரத்தி னுறினும்வள ருஞ்சகலம் பேச லென்னே
யரியபெரு நிலையழுந்த வவையெலா மழியுமயக் காற்ற லின்றே. ()

மருண்மலநீங் குறமாயை வினையிரண்டு மருளாயே மன்னும் வையத், திருண்மலம்போக் கிடவவற்றை யெம்பிரா னென்றுகொண்டே யினிது நல்குஞ், சுருதியினுன் மொழியாற்சு வானுபூ திகத்தையுறத் தோற்றி ஞானை, யிருபகுப்பா வயினுமிற வேத்துபுசன் மார்க்கரின்ப மெய்து வாரே. (அ௩)

என்றுபெருங் கருணையுரு வெம்பிரான் பெத்தமுத்தி யிரண்டிற் றன்மை, யொன்றுபிறி தின்மையொரு டொருங்காட்டி யுணர்த்தருளு முணர்வு கேட்டு, நன்றுசிந்தித் துத்தெளிந்து நிட்டையுற்ற நந்திமா தவத்தோ னுங்குத், துன்றுபெரு மகிழ்ச்சிகொள வாண்டருளுந் தனிமுதலைத் துதிப்ப தானுன். (அ௪)

திருநந்திதேவர்துதி. வேறு.

கதிக்கு மியல்பு வேறுடைமை கற்றோர் கருது பலவாகப்
பதிக்கு முலக மெலாம்பாற்றி மீட்டு மாயோன் பதும னெடுந்
துதிக்கும் படிதோற் றிப்போற்றிச் சூழு மலவாற் றலைக் காற்றுந்
திதிக்குஞ் செயலே தலைநின்ற சிறந்த வுருவ முதல்போற்றி. (அ௫)

ஒண்மைக் குணமி லொருநாயே னுற்ற மடனன் றில்லாத
திண்மைக் குணமா மலத்தன்றே சிவண வாழா நின்றகுண
வெண்மைத் தலைவ னுறவாங்கே யியலும் பருவந் தனையேய்த்து
வண்மைக் கலையா திகடந்த வள்ளற் றன்மை யதுபோற்றி. (அ௬)

இருளு மலமொன் றேபற்று மிரண்டு வினையு முடையேற்கு
மருளின் மலியு மாயையுங்கன் மழுந்தி போதா னத்தினையும்
பொருளின் மலிமா மாயையையு மலநான் காகப் புணர்த்தியே
யருளின் மலிந் நீராவற் புதநற் றொழின்மை யதுபோற்றி. (அ௭)

நெருப்பி னழுற்றி வாட்படையா னிமிரு முடலம் பிளந்திட்டே
யருப்பு நெய்த்தோர் கண்சோர வமையக் குடைந்து நரகிட்டுந் [தும்
கருப்பம் பொலிமண் ணகத்துய்த்துங் காமர் துறக்கத் திடையேய்த்
விருப்பு வெறுப்பு மில்லாது வினையு மலிகா ரம்போற்றி. (அ௮)

பூதங் கொல்லோ வவுருன பொறைசா ருடலோ பொறிகளோ
மோது ங் கரண மதுதானோ மொழியு மாயை யதுகொல்லோ
யாதோ வறியே முணர்வென்றெ யினைத ராம னுதாமும்
போதம் வேறென் றருள்புரிந்த பொங்கு மொளிப்போ தகம்போற்றி.

உறுகே வலச கலசுத்த முயிர்கட் கெல்லாங் கெழுமு மென்றுந்
தெறுமா யையிலா ரிரண்டாய திறத்த ரென்று மாவயினம்
மறுமா யையையின் றடாவிரண்டு கரும மென்று முறவகுத்துங்
குறுமா லேனு முளத்தரும்பக் கொள்ளா வாய்மை யதுபோற்றி. ()

வருசாக் கிரவ வத்தைக்கு வாய்த்த சகலத் தெனையன்றே
வொருவா தாக்குந் தொறுநீங்கி யுற்ற விருட்கே வலத்தின்கண்
மருவா வீக்கு பிழைகொண்டு விடாதுட் சலியா மறுவலுங்காத்
தருமா தவஞ்செய் வலிச்சூழ்ச்சி கைக்கொண் டருளு மதுபோற்றி.

வினையின் றிறமூண் டிடுமாறு மெலியேன் மெலிவைத் தகவாற்றி
யனைய துகள்போ யனுங்கும்வித மறிவுண் டாக்கி யெலாமாற்றிக்
கனைவண் டொலிக்க மதுப்பொழியுங் கமல மலர்நேர் திருப்பாத
நினைவி லுறக்கொள் வாழ்வளித்த நிமல வாழ்வுன் பதம்போற்றி. ()

நிகழ்கே வலமுஞ் சகலமுமுத் திச்ச கலமுங் நிகழவுய்த்துத்
திகழ்கே வலச கலநீக்கச் சிறப்பு மருவுஞ் சுத்தத்திற்
றிகழ்கே வலமே யானெனைச் செறிகே வலநீக் குபுமேலாந்
திகழ்கே வலஞ்செய் திடநாடுஞ் செறிகே வலநற் பொருள்போற்றி.

காரா ணவத்தன் றேபட்டாய் கலக்க மாயை யதுபூண்டா
யோரா வினைக்கோட் பட்டாய்போக் குடனே வாவும் பட்டாயென்
றூரா வறிந்தாய் நீயேயென் றமைய விழித்து மான்முதலோர்
தேரா வுருவங் தோற்றியெனைக் காட்டியருளுந் திறம்போற்றி. (கூச)

ஒன்று படுகே வலத்தையைந் துறழைந் தாஞ்ச கலத்தொன்று
முன்ற விருஞ்ச கலத்தைந்து முதிரு மொளிசார் சுத்தத்தி
லென்று வன்ன பேதமெலா மருளி னிசைத்து முறைகாட்டி
நன்று தெரித்திட் டினிதாண்ட நலமார் பெருமைத் திறம்போற்றி. ()

யானே யென்ன வெனதென்ன நின்ற விருளைப் போக்கியெலாந்
தானே யென்ன வெனைவல்லே தன்று ளிருத்திக் கதிர்முன்ன
மீனே யென்ன விளக்கென்ன விரவு மாயை மாய்த்தங்ங
னூனே நுகரு நுகர்ச்சியெலா மேற்ற வுரிமைத் திறம்போற்றி. (கூகூ)

இற்றை வரையு மென்வழியே யிருந்த தனைப்போற் றன்வழியே
யெற்றை வரையுந் தங்குநிலை தோன்றத் தனையு மெனையுந்தந்
தொற்றை யுருத தனதெனதற் றொருமுப் பாழ்மேன் முழுப்பாழா
மற்றைக் கடறி வலையாக வருபே ரின்ப சுகம்போற்றி. (கூள)

மதிவீற் றிருக்குஞ் சடைமுடியு மானு மழுவுஞ் சதுர்ப்புயமுந்
துதிவீற் றிருக்குந் திருமுகமுந் தோன்றப் படிந்த புலித்தோலும்
விதிவீற் றிருந்த செவ்வாயும் வெய்ய தாகு நுதற்கண்ணுங் .
கதிவீற் றிருந்த திருவடியு முடைய கைலைப் பிரான்போற்றி. (கூஅ)

### சிவபெருமானுடையகட்டளை.

என்று துதித்த நந்திமுக னெம்மான் கருணை யுறநோக்கி
நன்று நின்னை யபரசிவ னென்று ஞாலங் கொண்டாட
வொன்று சிறப்பி னும்பிறர்போ லுரைத்தா றாலுக் கியையும்வகை
யன்று தவிரப் பாராட்டி யமைய வருகென் றருள்புரிந்தான். (௯௯)

பன்னாண் முயன்று நெடுமாலை பங்கே ருகனை பிறரறியாத்
தன்னுள் பெரியோன் பெருங்கருணை யொருங்கு பெற்ற சைலாதி
முன்னாள் வாய்த்த தன்பணியே முயன்று தலைநின் றிந்நாளே
நன்னா ளென்று மகிழ்சிறந்தா னடந்த தினிமே னவிலுவாம். (௧௦௦)

### சனற்குமாரமுனிவர். வேறு.

மட்டலர் கமலப் புத்தேண் மைந்தனுஞ் சனக்கு மாரன்
கட்டலர் படைத்த லாதி கனவினு மென்று கொள்ளான்
விட்டலர் மணிமார் பண்ணல் வாழ்க்கையின் வெறுப்பு வைத்தான்
பட்டலர் திசையான் றெய்வப் பாதமே சாரும் பண்பான். (௧௦௧)

### திருநந்திதேவரை அடைதல்.

மறைமுதற் கலைக ளெல்லா மயக்கறத் தெளிந்த நீரா
னிறைகெழு கருணை வாய்ந்த நெடுந்தவ முருக்கொண் டன்னான்
குறையறு முண்மை ஞானங் குறிக்கொடு தேர்தல் வேட்டா
னிறைமுதற் கயிலை காக்கு நந்திபா லெய்தி னானே. (௧௦௨)

எய்திய சனக்கு மார னந்தியெம் பெருமான் பாத
மெய்திக முன்பிற் பல்கால் விரைதரத் தாழ்ந்து தாழ்ந்தே
யைதென வெழுந்து நின்றா னருவியங் கண்ணீர் சோர
மைதிகழ் மனமில் லானை நோக்கினா னந்தி வள்ளல். (௧௦௩)

### திருநந்திதேவர்வினா.

நோக்கிய நந்திப் புத்தே ளுவலுநின் னுமம் யாது
தேக்கிய வலியி னிந்தச் சிலம்படை கருமம் யாது
பாக்கிய மாகக் கொள்ளும் பயனெது வேட்ட தென்றா
னூக்கிய வலியான் மீட்டும் பணிந்தெழுந் துரைக்க லுற்றான். (௧௦௪)

### சனர்குமாரர் விடை.

என்பெயர் சனக்கு மார னிச்சிலம் படைந்தே னுதன்
றன்பெய ரடைநின் செம்பொற் றாட்பணி செயற்பொ ருட்டே
நன்பெய ருண்மை ஞான நாயினேன் வேட்ட தென்றே
மின்பெயர்ந் தென்ன மீட்டும் வீழ்ந்தெழுந் துரைத்தா னன்றே. ()

### திருநந்திதேவர் அவரை அங்கீகரித்தல்.

நந்தியெம் பெருமா னென்பா னல்லியற் சனக்கு மாரன்
புந்தியுந் தெளிவு மாந்தற் போதத்தி னொழிவுந் தேர்ந்தே

யுந்திய விவனுக் குண்மை யோதலா மென்றுட் கொண்டு
முந்திய விபூதி நல்கி முழுப்பணி நயத்தி யென்றான். (கOரு)

சிவகணத்தோர்மகிழ்ச்சி.

சொற்றசொற் றலைமேற் கொண்டு குமரன்றா மகிழ்ச்சி யுற்று
னற்றவக் கணங்க ணந்திக் கிவன்வந்து நணுகுங் காட்சி
கற்றையஞ் சடையார்க் கிந்த நந்தியே கலந்த தொக்கு
மற்றும்வே றில்லை யென்று வாய்மலர்ந் துவகை பூத்தார். (கOஎ)

திருவடிப் பணிவி டாது செய்யப்பன் ஞள்கள் செல்ல
மருவடிக் கடிய ஞான குமரன்வாழ் தருமந் நாளிற்
றருவடிக் கைலை காக்குந் தம்பிரான் கருணை கூர்ந்தே
யுருவடிக் குண்மை ஞான மோதுமா வுள்ளங் கொண்டான். (கOஅ)

சனற்குமாரர் உபதேசம்பெறுதல்.

பொருள்பெறுங் குமரற் கூவிப் பொலிவின்மாட் டிருத்தல் செய்தே
யருள்சிவ ஞான போத மண்ணல்பாற் கேட்ட வாறே
தெருள்பெறத் தொகைமுன் மூன்றுற் செப்பினு னெந்த ஞான்று
மருள்படு மைய மாதி முக்குற்ற மடித்த தீரான். (கOகூ)

மன்னிய குரவன் வார்த்தை முழுமையு மாண்பிற் கேட்டு
மின்னிய கொடுசிந் தித்துத் தெளிந்துமே னிட்டை கூடித்
துன்னிய விருந்தான் வம்பே சொர் வும்பிர பஞ்ச மாய்த்துப்
பன்னிய சிவஞா னத்தே பட்டபெருஞ் செல்வ னுகி. (ககO)

இன்னணஞ் சனக்குமார னியல்சிவ ஞான போத
நன்னருட் டெளிந்து முத்தி நயந்துவீற் றிருக்குங் காலைச்
செந்நெறி யொழுக்கஞ் சார்சத் தியஞான தரிச னிப்பேர்
மன்னிய முனிவன் வந்து வணங்குபி லாயம் புக்கான். (ககக)

அவனைச் சத்தியஞானிதரிசனிகள் அடைதல்.

புக்கமா முனிவன் ஞான போதமார் சனக்கு மார
னக்கபொற் பாதம் போற்றி நாயினே னுய்ந்தே னென்றான்
றக்கநீ யாவன் வந்த காரிய மெவன்சாற் றென்னத்
திக்கெலாம் புகழ்தன் பேரும் வந்ததுந் தெரியச் சொற்றான். (ககஉ)

அடியார்மகிழ்ச்சி.

பாவுவிண் ணைப்ப மேற்றுப் பங்கய முகம லர்ந்து
விரவுநீ றெடுத்து நல்கிப் பணிசெய்து மேக வென்று
னரவுநீர்ச் சடையா னன்ப ரகத்திய முனிவ னுக்குக்
காவுதீர் திரணதூமாக் கினியெனக் கலந்தா னென்றார். (ககங)

சத்தியஞானிதரிசனிகள் உபதேசம்பெறுதல்.

சீரிய தன்பேர் நாட்டத் திருவடிப் பணியிற் றப்பா
னேரிய முனிவன் மேவ வுறுமகிழ் குமரன் பூத்துத்

தேரிய தான்முன் னோர்ந்த சிவஞான போதஞ் சொற்றான்
வீரிய நந்திப் புத்தே டனக்குமுன் விளம்பு மாறே. (௧௧௪)

குரவனை வழிபா டாற்றிக் கொளுத்திய வனைத்துந் தேர்ந்து
திரவனை கையிலே ஞான சிகாமணி யாகி வாழ்ந்தான்
புரவனை யொருபான் மேய புராதனை னருளை யென்னப்
பரவனை தருமா றுற்றான் பரஞ்சோதி முனிவ னென்பான். (௧௧௫)

அவனைப்பரஞ்சோதிமுனிவரடைதல்.

திகழ்பரஞ் சோதி தான்சத் தியஞான தரிச னிப்பேர்ப்
புகழ்முனி யிருக்கை நாடிப் பொற்பதம் பணிந்து வீழ்ந்தா
னகழ்பல வனையா னியா ரடிக்கதென் னெனவி னாவ
விகழ்பவ மாய்க்க வந்தே னென்றெலா முரைத்தா னன்றே. (௧௧௬)

உரைத்தசொன் முழுது மேற்றே யுறுகுண முழுது நாடி
விரைத்தமற் றிவன்போ லியாரே மேவுவா ரென்று வந்து
நரைத்தவெள் விடையான் செய்யு நல்லரு ளென்று புல்லி
வரைத்தவெண் ணீறு நல்கி வதிகநம் பணியி லென்றான். (௧௧௭)

திருக்கிளர் முனிவ னுஞ்சத் தியஞான தரிச னிக்குக்
கருக்கிளர் தாஞ்சா ராத பரஞ்சோதி கிடைத்த காட்சி
யுருக்கிளர் துறைசை யெங்கள் சிவஞான யோகிக் குண்மைப்
பொருட்கிளர் கச்சியப்ப முனிவரன் புணர்ந்த தொக்கும். (௧௧௮)

பணிபல நாளுங் கொண்டு பரஞ்சோதிக் கிரக்கஞ் செய்து
துணிசிவ ஞான போதந் தொன்மையி னுபதே சித்துத்
தணிவறத் தெளிந்த பின்பு நூலுங்கைத் தாங்க நல்கி
யணிசெய்தா னெம்மை யாளு மற்புதக் குரவ ரேறே. (௧௧௯)

உண்மையார் கைலைநின்று மொருபரஞ் சோதி நாதன்
வண்மைசான் ஞான சிந்தா மணியென மண்ணி ழிந்து
தண்மையார் காசி யாதித் தலந்தரி சிக்குங் காலை
நண்மைசால் வெண்ணெய் நல்லூர் நடந்தது மினிச்சொல் வாமால். ()

---

# நான்காவது

நடுநாடு.

சொல்லொழுக்க நடவாது சொனைவறங் கூர்காலும்
புல்லொழுக்கந் தலையெடுத்தெவ் விடத்துமாய்ப் பொலிதரவு
மில்லொழுக்கந் துறவொழுக்க மிரண்டாய வியல்வாய்ந்த
நல்லொழுக்க மெனப்புகலு நடுநாடு நடுநாடு. (௧)

பொன்னிலமல் கமரரெலாம் போகியதெம் பசியென்ன
வெந்நிலமுங் குதுகலித்தே யியல்பூசை விழாவெடுப்ப

வந்நிலமொய்த் தவராய வாற்றுக்கா லாட்டியர்க
ணன்னிலஞ்சொன் முடிகுலைத்து நடுநாடு நடுநாடு. (௨)

புக்கவுயிர் சிதையாது போற்றிவரு மண்மகட்குத்
தக்கவளம் பலபொலிதண் டகநாடல் குற்றடமாத்
தொக்கபெரு வளங்காட்டு சோணாடு முலைத்தடமா
நக்கமணி மேகலைசூழ் நடுநாடு நடுநாடு. (௩)

குறமலிதிண் குன்றுகளைக் குஞ்சரத்தைக் கீழ்மேலா
வறமலிய வுருட்டிவயி றதுகிழியு மதுநோக்கிப்
புறவகழி யிராப்பகலும் பொறேனென்றே யோலமிடப்
பிறரறியு நீத்தத்திற் பெண்ணையாய் வளம்பெருகும். (௪)

பெண்ணைநதி யிருபாலும் பெருக்குமிக வெழுங்கொழுங்காற்
பண்ணைவயற் றலைநிரப்பப் பசுஞ்சாலி கதலிகமு
கெண்ணைபறத் தடித்தோங்கி யிந்திரனு ரவைநிரப்ப
வுண்ணயமார் மண்ணொடுவிண் ணூடலறக் கூடல்செயும். (௫)

பெண்ணையெழுந் திரைக்கொழுந்து புகழ்க்கொழுந்தின் பிறக்கமெ
விண்ணையளா யமாதர் வெம்முலைக்குங் குமங்கழுவிப் [ன
பண்ணைகளின் பிரதாபம் படர்ந்ததெனப் படருதலு
மெண்ணையிலாச் செந்நெலொடு கன்னல்களு மினிதோங்கும். (௬)

சாலெல்லாம் வெடிவாளை தடியெல்லாஞ் செங்குவளை
காலெல்லாங் கருமேதி காம்பெல்லாம் பாம்பினங்கள்
சூலெல்லாஞ் சங்கினங்க டொறியெல்லா முத்துகுத்தல்
பாலெல்லாம் பசுந்திரையல் படர்வெல்லாங் கமுகேறி. (எ)

தென்றலெழ வழலரும்புஞ் செவ்வியமாந் துணர்ச்சோலை
யொன்றல்கொள முழுமதியை யொழியாது தடவருதல்
குன்றலின்மண் மகளங்கைத் தலநீட்டிக் குளிர்விசும்பா
மன்றலிலா மகண்முகந்தை வருதிறமற் றதுகாட்டும். (அ)

கரைதபுமா டங்களெலாங் ககனமளாய் நிற்றலினால்
விரையகிலின் கொழும்புகையோ மேகமோ சுலாவுவன
வுரைசெறிந்த பொழிலனைத்து மொள்ளியகார் தங்குதலாற்
புரைதவிரு மதுமழையோ புனன்மழையோ பொழிகுவன. (௯)

மருவுலகங் களிதூங்க வண்சமயா சாரியரா
மிருவர்களுஞ் சந்தானத் திருவர்களு மவதரிக்கப்
பெருகுதவஞ் செய்ததெனிற் பிறங்குவள நடுநாட்டி
னருகுதவிர் சிறப்புரைக்க வடியேனு லாகுவதோ. (௧0)

ஆக செய்யுள் - ௨0௨.

---

உ

சிவமயம்.

# பழசைப் பதிற்றுப்பத்தந்தாதி.*

விருத்தம்.

என்னா யகனை யிமையவருக் கிறையா மவனை மறைநான்கு
முன்னா நிற்கும் வடிவானை மூவா தானை மூத்தானைப்
பொன்னார் மேனிப் புயலும்விளைப் பூந்தா மனைவே தனுநாடிப்
பன்னா டிரிந்துங் காணானைப் பழசை நகரிற் கண்டேனே. (௧)

கண்டேன் பழசைப் பெருமானைக் கைகான் முடங்கு மறிவிலி வாய்ப், பண்டே னெடுங்கோட் டிருந்தொழுகும் பான்மை யெனக் கண் டுளங்க ளிப்புக், கொண்டேன் சிரமே லிருகரமுங் குவித்தேன் குனித்தேன் முகமலர்ந்தேன், விண்டேன் பண்டை வினைக்கடலை வேண்டேன் பிறிதோர் தேவனையே. (௨)

---

உ

சிவமயம்.

# பூவாளூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி.

சமயாசாரியர் துதி.

விருத்தம்.

நிறைவளருந் தவஞானப் புகலிவருஞ் சிவஞான நிமலக் கன்றைத், துறைவளருங் கருங்கடற்கல் லொடுமிதந்த தமிழ்க்கடலைத் தூய சைவ, முறைவளரும் புக்கொளியூர் முதலைவாய்ப் பிள்ளைதரு முதலைத் தெய்வ, மறைவளரும் பரிமிசையெம் மிறைவரச்செ யிறை யையன்பின் வணங்கு வாமால்.

---

## நூல்.

திருவார்பொற் பூவாளூர்ப் பங்குனிமா நதிக்கரையின் றெனாது வைப்பிற், றருவார்கூ விளவனத்துக் குங்குமசுந் தரியொருபாற் றயங்க வைகுங், குருவாருஞ் சடைமோலித் திருமூல நாதர்பதங் குறித்து வாழ்த்திற், கருவார்வெம் பவக்கடனீந் திடலாகு மிவ்வுணைமெய் காண்பாய் நெஞ்சே. (௧)

நெஞ்சமே பொறிவழிச்சென் றலையாதோர் கணப்போது நின்று கேட்டி, வஞ்சமே யழுக்காறே வரும்பொய்யே முதலனைத்து மற

---

* பூர்த்தியானநூல்களிற்கிடைத்தபகுதிகள்.

த்தி மேதி, கஞ்சமேய்ந் தடர்சூத நிழலுறங்கும் பூவாளூர்க் கடவுள் பாதந், தஞ்சமே யெனச்சென்று பற்றுதிபற் றறுத்தியிது தக்க தாமே. (௨)

ஆமாறு மனங்கசிந்து நீறணிந்து கண்மணிபூண் டஞ்சு மெண்ணிக், காமாரி தனைச்சிறந்த கௌமாரி நாயகனைக் காம ரூர்வாழ், தேமாரி பொழிகொன்றைச் சடைமோலிப் பெருமானைச் சென்றுதாழார், மாமாயக் கடலுழல்வர் போமாறென் னெனவென்னுண் மதிக்கு மாலோ. (௩)

ஆலும்விட மமுதாக்குங் காமர்பதித் திருமூல வமல னார்க்குச், சாலுமணிக் குழையொருபாற் றோடொருபான் முத்தொருபாற் சர்ப்ப மோர்பா, லேலுநற்குங் குமமொருபா னீறொருபாற் பட்டொருபா லியைமேதோ லோர்பா, லோலிடுபொற் சிலம்பொருபாற் கழலொருபாற் பண்ணுரு மொளிரு மன்றே. (௪)

அன்றினார் புரமெரித்த வம்மானே செம்மேனி யமலத் தேவே, மன்றுளா டொருமணியே மாவாளும் பூவாளூர் வயங்குஞ் சோதி, வன்றிமா மலத்தழுந்து மாறேபோன் மடவார்த மயற்சேற் றழுந் தேற், கொன்றுமா வினைமதற்காய் நின்னுதற்கட் கிலக்காக வுறுநா ளென்றே. (௫)

என்றுநெடு மாலயனுக் கரியபிரா னென்றுமன்பி லிருணெஞ் சத்தார்க், கென்றும்வெளிப் படானென்று மனவாக்கிற் கெட்டாதா னென்று மோலிட், டென்றுமறை விரித்துரைப்பக் கேட்டிருந்தும் பேதைமையோ யாதோ வென்னெஞ், சென்றுமொரு பூவாளூர்ப் பெருமானைப் பேசவிருப் பெய்து மன்றே. (௬)

அன்றுவட வானிழற்கீ ழமர்ந்தறவோர்க் கறமுதனுன் கருளு மண்ணல், கொன்றைநெடுஞ் சடைமோலித் தேவாநற் பூவாளூர்க் கோவா முத்தே, கன்றுகொடு விளவெறிந்தோன் காணருஞ்செஞ் சிலம்பணிபூங் கமலத் தாளென், புன்றலையி னுறப்பதித்துப் புரிந் தடிமை கொள்ளுவதெப் போது தானே. (௭)

போதாருந் தடஞ்சோலை மயிலாலக் குயில்கூவும் பூவா ளூர் வாழ், காதார்வண் குழையுடையாய் கட்டங்கா காபாலீ கால காலா வோதாயோ நின்னுண்மை பொன்செய்கொழுக் கொடுவரகுக் குழ நின் றேனின், பாதார விந்தமலர் பற்றிவிடா திருவினையும் பாற்று மாறே. (௮

பாறுடும் வெஞ்சூலப் படையானை யெவ்வுலகும் படைத்திட் டானை
யேறுடுங் கொடியானைப் பெருமானைச் சிறுமானை யேந்தி னானைச்
சேறுடுந் தண்கழனிப் பூவாளூ ருடையானைச் சிறப்பிற் பாடார்
மாறுடும் பசுக்கடமைப் பாடுவார் பல்லோர்தம் மயக்கி னாலே. (௯

மயலாருந் திரைக்கடலுட் பட்டலையு மாறேபோல் வாரார் கொங்கைக், கயலாருங் கண்ணியர்மாற் கடலிடைப்பட் டிடாதுகடைக் கணித்தல் வேண்டும், வயலாருஞ் செங்கமலத் தேனோடி மடையுடைக்கும் வண்பூ வாரூர்ப், பயலாரு மாதுடையாய் வண்சங்கக் காதுடையாய் பாவி யேற்கே. (க0)

வேறு.

பாவிய கரும மின்றியே பசுவும் பதியும்பா சமுமென வுரைக்கு
நாவினுன் மதமே கொண்டுழலாம னாயினேற் கென்றருள் புரிவாய்
காவியங் கண்ணி கூறுடைக் கனியே காமர்பூம் பதியுறை முதலே
தீவிழிப் பகுவாய்க் கூற்றுயிர் குடித்த சேவடிச் சிவபரஞ் சுடரே. ()

சிவபரஞ் சுடரே யுள்ளகந் தெவிட்டாத் தெள்ளமு தேசுவைக் கனியே
யவனவ ளதுவென் றுரைத்திடும் புவன மாகியு மதற்குவே றாய்
நவவடி வுடையாய் காமர்பூம் பதியாய் நாயினுங் கடைப்படு வேற்குத்
தவலரு மூல மலச்செருக் கொழிந்து சத்தினி பாதமென் றுறுமே ()

உறுவர்க டுதிக்குங் கூவிள வனத்தா யுணர்வுடை யோர்க்கெளிதானாய், சிறுபுழுப் பொதிந்த புன்புலா லுடைய தேகமே நானெனக் கருதி, வருமிரு வகைச்சார் புடங்குறக் கொண்டு வருமவத் தைதகடொறுஞ் சென்று, பெறுவதொன் றின்றி யலையுநா யேனின் பிறங்கருள் பெறுவதெந் நாளே. (கரு)

நாளெலா மோடிக் கற்பசுக் கறந்து நல்லவர் நகைக்குமா திரிந்தேன், மீளவு முழல்வேன் வல்வினை ஞான மெல்வினை ஞானமு மில்லேன், பாளைவாய்க் கமுகின் பசுங்கமுத் தொடியப் பருவரால் குதிகொளுங் கழனி, வாளுலாம் பொழில்சூழ் காமர்பூம் பதிவாழ் மாணிக்க மேயெனக் கருளே. (கச)

அருளெனப் படுவ தெவைக்குமேலென்ன வறிகிலே னருளலாவெவையும், பொருளென மதித்தேன் புலையரும் விரும்பாப் புன்புலாற் சுமைவெறுப் பில்லேன், கருள்படு மனத்துக் கடையனேற் குனது கருணைவந் துதவுவ தென்றோ, மருளற முனிவர்க் கருளியகாமர் வளம்பதி விளங்குமொண் பொருளே. (கரு)

பொருந்துசன் மார்க்க நெடுஞ்சக மார்க்கம் புத்திர மார்க்கமுமில்லேன், திருந்திய தாத மார்க்கமு மில்லேன் றீவினை மார்க்கமேயுடையேன், கருந்தலைப் பூவை மூவர்பாட் டெடுப்பக் காமரு கிள்ளைகேட் டுவக்கும், பெருந்தடம் பொழில்சூழ் காமர்பூம் பதிவாழ் பிஞ்ஞகா பேரருள் புரியே. (கசு)

*           *           *           *           *           *

வேறு.

மலைக் குழலியோர் பாகம் போற்றி யெனக்கு வெளிப்படும் பாதம் போற்றி, மாலைப் பிறைமுடி வேணி போற்றி மான்மழு

வைத்த கரங்கள் போற்றி, காலைக் கதிர்த்திரு மேனி போற்றி காமனைக் காய்ந்தகண் போற்றி யென்றே, யோலிட் டருமறை தேடும்பூவா ளூரனை யான்சொல்லி யுய்வ தென்றே.

இன்றமிழ் ஞானசம் பந்தர் பாலு மெய்திய நாவுக் கரசர் பாலுந், தென்றமிழ் நாவலூர்ச் செல்வர் பாலுஞ் சிற்றன்பு சிந்தையிற் செய்து மில்லேன், குன்றம்வில் லாக்கொண்ட புண்ணியனே கோதறு காமர் பதிக்கண் வாழ்வே, மன்றுணின் றாடிய வல்ல சோதி மாறிலன் புள்ளத் தூறுதல் செய்யே.

* * * * * *

வேறு.

உணர்வினுக் குணர்வாம் பூவா ளூரமர் தம்பி ரானூர்
மணமலி முடியினீரு மாகதப் புல்லுங் கொள்வான்
குணமலி கரத்து நவ்வி குறித்தெட்டி யெட்டி வீழும்
பணவரப் பள்ளி யான்சேய் பட்டபா டறிந்தி லாதே.

* * * * * *

என்னென வுரைக்கே னையா வேழையேன் புன்சொ னிற்கு
நன்னய முறையோ நல்லோர் நாடுவா சகமோ வன்பு
துன்னிய வேடர் கோமான் சொற்றிடு முகம னேமற்
றுன்னிடுன் வில்வக் கானத் துறைதிரு மூலத் தேவே.

தேவர்கள் சிகைபூ ணூல்போற் செய்யமார் பிலங்குந் தோற்றந்
தாவில்செஞ் சடைக்கா டுற்ற தறுகண்வா ளரவு கக்கப்
பாவுகார் விடமோர் பாங்கர்ப் பாய்ந்தொளி வீசல் போலு
மோவில்பல் லறஞ்சூழ் பூவா ளூரமர் கடவு ளார்க்கே.

* * * * * *

வேறு.

காலைக் கதிராய்ச் சில்லுயிர்க்குக் கலைவெண் மதியாய்ச் சில்லுயிர்க்கு
மாலை யிருளாய்ச் சில்லுயிர்க்கு வைகும் பொருணீ யென்றறியேன்
சோலைக் குயில்கூ வொலியெடுக்குந் தொலையா வளமைப் பூவாளூர்
வேலைக் கருநஞ் சுறைகண்டா விமலா னந்த மெய்ப்பொருளே.

* * * * * *

காட்டிற் பயிலும் பசுங்கிளியைக் கருதி வளர்த்தோர் பூசையிடம்
கூட்டிக் கொடுப்பார் களுமுண்டோ கோவே யாவா கேவலத்தி
னீட்டித் தெழுந்த வெனைச்சகள நிலையிற் படுத்து வளர்த்தெமன்பாற்
காட்டிக்கொடே லுன்னடைக்கலம்யான் காமர்பதிவாழ்கண் ணுதலே.

* * * * * *

மயங்கிப் பிறவிக் கடல்வீழ்ந்து வலிய வினையாந் திரையலைப்ப
வியங்கிக் காமச் சுழலகப்பட் டெய்யும் வகைசற் றறியாதே
தியங்கிக் கிடக்கு நாயேற்குன் செம்பொற் பாதப் புணைதாராய்
வயங்கப் புரிசை யுடுத்தோங்கி வளர்கல் யாண புரத்தரசே.